

# வைணவமும் தமிழும்


பேராசிரியர் முனைவர்

## ந சுப்பு ரெட்டியார்







1916 2016

**ந சுப்பு ரெட்டியார் 100**


*Centenary Committee Publications*


எளிமை, இனிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச்சிறப்புகளாகும்.

# வைணவமும் தமிழும்


பேராசிரியர் முனைவர் **ந சுப்பு ரெட்டியார்**




எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

வைணவம் பற்றிய செய்திகள் அனைத்தையும் அறிந்து கொள்ள
வேண்டும் என்று நினைப்பவர்கள் படிப்பதற்கு ஏற்ப
முழுநூல் ஒன்று இதுவரை இல்லாமலே இருந்தது.
அக்குறையை, பேராசிரியரின் ' வைணவமும் தமிழும்'
என்ற இந்நூல் தீர்த்துவிட்டது என கருத வாய்ப்புண்டு.


**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

ISBN: 978 -81-939685-3-6


ந சுப்பு ரெட்டியார் 1916 2016 100 நூற்றாண்டு விழா நிகழ்வுகள்

*eBOOK* ~ *மின் நூல்*

# வைணவமும் தமிழும்


அருங்கலைக்கோன், சடகோபன் பொன்னடி, சேவா ரத்னா,
தமிழ்ப்பேரவைச் செம்மல், கலைமாமணி, ஆய்வுத்தமிழரசு,
பொதுமறைச் செம்மல், வைணவ இலக்கிய மாமணி

பேராசிரியர் முனைவர்

**ந சுப்பு ரெட்டியார்**

**முன்னாள் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியர்**

தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்






1916 2016

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

ஆன்ற தமிழ் மறைகள்
ஆயிரத்தையும் வளர்த்த
இதத்தாய்
இராமாநுசரின் பொன்னடிகட்கு

## *பக்திப் படையல்*

கொற்றமார் ஐந்து கோலினை ஒற்றைக்
கோலினை செங்கரத் தேந்தும்
வெற்றிகொள் மூன்று கோலினால் வென்று
வீறுசால் தென்னரங் கேசன்
பெற்றிகொள் செங்கோல் தன்னிலே மாறன்
பெருந்தமிழ் வளர்த்திடப் புரிந்த
நற்றவன் எங்கள் சீர்எதி ராசன்
நற்புகழ்க் குரியதிந் நூலே.

# அணிந்துரை

டாக்டர் எம்.ஏ. வேங்கடகிருஷ்ணன்
இணைப்பேராசிரியர், வைணவத் துறை,
சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை 600 005

வைணவம் என்பது மிகமிகத் தொன்மையான மதம். வடமொழியிலமைந்த வேதங்களிலும் மிகமிகத் தொன்மை யான தமிழ்நூலான தொல்காப்பியம் முதலான நூல்களிலும் வைணவம் தொடர்பான கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன.

வைணவத்தைப் பற்றியும் அதன் தத்துவக் கொள்கை களைப் பற்றியும் பண்டைக் காலத்திலிருந்தே ஆயிரக் கணக்கான நூல்கள் எழுதப் பெற்றுள்ளன. வைணவ ஆசார்யர்கள் அருளியுள்ள நூல்களை அடிப்படையாகக் கொண்டோ, அல்லது அந்நூல்களுக்கு விளக்கங்களாகவோ பல்லாயிரக்கணக்கான நூல்கள் தோன்றியுள்ளன. ஆயினும் வைணவம்பற்றிய செய்திகள் அனைத்தையும் அறிந்து கொள்ள வேண்டும் என்று நினைப்பவர்கள் படிப்பதற்கு ஏற்ப முழுநூல் ஒன்று இதுவரை இல்லாமலே இருந்தது. அக்குறையை அருங்கலைக்கோன், **பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார்** அவர்கள் "**வைணவமும் தமிழும்**" என்ற இந்நூல் மூலம் தீர்த்துவிட்டார் என்றே கூறலாம்.

அறிவாலும் அகவையாலும் முதிர்ந்தவர். ஏறக்குறைய நூறு நூல்களுக்குமேல் எழுதியவர் என்பது போன்ற பல பெருமைகளைப் பெற்ற ரெட்டியாரவர்கள் ஏற்கெனவே தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம்மூலம் "வைணவச் செல்வம்"

என்ற இரு நூல் தொகுதிகளை வெளியிட்டிருந்தாலும் தற்போது வெளிவரும் "வைணமும் தமிழும்" என்ற இந்நூல் மிக எளிய நடையில் வைணவத்தின் கூறுகள் அனைத்தையும் விளக்கும் வகையில் பதினாறு இயல்களாக அமைந்துள்ளது.

"வைணவமும் தமிழும்" என்ற தலைப்பில் இந்நூலில் அமைந்துள்ள முதல் இயலில் தொல்காப்பியம் முதல் பற்பல பண்டைத் தமிழ் இலக்கியங்களில் வைணவம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளவை அனைத்தும் ஒருங்கே எடுத்துக் காட்டப் பெறுகின்றன. திருக்குறள் வைணவத்தையே பகருகின்றது. என்று ஆசிரியர் அகச்சான்றுகளுடன் நிலை நாட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது. கடவுள் வாழ்த்து அதிகாரத்திலுள்ள "ஆதிபகவன்" "இறைவன்" முதலிய சொற்கள் நாராயணனையே குறிக்கும் என்று ஆசிரியர் விளக்கியுள்ள விதம் மிகவும் நயமாகவும் பாராட்டத்தக்க வகையிலும் அமைந்துள்ளது.

"நாலாயிர திவ்வியப் பிரபந்தம்' என்ற தலைப்புள்ள இரண்டாம் இயலில் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்துள் அமைந்துள்ள பிரபந்தங்கள் குறித்த விவரங்கள் தரப் பட்டுள்ளன. ஆனால் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்துள் அமைந்துள்ள முதல் பிரபந்தமான திருப்பல்லாண்டைத் தனி பிரபந்தமாகக் கொள்ளாமல் பெரியாழ்வார் திருமொழியின் ஒரு பகுதியாகவே கணக்கிட்டிருப்பதை ஏற்க முடியவில்லை. இது குறித்து ஸ்ரீ உவே. மஹாவித்வான் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் ஏற்கெனவே பல கட்டுரைகளை எழுதித் தெளிவு பிறப்பித்திருக்கிறார்கள். பெரியாழ்வார் திருமொழியில் முதல் பத்தில் ஒன்பது

திருமொழிகள் மட்டுமே இருந்தால் அதை ஒரு பத்தாகக் கணக்கிட முடியாது என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார். ஆனால் பெரியாழ்வார் திருமொழியில் "சீதக்கடலுள்" என்று தொடங்கும் (இரண்டாம்) திருமொழியில் இருபது பாசுரங்கள் அமைந்துள்ளபடியால், மொத்தத்தில் முதல் பத்தில் ஒன்பது திருமொழிகள் அமைந்திருந்தாலும் நூறுபாசுரங்கள் இடம் பெற்றுவிடுகின்றபடியால் அதை ஒரு பத்தாகக் கொள்ளக் குறையேதுமில்லை. மணவாள மாமுனிகள் தமது உபதேசரத்தினமாலையில் வேதத்திற்கு ஓம் என்பதுபோல் திவ்வியப் பிரபந்தங்களுக்குத் திருப்பல்லாண்டு என்பது தனியொரு பிரபந்தம் எனக் கொள்ள முடியாது என்று ஆசிரியர் கூறுகிறார். திருப்பல்லாண்டு என்பது பெரியாழ்வார் திருமொழியின் முதல் பதிகமாக இருக்குமானால் அதற்குத் தனியாகத் 'திருப்பல்லாண்டு' என்ற பெயர் ஏற்பட்டிருக்காது. நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் பற்பல பதிகங்களைக் கொண்ட எந்த திவ்வியப் பிரபந்தத்திலும் பதிகத்திற்குத் தனியான பெயர் வழங்குவதில்லை. முதல் பாசுரத்தின் முதல் சொல்லே பதிகத்தின் தலைப்பாகக் குறிப்பிடப்படும். உதாரணமாகப் பெரியதிருமொழியில் முதல் பதிகத்தில் நாராயணநாமத்தின் பெருமை கூறப்பட்டாலும் அப் பதிகத்திற்குத் தனிப்பெயர் வழங்குவதில்லை. "வாடினேன் வாடி" என்றே அப்பதிகம் குறிப்பிடப்பெறும். இதே போல் மற்ற பிரபந்தங்களிலும் காணலாம். அப்படியிருக்கும்போது திருப்பல்லாண்டு தனி பிரபந்தம் அல்ல என்றால் அதுவும் "பல்லாண்டு பல்லாண்டு" என்று குறிப்பிடப்பட்டிருக்குமேயன்றி "திருப்பல்லாண்டு" என்ற தனிப்பெயரால் குறிப்பிடப்பட்டிருக்க முடியாது. மணவாள மாமுனிகள் தமது உபதேசரத்தினமாலையில்

“வேதத்துக்கு “ஓம்” என்னுமது போல் “ஆதி திருப்பல்லாண்டு ஆனதுவும்” என்று அருளிச் செய்து உள்ளமையால் அது தனி திவ்வியப் பிரபந்தமே என்பது உறுதியாகிறது. மேலும் பெரியாழ்வார் திருமொழியில் முதல் நானூறு பாசுரங்களுக்குப் பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்த வியாக்கியானம் செல்லரித்துவிட்டதனால் அந்த நானூறு பாசுரங்களுக்கு மட்டும் மணவாளமாமுனிகள் வியாக்கியானம் செய்துள்ளார் என்பதை நூலாசிரியரும் வேறோர் இயலில் எடுத்துக் காட்டியுள்ளார். அப்படி மணவாளமாமுனிகள் அருளிச் செய்த வியாக்கியானம் “வண்ணமாடங்கள்சூழ்” என்று தொடங்குகிற பதிகம் முதற்கொண்டுதான் உள்ளது. திருப்பல்லாண்டுக்குப் பெரியவாச்சான் பிள்ளை உரையே உள்ளது. இதுவும் திருப்பல்லாண்டு தனி திவ்வியப் பிரபந்தமே என்ற கருத்தையே உறுதிப்படுத்துகிறது. பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் ஓரிடத்தில் “திருப்பல்லாண்டு தொடங்கிட......”என்று அருளிச்செய்துள்ளமையால் அதைத் தனி திவ்யப்பிரபந்தமாகக் கொள்ள முடியாது என்று ஆசிரியர் கூறுகிறார். இது திருப்பல்லாண்டு தனி திவ்யப் பிரபந்தமே என்பதை உறுதிப்படுத்துமேயன்றி வேறல்ல. ஈடு முப்பத்தாறாயிரப்படி உரையில் “பொய்ந்நின்றஞானமும் தொடங்கி இவ்வளவும் வர ......”என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. திருவிருத்தமும், திருவாய்மொழியும் தனித்தனி திவ்யப் பிரபந்தங்களாக இருக்கச் செய்தேயும் அருளிச் செய்தவர் ஒருவரே என்ற காரணத்தால் நம்பிள்ளை அவ்வாறு அருளிச் செய்துள்ளது போலவே பெரியவாச்சான் பிள்ளையும் அருளிச் செய்துள்ளார் என்று கொள்வதில் தடையேதுமில்லை. மேலும் “பல்லாண்டு பல்லாண்டு தொடங்கி” என்றருளிச் செய்யாமல்

“திருப்பல்லாண்டு தொடங்கி” என்றருளிச் செய்வதிலிருந்தே பெரியவாச்சான் பிள்ளை திருப்பல்லாண்டைத் தனி திவ்வியப் பிரபந்தமாகக் கருதியிருந்தார் என்பது உறுதியாகிறது. வேதாந்த தேசிகர் அருளிச் செய்ததாகக் கருதப்படும்பிரபந்த சாரம் எனும் நூலில் திருப்பல்லாண்டு தனி திவ்வியப் பிரபந்தமாகக் கொள்ளப்படாததை நூலாசிரியர் தமது கருத்துக்கு ஆதாரமாகக் காட்டுகிறார். ஆனால் திருமடல்களை பல பாடல்களாக வேதாந்த தேசிகர் பிரித்துள்ளது இலக்கண மரபுக்குச் சேராததாகையால் தவறு என்று முடிவுகூறும் ஆசிரியர் திருப்பல்லாண்டு விஷயத்திலும் அவ்வாறே கொள்ளக் குறையேதுமில்லை. இப்படிப்பட்ட சில தவறான கருத்துக்கள் இடம் பெற்றுள்ள காரணத்தினாலேயே ‘பிரபந்த சாரம்’ எனும் நூல் வேதாந்த தேசிகர் அருளிச் செய்ததாக இருக்க முடியாது என்று ப்ர, அண்ணா ஸ்வாமி நிலை நாட்டியுள்ளார் என்பது இங்கே நினைவுகூரத் தக்கது.

“பாசுரங்களில் அகப்பொருள் தத்துவம்” என்ற தலைப்பில் அமைந்துள்ள மூன்றாம் இயல் மிகவும் சிறப்பாக அமைந்துள்ளது. பரகாலன் பைந்தமிழில் அகப் பொருள் துறைகள் எவை என்று ஆசிரியர் எடுத்துக் காட்டும்போது அவருடைய நுண்மாண் நுழைபுலம் நன்கு வெளிப்படுகிறது. பாசுரங்களில் அமைந்துள்ள சொற்களின் நயத்தை பூருவாசாரியர்கள் அருளிச் செய்துள்ள வியாக்கியானங்களின் நடையில் அருமையாக விளக்கியுள்ளார்.

“பன்னிரு ஆழ்வார்கள்” என்ற தலைப்பில் அமைந்துள்ள நான்காம் இயலில் ஆழ்வார்களுடைய வரலாறுகள் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன. ஆனால் சம்பிரதாயக் கருத்துக்கு

முரணாக நம்மாழ்வாரை அனைத்து ஆழ்வார்களுக்கும் பிற்பட்டவராகக் காட்டியிருப்பதை ஏற்க முடியவில்லை.

"திவ்வியப் பிரபந்த இலக்கியப் பெருவிழா" என்ற ஐந்தாம் இயலில் திருவரங்கம் பெரிய கோயிலில் நடைபெறும் அத்யயன உற்சவத்தைப் பற்றி ஆசிரியர் மிகவும் விளக்கமாக வரைந்துள்ளார். அவ்வுற்சவத்தின்போது ஒவ்வொருநாளும் நடைபெறும் அரையர்சேவையைப்பற்றிய குறிப்புகளும் விளக்கமாக இடம் பெற்றுள்ளன.

"வைணவ உரைவளம்" என்ற ஆறாம் இயலில் திவ்வியப் பிரந்தங்களுக்கு அமைந்துள்ள வியாக்கியானங்கள் பற்றிய விவரங்கள் தரப்பட்டுள்ளன.

"வைணவ ஆசாரியர்கள்" என்ற ஏழாம் இயலில் ஓராண்வழி ஆசார்ய குரு பரம்பரைகள் தரப்பட்டுள்ளன. தென்கலை குருபரம்பரை வடகலை குருபரம்பரை ஆகிய இரண்டையுமே விளக்குகின்ற ஆசிரியர். நம்பிள்ளையின் சீடரும் ஈடுமுப்பத்தாறாயிரப்படியை ஏற்படுத்தியவருமான வடக்குத் திருவீதிப்பிள்ளையை நடாதூரம்மாளின் சீடராகக் குறிப்பிட்டுள்ளதும் வடக்குத் திருவீதிப்பிள்ளையின் தகப்பனார் பெயர் பிள்ளை உலகாசிரியர் என்று குறிப்பிட்டுள்ளதும் வியப்பாக உள்ளது. அவர் தம்முடைய குமாரருக்குத் தகப்பனாரின் பெயரையே இட்டிருக்கலாம் என்று ஆசிரியர் குறிப்பிடுவது மேலும் வியப்பைத் தருகிறது. கந்தாடைத் தோழப்பர் நம்பிள்ளையின் குணநலன்களை வியந்து கொண்டாடி உலகாசிரியர் என்ற பட்டத்தினை வழங்கினார் என்றும், வடக்குத் திருவீதிப்பிள்ளை தமது குமாரருக்குத் தமது ஆச்சார்யருடைய அத் திருநாமத்தையே

கூட்டினார் என்றும் மணவாளமாமுனிகள் உபதேசரத்தின மாலையில் (51,52) அருளிச் செய்துள்ளதற்கு மாறாக இக் கருத்து உள்ளது. மணவாள மாமுனிகள் தமது இறுதிக் காலத்தில்தான் துறவறம் மேற்கொண்டார் என்று ஆசிரியர் எழுதியுள்ளதும் மாமுனிகளின் வரலாற்றைப் பகரும் யதீந்த்ரப்ரவணப்ரபாவம் என்னும் நூலிலுள்ள செய்திகளுக்கு மாறாகவுள்ளது.

"வைணவ சீலர்கள்" என்ற எட்டாம் இயலில் மற்றுமுள்ள ஆசாரியர்கள் பலரைப் பற்றிய செய்திகள் சுருக்க மாகத் தரப்பட்டுள்ளன. ஆசாரியர்கள் பலரைப்பற்றிய அரிய செய்திகள் இவ்வியலில் இடம்பெற்றுள்ளன. இவ்வியலில் பட்டர்அனந்தாழ்வானுக்கு ஸ்ரீவைஷ்ணலக்ஷணம் கூறியதாக உள்ளது. பட்டரிடம் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் வந்து ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம் பற்றிக் கேட்க பட்டர் அந்த ஸ்ரீவைஷ்ணவரை அநந்தாழ்வானிடம் அனுப்பி வைத்ததாகவும் அந்த ஸ்ரீவைஷ்ணவலக்ஷணத்தைப் பற்றிக் கூறியதாகவும்தான் குருபரம்பரையில் உள்ளது.

தொடர்ந்து வைணவசமயத் தத்துவங்கள் (9) வைணவ மந்திரங்கள் (10)இருவகை ஞானங்கள் (11) வீடுபேற்றிற்குரிய வழிகள் (12) நலம் அந்தம் இல்லதோர் நாடு (13) ஆகிய இயல்களில் புரிந்து கொள்வதற்கு மிகக் கடினமான வைணவக் கொள்கைகள் மிகவும் எளிய நடையில் யாவரும் புரிந்து கொள்ளும் வகையில் ஆசிரியர் வழங்கியுள்ளமை இந்நூலின் சிறப்பான அம்சமாகும்.

மேலும் சம்ப்ரதாயங்கள் சில (14,15) வைணவ திவ்யதேசங்கள் (16) ஆகிய இயல்களிலும் மிகவும் அரிய கருத்துக்கள் தரப்பட்டுள்ளன. வைணவர்கள் நெற்றியில்

அணிந்து கொள்ளும் திருமண்காப்பு எம்பெருமானுடைய திருவடிகள் அல்ல என்பது ஆசிரியர் கூறும் புதுமையான கருத்து.

மேலே கூறியுள்ளபடி ஒரு சில கருத்து வேற்றுமைகள் இந்நூலில் அமைந்திருந்தாலும் வைணவத்தைப் பற்றி நன்கு அறிந்து கொள்வதற்குப் பயன்படும் முழுமையான நூல் இது என்பதில் துளியும் ஐயமில்லை. ஆசிரியரின் அறிவுத்திறனும் ஆய்வுத்திறனும் நூல்நெடுகிலும் வெளிப்படுகின்றன. தமது முதிய வயதிலும் அயராமல் பாடுபட்டு இப்படிப்பட்ட தொண்டினில் ஆசிரியர் ஈடுபட்டு வருவதற்கு வைணவ உலகம் கடமைப்பட்டுள்ளது. மேலும் பல்லாண்டுகள் பூரண உடல் நலத்துடன் வாழ்ந்திருந்து இதுபோல் மேலும் மேலும் பற்பல தொண்டுகள் செய்யும் வல்லமையைப் பேராசிரியர் சுப்புரெட்டியார் அவர்களுக்கு அருளுமாறு கீதாசார்யன் திருவடிகளை நினைந்து வேண்டுகிறேன்.

வயதிலும் ஞானத்திலும் இளையவனான அடியேனையும் ஒரு பொருளாக்கி அணிந்துரை எழுதும் வாய்ப்பை நல்கிப் பெருமைப் படுத்திய ரெட்டியார் அவர்களுக்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஸ்ரீவைஷ்ணவபாததூளி

**வேங்கடகிருஷ்ணதாஸன்**

# 'நூல் முகம்'

மண்நாடும், விண்நாடும், வானவரும்
தானவரும், மற்றும் எல்லாம்
உண்ணாத பெருவெள்ளம் உண்ணாமல்
தான்விழுங்கி உய்யக் கொண்ட
கண்ணாளன், கண்ணமங்கை நகராளன்
கழல்சூடி, அவனை உள்ளத்து,
எண்ணாத மானிடத்தை எண்ணாத
போதுஎல்லாம் இனிய ஆறே!

— *திருமங்கையாழ்வார்*

*சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தமிழுக்கும் சைவத்திற்கும் செய்து வரும் தொண்டு ஒரு பல்கலைக் கழகம் செய்து வரும் தொண்டிற்கும் பன்மடங்கு பெரியது. சைவ சமயப் பற்று இருப்பினும் தமிழ் என்று வரும்போது பிற சமயங்கள் தமிழோடு உறவாடும்போது சிறிதும் அவற்றின்மீது காழ்ப்பு இன்றி பிற சமயங்களையும் போற்றி வருவது கழகத்தின் பரந்த நோக்கு என்பது புலனாகின்றது.*

*இந்த நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு 'சமணமும் தமிழும்' 'கிறித்துவமும் தமிழும்' 'இஸ்லாமும் தமிழும்' என்று வரிசையாக வெளியிட்டு வரும் மரபு அதன் விரிந்த நோக்கத்தைக் காட்டுவதாக அமைகின்றது. இந்த வரிசையில் வெளிவருவது 'வைணமும் தமிழும்' என்ற நூலாகும்.*

---

1. பெரி. திரு. 11. 6 : 7

இந்த நூல் எழுதுமாறு 13-2-1981 லேயே கேட்டுக் கொண்டார்கள், கழக அதிபர் திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள். அப்போது அடியேன் வேறு திருப்பணியில் ஈடுபட்டிருப்பதால் எழுத முடியவில்லை. அதற்குப் பின்னரும் பல பொறுப்புகள் ஒன்றன்பின் ஒன்றாக வந்தமையால் இதில் நாட்டம் செலுத்த முடியவில்லை. சென்ற ஆண்டு (1997) சற்று ஓய்வு கிடைத்தமையால் ஒரே மூச்சில் இந்த நூலை எழுதி முடித்தேன்.

இந்த நூலுக்கு 'அணிந்துரை' வழங்கியவர் என அரிய நண்பரும் காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணாசாமிவழி வந்தவரும் தற்சமயம் சென்னைப் பல்கலைக் கழகத்தில் வைணவத்துறையில் இணைப் பேராசிரியராகப் பணியாற்றி வருபவருமான டாக்டர் எம்.ஏ. வேங்கடகிருட்டிணன் அவர்கள். அவருக்கு என் நெஞ்சம் கலந்த நன்றி. அணிந்துரையில் சில கருத்துவேறுபாடுகளைக் காட்டியுள்ளமை பற்றி வாசகர்கள் பொருட்படுத்த வேண்டியதில்லை. இவர் தென்கலை வைணவர் . இதற்கு வடகலை வைணவர் ஒருவர் அணிந்துரை வழங்கினால் அது இதற்கு நேர்-மாறான கருத்து வேறுபாடுகட்கு இடம் அளிப்பதாக அமையும். இந்த நூலை அச்சிடுங்கால் பார்வைப் படிவங்களைச் சரி பார்த்த என் அபிமான புத்திரி டாக்டர் M. B. சியாமளா தேவிக்கு என் உளங் கலந்த நன்றி உரியது.

சைவ சமயத்தைச் சார்ந்த அடியேன் கடந்த நாற்பதாண்டுகளாக வைணவ சமயத்திலும் வைணவ இலக்கியங்களிலும் ஆழங்கால்பட்டு அநுபவித்து வருபவன். அடியேனின் டாக்டர் (பி.எச்.டி.) பட்ட ஆய்வேடு நம்மாழ்வார் தத்துவம்பற்றியது; ஆங்கிலத்தில் ஆயிரம் பக்கம் கொண்டது. திருவேங்கடவன் பல்கலைக்கழக வெளியீடாக வந்துள்ளது. அடியேனின் பார்வை விருப்பு வெறுப்பற்ற நோக்குடையது.

இந்தநூல் வைணவ சமயத்தைச் சார்ந்த சாதாரண மக்களுக்கும் வைணவத்தைச் சாராத பிறருக்கும் பயன்படக் கூடியது. வைணவத்தை அறிந்து கொள்ள விரும்பும் ஆர்வலர்கட்கும் பெரிதும் பயன்படக்கூடியது. இதனை யொட்டி 'சைவமும் தமிழும்' என்ற ஒரு நூலை பிற சமயத்தினருக்கு அறிமுகம் செய்யும் பாங்கில் எழுத எண்ணம் உண்டு. செம்மேனி எம்மான் சிவபெருமான் அருள் இருப்பின் கழகமே அதனையும் வெளியிட்டுப் பெருமை கொள்ளும் என்பது என் அதிராத நம்பிக்கை.

இந்த நூலை வரைவதற்கு என்னுள்ளே நிலையாக உறையும் 'அகலகில்லேன் இறையும்' என்று அலர்மேல் மங்கை உறைமார்பனின் தோன்றாத்துணையால்தான் என்று கருதி அவன் திருவடிகளை நினைந்து வழுத்தி, வணங்கி அமைகின்றேன்.

> நான் உன்னை அன்றிஇலேன்
> கண்டாய்; நாரணனே!
> நீஎனை அன்றி
> இலை.
>
> மெய்ப்பொருள்தான் வேத
> முதற்பொருள்தான் விண்ணவர்க்கு
> நற்பொருள்தான் நாரா
> யணன்.[1]

— திருமழிசையாழ்வார்

இங்ஙனம் அடியேன்
ந.சுப்புரெட்டியார்.
(இராமாநுச தாசன்)

'வேங்கடம்'
AD-13, அண்ணாநகர்
சென்னை- 600 040.

---

1. நான் முகன் திருவந்தாதி – 7, 13.

# உள்ளுறை

# 1. வைணவமும் தமிழும்

வைணவம் விட்டுணுவை (திருமாலை) முடிந்த பேருண்மையாகக் கொண்டு திகழும் சமயமாகும். இச்சமயம் பாகவதம், பாஞ்சராத்திரம், சாத்வதம், ஏகாந்திகம் என்ற திருநாமங்களாலும் வழங்கப்பெறும். இறைவனைப் 'பகவான்' என்று கொள்ளும் வழிபாட்டு மரபு பாகவதம்; பாகவத மரபினர் பாகவத புராணத்தையும், பகவத் கீதையையும் மகாபாரதத்தில் நாராயணீயம் என்ற பிரிவினையும் தங்கள் நம்பிக்கைக்கு அடிப்படை நூல்களாகக் கொள்வர். பாஞ்சராத்திர மரபினர் பாஞ்சராத்திர ஆகமங்களைத் தங்கள் அடிப்படை நூல்களாகக் கொள்வர். சிரீகிருட்டிணர் சார்ந்த இனமாகிய சாத்வதத்திலிருந்து பெயர் பெற்றது சாத்வதம். ஒரே ஒரு முடிவைக் கொண்டது ஏகாந்திகம். இவர்கள் நாராயணனே மனிதர்கள் அடைய வேண்டிய மேலான முடிவாகும் என்ற நம்பிக்கையுடையவர்கள்.

வைணவ வழிபாட்டு மரபு விட்டுணுவைப் பரம் பொருளாகக் கருதினாலும் இந்தக் கொள்கையானது சிந்தனைப் போராட்டங்களின் ஒருமித்த நிலையாகும் என்பது ஆர்.ஜி பண்டாரகர் போன்ற ஆராய்ச்சி அறிஞர்களின் கருத்தாகும்.[1] அவை(1) வேதங்களில் காணப்பெறும் மூன்று நீண்ட அடிகளையுடைய இறைவனாகக் கருதப்பெறும் விட்டுணுவைப் பற்றிய கருத்து; (2) இயல் உலகு மற்றும்

---

1. அவரது Vaishnavism, Saivism and other minor Religious systems என்ற நூலைக் காண்க

மெய்ப்பொருளியலைச் சார்ந்த இறைவனான நாராயணனைப் பற்றிய கருத்து; (3) வரலாறு சார்ந்த இறைவன் எனக் கருதப் பெறும் வாசுதேவனைப் பற்றிய கருத்து; மற்றும் (4) ஆயர் இனத்தைச் சார்ந்த இறைவனான கிருட்டிணனைப் பற்றிய கருத்து என்பனவாகும். இந்த நான்கு வகைக் கருத்துகளும் இணைந்ததே இன்றைய வைணவமாகத் திகழ்கின்ற ஒன்றாகும். இந்த நான்கு வகைக் கருத்துகளையும் ஆய்ந்து அவையே இன்றைய வைணவ மரபாக மாறின என்பதைத் தெளிவாக விளக்கியுள்ளேன்.[2] ஆங்குக் கண்டு கொள்க.

இனி, பண்டைய தமிழ்நூல்களில் திருமால் வழிபாடு பற்றிய குறிப்புகளைக் காண்போம்.

## 1. தொல்காப்பியம்

பண்டையத் தமிழர்கள் கடல் சூழ்ந்த நிலப் பகுதியை நான்கு நிலங்களாகப் பகுத்தும், அந் நிலங்கட்குத் தெய்வங்களை வகுத்தும் காட்டியுள்ளனர், காடு சார்ந்த நிலமாகிய முல்லையையும், அதன் ஆதி தெய்வமான திருமாலையும் முதற்கண் வைத்துச் சிறப்பித்துள்ளமை,

**மாயோன் மேய**
**காடுறை உலகமும்[3]**

என்ற பழந்தமிழ் இலக்கணமான தொல்காப்பியத்தால் அறியலாம். மாயோன் - கண்ணன்; கருநிற முடையோன்! இதனால் மாயோன் என்று முன்னோர்களால் குறிப்பிடப்

2. சுப்புரெட்டியார் .ந : வைணவச் செல்வம் எனும் நூலில் முதல் இயலைக் காண்க (தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு)

3. தொல்–பொருள்.அகத்திணை–5 (இளம்)

பெறும் தெய்வம் திருமாலின் பூர்ண அவதாரமான கண்ணனே என்பது பெறப்படுகின்றது. இவ்வுரிமைத் தலைமை அப் பெருமானுக்கு அமைந்ததற்கு அவனது இறைமைப் பண்புகளே காரணமாகும் என்று கருதலாம்.

**மாயோன் மேய மன்பெறுஞ் சிறப்பிற்**
**றாவா விழுப்புகழ் பூவை நிலையும்** [4]

என்ற நூற்பா 'பூவைநிலை' என்ற புறத்திணையினை விளக்குவது. இதனை மாயோனுடைய காத்தற் புகழை மன்னர்க்கு உவமையாகக் கூறும் 'பூவை நிலை' என்று விளக்குவர் நச்சினார்க்கினியர். மேலும் அவர்,

**கடல்வளர் புரிவளை புரையு மேனி**
**யடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனும்**
**மண்ணுறு திருமணி புரையு மேனி**
**விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனும்** [5]

என்னும் புறநானூற்றுப் பாடலை மேற்கோள் காட்டுவர். இப் பாடலில் பலதேவனும் திருமணி (திருமறு-ஸ்ரீவத்சம்) யையுடைய திருமாலும் வருதலைக் காணலாம். பலதேவனைத் தமிழ்நூல்கள் நம்பிமூத்தபிரான் என்று குறிப்பிடும்.

தொல்காப்பியத்தில் இன்னொரு குறிப்பும் உண்டு. அந்நூல் எழுவதற்கு முன்பே கண்ணபிரானைப் பர தெய்வமாகக் கொண்டு அப்பிரானது குழவிச்செயல்களில் தமிழ் மக்கள் ஈடுபட்டு வந்தனர் என்பதே அக்குறிப்பு. மானிடனாகிய பெண்மக்கள் அவ்வினத்து ஆண்மக்களிடமும்

4. புறத்திணை–5. (இளம்) 53
5. புறம்–56

ஆண்குழவிகளிடமேயேன்றிக் கடவுளரிடத்தும் கடவுள் குழவியரிடத்தும் காமப்பகுதி செலுத்துவதற்குரியவர் என்பதனைத் தொல்காப்பியர்,

> **காமப் பகுதி கடவுளும் வரையார்**
> **ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர்,**[6]
>
> **குழவி மருங்கினும் கிழவ தாகும்**[7]

என்ற நூற்பாக்களால் புலப்படுத்துவர். இது தெய்வக் குழவியாகிய கண்ணனிடம் ஆயமகளிர் கொண்ட காதல் வெள்ளத்தை உட்கொண்டு கூறப்பெற்றதாகக் கொள்ளலாம். இவற்றால் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே (கி.மு. முதல் நூற்றாண்டு) திருமால் வழிபாடு தமிழகத்தில் வேரூன்றி இருந்தமை தெளிவாகின்றது.

வாசுதேவனான இக் கண்ணனைச் சங்கர்ஷண மூர்த்தியாகிய பலதேவனுடன் கொண்டு தோன்றிய முறை விந்திய மலைக்கும் அப்பால் உள்ள வடநாடுகளிலே ஒரு காலத்துச் சிறப்பாக இருந்தது என்பதையும் பண்டைய வட நூல்களாலும் கல்வெட்டுக்களாலும் அறியக் கிடக்கின்றது.[8] இத்தகைய சங்கர்ஷண-வாசுதேவ வணக்கமே தென்னாட்டிலும் பரவி வழங்கியதற்குச் சங்க நூல்கள் பலவும் சான்றாக அமைகின்றன. தொல்காப்பியனார்க்கு இவ் வணக்கத்தைப்பற்றி வெளிப்படையாகக் கூற நேராமல் போயினும், அவர்காலத்துமாயோனான கண்ணன் வழிபாடே

6. தொல். பொருள்–புறத்திணை–23 7. மேலது –24
8. Bhandarkar, R. G.: Vaishnavism, Saivism and other minor Religious systems. pp. (3-4)

யன்றி நம்பிமூத்த பிரானைப் போற்றும் முறையும் இருந்ததென்பதற்கு அவர் நூலில் ஒரு சிறந்த குறிப்பு உண்டு. தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் 'பனை' என்ற சொல்லுக்கு முன் வரும் சொற்கள் புணரும் முறையை,

**கொடிமுன் வரினே ஐஅவன் நிற்பக்**
**கடிநிலை இன்றே, வல்லெழுத்து மிகுதி! [9]**

என்ற நூற்பா விளக்கும். அதாவது 'பனை' என்பதற்கு முன் 'கொடி' என்பது வருமொழியாக வருங்கால் ஏனையவை போல ஐகாரம் கெட்டு அம்முச் சாரியை பெறாது 'ஐ' நிற்ப வல்லெழுத்துப் பெற்றுப் புணரும் என்று விதித்தல் காணலாம்.

பனை+கொடி= பனங்கொடி என்று வராது.

பனை + கொடி = பனைக் கொடி

என்றே வரும். இவ்வாறு தொல்காப்பியர் பனைக்கொடியை எடுத்துக்கொண்டு விதி கூறுவதனால் அக்கொடி அக்காலத்து வழக்குமிகுதி பெற்றிருந்தது என்பதை அறியலாம். இங்ஙனம் வழக்குமிகுதி பெற்ற பனைக் கொடி நம்பி மூத்தபிரானான பலதேவர்க்கு மட்டிலும் உரியது. இதனால் சங்கர்ஷண வாசுதேவர்கள் வடபுலத்தைப் போலவே தமிழகத்திலும் தொன்றுதொட்டு வழிபடப் பெற்று வந்த அவதாரமூர்த்திகள் என்பது தெளிவாகும். [10]

இங்ஙனம் தமிழ் மக்களின் ஆதி தெய்வங்களுள் ஒருவரான கண்ணன், தானே தனித்தும், நம்பி மூத்தபிரானுடனும் நிகழ்த்தியனவாக அம் மக்கள் வழங்கி வந்த வரலாறுகள்

9. தொல்–எழுத்து– உயிர் மயங்கியல்–53
10. இராகவய்யங்கார்.மு : ஆராய்ச்சித் தொகுதி– பக் 54.

பலவாகும். இவற்றுள் பல வடநூல் வழக்கு பெற்றவை; எனினும் தமிழகத்திற்கே உரியனவாக வரலாறுகளும் உள்ளன; இவற்றிற்குப் பாரதம் பாகவதம் முதலிய இதிகாச, புராணங்களில் சான்று காண்டல் மிக அரிது. இதனால் கண்ணன் வழியினராய்த் தென்னாட்டில் குடியேறிய வேளிரும் அப்பிரான் வளர்ந்த ஆயர்பாடியராய் (கோகுலத்தவராய்) இங்கு வந்தேறிய ஆயரும் போன்றே பழந்தமிழ்க்குடிகளால் அவ்வரலாற்று வழக்குகள் இங்கும் வழங்கி நடைபெறலாயின என்று கொள்ளத் தட்டில்லை. இவ்வரலாறுகளில் சிறப்புடையவை நப்பின்னைப் பிராட்டித் திருமணம், கண்ணன் குருந்தொசித்தது, குடக்கூத்து ஆடியது, ததிபாண்டற்கு வீடு பேறு அளித்தது முதலியனவாகும். இச் செய்திகள் சங்க இலக்கியங்கள், சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, பழமொழி நானூறு, ஆழ்வார்களின் அருளிச் செயல்கள், பிள்ளைப் பெருமாள் அய்யங்காரின் அஷ்டப் பிரபந்தம் முதலான நூல்களில் காணப் பெறுகின்றன.

## 2. பத்துப்பாட்டு

தொல்காப்பியத்தை அடுத்துப் பத்துப்பாட்டும் எட்டுத் தொகை நூல்களும் எழுந்தன. இவை கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் தோன்றியனவாகக் கூறுவர். முதற்கண்கூறிய பத்துப்பாட்டில் மாயோனைப்பற்றிய குறிப்புகள் பல காணலாம். அவற்றுள் சில :

'புள்ளணி நீள்கொடிச் செல்வன்' [11]

'நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலையிய
உலகங் காக்கும் ஒன்றுபுரி கொள்கை' [12]

'இருநிலங் கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன் பிறக்கடை' [13]

'அவ்வயின், அருந்திறல் கடவுள் வாழ்த்தி [14]

[அத்திரு வெஃகாவணையில் அரிய திறலினை யுடைய திருமாலை வாழ்த்தி]

'காந்தளஞ் சிலம்பில் கயிறு நீடுகுலைப் படிந்தாங்குப்
பாம்பணைப் பள்ளியமர்ந்தோன் ஆங்கண்.' [15]

'வலம்புரி பொறித்த நேமியொடு மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போல' [16]

[நேமியொடு, வலம் புரிதாங்கு தடக்கை மாஅல் – சக்கரத்தோடே வலம் புரியைத் தாங்கும் பெரிய கையை யுடைய மால். மா– பொறித்தமா. அல் – திருமார்பிடத்தே திருமகளை வைத்த மால். நீர்செல நிமிர்ந்த மாஅல் போல – மாவலி வார்த்த நீர் தன் கையிலே சென்றதாக உயர்ந்த திருமால் போல]

---

11. திருமுருகு– அடி 181
12. மேலது– 160–161
13. பெரும்பாண்– (22,31)
14. மேலது (390–91) இது பிரம்ம தேவர் செய்த வேள்வியினை அழிக்க வந்த வேகவதி நதியைத் தடுத்தற்பொருட்டுத் திருமால் பள்ளி கொண்டு அணைபோற் கிடந்த தலம்; இங்கே கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருமாலுக்கு 'வேகாசேது' என்பது திருநாமம்.
15. மேலது (371–73)
16. முல்லைப் (1–3)

'கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய ஓண நந்நாள்'[17]

இந்த மேற்கோள்களிலிருந்து (i) மாயோனது கொடி கருடக்கொடி என்றும் (ii) அவன் காப்புக் கடவுள் என்றும், (iii) திருமார் பகத்தே திருமறுவை (ஸ்ரீ வத்சம்) அணிந்த கடல் நீர் வண்ணன் என்றும் (iv) திருவெஃகாவில் (காஞ்சியில்) கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பவன் என்றும், (v) அங்குப் பாம்புப் படுக்கையில் சயனத் திருக்கோலமாகக் காட்சி அளிக்கின்றான் என்றும், (vi) நான்கு முகத்தையுடைய ஒருவனைப் பெற்ற திருவுந்தியையுடையவன் என்றும், திருவாழியையும் திருச் சங்கையும் தன் கைகளில் தாங்கியவன் என்றும், (vii) மாவலியிடம் மூவடி மண் வேண்டிச் சென்று கேட்ட பொருளை நீர் வார்த்துக் கொடுக்க, பேருருவங்கொண்டு காட்சி அளித்தவன் என்றும், (viii) அவுணர்களை அழித்தவனும் மாமை (கருமை) நிறமுடையோனுமாகிய அவன் பிறந்த நாள் திருவோணம் என்றும் அறியப் பெறும் செய்திகளாகும். இவையேயன்றி திருமால் கண்ணனாக அவதாரம் செய்து ஆயர்பாடியில் ஆய்ச்சியர் மருங்கு புரிந்த பல்வேறு செய்திகள் குறிக்கப் பெறவில்லை.

## 3. எட்டுத்தொகை

எட்டுத் தொகை நூல்களில் (அ) பரிபாடலில்[18] இப்போதுள்ள பதிப்பில் திருமாலுக்குரியவையாக ஆறு பாடல்களும் (1,2,3,4,13,15) பரிபாடல் திரட்டில் ஒன்றும் ஆக ஏழு பாடல்கள் உள்ளன.

---

17. மதுரைக் (591–92)

18. இந்நூல் கி.பிக்குச் சற்று முந்தியது என்று சிலரும் கி.பி. 3 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றியது எனச் சிலரும் கூறுவர்.

**இவற்றில் கூறப் பெறும் செய்திகள் :** திருமால் ஆயிரம் பணாமுடிகளைக் கொண்ட ஆதிசேடன்மீது பள்ளி கொண்டவன்; பூவைப் பூ வண்ணன்; திருமகள் விரும்பியமர்ந்த திருமார்பினன்; திருமார்பில் கௌத்துவ மணியை (ஸ்ரீ வத்சம்) யுடையவன்; பொன்னாடை புனைந்தவன்; கருடக் கொடியையுடையவன்; நான்முகனுக்கும் காமனுக்குத் தாதை; திருவாழியை வலக்கையில் தரித்திருப்பவன் (1).

கேழல் உருவைக் கூறும். உயிர்கள் உளவாதற்பொருட்டு வராகத் திருக்கோலம் கொண்டவன்; வெண்ணிற முள்ளவனுக்குப் பிறப்பு முறையால் முதியவன்; உயிர்கள் தோறும் அந்தர்யாமியாய் இருப்பவன்; ஆழிப்படையால் அவுணர்களின் தலைகளைப் பனங்காய்கள் போல் உருளச் செய்தவன்; ஆழிப்படையின் உருவம் பகைவர் உயிருண்ணும் கூற்றையும், அதன் நிறம் சுட்ட பொன்னோடு விளங்கிய நெருப்பையும் ஒக்கும்; திருமேனி நீலமணியையும் கண்கள் தாமரை மலர்களையும் ஒக்கும்; கருடக் கொடியையுடையவன்; தேவர்கட்கு அமிழ்தம் வழங்க வேண்டும் என்று திருவுள்ளத்தில் கொண்ட அளவில் அதன் பயனால் மூவாமையும் ஒழியா வலியும் சாவாமையும் உரியனவாயின (2).

அன்பராயினார் பிறவிப் பிணியை அறுக்கும் மாசில் சேவடியை உடையவன்; நீலமணி போன்ற திருமேனியை யுடையவன்; கருடனின் அன்னையாகிய விநதையின் இடுக்கண் தீர்த்தவன்; கேசி என்னும் அரக்கனை மாய்த்தவன்; மோகினி உருவம் கொண்டு அமரர்கட்கு அமுதம் அளித்தவன்; இவனுக்கு 'உபேந்திரன்' என்ற திருநாமமும் உண்டு; நான்முகனின் தந்தை; அவனைத் தனது திருவுந்தியில் தோற்றுவித்தவன்.

'கீழேழ் உலகமும் உற்ற அடியினன்'(20)என்பதால் திருமால் திரிவிக்கிரமனாக உலகளந்த செயல் குறிக்கப் பெற்றதால் வாமனாவதாரமும் நுவலப் பெற்றதாகும். தனி நின்று உலகைக் காப்பவன். இருபத்தைந்து தத்துவங்களாலும் ஆராயப்பெறும் பெருமையை உடையவன். பிறவாப் பிறப்பு இல்லாதவன்; அவனைப் பிறப்பித்தோரும் இலர்.

**மாவிசும்பு ஒழுகுபுனல் வறள அன்னச்**
**சேவலாய்ச் சிறகர்ப் புலர்த்தியோய் (25–26)**

என்பதால் ஊழிக் காலத்தில் பொழியா நின்ற மழை நீரை அன்னச் சேவலாகிச் சிறகாலே வரளச் செய்தவன் என்பது குறிப்பிடப் பெறுகின்றது.

அளவற்ற கைகளையும் யாக்கைகளையும் உடையவன். ஆகமத்தாலும், அகங்காத்தாலும் மனத்தாலும், உணர்வினாலும் மற்ற எல்லாவற்றாலும் வனப்பும் எல்லையும் அறியப் பெறாதவன். பகைவர் நட்டோர் என்னும் முறை இல்லாதவன், ஆயிரம் தலைகளையுடைய அனந்தாழ்வானைத் தன் வாயிற் கவ்விய கருடனின் தருக்கு அடங்க ஒவெனக் கதறுவதற்குக் காரணமானவன்.

**செங்கட் காரி கருங்கண் வெள்ளை**
**பொன்கட் பச்சை பைங்கண் மாஅல் (181–182)**

என்ற அடிகள் சிவந்த கண்ணையும், கரிய மேனியையும் உடைய வாசுதேவன், கரிய கண்ணையும் வெள்ளிய திருமேனியையும் உடைய சங்கர்ஷணன், சிவந்ததிருமேனியையுடைய பிரத்திம்யுனன், பசிய உடம்பையுடைய அநிருத்தன் என்ற திருமாலினது நான்கு வகை வியூகங்களும் இப் பாடலில் நுவலப் பெறுகின்றன. (3)

நீலமேனியையும் அலையடங்கிய கடலையும் நீர் நிறைந்த மேகத்தையும் ஒத்த திருமேனியையுடையவன். பிரகலாதன் பொருட்டுத் தூணிலிருந்து நரசிம்மனாகத் தோன்றி இரணியனின் மார்பைக் கிழித்த நகத்தையுடையவன். பண்டைக் காலத்தில் பூமி வெள்ளத்தில் அழுந்திய போது வராக வடிவம் கொண்டு அந் நிலத்தைத் தன் கோட்டால் எடுத்து நிறுத்திய செயல் உலகம் தாங்கும் மேருமலையின் செயலோடு ஒக்கும். பனை, கலப்பை, யானை முதலிய கொடிகள் இருப்பினும் கருடக் கொடியே சிறந்தாகத் திகழும். அன்பர் நெஞ்சிற் கருதிய வடிவமே அவனது வடிவம்; தனி வடிவம் இல்லாதவன் வனமாலை அணிந்தவன். தன்னினும் சிறந்த திருவடிகளையுடையவன்; நிறைந்த கடவுள் தன்மையை யுடையவன். வேறு பண்புகளும் நிறைந்தவன். ஆலின் கீழும் கடம்பினும் ஆற்றிடைக் குறையினும், மலையிடத்தும் பிறவிடத்தும் பொருந்திய தெய்வங்களாக வேறுவேறு பெயரும் உருவமும் கொண்டு விளங்குபவன், "ஆர்வலர் தொழுகைகளில் அமைதியாக அமர்ந்திருப்பவன். அவரவர் ஏவலனாகவும் அவரவர் செய்த பொருளுக்குக் காவலனாகவும் இருப்பவன்" (4)

பீதாம்பரத்தையும் திருமுடியையும் மாலையையும் கருடக்கொடியையும்கொண்டவன். காத்தல் தொழிலையும் உடையவன். திருஆழியையும், திருச்சங்கையும் ஏந்திய கைகளையுடையவன். தன்னைத் தொழுவோர்க்கு வைகுண்ட பதவியை வழங்குபவன். ஐந்து பூதங்களும் மூவேழு உலகத்து உயிர்களும் அவனிடத்து உண்டாயின. பாற்கடல் நடுவே ஆயிரம் தலையையுடைய ஆதிசேடன் மீது அறிதுயில் கொள்பவன். கலப்பையைப் படையாக உடையவன். பூமியை

நடுக்கமற எடுத்த ஆதிவராகன், மேகம், காயாம் பூ, கடல், இருள், நில மணி என்னும் ஐந்தையும் ஒக்கும் திருமேனியையுடையவன். காலக் கூறுபாடுகளைக் கடந்து நிற்பவன். அவனுடைய திருவடி, திருக்கை, திருக்கண், திருப்பவழம் இவை தாமரை மலரையொக்கும், நெருப்பையொத்த வெட்சிமலரை இடையிட்டுக் கட்டின திருத்துழாய் மாலையையுடையவன், அவரவர் செய்த தவப்பயனால் தியானிக்கத் தக்கவன். (13)

மலைகளில் சிறந்த திருமாலிருங் குன்றத்தில் மாயோனாகவும் பலதேவனாகவும் சேவை சாதிப்பவன், அவன் அருளின்றி வீடுபேறு அடைதல், துறக்கம் பெறுதல் அரிது. திருமாலிருஞ்சோலை மலையில் எழுந்தருளியிருக்கும் திருமால் துளவமாலையை அணிந்தவன். நீலமணிபோன்ற மேனியையுடையவன் ஒளி மிக்கவன், ஒற்றைக் குழையை யுடையவன்; கருடக் கொடியையுடையவன். கலப்பையை ஆயுதமாகக் கொண்டவன், திருவாழி, திருச்சங்கு முதலிய ஐந்து படைகளையுடையவன். (15)

**(ஆ) பரிபாடல் திரட்டு :** இருந்தையூர் என்னும் திருப்பதியில் எழுந்தருளியிருப்பவன். இதில் அமுதம் கடைந்த செய்தி கூறப்பெற்றுள்ளது. (இருந்தையூர்-என்பது மதுரையில் உள்ள திருக்கூடல் என்னும் திருப்பதி)

**(இ) கலித்தொகை :** இதில் திருமாலைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. 'ஒருகுழை யொருவன்போல் இணர் சேர்ந்த மராமரமும்' (கலி-27) என்ற அடியில் நம்பி மூத்தபிரான் குறிப்பிடப் பெற்றுள்ளான். 'கொடுமிடல் நாஞ்சிலான்' (கலி-36) என்று கூறப்பெறுபவன். 'மல்லரை மறஞ்சாய்த்தமால்' (கலி-52) என்று மாயோன் குறிப்பிடப்பெறுகின்றான். ஒரு பாடலில் (கலி-103) 'மாயோன்' என்ற சொல் வருகின்றது. முல்லைக் கலியொன்றில் (104),

**பால்நிற வண்ணன்போல்**
**பனைக் கொடிப் பழிதிரிந்த வெள்ளையும்**
**பொருமுரண் மேம்பட்ட பொலம்புனை புகழ்நேமித்**
**திருமறு மார்பன்போல் திறல் சான்ற காரியும் (8–10)**

*என்ற அடிகளில் பனைத் கொடியைக் கொண்ட பால் நிற பலதேவனைப் பற்றிய குறிப்பும் திருவாகிய மறுவினையுடைய (ஸ்ரீ வத்சம்) திருமாலைப்பற்றிய குறிப்பும் வருகின்றன. இதே பாடலில்,*

**பால்மதி சேர்ந்த அரவினைக் கோள்விடுக்கும்**
**நீனிற வண்ணன்(37–38)**

*என்ற அடிகளில் திருமாலைப்பற்றிய குறிப்பும் காணப் பெறுகின்றது. அடுத்த பாடலில் (கலி-105),*

**வள்ளுரு நேமியான் வாய்வைத்த வளைபோலத்**
**தெள்ளிதின் விளங்கும் சுரிநெற்றிக் காரியும் (9–10)**

*என்ற அடிகளில் மாயோன் ஆழி தாங்கிய கையன் என்றும் அவன் வாய் வைத்து ஊதும் சங்குபோல் சுரி கொண்ட நெற்றியையுடைய கரிய ஏறு என்ற குறிப்பும், அதே பாடலில் நம்பி மூத்த பிரானைப்பற்றிய குறிப்பும் (11-12) வருகின்றன.*

*நெய்தற் கலியின் ஒரு பாடலில் (கலி-124)*

**ஞாலமூன் றடித்தாய முதல்வர்க்கு முதுமறைப்**
**பாலன்ன மேனியான் அணிபெறத் தைஇய (1–2)**

*என்ற அடிகளில் உலகம் மூன்றும் தன் திருவடியால் அளந்த வனைப்பற்றிய குறிப்பினையும் இவனுக்கு மூத்த முறையினை யுடைய நம்பி மூத்த பிரானைப் பற்றிய குறிப்பினையும் காணலாம்.*

திருமாலின் அவதாரச் செயல்களைப்பற்றிக் கூறும் பாரத இராமாயணக் குறிப்புகள் பலவற்றைக் கலித்தொகையில் கலி-101, கலி-104, கலி-106, கலி-134 காணலாம்.

(ஈ) அகநானூறு : (i) அகம் -59இல் குறிக்கும் செய்தி: ஆயமகளிர் யமுனை யாற்றில் நீராடுங்கால் அவர்கள் கரையில் இட்டு வைத்த ஆடைகளைக் கண்ணபிரான் விளையாட்டாக எடுத்துக்கொண்டு குருந்தமரத்தேறியிருக்க அப்பொழுது நம்பிமூத்த பிரான் அங்குவர, அம்மகளிர் ஒரு சேர மறைதற்கு வேறு வழியின்மையால் கண்ணன் தான் ஏறியிருந்த மரத்தின் கொம்பைத் தாழ்த்துக் கொடுத்தான் என்பது .

இச்செய்தியைச் சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவையில் இளங்கோ அடிகளும் குறிப்பிடுவர். திரிகடுகம் (கடவுள் வாழ்த்து) சிந்தாமணி நாமகள் இலம்பகத்திலும் (209) திருஞானசம்பந்தர் தேவாரத்திலும் (2.30;3) அப்பர் தேவாரத்திலும்(6,3;10) வருகின்றன. ஆழ்வார் பெருமக்களும் இச்செய்தியைத் தம் பாசுரங்களில் குறிப்பிடுவர்.[19]

(ii) அகம் –70 இல்,

வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கி வரும் பௌவம் இரங்கு முன்றுரை
வெல்போர் இராமன் அருமறைக் குவித்த
வல்வீ லாலம்போல
ஒலியவிந் தன்றிவ் வழுங்க லூரே

19. குருந்தொசித்த வரலாறு: பலராமன்வருதலையறிந்து கோபியரது மானம் காக்க வேண்டிக் கண்ணன் குருந்தொசித்துத் தன் செயலைத் தமையன் அறியாமல் செய்தான் என்ற அளவிலுள்ள வரலாறு தமிழ்நாட்டில் பழங்காலத்தில் வழங்கியதென்றே கருதலாம்.

என்ற அடிகள் குறிப்பிடும் செய்தி : இராமன், தானும் மற்ற வானர வீரர்களும் இலங்கைமேற் செல்லுதற்பொருட்டுத் திருவணைக் கரையில் (கோடிக்கரை) இருந்த ஒரு பெரிய ஆலமரத்தின் கீழே அரியமறைகளை ஆராய்ந்த பொழுது அங்குள்ள பறவைகள் ஒலிக்காதவாறு தன் ஆணையால் அடக்கினான் என்ற வரலாறு குறிப்பிடப் பெற்றுள்ளது. இது தமிழ் நாட்டு வழக்கு. இராமாயணங்களில் காணப்படாதது.

(iii) அகம் –220இல் வரும் வரலாறு : பரசுராமன் தன் தந்தையான யாமதங்கியை (ஐமதக்கினிமுனிவர்) கொன்ற கார்த்த வீரியனை மட்டுமில்லாது இருபத்தொரு தலைமுறை மன்னர் மரபினைக் கொன்றழிப்பதாக மேற்கொண்ட கொடுஞ்சூளுரை குறிக்கப் பெற்றுள்ளது. பரசுராமன் திருமாலின் பத்து அவதார மூர்த்திகளில் ஒருவன்.

(iv) அகம்–137 இல் திருவரங்கத்தில் நடைபெறும் பங்குனி உத்திர விழா குறிக்கப் பெறுகின்றது. பங்குனித் திங்களில் உத்திர நட்சத்திரமும் நிறைமதியும் கூடிய நன்னாளில் உறையூரில் பங்குனி உத்திர விழா சிறப்புற்றிருந்ததென்பது இறையனார் நூற்பா (நூற்பா-16) உரையில், "இனி ஊர் துஞ்சாமை என்பது ஊர் கொண்ட பெருவிழா நாளாய்க் காண்பாரில்லை யாமாகவும் இடையீடாம் என்பது; அவை மதுரை ஆவணி அவிட்டமே, உறையூர்ப்பங்குனி உத்தரமே, கருவூர் வள்ளிவிழாவே என இவையும் இவை போன்ற பிறவும் எல்லாம் அப்பெற்றியான பொழுது இடையீடாம் என்பது" என வருதலான் அறியப்படும்.

(2) புறநானூறு : புறநானூற்றில் வரும் குறிப்புகளைக் காண்போம் (i) புறம்–174ல் அசுரர் சூரியனை ஒளித்ததும், திருமால் அதனை மீட்டதும் கூறப் பெற்றுள்ளன.[20] இந்த வரலாற்றைப் பற்றி அறியக்கூடவில்லை. இன்னொரு பாடலில் (ii) (புறம்–378.) இராமாயண நிகழ்ச்சிபற்றி ஒருகுறிப்பு வருகின்றது. சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட் சென்னி ஊன் பதி பசுங்குடையாருக்குச் சில பரிசிற் பொருளை நல்கினான். அவை பல அணிகலன்களாகக் கொண்டிருந்தன. அவை பொருநர்க்கெனச் சமைக்கப் பெறாதவை; அரசர்க்கும் செல்வர்க்குமெனச் சமைக்கப் பெற்றவை; போரில் பகைவர்பால் கொண்டனவும் அவற்றுள் அடங்கியிருந்தன. அவற்றைப் பசுங்குடையாருடன் போந்த சுற்றத்தினர் பகிர்ந்து கொண்டு தாம் தாம் அணிந்து மகிழ்ந்தனர். இதனைக் கிணைப் பொருநன் கூற்றில் வைத்துக் கூறுவான். இராமனுடன் போந்த சீதையை இராவணன் கவர்ந்து சென்றபோது அவள்கழற்றி எறிந்த அணிகலன்களைக் குரங்குகள் எடுத்து அணிந்து கொண்டதைக் கண்டோர் சிரித்து மகிழ்ந்ததைப் போல பொருநனின் கிளைஞர்கள் அந்த அணிகலன்களை அணிந்து கொள்ளும் வகையறியாது விரலில் அணிபவற்றைச் செவியிலும், செவியில் அணிபவற்றை விரலிலும், கழுத்திலணிபவற்றை இடுப்பிலும் அணிந்து கொண்டு நகைப்புக்கு இடமாயினர் என்று கூறும்போது இராமனைப் பற்றிய குறிப்பு வருகின்றது.

---

20. தேவர்களும், அசுரர்களும் பொருதபொழுது பகலும் இரவும் போல இயங்கித் தாம் போர் செய்தற் பொருட்டு அசுரர் ஞாயிற்றைக் கரந்தனர். ஞாலம் அதனால் உற்றபருவரல் தீரத் திருமால் அதைக் கொண்டு வந்தார் என்பது ஒரு கதை.

(ஊ) நற்றிணை : இத் தொகை நூலில் கடவுள் வாழ்த்துப் பாடல் வைணவ தத்துவத்தின் கருத்துகளை மிக அழகாக விளக்குகின்றது.

மாநிலம் சேவடி யாகத் தூநீர்
விளைநரல் பௌவம் உடுக்கை யாக
விசும்புமெய் யாகத் திசைகை யாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
இயன்ற எல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வன் என்ப
தீதற விளங்கிய திகிரி யோனே—(நற்.1)

இதில் திருமால் மறைகளால் போற்றப்படும் நிலையும் அவர் எங்கும் பரந்து நிற்கும் நிலையும் (வியாபகத்துவம்) எள்ளுக்குள் எண்ணெய்போல் எவ்வுயிர் மாட்டும் (உயிரல்லாத பொருள்களிலும் கூட) நிற்கும் நிலையும் (அந்தர் யாமித்துவம்) அவன் ஆழிதாங்கி நிற்பதும் பிறவும் கூறப் பெற்றிருப்பதை ஆழ்ந்து நோக்கித் தெளியலாம். இங்ஙனம் தமிழ் முன்னோர் கண்ட கருத்துகள் பின்னர் ஆழ்வார்களின் கருத்துகளாக மலர்ந்தன என்று கருதுதல் பொருத்தமாகும். எடுத்துக் காட்டாக திருமங்கையாழ்வாரின்,

'பவ்வநீர் உடையாடை ஆகச் சுற்றி
பார்அகலம் திருவடியா பவனம் மெய்யா
செவ்விமா திரம் எட்டும் தோளா அண்டம்
திருமுடியா நின்றான் (6:6:3)

என்ற பெரிய திருமொழிப் பாசுரப் பகுதியில் இக்கருத்து நிழலிடுவதைக் காணலாம். இவ் விரண்டிலும் வைணவத்தின் உயிர்நாடி போன்ற சரீர - சரீரி பாவனை தத்துவம் அமைந்திருப்பதைக் கண்டு மகிழலாம்.

*(எ) பதிற்றுப்பத்து :* பதிற்றுப்பத்தில் ஒரு பாடலில் (நான்காம் பத்து-1) ஒரு குறிப்பு காணப்படுகின்றது. களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடிய இப்பாடற் பகுதியில் திருவனந்தபுரத்தில் கோயில் கொண்டுள்ள திருமாலின் வழிபாட்டுச் சிறப்புக் கூறப் பெறுகின்றது. திருக்கோயிலின் நாற்புற வாயிலின் வழியாகத் தலைமேல் கைகூப்பி ஒருங்கு கூடிச் செய்யும் பேராரவாரம் நான்கு வேறு திசைகளில் பரந்து ஒலிக்கின்றது. கோயிலில் தொங்கும் மணியை இயக்கிக் கல்லெனும் ஓசையை உண்டாக்குவர்; உண்ணா நோன்பு மேற்கொண்ட விரதியர் குளிர்ந்த நீர்த்துறையில் நீராடி மார்பில் புதிதாகத் தொடுக்கப் பெற்ற திருத்துழாய் மாலையையும், காண்பவர் கண்கூசும் ஒளி திகழ் திருவாழியையும் உடைய செல்வனான திருமாலை வணங்கி வாழ்த்தி நெஞ்சு நிறைந்த மகிழ்ச்சியுடன் தத்தம் இருப்பிடம் திரும்பிச் சேர்வர். இப்பாடலில் செல்வன் என்பது திருவனந்தபுரத்துத் திருமாலை என்று கூறுவர் பழைய உரைகாரர்.

## 4. பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்:

இப்பகுதியில் அடங்கிய நூல்களை நோக்குவோம்.

*(அ) திருக்குறள் :* இஃது உலகப் பொது மறையாகக் கருதப் பெறுவது. இதில் வரும் வைணவம் பற்றிய குறிப்புகளை, (1) இறைவன் பெயர்கள் (2)அவதாரங்கள் (3) இருவகை உலகுக்கும் தலைவன் என்று மூன்று பகுதிகளாக நோக்கலாம்.

*(1) இறைவனின் பெயர்கள் :* முதல் குறளில் வரும் ஆதிபகவன் என்னும் பெயரை நோக்குவோம். இதனை 'ஆதியாகிய பகவன்' என்று ஒரு பெயராகவும் ஆதியும் பகவனும்

என்று இரு பெயராகவும் கொள்ளலாம். சிவஞான சித்தியார் பரபக்கம் பாஞ்சராத்திரி (வைணவ) மதம்றுதலையில் "ஆதியாய் அருவுமாகி" என்ற செய்யுளாலும் "பாஞ்சராத்திரி நீ உன் கர்த்தாவை ஆதி என்று கூறினாய்; அங்ஙனம் ஆதியாயின் ஆதிக்கு முடிவுண்டாய் கர்த்தாவும் அல்லனாவான்" என்ற அதன் உரையாலும் 'ஆதி' என்ற பெயர் திருமாலுக்கு உரிய பெயராகும். 'ஆதிமூலம்' என்ற பெயரும் நோக்கற் பாலதாகும். நம்மாழ்வாரும் 'அந்தமில் ஆதியம் பகவன்' என்பர்.

பகவான் அருளிய கீதை பகவத்கீதை : பகவான் வரலாறு கூறும் நூல் பாகவதம்; பகவான் அடியார்கள், பாகவதர்கள் எனும் வழக்காறுகளால் 'பகவத்கீதை' 'பாகவதம்' 'பாகவதர்' எனும் பெயர்களுக்கு மூலமாகிய 'பகவான்' என்ற சொல் திருமாலுக்கே உரிய பெயரைக் குறிக்கின்றது என்பது உறுதி.

> **இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்**
> **பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு (5)**
>
> **பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
> **இறைவன் அடிசேரா தார் (10)**

என்னும் குறட்பாக்களில் 'இறைவன்' என்னும் சொல் உள்ளது. இறைவன் என்பதற்கு 'எல்லாப் பொருள்களிலும் தங்குகின்றவன்' என்பது பொருள். இது 'நாராயணன்' 'விஷ்ணு', 'வாசுதேவன்' எனும் பெயர்களின் தமிழ் வடிவமாதலை உணரின் 'இறைவன்' எனும் சொல் திருமாலுக்கே உரியதாம்.

> **பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க**
> **நெறிநின்றார் நீடுவாழ் வார் (6)**

என்பதில் காணப் பெறும். 'பொறிவாயில் ஐந்தவித்தான்' எனும் பெயர் 'ரிஷிகேசன்' (இருடிகேசன்) என்ற திருநாமத்தின் தமிழ்

வடிவமாகும். ரிஷிகம்-இந்திரியம்; இந்திரியங்களின் தலைவன் என்னும் பொருளுடையது. 'அவித்தல்' என்பது ஈண்டுத் 'தன் வயமாக்குதல்' என்னும் பொருளைத் தரும். ஓராயிரமாய் உலகேழிற்கும்-பேராயிரம் கொண்டதோர் பீடுடைய திருமாலுக்குச் சிறந்தனவாய் திருநாமங்கள் 'பன்னிரு திருநாமம்' எனப்படும். அவற்றுள் 'ரிஷிகேசன்' என்பதும் ஒன்று. ஆகவே, 'பொறிவாயில் ஐந்தவித்தான்' என்பது திருமாலுக்கு உரியதேயாகும்.

**அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்**
**பிறவாழி நீந்தல் அரிது (8)**

என்பதனுள் வரும் 'அறவாழி அந்தணன்', என்பதும் 'அறவனை ஆழிப்படை அந்தணனை', 'அறமுயல் ஆழிப்படையவன்' என்னும் திருவாய்மொழித் தொடர்களால் திருமாலுக்கு உரியது என்று உணரலாம்.

**கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்**
**தாளை வணங்காத் தலை (9)**

என்பதில் 'எண்குணத்தான்' - 'எளிமைக் குணமுடையவன்' என்று பொருள்படும். இஃது இப் பொருளாதலை,

**எண்பதத்தான் ஓரா முறை செய்யா மன்னவன் (548)**
**'எண்பதத்தால் எய்தல் எளிதென்ப' (991)**

என்பவற்றில் இவற்றின் சொற்பொருளால் அறியலாம். 'எளிவரும் இயல்வினன்' (1;2;3) 'யாரும் ஓர் நிலைமையன் என அறிவெளிய எம்பெருமான்' (1;3;4) எனவரும் திருவாய்மொழித் தொடர்களால் உறுதியாகும். மேலும் இறைவனின் திருக்குணங் களுள் சௌலப்பிய குணம் (சுலப குணம்) என்பதனை அடியார்கள் சிறப்பித்துக் கூறுவதும் இதனை வலியுறுத்தும்.

**தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்**
**தாமரைக் கண்ணான் உலகு (1103)**

என்பதில் 'தாமரைக் கண்ணான்' என்ற பெயர் திருமாலுக் கன்றி வேறு எத்தெய்வத்துக்கும் இல்லாமை உய்த்தறியத் தக்கது.

(2) **அவதாரங்கள் :** எம்பெருமான் எடுத்த அவதாரங்கள் எண்ணற்றவை. அவற்றுள் பத்து அவதாரங்கள் மிகு புகழ் வாய்ந்தவை. ஆனால் திருக்குறளில் குறிப்பிடப்பெற்றவை மூன்று அவதாரங்களே. அவை இராமாவதாரம், கிருட்டிணா அவதாரம், திரிவிக்கிரமாவதாரம், நீதியை உரைக்க வந்த திருக்குறளில் வெளிப்படையாகவும், குறிப்பாகவும் இவற்றைக் காட்டியுள்ளதை நோக்கின் திருவள்ளுவரின் சமயம் இன்னதென்பதை உணரலாம். திருமால் இராமாவதாரத்தில் மனிதன் 'வையத்துள் வாழ்வாங்கு வாழும்' முறையைத் தாமே நடத்திக் காட்டினார். அங்ஙனம் நடந்து காட்டிய ஒழுக்க நெறி ஒன்று. கிருட்டிணாவதாரத்தில் வையத்துள் வாழ்வாங்கு வாழ்தல் எங்ஙனம்? என்பதை உபதேசவாயிலாகச் (பகவத்கீதை) சொன்ன ஒழுக்கநெறி மற்றொன்று. இராமனாக வந்து நடந்து காட்டியருளிய ஒழுக்க நெறி எனவும், கண்ணனாக வந்து சொல்லியருளிய ஒழுக்க நெறி எனவும் இரட்டுற மொழிதல் என்னும் உத்திவகையால்,

**பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க**
**நெறிநின்றார் நீடுவாழ் வார் (6)**

என்னும் குறளில் திருமாலின் இரண்டவதாரத்தையும் சுட்டுதல் அறியலாம்.

*கிருட்டிணாவதாரத்தில் துரியோதனனிடம் "படை எடேன் அமரில் எனப் பணித்ததை" மீறி வீடுமனின் விருப்பிற் கிணங்க அவன் நடத்திய போரில் 'ஆனதெனக்கினியாக எனத் தனியாழி எடுத்தமையும் பொய்யே அறியா' தருமனை 'அசுவத்தாமன் என்னும் யானை இறந்தது' எனத் துரியோதனன் செவிபடச் சொல்லச் செய்து அதற்குத் துரியோதனன் வேறு பொருள் கொள்ளுமாறு மயங்கச் செய்தமையும், பிறந்த பொழுதே இறந்த நிலையில் இருந்த பரீட்சித்து, பெண்களை நோக்காத பேராண்மையையுடைய ஒருவன் திருவடியால் உய்வான் எனக் கண்ணபிரான் உரைக்க, அந்நிலையில் யாவரும் முன் வராமை கண்டு 'யானே பெண்களை நோக்காதவன்' எனத் தன் திருவடியைப் பதிய வைத்து அவனைப் பிழைக்கச் செய்தமையும் முதலிய வரலாறுகளை மனத்திற் கொண்டே,*

**வாய்மை எனப்படுவதி யாதெனின் யாதொன்றும்**
**தீமை இலாத சொலல் (291)**

**பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த**
**நன்மை பயக்கும் எனின். (292)**

*என்ற திருக்குறளைக் கூறினர் எனக் கருதலாம். 'புரை தீர்ந்த நன்மையைப் பொய்மை பயவாது, அங்ஙனம் பயக்கின்ற அப்பொய்மையும் வாய்மை இடத்த' என்று கூற வந்தது. கண்ணபிரானின் வரலாற்றை நோக்கியே எனக் கருதலாம். இராமனது மெய்யும் கிருட்டிணனது பொய்யும் நமக்குத் தஞ்சம்' எனும் வைணவ சம்பிரதாய ஆன்றோர் வாக்கும் இதனை அரண் செய்யும்.*

*திருமால் திருக்குறள் அப்பனானபின் 'மண்முழுவதும் அகப்படுத்து நின்ற பேருருவத்தை'த் 'திரிவிக்கிரமன்' என்பர்.*

விக்கிரமம்-பெருவலி; திரிவிக்கிரமம்-மூவகைப் பெருவலி. இதனை அறியாது ஒருசிலர் 'திருவிக்கிரமம்' என்று பிழைபட எழுதுவர். முதலாவது உலகளந்தது ; அடுத்தது விண்ணளந்தது. மூன்றாவது மாவலித் தலையில் தன் திருவடியை வைத்து அவனைப் பாதளத்தில் ஆழ்த்தியது. எனவே, இவ்வகையான மூவகைவலியையும் காட்டுவதற்காகவே 'உலகளந்தான்' எனக் கூறாது 'தன்னடியாலே எல்லா உலகங்களையும் அளந்தான்' எனப் பொருள் கொள்ளுமாறு ,

**மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்**
**தாஅய தெல்லாம் ஒருங்கு. (610)**

என விளக்கிய நுட்பம் உணரத் தக்கது.

**முன்னம் குறளுருவாய்**
**மூவடிமண் கொண்டளந்த**
**மன்னன் சரிதைக்கே**
**மாலாகிப் பொன்பயந்தேன்—(பெரி.திரு. 9.4:2)**

என்ற திருமங்கையாழ்வார் பாசுரமும் இவ்வரலாற்றைக் குறிப்பிடுகின்றது. எனவே இராமன், கண்ணன், வாமனன் எனும் மூன்று அவதாரங்களையும் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் காட்டுகின்றார் எனக் கொள்ளலாம்.

**(3) இருவகை உலகுக்கும் தலைவன் :** நாம் வாழும் உலகு மண்ணுலகு. வானவர் வாழும் உலகு வானுலகு. "இருள்சேர்ந்த இன்னா உலகு" 'அளறு ஆரிருள்' எனப்படும் கீழுலகு -இவையாவும் மக்கள் பிறவிச்சுழலில் சிக்கித் தவிக்கும் விளையாட்டுலகு எனவும், இறைவனுடைய விளையாட்டுலகம் எனவும் பொருள்படுமாறு இவ்வனைத்துலகையும் 'லீலாவிபூதி' என்பர். எம்பெருமானும் அவன் அடியார்களும் நித்தியமாய்

இன்பத்தோடு வாழும் உலகு 'முக்தி உலகு'. இதனை 'நித்திய விபூதி' என்பர். இவ்வாறு கூறுவது வைணவமரபு. இருவகை உலகிற்கும் தலைவன் திருமாலே என்பதைக் குறிக்கத் திருமாலை 'உபயவிபூதி நாதன்' என்பர் ஆன்றோர்.

## 4 (அ) திருக்குறள் :

**அகர முதல எழுத்தெல்லாம் ஆதி**
**பகவன் முதற்றே உலகு (1)**

**மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்**
**தாஅய தெல்லாம் ஒருங்கு (610)**

எனும் இருகுறள்களால் இவ்வுலகிற்கு அவன் தலைவன் என்பதனை விளக்கினார்.

**தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்**
**தாமரைக் கண்ணான் உலகு (1103)**

எனும் குறளில் முற்றும் துறந்தார் எய்தும் தாமரைக் கண்ணானுடைய '(முக்தி) உலகு' எனக் குறித்தலால் 'அந்தமில் இன்பத்து அழிவில்வீடு', 'நலம் அந்தம் இல்லதோர் நாடு', 'வானோர்க்குயர்ந்த உலகு' என்றெல்லாம் ஆழ்வார்கள் சிறப்பித்துக் கூறும் நித்திய விபூதிக்கும் திருமாலே தலைவன் என்பதைக் கூறினர். எனவே 'உபயவிபூதி நாதன்' திருமாலே என உறுதி செய்தாராயிற்று.

இம்முக்தியுலகிற் சென்றவரை 'புனை கொடுக்கிலும் போக ஒட்டார்' என்றபடி அவ்வுலகிலேயே நிலைபெறுவா ரன்றி ஈண்டுத் திரும்பி வாரர் என்பது வைணவ சமயக் கோட்பாடு. இதனை

**கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்**
**மற்றீண்டு வாரா நெறி (356)**

என்று விளக்கினார் என்பது சிந்திக்கத் தக்கது.

*(ஆ) திருவள்ளுவமாலை: இதில்இரண்டு பாடல்கள் உள்ளன.*

**மாலும் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால்**
**ஞாலம் முழுதும் நயந்தளந்தான் வாலறிவின்**
**வள்ளுவரும் தன்குறள்வெண் பாவடியால் வையத்தார்**
**உள்ளுவவெல் லாம்அளந்தார் ஓர்ந்து (6)**

*இது பரணர் பாடியது, இதில் திரிவிக்கிரமாவதாரக் குறிப்பு உள்ளது. திருமால் தன் இரண்டு அடிகளால் புறஉலகத்தை விரும்பி அளந்தார். வள்ளுவர் அவ்வுலகோரின் அக உலகையெல்லாம் ஆராய்ந்து அளந்தார்.*

**உப்பக்கம் நோக்கி உபகேசி தோள்மணந்தான்**
**உத்திர மாமதுரைக் கச்சென்ப–இப்பக்கம்**
**மாதாநு பங்கி மறுவில் புலச் செந்நாப்**
**போதார் புணற்கூடற் கச்சு (21)**

*இப்பாடலை நல்கூர் வேள்வியார் பாடியது. உபதேசி-நப்பின்னை என்றும், அவள் தோள்மணந்தான் கண்ணபிரான் என்றும், உத்தர மாமதுரை அவன் அவதரித்த வடமதுரை என்றும் மாதாநுபங்கி செருக்கொழில் உடையான் என்றும் பொருள் உரைப்பர்.*

**(இ) நாலடியார் :** *சமண முனிவர்கள் நானூறு பேர்களால் இயற்றப்பெற்ற நீதியைக் கூறும் இந்நூலில் வைணவ சமயக் கருத்துக்களைக் காண்டல் அரிது. ஆழ்வார் பாசுரத்தை யொட்டி வரும் ஒரு பாடலில் மட்டிலும் இக்கருத்தை ஈண்டுக் காட்டுவது பொருத்தமாகும்.*

**காலாடு போழ்தில் கழிகிளைஞர் வானத்து**
**மேலாடு மீனிற் பலராவர்–ஏழா**
**இடர்ஒருவர் உற்றக்கால் ஈர்ங்குன்ற நாட!**
**தொடர்புடையோம் என்றார் சிலர் (113)**

*செல்வமுள்ள காலத்துப் பலர் உம்மை சூழ்ந்து பொய்யளவு பாராட்டி நடித்தலும் வறுமை வந்த காலத்தில் சிலர் மாத்திரமே மெய்யுணர்வினராக வந்து உதவுதலுமாகிய உலக இயற்கை இதனாற் சொல்லப்பட்டது. இக்கருத்தை யொட்டிய திருவாய்மொழிப் பாசுரம் இது.*

**பொருள் கை உண்டாய்ச் செல்லக் காணில்**
**போற்றி என்று ஏற்று எழுவர்**
**இருள்கொள் துன்பத்து இன்மை காணில்**
**என்னே! என் பாரும் இல்லை. (9.1:3)**

*'பைத்தியக்காரனைச் சுற்றிப் பத்துப்பேர் பணக்காரனைச் சுற்றிப் பத்துப்பேர்" என்ற பழமொழிக்கிணங்க சொந்த நலனிலே கண்ணாயிருப்பவர்கள் பயன் உள்ளபோது நட்பை அபிநயிருப்பார்களேயன்றி அதற்கு வழி இல்லையென்றால் அணுகவும் மாட்டார்கள். 'இன்மை காணில் என்னே என்பாரும் இல்லை; கையிலுள்ளதெல்லாம் போய் வறுமையுண்டான வாறே 'ஐயோ' பாவம்' என்று மனம் நோகும் சொல்கூட வாயில் வரமாட்டாது'. இவ்விடத்தில் பிள்ளை நறையூர் அரையர் பணிப்பாராம்; "இரப்பவர்கட்கு இட்டே வறுமையை அடைந்தான் தனிகன்." அவனுடைய எல்லாச் சொத்துகளையும் கொண்டு செல்வம் பெற்றவர்கள் உண்டே; அவர்கள் இந்த வறிஞனை 'ஏனப்பா! நலமா' என்று வினவினால் அப்படி வினவின மாத்திரத்தில் அவன் ஒரு*

மதிப்படைந்து சீவிக்கும்படியாயிருக்குமென்று வைத்துக் கொள்வோம்; அதையும் பொறாதே அப்படிப்பட்ட விசாரிப்பும் செய்யார்கள் என்று ‘என்னே என்பாரும் இல்லை’ என்பதற்கு இது சுவைமிக்க பொருள்.

(ஈ) திரிகடுகம் : இந்நூலை இயற்றியவர் நல்லாதனார்.

**கண்ணகன் ஞாலம் அளந்ததுஉம் காமருசீர்த்**
**தண்ணறும் பூங்குருதம் சாய்த்ததுஉம்—நண்ணிய**
**மானச் சகடம் உதைத்ததூஉம் இம்மூன்றும்**
**பூவைப்பூ வண்ணன் அடி.**

இஃது இந்நூல் காப்பாக வந்த பாடல். திருமால் திரிவிக்கிரமனாக ஞாலம் அளந்த வரலாறும், கண்ணனாக அவதரித்தபோது குருந்தம் சாய்த்தது, சகடம் உதைத்தது என்ற இரண்டு நிகழ்ச்சிகளும் இதில் குறிப்பிடப் பெற்றுள்ளன.

(உ) நான்மணிக் கடிகை : இதன் ஆசிரியர் விளம்பி நாயனார் என்ற நல்லிசைப் புலவர்.

**மதிமன்னு மாயவன் வான்முகம் ஒக்கும்;**
**கதிர்சேர்ந்த ஞாயிறு சக்கரம் ஒக்கும்;**
**முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளின்**
**எதிர்மலர் மற்றவன் கண்ஒக்கும்; பூவைப்**
**புதுமலர் ஒக்கும் நிறம்.**

இஃது இந்நூலின் கடவுள் வாழ்த்துப் பாடல். மாயவன் வியக்கத்தக்க ஆற்றலுடைய திருமால் சக்கரப் படை... அவன் திருக்கண்களுக்கும் பூவைமலர் அவன் நிறத்திற்கும் உவமையாக வந்தன.

(ஊ) கார்நாற்பது : இந்நூலை இயற்றியவர் கண்ணங் கூத்தனார் என்ற நல்லிசைப்புலவர்.

பொருகடல் வண்ணன் புனைமார்பின் தார்போல்
திருவில் விலங்கூன்றித் தீம்பெயல் தாழ
வருதும் எனமொழிந்தார் வாரார்கொல் வானம்
கருவிருந் தாலிக்கும் போழ்து (1)

என்பது முதற்பாடல். தோழி தலைமகட்குப் பருவம் காட்டி வற்புறுத்தும் துறையில் அமைந்தது. கடலின் நிறத்தையுடைய திருமால் திருமார்பில் அணிந்த பூமாலைபோல் இந்திர வில்லைக் குறுக்காக நிறுத்தி இனிய மழை பெய்யும்போது (கார்காலத்தில்) தாம் வருவதாகக் கூறிச் சென்றார் என்று தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

(எ) இனியவை நாற்பது : இதனை இயற்றிய நல்லிசைப் புலவர் பூதம்சேந்தனார் என்பவர். மும்மூர்த்திகளையும் குறிப்பிடும் பாடல் கடவுள் வாழ்த்தாக வந்துள்ளது.

கண்மூன் றுடையான்தாள் சேர்தல் கடிதினிதே;
தொல்மாண் துழாய்மாலை யானைத் தொழலினிதே;
முந்துறப் பேணி முந்நான் குடையானைச்
சென்றமர்ந் தேத்தல் இனிது.

என்பது காப்புச் செய்யுள். சேர்த்தல், ஏத்தல், தொழுதல் என மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரணவழிபாடு கூறினார். தொல்மாண்துழாய் மாலையான் என்பவன் திருமால்.

(ஏ) ஐந்திணை ஐம்பது : திணைக்குப்பத்தாக ஐம்பது பாடல்களைக் கொண்ட இந்த நூல் அகப்பொருட் பனுவல். இயற்றியவர் மாறன் பொறையனார், முல்லைத்திணையைத் தொடங்கும் முதற் பாடல் இது.

**மல்லர்க் கடந்தான் நிறம்போன்று இருண்டெழுந்து**
**செல்வக் கடம்பமர்ந்தான் வேல்மின்னி – நல்லாய்!**
**இயங்கெயில் எய்தவன் தார்பூப்ப ஈதோ**
**மயங்கி வலனேருங் கார். (1)**

*கார்காலம் தோன்றியதைக் கூறுவது இப்பாடல். மல்லரை வென்ற கண்ணனின் நிறம்போல் இருளைச் செய்து எழுந்து கடப்பந்தாரினை விரும்பிய முருகனின் வேல்போல் மின்னி விசும்பில் இயங்குகின்ற முப்புரங்களை எய்தவன் கொன்றைத் தார் மலரும்படியாக வலமாகச் சுழன்று எழா நின்றது கார்காலம். இதில் கண்ணனைப் பற்றிய குறிப்பு வந்துள்ளது.*

***(ஐ) பழமொழி நானூறு :*** *பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று இந்நூலாகும். இதன் ஆசிரியர் மூன்றுறை யரையனார். இது நானூறு வெண்பாக்களைக் கொண்டது. ஒவ்வொரு வெண்பாவும் ஒவ்வொரு பழமொழியைக் கொண்டு திகழ்கின்றது. இதில் ஒரு வெண்பா:*

**ஆவிற் கரும்பனி தாங்கிய மாலையும்**
**கோவிற்குக் கோவலன் என்றுலகம் கூறுமால்**
**தேவர்க்கு மக்கட் கெனல்வேண்டா தீங்குரைக்கும்**
**நாவிற்கு நல்குரவு இல் (42)**

*பழித்துரைக்கப் புகுவார்க்கு உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்பதில்லை என்ற கருத்தைக்கூறுகின்றது இவ்வெண்பா. பசுக் கூட்டங்கட்கு வந்த அரிய துன்பத்தை நீக்கிய திருமாலையும் ஆநிரைகட்குத் தக்க இடையன் என்றே உலகம் சொல்லும் என்பது இவ் வெண்பா விளக்கும் கருத்து. கோவர்த்தனத்தைக் குடையாகக் கவித்த வரலாறு இதில் வருவதைக் காணலாம்.*

## 5. இரட்டைக்காப்பியங்கள் :

தமிழ் இலக்கிய வரலாற்றில் முதல் காப்பியமாகிய சிலப்பதிகாரம் படைத்தவர் (இரண்டாம் நூற்றாண்டு) இளங்கோ அடிகள். தொடர்ந்து மணிமேகலை சீத்தலைச் சாத்தனாரால் படைக்கப்பெற்றது. இந்த இரண்டும் இரட்டைக் காப்பியங்கள் என்ற பெயரால் வழங்கி வருகின்றன.

*(அ) சிலப்பதிகாரம் :* இக் காவியத்தில் பல இடங்களில் திருமால் வழிபாடு பற்றிய குறிப்புகள் உள்ளன.

மாங்காட்டு மறையோன் உறையூருக்கருகில் கோவலன் கண்ணகியுடனும், கவுந்தியடிகளுடனும் ஓர் இளமரக்காவில் பயணிகள் தங்கும் இருப்பிடத்தில் தங்கியிருந்தபோது அவர்களைச் சந்திக்கின்றான். இவன் தென்திசையினின்றும் வடதிசையை நோக்கி வருபவன். கோவலன் அவனை நோக்கி, 'யாது நும்மூர்? ஈங்கென வரவு?'[21] என்று வினவுகின்றான். இந்த இரண்டு வினாக்களில் முன்னதினும் பின்னது சிறப்புடைத் தாதலின் அதற்கு விடைகூறும் இடத்தில் திருவரங்கம் திருவேங்கடம் இவற்றின் வருணனைகள் வருகின்றன.

நீல மேக நெடும்பொற் குன்றத்துப்
பால்விரிந் தகலாது படிந்தது போல
ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறல்
பாயற் பள்ளிப் பலர்தொழு தேத்த
விரிதிரைக் காவிரி வியன்பெரு துருத்தித்
திருவமர் மார்பின் கிடந்த வண்ணமும்.[22]

21. சிலம்பு– காடுகாண்– அடி 23–
22. மேலது–(25–40)

என்பது திருவரங்கத்தில் திருமால் அறிதுயில் கொண்டு கிடந்த வண்ணத்தை நுவல்வது. இதில் உயர்ந்த பொன்மலையின்மீது நீலமுகில் படிந்ததுபோல் ஆயிரம் தலைகளையுடைய ஆதிசேடனாகிய பாயலின் மீது காவிரியின் ஆற்றிடைக் குறையாகிய திருவரங்கம் என்ற திவ்விய தேசத்தில் திருமகள் அமரும் மார்பனாகிய திருமால் பள்ளி கொண்டருளும் செய்தி கூறப் பெற்றுள்ளது.

அடுத்து, மாங்காட்டு மறையோன் திருவேங்கடத்தில் திருமாலின் நின்ற திருக்கோலத்தைக் கூறுகின்றான்.

> வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்
> ஓங்குயர் மலயத்து உச்சி மீமிசை
> விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி
> இருமருங் கோங்கிய விடைநிலை தானத்து
> மின்னுக்கோடி எடுத்து விளங்குவிற் பூண்டு
> நன்னிற மேகம் நின்றது போலப்
> பகையணங் காழியும் பால்வெண்சங்கமும்
> தலைபெறு தாமரைக் கையில் ஏந்தி
> நலங்கிளர் ஆரம் மார்பில் பூண்டு
> பொலம்பூ ஆடையில் பொலிந்து தோன்றிய
> செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும் [23]

இது 'அகலகில்லேன் இறையும்' என்று 'அலர்மேல் மங்கை உறை மார்பனாகிய' வேங்கடவாணனின் நின்ற திருக்கோலத்தைக் காட்டுவது. இதில் ஒலிக்கின்ற அருவிகள் மலிந்த திருவேங்கடம் என்னும் திருமலையில் ஞாயிறும் திங்களும் இருமருங்கும்

23. மேலது- அடி (41–51)

ஓங்கி விளங்கிய இடைப்பட்ட விடத்தே நல்ல நீல நிறத்தை யுடைய மேகம் தன் மின்னாகிய புதுப் புடவையை உடுத்து தன் வில்லாகிய பணியைப் பூண்டு நின்றாற்போல ஆழியையும் சங்கையும் தாமரைக் கையகத்தே வலனும் இடனும் ஏந்தி அழகிய ஆரத்தைத் திருமார்பில் பூண்டு பொற்பூவாடையை உடுத்து அவன் நின்றருளும் செய்தி தரப்பெறுகின்றது.

இவற்றைத் தவிர, சிலப்பதிகாரத்தில் வேறு சில இடங்களில் வேங்கடத்தைப் பற்றிய குறிப்பு காணப் பெறுகின்றது.

> 'நெடியோன் குன்றமும் தொடியோன் பௌவமும்
> தமிழ்வரம் புறுத்த தண்புனல் நன்னாடு'. [24]

என்றும்,

> வேங்கட மலையும் தாங்கா விளையுள்
> காவிரி நாடும். [25]

என்றும் வருதலைக் காணலாம். திருமால் வேங்கடத்தில் நின்றருளும் செய்தியும் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை நூல்களில் கூறப் பெறவில்லை. சிலப்பதிகார காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டாதலின் திருவரங்கம் திருவேங்கடத் தலங்களின் வழிபாடு அந்நூற்றாண்டிலிருந்தே தோன்றியிருக்க வேண்டும் என்று ஊகிக்கலாம். ஆயினும் ஒரு தலம் புகழும்பெருமையும் பெற்று விளங்கிய காலத்திற்குச் சில பல ஆண்டுகட்கு முன்பே தோன்றியிருக்க வேண்டும் என்ற கொள்கைக்கிணங்க கிறித்து ஆண்டுத் தொடக்கத்திலேயே

24. சிலம்பு–வேனிற்காதை– (1–2)
25. மேலது–கடலாடு–(30–31)

இந்த இரு தலங்களும் வழிபாட்டிற்குரியவையாக, இருந்திருத்தல் வேண்டும். அரங்கநாதப் பெருமான் (பெரிய பெருமாள்) வீடணனின் பிரதிட்டையென்று அத்தல புராணம் கூறுவதால், இராமாயணகாலத்திலேயே திருவரங்கம் தலமாகத் திகழ்ந்திருத்தல் வேண்டும். இவ்வாறு இராமாயண காலத்திலிருந்தே திருமால் வழிபாடு தென்னாட்டிலிருந்து வந்தமை பற்றித் தெளியலாம்.

இனிச் சிலப்பதிகாரத்தில் திருமால் குன்றமும் அதன் கண் உள்ள பிலத்துவாரமும் அவண் இருந்த பவகாரணி முதலிய மூன்று பொய்கைகளும் கூறப் பெற்றுள்ளன. [26] திருமால் குன்றம் என்பது அழகர் மலை. இம் மலை திருமாலிருஞ் சோலை மலை என்றும் ஆழ்வார் பாசுரங்களால் அறியப்பெறும். மதுரைக்கு வருங்கால் பல கோயில்களைக் கூறிய இளங்கோ அடிகள் கருடனைக் கொடியாகவுடைய திருமால் கோயிலையும் மேழிப் படையை வலமாக ஏந்திய நம்பிமூத்தபிரான் கோயிலையும் குறிப்பிடுவர். [27] இன்னும் காவிரிப்பூம்பட்டினத்தில் பலதேவன் கோவிலும், திருமால் கோயிலும் இருந்தமையைக் குறிப்பிடுவர் அடிகள். [28] இவற்றால் திருமால் வணக்கம் தென்னிந்தியாவில் மிகப் பழங்காலத் திலேயே இருந்திருக்க வேண்டும் என்பது தெளியப்படும். மேலும் மாங்காட்டு மறையோன்,

> **நீள்நிலம் கடந்த நெடுமுடி அண்ணல்**
> **தாள்தொழு தகையேன் போகுவல்** [29]

26. சிலம்பு காடுகாண் (91–105)
27. மேலது–ஊர்காண் (8–9)
28. மேலது–இந்திர விழாவூர்–19,20,21 (171–72)
29. மேலது– காடுகாண் (148–149)

*என்ற பகுதியால் தன்னைத் திருமாலடியான் என்று குறிப்பிடுவதாலும் திவ்விய தேசங்கட்கு யாத்திரையாகப்புறப்பட்டவன் என்று சொல்லிக் கொள்வதாலும் திருமால் வழிபாடு பெரு வழக்காக இருந்ததை அறியக் கிடக்கின்றது.*

*மாங்காட்டு மறையோனைஒரு பழைய பாகவதனாக நினைந்து திரு இராமராசன்*

தென்னரங் கேசனை வேங்கடம்
மேய செழுமுகிலைத்
தன்னிரு கண்களும் காட்டென்ன
உள்ளம் தனைக்கவற்ற
மன்னிய யாத்திரை மேற்கொள்ளும்
மாங்கால் மறையவன் சீர
சென்னியில் தாங்கினன் ; வாழிய
அன்னவன் திருவடியே.[30]

*என்று தம் நூலில் போற்றுவர்.*

*மதுரையில் குரவைக் கூத்துள் ஆய்ச்சியரின் ஒருபாடலில் கண்ணனின் அவதாரம் பற்றிய செய்தி வருகின்றது.*

கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்
இன்றுநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
கொன்றையும் தீங்குழல் கேளாமே தோழி (1)

பாம்பு கயிறாக் கடல்கடந்த மாயவன்
இன்றுநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழி (2)

30. திருவேங்கடமுடையான் அலங்காரம்–பாயிரம்–3

கொல்லையஞ் சாரல் குருந்தொசித்த மாயவன்
எல்லைநம் ஆனுல் வருமேள் அவன்வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமே தோழி[31] (3)

இவற்றுள் கண்ணன் கன்று வடிவாக வந்த வத்சலாசுரனைக் கொண்டு விளாமர வடிவாக நின்ற கபித்தாசுரன்மேல் எறிந்து இருவரையும் கொன்றசெய்தியும், திருமால் வாசுகி என்னும் அரவத்தைக் கயிறாகவும், மந்தரமலையை மத்தாகவும் கொண்டு திருப்பாற்கடலைக் கடைந்த செய்தியும் காட்டையடுத்த மலைச் சாரலில் கண்ணன் மகளிரைமறைப்பதற்காகக் குருந்தமரத்தை வளைத்த செய்தியும் குறிப்பிடப்பெற்றிருப்பதைக் காணலாம். இவையெல்லாம் ஆயர்குலப் பெண்கள் கூடிக் கண்ணனுடைய குழலிசையைப் புகழ்ந்து பாடிய பாடல்கள். [32]

ஆயர்குலப் பெண்கள் கூடிக் கண்ணனுடைய குழலிசையைப் புகழ்ந்து பாடும் பாடல்கள் இனிய சுவையைத் தருவதுடன் திருமால் வழிபாட்டுச்சிறப்பினையும் உணர்த்து கின்றன. முன்னிலைப் பரவலாக வரும் பாடல்கள் இவை :

வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக்
கடல் வண்ணன் பண்டொருநாள் கடல் வயிறு கலக்கினையே
கலக்கியகை யசோதையார் கயிற்றால் கட்டுண்கை
மலர்க்கமல உந்தியாய் மாயமோ மருட்கைத்தே.

அறுபொருள் இவன் என்றே அமரர்கணம் தொழுதேத்த
உறுபசியொன் றின்றியே உடல்கடைய உண்டனையே
உண்டவாய் களவினால் உறிவெண்ணெய் உண்டவாய்
வண்டுழாய் மாலையாய் மாயமோ மருட்கைத்தே

31. சிலம்பு –ஆய்ச்சியர் குரவை –19,20,21

32. மேலது–ஆய்ச்சியர்குரவை–ஒன்றன்பகுதி, ஆடுநரைப்புகழ்தல் உள்வரி வாழ்த்து காண்க

திரண்டமார் தொழுதேத்தும் திருமால்நின்
இரண்டடியால் மூவுலகும் இருள்தீர நடந்தனையே
நடந்தஅடி பஞ்சவர்க்குத் தூதாக நடந்தஅடி
மடங்கலாய் மாறட்டாய் மாயமே மருட்கைத்தே[33]

*இவற்றுள் திருமால் கடல் கடைந்த வரலாறும், யசோதைப் பிராட்டியாரின் தாம்பால் ஆப்புண்டதும்; பசியின்றியே உலகெல்லாம் உண்டு தன் திருவயிற்றில் அடக்கியதும், உலகம் உண்ட வாயாலேயே களவினால் கொண்ட உறிவெண்ணெயை உண்டு களித்ததும் திரிவிக்கிரமாவதார காலத்தில் இரண்டடியால் மூவுலகை அளந்ததும் அதே அடியால் பாண்டவர்க்காக ஓலை சுமந்து தூதாக நடந்ததுமான செய்திகள் குறிக்கப்பெறுகின்றன.*

*'படர்க்கைப் பரவலாக வரும் பாடல்கள்'* இவை :

மூவுலகும் ஈரடியால் முறைதிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசிலம்பத் தம்பியொடு கானபோந்து
சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே.

பெரியவனை மாயவனைப் பேருலகம் எல்லாம்
விரிகமல உந்தியுடை விண்ணவனைக் கண்ணும்
திருவடியும் கையும் திருவாயும் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்ணென்ன கண்ணே.

33. மேலது ஆய்ச்சியர்குரவை – 35, 36,37

மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
நடந்தானைத் தூதுவர்பால் நாற்றிசையும் போற்றப்
படந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை எத்தாத நாவென்ன நாவே
நாரா யணாவென்னா நாவென்ன நாவே. [34]

இப்பாடல்களுள் ஈரடியால் மூவுலகளந்தமை தம்பியொடுகான் போந்தமை, 'சோ' என்னும் அரணம் அழித்தமை உலகனைத்தையும் கொப்பூழில் உதிக்கச் செய்தமை கண்முதல் கனிவாய் ஈராக உள்ள கரியனைக் கண்களால் கண்டமை, கண்ணனுக்குக் கஞ்சன் இழைத்த வஞ்சனைச் செயல்களை யெல்லாம் கடந்து நின்றமை, பாண்டவர்க்காக நூற்றுவர்பால் தூது சென்றமை ஆகிய செயல்கள் குறிப்பிடப்பெற்றுள்ளன. திருவனந்தபுரத்து எம்பெருமான் ஆடக மாடத்து அறிதுயில் அமர்ந்தோன்' (29;62) என்றும் ஆடகமாடத்து அரவணைக் கிடந்தோன்'(30;51) என்றும் இரண்டு இடங்களில் குறிப்பிடப் பெற்றுள்ளான். ஆக சிலப்பதிகாரத்தில் பரதத்துவம் வியூகம், விபவம் அர்ச்சை என்ற திருமாலின் நான்கு வகை நிலைகளும் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காணலாம்.

மேலும் ஆய்ச்சியர் குரவையில் கண்ணன் ஆயர்பாடி மகளிருடன் குரவை யாடிய செய்தியையும் காணலாம்.[35] இச்செய்தியில் ஏழு இளம்பெண்கள் தமது மணங்குறித்து வளர்த்த ஏழுவகை ஏற்றினை அடக்கினவனையே மணப்போம் எனக் குறித்து வளர்த்தனர். இம் மகளிரைப் பழைய நரம்புகள்

34. மேலது ஆய்ச்சியர்குரவை–38,39,40
35. சிலம்பு –ஆய்ச்சியர் குரவை 13,14, 15,16

நிற்கும் முறைமைகளிலே நிறுத்தி இடையர் குலத்து மாதரி இவர்கட்குப் படைத்துக் கோட்பெயரிடுவாளாயினள். பன்னிரண்டு இராசிக்குள்ளே இடபம், கடகம், சிங்கம்,துலாம், தனுசு, கும்பம் மீனம் என்னும் ஏழினும் குரல் முதலாய் ஏழும் முறையே நிற்பது ஒரு முறை. துலாம், தனுசு, கும்பம், மீனம் இடபம், கடகம்,சிங்கம் என்னும் ஏழினும் குரல் முதலாய் ஏழும் முறையே நிற்பது மற்றோர் முறை. இவ்விருமுறையானும் எழுவரும் நின்று கைகோத்துப் பாடுகின்றனர். ஆகலின் ஒரு கால் இடத்தில் நின்றவர் மற்றொரு கால் வலத்திலும் வலத்தில் நின்றவர் இடத்திலுமாக மாறி நிற்றல் இயல்பு. இவ்வாறு குரவையாடினர். இக்கூத்து பெரும்பாலும் இராசக்கிரீடை என வடமொழியாளர் கூறும் ஆட்டத்தையொத்திருப்பதைக் காணலாம்.

இக்கூறியவற்றிலிருந்து நாராயணனும் திருமாலும் ஆயர்பாடிக் கண்ணனும் ஒன்றுபட்டு மக்களால் வணங்கப்பெற்ற காலம் கி.பி.2ஆம் நூற்றூண்டின் பின்னரே ஏற்படும். பரிபாடல் (15) திருமாலையும் அவன் தமயனாகிய பலதேவனையும் குறிக்கும்.

இவற்றிலிருந்து கண்ணபிரானும் அவன்பிராட்டி நப்பின்னையும் பலதேவனும் வணங்கப்பெற்ற செய்தி நன்கு விளங்கும். பல தேவற்குத் தனிக்கோயில்கள் அக்காலத்தில் இருந்தன என்பதற்குச் சங்கத் தொகை நூல்களில் போதிய சான்றுகள் உள்ளன. திருமால் வணக்கம் இவ்வாறு தென்னகத்தே மிகப் பழங்காலத்திலிருந்தே உள்ளது என்பது தெளியப்படும்.

*(ஆ) மணிமேகலை :* சிலப்பதிகார காலத்துடன் எழுந்தக் காப்பியம் மணிமேகலை. இதிலும் வைணவம்பற்றிய குறிப்பு உள்ளது. மணிமேகலை வஞ்சிநகர்க்கண் இருந்து பல்வகைச் சமயவாதிகளையும் கண்டு அவரவர் சமயப் பொருள்களைக் கேட்க விரும்பினாள். அளவை வாதிமுதல் பூதவாதி ஈறாகவுள்ள அனைவரும் தத்தம் சமயக் கருத்துகளை உரைத்தனர். வைணவவாதி கூறுவான்;

**காதல் கொண்டு கடல்வணன் புராணம்**
**ஓதினன் நாரணன் காப்பென்று உரைத்தனன்.** [36]

என்று ஈண்டுக் கடல்வண்ணன் புராணம் என்பது விட்டுணு புராணத்தை. புராணம் - பழைமையான வரலாறு; இவன் வைணவ சமயத்தில் பேரன்பும் கடைப்பிடியும் உடையவனாதலால் 'காதல் கொண்டு ஓதினான்' என்றார்.'நாராயணன் முறை செய்தலேயன்றிக் காத்தலும் அவன் கடன் என்று வற்புறுத்தினான். 'ஆதிபகவன் முதற்றே உலகு' என்று வள்ளுவர் இறைவனைச் சுருங்கக் கூறியதுபோல் 'நாரணன் காப்பு' என்று சுருக்கமாக உரைத்தனன்.

*(இ) சீவகசிந்தாமணி :* இந்நூல் சீவகன் என்னும் ஓரரசன் பிறந்தது முதல் வீடுபேறு அடையும் வரை உள்ள கதையைக் கூறுவது திருத்தக்க தேவர் என்னும் சைன முனிவரால் இயற்றப்பெற்றது. பிற்காலத்தில் அதி மதுரமான காப்பியங்கள் இயற்றிய மகாகவிகள் பலர்க்கும் வழிகாட்டிய இனிய காவியம். அந்தக் காலத்தில் திருமால்பற்றியும் அவரது அவதாரங்கள் பற்றியுமான செய்திகள் மக்களிடையே பெரு

36. மணிமேகலை—சமயக்குரவர் தம் திறம் கேட்ட காதை.

பெருவழக்காக இருந்ததை நேரில் கண்டவராதலால் தாம் இயற்றும் காவியம் மக்களிடையே நன்கு பரவுவதற்கு வாய்ப்பாக அமையும் என்று கருதிய திருத்தக்க தேவர் அவற்றைத் தம் காவியத்தில் பொருத்தமான இடங்களில் பெய்து தம் காவியத்தைச் சிறப்பித்துள்ளார்; ஒன்றிரண்டு செய்திகள் ஈண்டுக் காட்டப் பெறுகின்றன.

(i) குருந்தொசித்த வரலாறு : சீவகசிந்தாமணி நாமகள் இலம்பகத்திலும் (180),(ii) கண்ணன் மறைந்து வளர்ந்த கதை அதே இலம்பகத்திலும் (333), (iii) கண்ணன் நப்பின்னையை மணந்த குறிப்பு கோவிந்தையார் இலம்பகத்திலும் (74), (iv) இராமன் மராமரம் எய்த வரலாறு கனகமாலையார் இலம்பகத்திலும் (87) குறிப்பிடப் பெற்றுள்ளன.

சங்க காலத்தையும், நீதிநூல் காலத்தையும் அடுத்துக் காணப் பெறுவது பக்தி இயக்கக் காலம். இக்காலத்தில்தான் ஆழ்வார் பெருமக்கள் தோன்றி பக்திப் பாசுரங்களைப் பாடி வைணவ சமயத்தைச் செழிக்கச் செய்தனர். பக்தி இயக்கம் தமிழையும் செழிக்கச் செய்தது. தமிழால் பக்தி இயக்கமும் ஏற்றம் பெற்றது. இவற்றால் நமக்குக் கிடைத்த செல்வம் கருவூலம் போன்ற சமய இலக்கியங்கள். தமிழ் இலக்கியத்தில் சமய இலக்கியக் கருவூலத்தை நீக்கிப் பார்த்தால் தமிழ் இலக்கியம் மிகுந்த வறுமை நிலையைக் காட்டும்.

# 2. நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

திருமால் திருவருளால் மலர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் அருள்மிக்குப் பாடிய இனத்தமிழ்ப் பாசுரங்களே நாலாயிரத் திவ்யப் பிரபந்தம். இதனுள் திகழும் பாசுரங்கள் ஒவ்வொன்றும் செவிக்கினிய செஞ்சொல்லால் ஆயது. சொற்சுவை பொருட்சுவைகளிற் சிறந்தது; பிறவித் துயரறுத்து அந்தமில் பேரின்பத்தை அளிக்க வல்லது. இவ்வாற்றான் ஒவ்வொரு பாசுரமும் நூல் எனத் தக்க மாட்சிமையுற்று **நாலாயிர திவ்வியப் பிரபந்தம்** என்று வழங்கலாயிற்று. இது மக்களின் கீழ்மையை அகற்றி மேன்மையை அளிக்கும் மறையாய் விளங்குதலின் இதனைத் 'தென்மொழி மறை' யென்பர் சான்றோர். வடமொழி மறையினும் சிறப்புடைய தென்றும் சாற்றுவர்.

கால வெள்ளத்தாலும் போற்றுவாரின்மையாலும் எப்படியோ மறைந்து போன இப்பாசுரங்களைத் திரட்டி வேத வியாசர் வேதங்களை நான்காக வகுத்துத் தொகுத்ததுபோல் **நாதமுனிகளும்** இப்பாசுரங்களை நான்கு தொகுதிகளாக்கி ஒவ்வொரு தொகுதியிலும் கிட்டத்தட்ட ஆயிரம் பாசுரங்கள் அடங்கியிருக்குமாறு அடைவுபடுத்தினார். பாசுரங்களை அவர் 'இசைப்பா' 'இயற்பா' எனப் பிரித்து இசைப்பாக்களை மூன்று தொகுதிகளாகவும் இயற்பாக்களை ஒரு தொகுதியாகவும்

அடைவுபடுத்தி வெளியிட்டார். அங்ஙனம் அடைவுபடுத்திய தொகுதிகள் வருமாறு.

## (1) இசைப்பாத் தொகுதிகள் :

*(அ) முதலாயிரம் : இதில் அடங்கிய பிரபந்தங்களும் அவற்றிலடங்கிய பாசுரத் தொகையும்*

| பிரபந்தம் | பாசுரத் தொகை |
|---|---|
| 1. பெரியாழ்வார் திருமொழி | 473 |
| 2. திருப்பாவை | 30 |
| 3. நாச்சியார் திருமொழி | 143 |
| 4. பெருமாள் திருமொழி | 105 |
| 5. திருச்சந்த விருத்தம் | 120 |
| 6. திருமாலை | 45 |
| 7. திருப்பள்ளி எழுச்சி | 10 |
| 8. அமலனாதி பிரான் | 10 |
| 9. கண்ணிநுண் சிறுத்தாம்பு | 11 |
| ஆக பிரபந்தம் 9க்குப் பாசுரங்கள் | 947 |

*இவற்றுள் 1 என்றுள்ளது பெரியாழ்வாராலும்; 2,3 எண்கள் உள்ளவை அவர் வளர்ப்பு மகள் ஆண்டாளாலும்; 4 எண் உள்ளது குலசேகராழ்வாராலும், 5 எண்ணுள்ளது திருமழிசைப் பிரானாலும்; 6,7 எண்ணுள்ளவை தொண்டரடிப்பொடிகளாலும்; 8 எண்ணுள்ளது திருப்பாணாழ் வாராலும்; 9 எண்ணுள்ளது மதுரகவிகளாலும் அருளிச் செய்யப் பெற்றவை.*

**(ஆ) பெரிய திருமொழி :** இதிலடங்கிய பிரபந்தங்களும் பாசுரத் தொகையும் :

| பிரபந்தம் | பாசுரத் தொகை |
|---|---|
| 10. பெரிய திருமொழி | 1054 |
| 11. திருக்குறுந்தாண்டகம் | 20 |
| 12. திருநெடுந்தாண்டகம் | 30 |
| ஆக, பிரபந்தம் மூன்றுக்குப் பாசுரங்கள் | 1134 |

இம் மூன்று பிரபந்தங்களும் திருமங்கையாழ்வாரால் அருளிச் செய்யப் பெற்றவை.

**(இ)திருவாய்மொழி :** இதிலடங்கிய பிரபந்தமும் பாசுரத் தொகையும்

| பிரபந்தம் | பாசுரத் தொகை |
|---|---|
| 13. திருவாய்மொழி. | 1102 |
| ஆக, பிரபந்தம் ஒன்றுக்குப் பாசுரங்கள் | 1102 |

இப் பிரபந்தம் நம்மாழ்வாரால் அருளிச் செய்யப் பெற்றது.

## (2) இயற்பாத் தொகுதி :

**(ஈ) இயற்பா :** இதிலடங்கிய பிரபந்தங்களும் பாசுரங்களின் தொகையும் :

| பிரபந்தம் | பாசுரத் தொகை |
|---|---|
| 14. முதல் திருவந்தாதி | 100 |
| 15. இரண்டாம் திருவந்தாதி | 100 |
| 16. மூன்றாம் திருவந்தாதி | 100 |
| 17. நான்முகன் திருவந்தாதி | 96 |
| 18. திருவிருத்தம் | 100 |
| 19. திருவாசிரியம் | 7 |
| 20. பெரிய திருவந்தாதி | 87 |
| 21. திருவெழுக்கூற்றிருக்கை | 1 |
| 22. சிறிய திருமடல் | 1 |
| 23. பெரிய திருமடல் | 1 |
| ஆக, பிரபந்தங்கள் 10க்குப் பாசுரங்கள் | 593 |

இவற்றுள் 14,15,16 எண்களுள்ளவை முறையே முதலாழ்வார்களான பொய்கையார், பூதத்தார், பேயார் ஆகியோராலும்; 17 எண்ணுள்ளது திருமழிசைப்பிரானாலும்; 18,19,20 எண்களுள்ளவை நம்மாழ்வாராலும், 21,22,23 எண்களுள்ளவை திருமங்கையாழ்வாராலும் அருளிச் செய்யப் பெற்றவை.

**தொகுதிபற்றிய குறிப்புகள்:** நாதமுனிகள் தாம் ஏற்படுத்தின திருமொழி-திருவாய்மொழித் (பகல் பத்து-இராப்பத்து) திருநாளில் முதலாயிரத்தையும், திருவாய் மொழியையும் தேவகானத்தில் ஏறிட்டுச் சேவித்தார் என்றும், இயற்பாவை இயலாகச் சேவித்தார் என்றும் "கோயிலொழுகு"

என்ற நூலினால் அறிகின்றோம். இச் செய்தி 'இசைப்பா' 'இயற்பா' என்னும் பாகுபாட்டைத் தெளிவாக உணர்த்து கின்றது. இசைப்பா தொகுதிகட்குப் பண் தாளங்கள் அமைந் திருத்தலும் கவனிக்கத்தக்கது. திருவாய்மொழிப்பாசுரங்கள் முழுமைக்கும் பண், தாளங்கள் உள்ளன. "பண்ணார் பாடல் இன்கவிகள்"[1] என்று சடகோபரே அருளிச் செய்திருப்பதும், இவர்தம் சீடரான மதுரகவிகளும்,

> **தேவுமற் றறியேன்; குருகூர் நம்பி**
> **பாவின் இன்னிசை பாடித் திரிவனே**[2]

என்று கூறியிருப்பதையும் நோக்கலாம். பெரிய திருமொழிக்குப் பண், தாளங்கள் மதுரைத் தமிழ்ச் சங்கத்து ஏட்டில் காணப்படுகின்றன.

> **"இன்னிசையால் சொன்ன செஞ்சொல் மாலை"**[3]
> **"பண்ணார் பாடல்"**[4]
> **"பண்ணுள் ஆர்தரப் பாடிய பாடல்"**[5]
> **"பண்கள் அகம் ப[illegible]ற சீர்ப்பாடல்"**[6]

முதலியனவாக வரும் பெரிய திருமொழிப்பகுதிகளும் இத் தொகுதியும் 'இசைப்பா' எனத் தெரிவிக்கின்றன. இங்ஙனமே முதலாயிரத்திற்கும் பண், தாள அமைப்புகள் முன்பு வழக்கத்தில் இருந்திருத்தல் வேண்டும். பெரியாழ்வார் பாசுரங்கள் பண்ணில் இயன்றவை என்பதை,

> **'பட்டநாதன் பண்ணியநா நூற்றேழு பத்து மூன்றும்'**[7]

1. திருவாய். 10.7:5
2. கண்ணிநுண்–2
3. பெரி. திரு:2.8;10;9,2;10
4. மேலது1.9:10
5. மேலது 4.2;10
6. மேலது 6.9:10
7. தே.பி.381 (பிரபந்தம்–15)

என்ற வேதாந்த தேசிகன் வாக்கினால் அறியலாம். திருமழிசைப்பிரான் அருளிய இரண்டு பிரபந்தங்களில் திருச்சந்தவிருத்தம் முதலாயிரத்திலும் 'நான்முகன் திருவந்தாதி' இயற்பாவிலும் சேர்க்கப் பெற்று முறைப்படுத்தப் பெற்றுள்ளமையை நோக்கினாலும் முதலாயிரத்திலுள்ள பிரபந்தங்கள் அனைத்தும் இசைப்பாக்களே எனத் துணிய இயலும். எனவே, இயற்பா ஒழிந்த ஏனைய மூன்று தொகுதி களும் இசைப்பாத் தொகுதிகள் என்பது தெளிவாகும்.

மேலே கூறப்பெற்ற முதலாயிரம், பெரிய திருமொழி, திருவாய்மொழி இயற்பா என்ற பாகுபாடும் பிரபந்தங்களின் அமைப்பு முறையும் நாதமுனிகளின் காலத்தில் ஏற்பட்டவை. பிரபந்தங்களின் எண்ணிக்கை இத்தனை என்பது நாதமுனிகள் காலத்தில் வழங்கி வந்ததாகத் தெரியவில்லை. திருவரங்கத் தமுதனார் இராமாநுசர்மீது அருளியுள்ள 'இராமாநுச நூற்றந்தாதி' இராமாநுசர்காலத்தில் இயற்பாத் தொகுதியுடன் 24வது பிரபந்தமாகச் சேர்க்கப்பட்டது என்பதைக் **'கோயிலொழுகு'** என்ற நூலின் வாயிலாக அறிகின்றோம். அக்காலத்திலிருந்து முதலாயிரத்தில் கண்ணிநுண் சிறுத் தாம்பைப் போல் (அடியார்மீது-நம்மாழ்வார் மீது -பாடியது) இயற்பா இறுதியில் உள்ள இராமாநுச நூற்றந்தாதி' எங்கணும் பெரு வழக்காக ஓதப்படுவதாயிற்று. இன்றும் அவ்வழக்கு நடைமுறையில் இருந்து வருகின்றது. திருக்கோயில்களில் இயற்பாவின் இறுதியில் இப்பிரபந்தத்தை அநுசந்தித்து வருகின்றனர். இதனால் இந்நூற்றாந்தாதி (அடியார்மீது-இராமாநுசம் மீது -பாடியது) இயற்பா பிரபந்தங்களுள் ஒன்றாக அமைந்துவிட்டமை புலனாகும்.

'இராமாநுச நூற்றந்தாதி' சேர்ந்த திவ்விய பிரபந்தம் இருபத்து நான்கினில் இயற்பாப் பிரபந்தங்கள் பதினொன்று. இவற்றுள் கட்டளைக் கலித்துறைப் பாசுரங்களால் அமைந்தனவும் இசைக்குச் சேர்ந்தனவும் ஆகவுள்ள திருவிருத்தம் (நம்மாழ்வார்), இராமாநுச நூற்றந்தாதி (அமுதனார்)ஆகியவை இயற்பா என்றே பெயர் பெறுகின்றன. மற்றும், இயற்பா தொகுதியில் அதே பாசுரமாக்வுள்ள திருவெழுக்கூற்றிருக்கை 'சிறிய திருமடல்', 'பெரிய திருமடல்' ஆகிய மூன்றைத் தவிர ஏனைய எட்டுப் பிரபந்தங்களும் அந்தாதிப் பிரபந்தங்களாகும். 'இராமாநுச நூற்றந்தாதி, மட்டிலும் கட்டளைக் கலித்துறைப் பாசுரங்களால் அமைந்தது. 'திருவிருத்தமும் கட்டளைக் கலித்துறைப் பாக்களால் அமைந்த அந்தாதிப் பிரபந்தமாக இருப்பினும் அதனை 'அந்தாதி' எனப் பெயரிட்டு வழங்குதல் இல்லை. அந்தாதிப் பிரபந்தங்களைத் தொடர்நிலைச் செய்யுள் வகையில் 'சொற்றொடர் நிலைச் செய்யுள்' என வழங்குவர். இவை தொல்காப்பியர் கூறும் 'விருந்து' என்ற வகையில் அடங்கும்.[8] மேற்கூறப்பெற்ற எட்டு அந்தாதிப் பிரபந்தங்களில் முதலாழ்வார்கள் அருளிய மூன்று அந்தாதிகள், நான்முகன் திருவந்தாதி, பெரிய திருவந்தாதி ஆகிய ஐந்தும் வெண்பா அந்தாதிகள். இராமாநுச நூற்றாந்தாதி மட்டிலும் கலித்துறை அந்தாதி திருவாசிரியம் திருவெழுக் கூற்றிருக்கை ஆகிய இரண்டும் ஆசிரியப்பாவால் அமைந்த பிரபந்தங்களாகும். திருவாசிரியம் அந்தாதிப் பிரபந்தமாகும். இஃது அந்தாதிப் பிரபந்தமாக அமைந்திருப்பினும் இயற்பாவிலுள்ள ஏனைய அந்தாதிப் பிரபந்தங்களைப்போல இறுதியும் முதலும்

8. தொல். பொருள் செய்யு–நூற்பா 551 (பேராசிரியர் உரை).

மண்டலித்து அமையவில்லை. 'திருவிருத்தம்', 'சிறிய திருமடல்', 'பெரிய திருமடல்' ஆகிய மூன்றும் அகத்துறைப் பிரபந்தங்களாகும். இம்மூன்றனுள் மடல்கள் இரண்டும் கலிவெண்பாவாலான பிரபந்தங்களாகும்.

## (3) பிரபந்தங்களின் தொகை :

நாலாயிரத்திலுள்ள பிரபந்தங்களின் தொகையும் பாசுரங்களின் தொகையும் வேதாந்த தேசிகர் காலத்தில் வரையறுத்துக் கூறப்பெற்றவை. தேசிகர் திருப்பல்லாண்டைத் தனிப் பிரபந்தமாகக் கொள்ளவில்லை. அது பெரியாழ்வார் திருமொழியுடன் சேர்ந்தது என்ற சம்பிரதாயத்தை அப்படியே கொண்டவர்.

**ஏரணிபல் லாண்டுமுதற் பாட்டு நானூற்**
**றெழுபத்தொன் றிரண்டுமெனக் குதவு வாயே**[9]

என்று திருப்பல்லாண்டு சேர்ந்த ஒரே தொகையாகக் கூறியிருப்பதனால் இதனைஅறியலாம். அவர் தமது பிரபந்த சாரத்தில் மேற்கொண்டுள்ள முறையைக் கவனித்தால் இது தெளிவாகும். இந்த முறை பிரபந்தசாரத்தின் முதற்பாட்டில்,

**வாழ்வான திருமொழிகள் அவற்றுள் பாட்டின்**
**வகையான தொகைஇலக்கம் மற்றும் எல்லாம்**[10]

என்று பேசப்பெறுகின்றது. இதில் 'பாட்டின் வகையான தொகை' என்பது 'பாட்டின் வகுப்பின்படி எண்கள்' என்பதையும் 'இலக்கம்' என்பது அவரவர் அருளிச் செய்த பாசுரத்தின் கூட்டிய எண் என்பதையும் குறிக்கின்றன என்பது

9. பிரபந்தசாரம்–9 (தே.பி.375)
10. பிரபந்தசாரம்–1 (தே.பி. 367)

தெளிவு. இந்த முறையை மேற்கொண்டு தமது பிரபந்தசாரம் இரண்டாவது முதல் பதினான்காவது வரையிலுமுள்ள பதின்மூன்று பாடல்களில் ஒவ்வொரு ஆழ்வாருடைய திருமொழிகளையும் அல்லது திருமொழியையும் தனித் தனியே அதனதன் தொகை இலக்கத்தையும் கூறுகின்றார். அவற்றில் திருமழிசைப்பிரான், நம்மாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப் பொடியாழ்வார், திருமங்கையாழ்வார், என்ற ஐவர்களைப் பற்றிய பாசுரங்களில் அவரவர் அருளிச்செய்த பிரபந்தங்களைத் தனித்தனியே எடுத்து அவற்றின் தனித்தனி தொகை இலக்கத்தைக் கூறியுள்ளார். முதலாழ்வார்கள் மூவர், மதுரகவிகள், குலசேகரப்பெருமாள், திருப்பாணாழ்வார், திருவரங்கத்து அமுதனார் (இராமாநுச நூற்றந்தாதி அருளிச் செய்தவர்) என்று இந்த எழுவர்பற்றிய பாசுரங்களில் அவர்கள் ஒவ்வொரு பிரபந்தத்தையே செய்தவர்களாதலின் வகை ஏதுவுமின்றி அதனதன் தொகை இலக்கமே. கூறப்பெற் றுள்ளது. ஆயின் பெரியாழ்வார்பற்றின பாடலில் வகை எதுவுமின்றித் தொகை மட்டிலும் நானூற்று எழுபத்து ஒன்று இரண்டு (470+1+2= 473) என்று கூறியுள்ளதை நோக்கும்போது தேசிகரின் திருவுள்ளத்தில் திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தம் அன்று என்றிருந்தமை தெளிவாக அறியக் கிடக்கின்றது. இவர் இராமாநுச நூற்றந்தாதியைச் சேர்த்துத் திவ்விய பிரபந்தம் இருபத்து நான்கு பிரபந்தங்களைக் கொண்டது என்ற கொள்கையினர்;

## (4) அப்பிள்ளை ஆசிரியர் :

தேசிகருக்குக் காலத்தால் சற்றுப் பிற்பட்டவரான இவர் திருப்பல்லாண்டைத் தனிப்பிரபந்தமாகக் கொண்டவர். இதனை,

நல்லதிருப் பல்லாண்டு நான்மூன்றோன் வாழியே
நானூற்றுப் பத்தொன்றும் நமக்குரைத்தோன் வாழியே![11]

என்று பெரியாழ்வாரைப்பற்றிய தமது வாழித்திருநாமத்தில் கூறியிருப்பதனால் அறியலாகும்.

மேற்குறிப்பிட்ட இருவர் கருத்துக்களையும் ஒரு சிறிது ஆராய்வோம். திவ்வியப் பிரபந்தத்தை நான்காகப் பிரித்து ஒவ்வொரு தொகுதியிலும் இந்த இந்தப் பிரபந்தம் இந்த இந்த வரிசையில்தான் இருக்க வேண்டும் என்று வரையறை செய்தவர் நாதமுனிகள். அவர் திருப்பல்லாண்டைத் தனிப் பிரபந்தமாகக் கருதியிருந்தால் 'வண்ணமாடங்கள்' (1.1) 'முதல் மெச்சூது' (2.1) வரையில் பத்துத் திருமொழிகளைச் சேர்த்து ஒரு தொகுதி யாக்கி பெரியாழ்வார் திருமொழி-முதல் பத்து என்று வகுத்திருக்க வேண்டுமேயன்றி ஒன்பது திருமொழிகளை வைத்துப் 'பத்து' எனப் பெயரிடக் காரணம் எதுவுமில்லை. அவர் அங்ஙனம் செய்யாமல் 'வட்டு நடுவே' (1.9)என்ற திருமொழியுடன் ஒரு பத்தாக்கியுள்ளார். திவ்வியப்பிரபந்தத்தில் 'பத்து' என்ற பரிவு 'இருக்கு' வேதத்தில் மண்டலங்களின் உட்பிரிவுகள் வகுக்கப்பெற்றுள்ள மரபை ஒட்டியது. அங்கு அந்த உட்பிரிவுகள் 'சூக்தம்' எனப்படுகின்றன. 'சூக்தம்' என்பதே தமிழில் 'திருமொழி' எனப்படுகின்றது. பல திருமொழிகளுள்ள பிரபந்தங்களே 'பெரியாழ்வார் திருமொழி' 'நாச்சியார் திருமொழி', 'பெருமாள் திருமொழி 'பெரிய திருமொழி' என்றிப்படித் திருமொழி என்ற பெயர்களைப் பெற்றன என்பதும் நம்மாழ்வார் ஆயிரமும் 'நம்மாழ்வார் திருமொழி' என்றே கூறப் பெறலாமாயினும் அதன் சிறப்புத்

11. வாழித்திருநாமம்–16

தோன்ற திருவாய்மொழி என்று வழங்கப்பெற்றது என்பதும் ஈண்டுஅறிதற்பாலவை. எனவே திருமொழி, திருவாய்மொழி என்ற பெயர்கட்குக் காரணமான பெயரையுடைய திருமொழிகளின் தொகையைக் கொண்டு 'முதல் பத்து', 'இரண்டாம் பத்து' - என்றிப்படி வரையறை ஏற்பட்டது என்பது தெளிவு. இம்முறையில் பெரியாழ்வார் திருமொழி முதல் பத்துக்கு இரண்டாம் பத்து முதலானவற்றைப் போலும் 'பெரிய திருமொழி', திருவாய்மொழி இவற்றின் பத்துகளைப் போலும். வழக்கமாகப் பத்துத் திருமொழிகள் இருந்தே தீரவேண்டும். ஆயின் 'பெரியாழ்வார் திருமொழி' ஐந்தாம் பத்தில் நான்கு திருமொழிகளே உள்ளன. அதனைப் போலவே பத்துக்குக் குறைந்த ஒன்பது திருமொழிகளே உள்ள முதல் பத்தினை ஏன் 'பத்து' என்று வழங்குதல் கூடாது? என்று வினவலாம். பத்துப் பத்துத் திருமொழிகளாகப் பிரித்து கொண்டுபோய் எஞ்சியுள்ள நான்கு திருமொழிகளை ஒரு பத்தாகக் கொள்வதற்கும் எடுத்த எடுப்பிலே ஒன்பது திருமொழிகளை ஒரு பத்து என்று கொள்வதற்கும் வேறுபாடு உண்டு. தான் வரையறுத்த கொள்கையை எடுத்த எடுப்பிலேயே எவரும் கைவிடார். தவிர, முழுப் பத்து ஒன்றுக்கு மேல் இருக்கும் இடங்களில் தான் ஓதுதல் முதலான வசதிகளைக் கருதித் திருமொழிகளைப் பத்துப் பத்தாக பிரிக்க முடியாததற்குக் காரணம் முழுப் பத்து ஒன்றுக்குக் குறைந் திருப்பதேயாகும் என்பதும், ஈண்டு அறிதற்பாலவை. எனவே, திருப்பல்லாண்டு தனிப் பிரபந்தம் அன்று என்று கொள்ளத் தக்க ஏதுவொன்றும் இல்லை.

பெரியவாச்சான் பிள்ளை போன்ற வியாக்கியாதாக்கள் முதலானவர்களும் திருப்பல்லாண்டுடன் சேர்ந்து பெரியாழ்வார் திருமொழி ஒரே பிரபந்தம் என்ற திருவுள்ளம் கொண்டவர்கள். பெரியாழ்வார் திருமொழியின் இறுதிப் பாசுரமான **'வேயர் தங்கள் குலத்து'** *(5.4;11)* என்றதில் கோயில் கொண்ட கோவலன் என்ற சொற்றொடருக்கு வியாக்கியானம் செய்யுமிடத்தில், 'திருப்பல்லாண்டு தொடங்கி இவ்வளவும் இவர் மனத்திலிருக்கின்ற கிருஷ்ணன் தான் பிறந்தபடியையும் வளர்ந்தபடியையும் இவனைக் கொண்டு கேட்டான்' என்று பெரியவாச்சான் பிள்ளை கூறியிருப்பதனாலும் இதற்கு முன்னர் "திருப்பல்லாண்டின் அர்த்தத்தை நிகமிக்கிறார்" என்று பன்முறை கூறியிருப்பதனாலும் ஒரு பிரபந்தமானால் தான் "தொடக்கம்" என்பதும், "நிகமனம்" என்பதும் சேருமாதலாலும் இவர்கருத்து 'திருப்பல்லாண்டு' தனிப் பிரபந்தம் அன்று என்பது உறுதிப்படுகின்றது.

மேலும் மணவாள மாமுனிகளின் **"உபதேசரத்தின மாலையில்** 'பல்லாண்டு பாடிய பட்டர்பிரான்' (16) 'ஆதி திருப்பல்லாண்டானதுவும்' (19), 'உண்டோ திருப்பல்லாண்டுக்கு ஒப்பதோர் கலை' (20) என்ற சொற்றொடர்களில் வரும் 'திருப்பல்லாண்டு' என்பது அது தனிப் பிரபந்தம் என்பதை உறுதிப்படுத்துகின்றது என்றும், திருக்கோயில்களில் ஏதாவது ஒரு பிரபந்தம் சேவிக்க நேரிடும்போதெல்லாம் திருப்பல்லாண்டு, முதலில் சேவிக்கப் பெற்றும் அதன் பின்னரே அக்குறிப்பிட்ட பிரபந்தம் சேவிக்கப்பெறுகின்றது என்ற வழக்கம் இருப்பதால் 'திருப்பல்லாண்டு' ஒரு தனிப்பிரபந்தம்

என்பது மேலும் வலியுறுகின்றது என்றும் கூறுகின்றனர். மேற்குறிப்பிட்ட உபதேசரத்ன மாலைப் (16,19,20) பாசுரங்களில் இரண்டாவது தொடரிலுள்ள 'திருப்பல்லாண்டு' வேதத்திற்கு 'ஓம்' என்ற பிரணவம்போல் திவ்வியப் பிரபந்தத்தின் பொருளுக்கெல்லாம் சுருக்கமாகவும் மங்கள ரூபமாயும் இருப்பதாகக் கூறுகின்றதேயன்றி தெளிவாக அஃது ஒரு பிரபந்தம் எனக் கூறாமையாலும், அங்ஙனமே திருக்கோயில் களில் இருந்து வரும் வழக்கும் அது தனிப் பிரபந்தம் என்பதற்கு ஆதாரம் அல்லாமையாலும் இரண்டையும் தக்க சான்றுக ளாகக் கொள்வதற்கில்லை. மேலும், 'உபதேசரத்னமாலை ஆழ்வார்கள் அவதரித்த நாள்கள், மாதங்கள், தலங்கள் முதலிய செய்திகளைத் தருகின்றதேயன்றி அவர்கள் அருளியுள்ள பிரபந்தங்களைப் பற்றி யாங்கணும் கூறவில்லை. ஆயினும், 'திருப்பல்லாண்டு' என்ற திருமொழி அகண்ட திவ்வியப் பிரபந்தத்தின் தொடக்கத்திலிருப்பதாலும் அது வேதத்தின் பிரணவம்போல் திகழ்வதாலும் அதற்குத் தனிப் பெருமை உள்ளது. திருக்கோயில்களில் முதலில் ஓதப் பெறுவதற்கு அதனையே காரணமாகவும் கொள்ளலாம். 'திரு' என்ற அடைமொழியால் அது சிறப்பிக்கப் பெறுவதற்கும் அதுவே காரணமாகும்.

## (5) பாசுரங்களின் தொகை :

நாலாயிரத்தின் பாசுரத்தொகை பற்றிய இரு வேறு கருத்துகளையும் ஆராய்வோம்.மேலே குறிப்பிட்டவாறு இருபத்து மூன்று பிரபந்தங்களடங்கிய திவ்வியப் பிரபந்தத்தின் பாசுரத்தொகை.

| | |
|---|---|
| முதலாயிரம் | 947 |
| பெரிய திருமொழி | 1134 |
| திருவாய் மொழி | 1102 |
| இயற்பா | 593 |
| மொத்தம் | 3776 |

என்றவாறு அமைகின்றது. அஃதாவது இரு மடல்களையும் நீக்கினால் இத்தொகை3774 என்றாகின்றது. இத்தொகை நாலாயிரத்திற்கு (4000-3774) 226 குறைகின்றது. வேதாந்த தேசிகர் தாம் இயற்றிய பிரபந்தசாரத்தில் இருமடல்களையும் 118 பாசுரங்களாகக் கொள்வர்.

சிறிய திருமடற் பாட்டு முப்பத்தெட்டு இரண்டும்
சீர்பெரிய மடல் தனிப்பாட்டு எழுபத் தெட்டும்[12]

என்பது அவரது திருவாக்கு. பிறிதோரிடத்தில் அவர்

அஹீதனுயர் பரகாலன் சொல் . . . . . . . . . .
வேங்கட மாற்கு ஆயி ரத்தோடு
ஆனஇரு நூற்றோரைம் பத்து முன்று[13]

என்று திருமங்கை மன்னன் பாசுரங்களை 1253 என்று பேசுவர். மடல் ஒழிந்த நான்கு பிரபந்தங்களிலும் அடங்கிய பாசுரங்கள்,

| | |
|---|---|
| பெரிய திருமொழி | 1084 |
| திருக்குறுந்தாண்டகம் | 20 |
| திருநெடுந்தாண்டகம் | 30 |
| திருவெழுக் கூற்றிருக்கை | 1 |
| | 1135 |

12. தே.பி. 379. 13. தே.பி 382

என்று ஆகின்றன. எனவே, இரு மடல்களும் 1253-1135=118 பாசுரங்களாகின்றன என்பது இதனாலும் தெளிவாகின்றது. தேசிகர் 'சிறியதிருமடல் முப்பத்தெட்டு இரண்டும்', பெரிய மடற் 'பாட்டு எழுபத்தெட்டு' என்று குறித்த எண்ணிக்கையைப் பெரும்பாலான பதிப்பாசிரியர்கள் மேற்கொண்டுள்ளனர். பாசுரத்தின் பொருட் போக்கைக் கொண்டு அங்கங்கே பாசுரங்களாக நிறுத்தியுள்ளனர்.[14] இப்பதிப்புகளில் பெரிய திருமடலை 78 பாசுரமாகப் பிரித்துக் காட்டியுள்ளனர். சிறிய திருமடல் 40 பாசுரமாகக் கொள்வதால் நூலை 38 பாசுரங்களாகவும், பிற்சேர்க்கைப் பாடலை உதிரிப் பாசுரங்களாகவும் இவர்கள் கொள்கின்றனர். பிற்சேர்க்கைப் பாடலைச் சேர்த்துக் கொள்வது சிறிதும் பொருத்தமன்று. சில ஏட்டுப் படிகளில் சிறிய திருமடலை 38 பாசுரங்களாகவும் பெரிய திருமடலை 80 பாசுரங்களாகவும் பிரித்துள்ளனர். இம்முறையால் இரு மடல் பிரபந்தங்களும் 118 பாசுரங்கள் என்ற தொகை நிரம்பி விடுகின்றது. தேசிகப் பிரபந்தத்தில் "சிறிய திருமடல் முப்பதெட்டு இரண்டும் பெரிய திருமடல் எழுபத்தெட்டும்" என்றிருப்பதைச் சிறிய திருமடல் முப்பத்தெட்டு இரண்டும் எழுபத்தெட்டு எனக் கூட்டிப் பெரிய திருமடலை எண்பது

14. ஒரே பாடலாக அமைந்த நீண்ட பாசுரங்களைப் பொருள் முடிவு கருதித் தனித்தனிப் பகுதியாகப் பிரித்துக் கொள்ளுதல் பண்டிருந்து வரும் ஒரு மரபேயாகும். நச்சினார்க்கினியர் அடியார்க்கு நல்லார் இம்முறையை மேற் கொண்டுள்ளனர். இம் மரபையொட்டியே இருமடல் பிரபந்தங்களையும் பல பாசுரங்களால் (சரியாகச் சொன்னால் பல பகுதிகளாகக்) கணக்கிடும் மரபும் ஏற்பட்டிருத்தல் வேண்டும். பாசுரங்களைச் சேவிக்கும் போது இப் பகுதிகளின் இறுதியில் சற்று நிறுத்தப் பெறுகின்றது.

பாசுரங்களாகக் கொண்டனரோ? என நினைக்க இடம் உண்டு. எப்படியிருப்பினும் இதுவே சரியான முறை. இங்ஙனம் பெற்ற 118 பாசுரங்களும் இராமாநுச நூற்றந்தாதிப் பாசுரங்கள் 108-வும் சேர்ந்து 226 என்ற தொகையாக்கி திவ்வியப் பிரபந்தம் 4000 பாசுரங்கள் என்ற கணக்கு நிறைவு பெறுகின்றது.

அப்பிள்ளையாசிரியர் மடலில் அமைந்த ஒரு கண்ணியை (இரண்டு அடிகள்)ஒரு பாசுரமாகக் கொண்டு சிறிய திருமடலை 77½ பாசுரங்கள் என்றும், பெரிய திருமடலை 148½ பாசுரங்கள் என்றும் கணக்கிட்டு இருமடல்களிலும் 226 பாசுரங்கள் உள்ளனவாகக் கொள்வர். இதனைத் தாம் இயற்றிய திருமங்கையாழ்வார் வாழித் திருநாமத்தில்,

> இலங்கு எழு கூற்றிருக்கை
> இருமடல் ஈந்தான் வாழியே
> இம்மூன்றில் இருநூற்று இருபது
> ஏழ்ஈந்தான் வாழியே [15]

என வரும் பகுதியால் அறியலாம். இவர் கொள்கைப்படி 'இராமாநுச நூற்றந்தாதி' இன்றியே 4000 என்ற தொகை நிறைவு பெறுகின்றது.

இருவர் கொள்கை எப்படியிருப்பினும் இரு கொள்கைக்கு உரியவர்களும் இராமாநுச நூற்றந்தாதியை மறக்காமல் ஓதி வருவது பாராட்டத்தக்கது.அங்ஙனம் ஓதாமல் விட்டால் "செய்ந்நன்றி கொன்ற" பாவத்திற்கு ஆளாவர். வைணவம் நிலைத்திருக்கும் காலம் வரையிலும் இராமாநுசருடைய திருநாமமும் நிலைத்திருக்குமாறு காத்தல் வேண்டும்.

---

15. வாழித்திருநாமம்–11

## ஆய்வுரை :

*யாப்பிலக்கணப்படி திருமடலை ஒரே பாட்டாகக் கொள்வதே பொருத்தம். காரணம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கலிவெண்பாவாலான பிரபந்தம். ஆகவே, திவ்வியப் பிரபந்தத்தின் பாசுரங்கள் 3776 என்றும் இராமாநுச நூற்றந்தாதி பாசுரங்கள் சேர்ந்து அத் தொகை 3884 ஆகின்றது என்றும் அறியக் கிடக்கின்றது. இத்தொகை மிகுதிபற்றி நாலாயிரம் என்றே வழங்கப் பெறுகின்றது என்று கொள்ளலே ஏற்புடைத்து, நாலாயிரத்திற்குச் சில பாசுரங்கள் குறையினும் கூடினும் நாலாயிரம் என்று கொள்ளலே ஏற்புடைத்து.*

*நாலாயிரத்தில் 4000 பாசுரங்கள் இருந்தேயாக வேண்டும் என்ற கொள்கையை நிலை நாட்டவே இலக்கணவரம்பையும் மீறத் துணிந்தனர் நம் முன்னோர். இது தேவை இல்லாத கொள்கை. நூறு ஐம்பது குறைந்த கால்களையுடைய மண்டபத்தை 'ஆயிரங்கால் மண்டபம்' என்று கூறுகின்றோமல்லவா? நான்கு அல்லது இரண்டு கைகளுடன் விடுவிக்கப் பெற்ற வாணாசுரனது வதத்தைக் குறித்து ஆழ்வார்கள் "வாணன் ஆயிரத் தோள் துணித்த" என்றும் "வாணன் ஈரைந் நூறு தோள்களைத்துணித்த" என்று அருளிச் செய்துள்ளதைக் காண்கின்றோமன்றோ? பத்துக்குக் குறைவாகவும் பத்துக்கு மேலாகவும் உள்ள பாசுரங்களைச் சேர்த்து ஒரு பதிகமாகக் கொள்ளும் மரபு உண்டல்லவா? 947 பாசுரங்களைக் கொண்ட பகுதியை 'முதலாயிரம்' என்று வழங்குகின்றோம் அன்றோ? அங்ஙனமே திருவாய்மொழி 1102 பாசுரங்களைக் கொண்டிருப்பினும் 'நிரனிரை ஆயிரத்து' (1-1;11), 'சீர்த் தொடை ஆயிரத்து' (1,2;11) "குருகூர்ச் சடகோபன் ஓராயிரம் சொன்ன" (2,1;11)*

என்று ஆழ்வாரே அருளிச் செய்துள்ளமை ஈண்டுக் கருதத்தக்கது. மேலும் பெரிய திருமொழி 1084 பாசுரங்களால் அமைந்திருந்தும் " பொங்கு புகழ் மங்கையர் கோன் ஈந்த மறை ஆயிரம்" (தனியன்) என்று எம்பார் அருளிச் செய்துள்ளதையும் 108 பாசுரங்களைக் கொண்ட அந்தாதியை (எ.டு. இராமாநுச நூற்றந்தாதி) நூற்றந்தாதி என்று வழங்கப் பெறுவதும் ஈண்டுச் சிந்திக்கத் தக்கது. எனவே 4000க்குச் சில பாசுரங்கள் குறைந்துள்ள திவ்வியப் பிரபந்தத்தை 'நாலாயிர திவ்வியப் பிரபந்தம்' என்று வழங்குவது எவ்வாற்றானும் பொருந்துவ தாகின்றது.

பொதுவாகக் கூறினால் இப் பிரபந்தங்கள் யாவும் சமயச்சார்புடையன. ஆகவே, பாசுரங்கள் பக்தி நிலையையும், சமயக் கொள்கைகளையும் இறைவன் உயிர்கள் அசித்துக்கள் இவர்களின் தன்மைகளையும்உணர்த்துவனவாக அமைந் துள்ளன. ஆயினும் பாசுரங்கள் யாவும் இலக்கிய நயம் செறிந்தவையாக அமைந்துள்ளனவாதலால் சமயச் சார்பற்றவர்களும் பிற சமயத்தினரும் அவற்றை விரும்பிக் கற்றுப் போற்றுகின்றனர்.

# 3. பாசுரங்களில் அகப்பொருள் தத்துவம்

எம்பெருமானை அநுபவித்தல் பலவகையாக நடைபெறலாம். அவனுடைய திருநாமங்களைச் சொல்லி யநுபவித்தல், திருகல்யாண குணங்களைச் சொல்லியநுபவித்தல், வடிவழகைச் சொல்லியநுபவித்தல், அவன் உகந்தருளிய திவ்விய தேசங்களின் வளங்களைச் சொல்லியநுபவித்தல், அங்கே அநுபவமுள்ள ஸ்ரீ வைணவர்களின் பெருமையைப் பேசி அநுபவித்தல் என்று பல வகையாக நடைபெறும் பக்தி அநுபவம். இவற்றுள் மிக அருமையான அற்புதமான மற்றொரு வகையும் உண்டு. அஃதாவது ஆழ்வார்கள் தாமான தன்மையைவிட்டு. பிராட்டிமாருடைய தன்மையை ஏறிட்டுக் கொண்டு வேற்று வாயாலே பேசியநுபவித்தல். இதனை **'நாயக—நாயகி பாவனை'** என வழங்குவர். இந்த வைணவ தத்துவம் பரம் பொருளுக்கும் ஆன்மாவிற்கும் கூறும் ஒன்பது வகையான உறவுகளில் இதுவும் ஒன்று. இந்த உறவே ஏனைய வற்றினும் சிறந்தது; உயிராயது, இந்த உறவினை விளக்கும் பாசுரங்களை நாலாயிரத்தில் காணலாம். வைணவப் பெருமக்கள் சங்க காலத் தமிழ் நெறியினையொட்டி ஓர் அகப்பொருள் நெறியினைப் பாசுரங்களில் அமைத்துக் காட்டிய பெருமையினைப் பெற்றனர். புருடோத்தமனான எம்பெருமானின் பேராண்மைக்கு முன்னர் உலகிலுள்ள ஆன்மாக்கள் யாவும் பெண் தன்மையினை அடைந்து நிற்கும் என்பது அவர்கள் கண்ட தத்துவம். எனவே ஆழ்வார்கள்,

குறிப்பாக நம்மாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் பெண் தன்மை எய்திப் பல திருக்கோயில் மூர்த்திகளை அநுபவித்ததை அவர்களுடைய திருப்பாசுரங்களில் காணலாம்.

வைணவர்களிடையே நிலவும் மரபொன்று உண்டு. தண்டகாரண்ய முனிவர்கள் இராமபிரானது பேரழகில் ஈடுபட்டுப் பெண்மையை விரும்பி மற்றொரு பிறப்பில் ஆய மங்கையர்களாகிக் கண்ணனைக் கூடினர் என்ற வழக்கு ஒன்று உண்டு. ஆனால் ஆழ்வார்கள் அப்படியின்றி அப்பொழுதே பெண்மை நிலையை அடைந்து எம்பெருமானாகிய புருடோத்தமனை அநுபவிக்கக் காதலிக்கின்றனர். நம்மாழ்வார் போன்ற ஞானச் செல்வர்களிடம் சில சமயம் ஞானம் தலை தூக்கி நிற்கும்; சில சமயம் பிரேமம் (காதல்) மீதூர்ந்து நிற்கும். இந்த இரண்டு நிலைகளிலிருக்கும் பொழுது அவர்கள் பாசுரங்கள் அருளியுள்ளனர். இதனை,

> **ஞானத்தில் தம் பேச்சு;**
> **பிரேமத்தில் பெண் பேச்சு**[1]

என்ற ஆசாரிய ஹிருதயம் என்ற நூல் குறிப்பிடும். அதாவது ஞான நிலையிலிருக்கும்பொழுது அவர்கள் தாமான தன்மையில் நின்று பேசுவர். பிரேம நிலையிலிருக்கும் பொழுது பெண் தன்மையை அடைந்து வேற்று வாயாலே பெண் பேச்சாகப் பேசுவர். அப்பொழுது நம்மாழ்வாருக்குப் 'பராங்குசர்' என்ற ஆண்மைப் பெயர் நீங்கிப் 'பராங்குச நாயகி' என்ற பெண்மைப் பெயர் வந்தடையும்; திருமங்கை

1. ஆசா- ஹிரு சூத்திரம்-118.

யாழ்வாருக்குப் 'பரகாலர்' என்ற ஆண்மைப் பெயர் நீங்கிப் 'பரகால நாயகி' என்ற பெண்மைப் பெயர் வந்து சேரும்.

## 1. மூன்று வகைப் பாசுரங்கள் :

இங்ஙனம் ஆழ்வார்கள் பெண்மை நிலையிலிருந்து கொண்டு எம்பெருமானை அநுபவிக்கும்பொழுது, அவர்கள் தோழி தாய் மகள் என்ற மூவரில் ஒருவரின் நிலையைத் தாம் அடைந்து கூற்றுகள் நிகழ்த்துவர். இதனை,

> **"சம்பந்த உபாய பலன்களில்**
> **உணர்த்தி துணிவு பதற்றம் ஆகிய பிரஜ்**
> **ஞாவஸ்தைகளுக்குத் தோழி,**
> **தாயார் மகள் என்று பேர்" (133)**

[பிரஜ்ஞாவஸ்தைகள் - மூன்று காலங்களையும் அறியும் அறிவின் நிலை]

என்று ஆசாரிய ஹிருதம் பேசும். இங்ஙனம் மூன்று நிலைகளாக வடிவெடுக்கும் பாசுரங்கட்குத் தத்துவமும் கூறுகின்றது.

இங்ஙனம் ஆழ்வார்கள் பெண்மை நிலையிலிருந்து கொண்டு எம்பெருமானை அநுபவிக்கும்பொழுது அவர்கள் பாசுரங்களும் தோழி சொல்வதுபோல் உருக்கொண்டு 'தோழிபாசுரம்' என்று பெயர் பெறும்; தாய் சொல்லுவது போல் வடிவெடுத்துத் 'தாய்ப் பாசுரம்' என்று திருநாமம் பெறும்; தலைவி சொல்வதுபோல் வடிவெடுத்து 'மகள் பாசுரம்' என்று வழங்கப்பெறும். இங்ஙனம் மூன்று வகையாகக் கூற்றுகள் நிகழ்ந்து பாசுரங்கள் வெளி வந்தாலும் பாசுரங்கள் பேசுகின்றவர்கள் ஆழ்வார்களேயாவர். இதனைப் பதிகங்கள்

தோறும் வரும் பலசுருதிப் பாசுரங்களால் (திருக்கடைக் காப்புச் செய்யுட்களால்) தெளிவாகும். மலை நாட்டுத் திருப்புலியூர் எம்பெருமான் மீது தோழிப் பாசுரமாக அருளிய பாசுரத்தின்[2] பலசுருதிப் பாசுரத்தில் 'தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன்; சடகோபன், சொல், நேர்பட்ட தமிழ்மாலை ஆயிரத்துள் இவைப்பத்தும்' என்று வருவதைக் காணலாம். திருவரங்கப் பெருமான்மீது தாய்ப்பாசுரமாக அருளிய பதிகத்தின்[3] பலசுருதிப்பாசுரத்தில் 'வண்குருகூர்ச் சடகோபன், முகில் வண்ணன் அடிமேல் சொன்ன சொல் மாலை ஆயிரத்து இப்பத்தும்' என்று அமைந்திருப்பதைப் பார்க்கலாம். மலை நாட்டுத் திருமூழிக் களத்து உறையும் என்பெருமான்மீது மகள் பாசுரமாக அருளிய பதிகத்தின்[4] திருக்கடைக்காப்புச் செய்யுளில் 'வண்குருகூர்ச் சடகோபன் வாய்ந்துரைத்த; அழிவு இல்லா ஆயிரத்து இப்பத்தும்' என்றும் வருவதை நோக்கலாம். ஏனைய அகப்பொருள் பாசுரங்களிலும் இதே போக்கு இருப்பதையும் கண்டு மகிழலாம். ஓர் ஆறானது பல வாய்க்கால்களாகப் பெருகி வேறு வேறு பெயர்களைப் பெற்றாலும் அவற்றில் பாய்ந்து செல்லும் நீர் ஒரே ஆற்று நீராக இருக்கும் என்பதை நாம் அறிவோம். அங்ஙனமே ஆழ்வாரது சொல் மாலைகள் மூன்று நிலைகளாக வழிந்து புறப்பட்டாலும் அவை ஆழ்வார்களது பாசுரங்களாகவே தலைக்கட்டும்.

**(அ) திருவாய்மொழியில் :** இது 'திருமாலவன் கவி[5] என்றும் சிறப்பிக்கபெறும். 'சடகோபன் செந்தமிழ்' என்ற இந்நூலில் நம்மாழ்வார் பகவானை நூறு பதிகங்களால்

2. 'கருமாணிக்கமலைமேல்' (8–9)
3. 'கங்குலும் பகலும்' (7,2)
4. 'எங்கானல் அங்' (9,7)
5. 'திருவிருத்தம்'–48

அநுபவித்து இனியராகின்றார். இவற்றுள் 73 பதிகங்கள் ஆழ்வார் தாமான தன்மையில் பேசியவை. பெண் பாவனையில் பேசியவை 27 பதிகங்கள். பெண் நிலையிலிருந்து பேசிய வற்றுள் தோழிபாவனையில் பேசியவை 3 பதிகங்கள்; தாய் பாவனையில் பேசியவை 7 பதிகங்கள்; மகள் பாவனையில் பேசியவை 17 பதிகங்கள். பரகாலன் பைந்தமிழிலும் 27 பதிகங்கள் அகப்பொருள் பற்றியனவாகஉள்ளன என்று சிலர் காட்டுவர். அவர்கள் கருத்துப்படி பெரிய திருமொழியில் உள்ளவை 23 பதிகங்கள். திருநெடுந்தாண்டகத்தில் உள்ளவை 2 பதிகங்கள்; மடல்கள் 2 ;ஆக 27 பதிகங்கள். இவற்றுள்ளும் தாய் பாவனையில் உள்ளவை 12 பதிகங்கள் மகள் பாவனையில் உள்ளவை 15பதிகங்கள்; தோழி பாவனையில் உள்ளவை ஏதும் இல்லை.

**(ஆ) பரகாலன் பைந்தமிழில் :** உள்ளவற்றை ஆழ்ந்து நோக்கினால் அவற்றுள் சில அகப்பொருள் துறைகளில் அமைந்தவை அல்ல என்பது தெளிவாகும். தாய் பாவனையில் உள்ளனவற்றில் ஒன்பது பதிகங்கள்தாம் அகப்பொருள் துறையில் அமைந்தவை. அடியில் கண்ட பெரிய திருமொழியில் உள்ளவை,

10.4. கண்ணனை அம்மம் உண்ண அழைத்தல்

10.5 கண்ணனைச் சப்பாணி கொட்டவேண்டுதல்

10.7. கண்ணனது செயல் குறித்து யசோதை பணித்தலும், ஆய்ச்சியர் முறையிடுதலும்

மூன்று பதிகங்களும் தாய்ப் பாவனையில் வகைப்படுத்திக் காட்டப் பெற்றாலும் அவை யசோதைப் பிராட்டியுடையனவே

யன்றிப் பரகால நாயகியினுடையவை அல்ல. இங்ஙனமே 'கண்ணனோடு ஊடி உரைத்தல்' (10.8) என்ற திருமொழி மகள் பாசுரம் போல காணப்படினும் அதுவும் பரகால நாயகியின் பாசுரம் அல்ல.

## 2. தத்துவம் :

இங்ஙனம் மூன்று வகையாகச் சொல்லும் பாசுரங்கட்குத் திருமந்திரத்தின் அடிப்படையில் தத்துவம் கூறி விளக்கமும் அளித்துள்ளனர் நம் முன்னோர்கள் - ஆசாரியப் பெருமக்கள். **'ஓம் நமோ நாராயணாய'** என்பது திருமந்திரம். இதிலுள்ள **ஓம்+நமோ+நாராயணாய** என்ற மூன்று பதங்களும் முறையே மூன்று பொருள்களைச் செப்புகின்றன. அவை; **'சேஷத்துவம் பாரதந்திரியம், கைங்கரியம்'** என்பன.[6] மற்றும் 'ஓம்' என்னும் பிரணவம் பிரிந்திருக்கும் நிலையில் அ,உ,ம என்ற மூன்று எழுத்துகளைக் கொண்டது. இந்த மூன்று எழுத்துகளும் மூன்று பதங்களாய் நின்று மூன்று பொருள்களைத்தெரிவிக்கும். அதாவது **அகாரம்** பகவானையும் அதில் ஏறி மறைந்துள்ள (தொக்கி நிற்கும்) நான்காம் வேற்றுமை (லுப்த சதுர்த்தி) அடிமைத் தன்மையையும், **உகாரம்** அந்த அடிமைத் தன்மையின் அநந்யார் ஹத்துவத்தையும் (மற்றவருக்கில்லாமல் ஈசுவரனுக்கே உரித்தா யிருத்தலையும்) **மகாரம்** ஞானவானாகிய சீவான்மாவையும் தெரிவிக்கின்றன. திருவெட்டெழுத்து மந்திரத்தின் மூன்று சொற்களாலும் குறிப்பிடப்பெறும் ஞானம் ஆழ்வாருடைய திருவுள்ளத்தில் எப்பொழுதும் நிலைத்தே இருக்கும் என்பதை

6. ஆசா– ஹிரு 118 (புருடோத்தம நாயுடு பதிப்பு) சேஷத்துவம் பிறருக்கு அடிமையாயிருத்தல்; பாரதந்திரியம்–பரன் அல்லது பகவானுக்கு அடிமைப்பட்டிருத்தல் கைங்கரியம்–அடிமைத் தொழில்.

உணர்த்தவே தோழி, தாய், மகள் என்ற மூன்று நிலைகளும் எல்லாக் காலங்களிலும் இருந்தன என்று இவற்றை **'அவஸ்தா திரய விருத்தி'** (திரயம்-மூன்று; அவஸ்தை - நிலை) என்று பேசும் ஆசாரிய ஹிருதயம் (சூத்138)

**(1) தோழிப் பாசுரங்கள் :** மேற்கூறப்பெற்ற விளக்கத்தி லிருந்து தோழியின் பாசுரங்களினால் ஆன்மாக்கள் யாவும் திருமாலைத் தவிர பிற தெய்வங்கட்கு அடிமைப்பட்டவை (அநந்யார்ஹசேஷத்துவம்) அல்ல எனவும் அவை தமக்குத் தாமே அடிமை அல்ல எனவும் தெளிவாக அறிய முடிகின்றது. திருவாய்மொழியில் தோழியின் கூற்றாக வரும். 'தீர்ப்பாரையாம் இனி' (4,6) 'துவளில் மாமணிமாடம்' (6.5) 'கருமாணிக்கமலை' (8,9) என்ற மூன்று திருவாய் மொழிகளையும் ஊன்றிப் படித்தால் அநந்யார்ஹசேஷத்துவம் தெரியும். எடுத்துக்காட்டாக 'துவளில் மணி மாடத்' திருவாய் மொழியில் பத்தாம் பாசுரம்:

**பின்னைகொல்? நிலமா மகள்கொல்?**
**திருமகள் கொல்?பிறந் திட்டாள்**
**என்னமா யங்கொலோ? இவள்நெடு**
**மால்என்றே நின்று கூவுமால்;**
**முன்னிவந்து, அவன்நின்று, இருந்து**
**உறையும் தொலைவில்லி மங்கலம்**
**சென்னியால் வணங்கும்; அவ்வூர்த்**
**திருநாமம் கேட்பது சிந்தையே (6.5;10)**

[பின்னை-நப்பின்னை; நிலமா மகள் -பூமிப்பிராட்டியார்; திருமகள்-பெரியப் பிராட்டியார்; மாயம்-அதிசயம்; கூவுதல் - அழைத்தல்; சென்னி -தலை; சிந்தை- எண்ணம்]

இவளது ஈடுபாட்டின் மேன்மையைக் கண்டு "இவள் நப்பின்னைப் பிராட்டியோ? பூமிப் பிராட்டிதானோ? பெரிய பிராட்டிதானோ? என்ன ஆச்சரியமோ? இவள் நெடுமால் என்றே கூவா நிற்பாள்; முன்னதாகவே அவன் நின்று இருந்து உறையும் தொலைவில்லி மங்கலம் என்னும் திவ்விய தேசத்தைத் தலையால் வணங்குவாள். அந்தத் திருத்தலத்தின் திருநாமத்தைக் கேட்பதுவே சிந்தையாக இரா நிற்பாள்" என்கின்றாள் தோழி.

ஆழ்வார் கிருட்டிணாவதாரத்தில் ஈடுபட்டிருக்கும் தன்மையை நோக்குங்கால் "நப்பின்னைபிராட்டிதானோ?" என்று நினைக்கத் தோன்றும்; வராகப் பெருமான் திறத்தில் ஈடுபட்டிருக்கும் தன்மையைநோக்குங்கால் "பூமிப் பிராட்டி தானோ?" என்று நினைக்கத் தோன்றும்; இராமாவதாரத்தில் இவள் கொண்டுள்ள ஈடுபாட்டை நோக்கினால் 'சீதாப்பிராட்டிதானோ?' என்று நினைக்கத் தோன்றும்.

**'பிறந்திட்டாள்'** இங்கு ஈடு : "அவர்கட்கு இவள் படி (ஒப்பு) இல்லாமையாலே அவர்கள் ஒப்பு அன்று; போகமெல்லாம் வாழுகைக்கு இவள் ஒருத்தி பிறந்தாளோ? என்னுமாம்".

இப்பதிகம் முழுவதையும் நோக்கினால் தலைவி எம்பெருமான்மீது ஈடுபட்டிருக்கும் (அநந்யார்ஹத்துவம்) திறத்தைக் காணமுடிகின்றது. பிரணவத்தில் உகாரத்தின் பொருள் அநந்யார்ஹத்துவம் என்பது ஈண்டு நினைவு கொள்ளத்தக்கது.

**(2) தாய்ப் பாசுரங்கள் :** தாய்ப் பாசுரங்கள் ஈசுவர பாரதந்திரியத்தையும் அவனே உபாயமாகின்றான் என்பதையும் தெரிவிக்கின்றன. பெண்பிள்ளையைப் பெற்று வளர்ப்பவள் தாய். அப் பெண் தக்க வயதையடைந்ததும் பேராண்மைக்கு இருப்பிடமாகவுள்ள எம்பெருமானிடம் கழிபெருங் காதலையுடையவளாகின்றாள். அவன் இருக்குமிடத்தைப் போய்ச் சேரவேண்டும் என்று பதறுகின்றாள். இங்ஙனம் பதறும் தன்மகளைத் தடுத்து நிறுத்துகின்றாள் திருத்தாயார். தலைவனே தலைவி இருக்கும் இடத்திற்கு வரவேண்டும் என்பது நடைபெற வேண்டிய ஒழுங்குமுறை என்றும், அங்ஙனமின்றி தலைவியே தலைவன் இருக்கும் இடத்திற்குப் புறப்படுவது குலமரியாதைக்குச் சிறிதும் பொருந்துவதன்று என்றும் நினைக்கின்றாள் தாய்.

திருமந்திரத்தின் இரண்டாவது சொல்லாகிய 'நம' என்பது இந்நிலையைக் குறிக்கின்றது. இச்சொல்லை ந+ம என்று இரண்டாகப் பிரிக்கலாம். இவ்விரண்டு எழுத்துகளும் தனித்தனிப் பொருளைத் தருதலின் பதங்களாயின.[7] இவற்றுள் ஆறாம் வேற்றுமையுடன் கூடிய 'ம' என்னும் பதம் சேதநன் ஈசுவரனுக்கு உரியவன் என இயம்பும் நான்காம் வேற்றுமையின் பொருளுக்கு மாறாய்த் 'தனக்குத்தான் உரியன்' என்னும் பொருளைத் தருகின்றது. ஆனால் 'ந' என்னும் பதமோ அதற்கு எதிர்மறைப் பொருளால் அதனைத்தடுத்து நிறுத்தித் 'தனக்குத் தான் உரியனல்லன்' என்பதை அறிவிக்கின்றது.[8] ஈசுவரனுக்கு உரியவன் என்பது பெறப்படுகின்றது. இம்முறையில் இச்சொல் ஈசுவர பாரதந்திரியத்தைத் தெரிவிக்கின்றது. அஃதாவது இச்

7. முமுட்சு–78    8. முமுட்சு–79,80

சொல் ஞானத்தினால் ஏற்படும் சுதந்திரத் தன்மையை ஒழிக்கின்றது. இதன் காரணமாக ஏற்படும் "தன்னைத் தானே காத்துக் கொள்ள முடியும்" என்ற எண்ணத்தையும் நீங்குகின்றது. இனி இவளைக் காத்து இரட்சிப்பவன் ஈசுவரனே ஆகின்றான் என்ற துணிவு பிறக்கின்றது. அஃதாவது ஈசுவரனே உபாயம் என்ற பொருள் கிடைக்கின்றது. இந்த மனநிலையைத் தான் 'தாய்' என்று குறிக்கப் பெறுகின்றது. திருவாய்மொழியில் தாய் பாவனையில் பேசும் ஏழு பதிகங்களும்[9] ஈசுவரபாரதந் தரியத்தையும், அவனே உபாயமாகின்றான் என்ற கருத்தையும் தெரிவிக்கின்றன. ஆகவே இவை உபாயத்தில் உறுதி பூண்டிருக்கும் நிலையிலே எழுந்த பேச்சுகள் என்பது தெளிவாகின்றது.

தாய்ப்பாசுரமாக நடைபெறுவதில் ஒன்றைக் காட்டுவேன் 'மண்ணை இருந்து துழாவி' (4.4) என்னும் திருவாய்மொழியில் ஐந்தாம் பாசுரம் :

கோமள ஆன்கன்றைப் புல்கி,
'கோவிந்தன் மேய்த்தன' என்னும்;
போம்இள நாகத்தின் பின்போய்
'அவன்கிடக் கையீ' தென்னும்;
ஆமளவு ஒன்றும் அறியேன்
அருவினை யாட்டியேன் பெற்ற
கோமள வல்லியை மாயோன்
மால்செய்து செய்கின்ற கூத்தே (5)

[கோமளம் - இளமை அழகு; கிடக்கை - படுக்கை; ஆம் அளவு - ஆகும் அளவு; மால்-மயக்கம்]

9. திருவாய் 2.4;4.2;4.4;5.6;6.6;6.7;7;2

இதில் 'இவளுக்கு இத்துன்பம் எவ்வளவாய் முடியக் கூடியது என்று அறிகிலேன்' என்கின்றாள். இப்பாசுரத்தை ஊன்றித் திரும்பத் திரும்பப் படித்தால் தாய்ப்பாசுரத்தின் தத்துவம் தட்டுப்படும்.

**(3) மகள் பாசுரங்கள் :** பெற்றோர் அல்லது உறவினர் கூட்டாமலேயேதலைவனுடன் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து தலைவனுடைய ஒப்பற்ற வனப்பு முதலியவற்றில் ஈடுபட்டு இருப்பவள் மகள்; குடியின் கட்டுப்பாட்டையும் பாராமல் அவனைக் கிட்டியல்லது உயிர் வாழ்ந்திருக்க மாட்டேன் என்னும் பதற்றத்தை உடையவள் இவள். காலக் கழிவையும் இவளால் சிறிதேனும் பொறுக்க முடியவில்லை. பிரணவத்தி னாலும், நமஸ்ஸாலும் எல்லோருக்கும் சேஷியாய் (தலைவனாய்), சரண்யனாய் அறுதியிடப் பெற்றவன் எம்பெருமான். எல்லோருக்கும் புகலிடமாக இருப்பவனும் இவனே. பிரணவத்தாலும், நமஸ்ஸாலும் இவை உணரப்பெற்ற பின்பு 'நாராயணாய' என்ற சொல்லால் கூறப் பெற்றுள்ள சொரூபம் ரூபம் குணம் விபூதி முதலியவற்றின்[10] சேர்க்கையா லுள்ள பெருமையை நினைந்து மகிழ்பவள் இவள். எம் பெருமான் சாத்தியோபாயமாக[11] இருந்தால் தான்செய்யும் சாதனங்கள் முடிவுற்றபிறகே சாத்தியமாகின்ற பேறு கிடைக்கக் கூடுமென்று பொறுத்திருக்கலாம். ஆனால்

10. சொரூபம்– தியானத்திற்குரிய ஈசுவரனின் சொரூபம்; ரூபம்– பகவானுடைய திருமேனி; குணம்–ஆன்ம குணம். திருமேனியின் குணம். ஆன்ம குணம்–ஞானம் சக்தி முதலியன; திருமேனி குணம் – அழகு மென்மை முதலியன. விபூதி– நியமிக்கப்பெறும் பொருள் (ஐசுவரியம்)

11. சாத்தியோபாயம்– மக்களால் சாதித்துக் கொள்ளுகின்ற உபாயம். எ.டு பக்தி, பிரபத்தி

அவன் சித்தோபாயமாக[12] இருப்பவன். அதனால் அவனைத் தாமதித்து அநுபவிக்கக் காரணம் இல்லை. 'அவனே உபாயம்' என்ற கோட்பாட்டையும் மீறித் தான் நினைத்த பேற்றினை உடனே பெறவேண்டும் என்ற பதற்றத்தை உடையவளாக இருப்பவள் இவள். இந்த மனநிலை தான் 'மகள்' (தலைவி) என்று குறிப்பிடப் பெறுகின்றது. ஆழ்வாரின் மகள் பாசுரங்களாக உள்ள பதிகங்கள் யாவும் இந்த நிலையையே குறிக்கின்றன. இந்த மூன்று நிலைகளும் தோன்றுவதை ஆசாரியஹ்றிருதம் விளக்குகின்றது.

திருவாய்மொழியில் மகள் பாவனையில் நடைபெறும் பதிகங்கள் பதினேழு.[13] இவற்றுள் தூதுப் பதிகங்களாக நடைபெறுபவை நான்கு.[14] எடுத்துக்காட்டாக "ஊரெல்லாம் துஞ்சி" (5,4) என்ற திருவாய் மொழியில் முதல் பாசுரம் :

**ஊரெல்லாம் துஞ்சி**
**உலகெல்லாம் நள்ளிருளாய்**
**நீரெல்லாம் தேறிஓர்**
**நீளிரவாய் நீண்டதால்**
**பாரெல்லாம் உண்டநம்**
**பாம்பணையான் வாரானால்**
**ஆர்எல்லே வல்வினையேன்**
**ஆவிகாப் பார்இனியே (1)**

[துஞ்சி-உறங்கி; நீண்டது-நெடுகிச் சென்றது; ஆல்-அந்தோ; பார்-பூமி; பாம்பணையான் - சேஷசாயி; ஆவி-உயிர்]

12. சித்தோபாயம்–முன்னமே இருக்கும் உபாயம்; அஃதாவது இறைவனாகிய உபாயம்.
13. திருவாய்: 1,4;2.4;4.8;5.3;5.4;5.5;5.9;6.1;6.2;6.8;7.3;8,2; 9,5;9.7;9.8;9.9;10.3 என்பவை.
14. திருவாய் 1.4;6.1;6.3;9.7என்பவை

"பிரளய ஆபத்தில் வந்து உதவினவன் 'என்னைக் காதல் நோயாகிய பிரளயம் நோக்க' வந்து உதவாத பின்னர், இனி நான் பிழைத்திருத்தல் என்பது ஒருபொருள் உண்டோ?" (ஈடு) என்று தான் வாழ்வதில் நசை அறுக்கின்றாள் பாரங்குச நாயகி.

"ஊராருடைய பழிமொழியே எருவாகத் தன்னுடைய காதல் வளருவதாகையாலே அந்த எருவுக்கு அவகாசம் இல்லாத படி ஊரெல்லாம் துஞ்சிற்றே!" என்று வருந்துகின்றாள். "பண்டு இராமாயணப் பெரும்போரில் நாகபாசத்தால் கட்டுண்ட அன்று ஒரு சாம்பாவன், மகராசர் (சுக்கிரீவன்), திருவடி தொடக்கமானார் உணர்ந்திருந்தார்கள் அன்றோ? இங்கு அங்ஙனம் ஒருவர்கூட இலராயினரோ. பழிசொல்லுவார், இதம் சொல்லுவார், சாத்துணையாவார் இவர்கள் எல்லோரும் ஒரு சேர உறங்கினார்கள்" என்கின்றாள்.

"ஊரை விட்டு வெளியே சென்று தரிக்கைக்கும் அவகாசம் இல்லாமல் உலகெல்லாம் நள்ளிருளாயிற்று. கண்ணாலே ஒரு பொருளைக் காணமுடியா நிலையாயிற்று. நீரில் வாழும் பிராணிகள் அனைத்தும் ஆழ இழிந்து அங்குள்ள ஒலியும் அடங்கிற்று. இரவு-பகல் என்ற வேற்றுமையின்றி ஒரே காளராத்திரியாயிற்று. மானிடர்களுடைய இரவைக் காட்டிலும் தேவர்களுடைய இரவுக்கு அதிக நீட்சியுண்டு, அதனினும் விஞ்சிய நீட்சியாயிற்று" என்கின்றாள்.

"இந்த நிலையில் பரம காருண்யரான அந்தப் பாம்பணை யானும் வாரா தொழிந்தான். பிரளயாபத்து வந்தவாறே உலகங்களையெல்லாம் திருவயிற்றில் வைத்துப் புரக்கும் பெருமான் இப்பேராபத்தில் வந்து முகங்காட்டி உதவுகின்

றிலன். இப்படியான பின்பு தரிக்கும் வகை என்னோ?!" என்கின்றாள். இந்தப் பாசுரத்தில் தலைவியின் துடிப்பையும், பதற்றத்தையும் காணமுடிகின்றதல்லவா?

**(4) பகவத்விஷயகாமம் :** வேதாந்தகளில் குறிப்பிடப் பெறும் பக்தி இங்ஙனம் ஆழ்வார்களிடம் காதல் முறையில் பரிணமித்து நிற்றலை அறிய முடிகின்றது. இவர்கள் எம்பெருமான்மீது கொள்ளும். காமம் பகவத்விஷயகாமம் என்று வழங்கப்பெறும். இவர்கள் மாதவன் மீது கொள்ளும் காமம் மற்றவர்கள் மங்கையர்மீது கொள்ளும் காமத்தினின்றும் வேறுபட்டது. ஆயினும் சிற்றின்ப அநுபவமாகிய காதலுக்குக் கூறப்பெறும் அகப்பொருள் துறைகள் யாவும் பேரின்ப அநுபவமாகிய இந்த பகவத் விஷயகாமத்திற்கும் கூறப்பெறும். சிற்றின்ப அநுபவத்திற்குக் கொங்கை முதலியன சாதனமாக இருப்பவை போல் பகவத் விஷயாநுபவத்திற்கும் பரபக்தி[15], பரஞானம்[16], பரமபக்தி[17], என்பவை இன்றியமையாதனவாக இருப்பதால் அவையே கொங்கை முதலான சொற்களின் வாயிலாகஅருளிச் செயல்களில் கூறப்பெறுகின்றன என்று சமயச் சான்றோர்கள் கொள்வர்.

காதல் சுவையின் தொடர்பு சிறிதுமின்றியே பக்திச் சுவையின் அடிப்படையாகவே பாசுரங்கள் அருளிச் செய்தல் கூடும். அங்ஙனமிருக்க காதல் சுவையையும் கலந்து பாசுரங்கள். அருளிச் செய்யப் பெற்றிருப்பதற்குக் காரணம் என்ன ? உடல்

15. பரபக்தி—எம்பெருமானை நேரில் காண வேண்டும் என்ற ஆவல்.
16. பரஞானம்— எம்பெருமானை நேரில் காணல்.
17. பரமபக்தி—எம்பெருமானை மேன்மேலும் இடையறாது அநுபவிக்க வேண்டும் என்னும் ஆவல்.

நலத்திற்குக் காரணமான வேப்பிலை உருண்டையை உட்கொள்ள வேண்டியவர்கட்கு வெல்லத்தை வெளியில் பூசி உண்பிப்பது போலவும், கொயினா மாத்திரைகட்குச் சருக்கரை பாகு பூசி இனிப்புச் சுவையை உண்டாக்கித் தின்பிப்பது போலவும் சிற்றின்பம் கூறும் வகையால் பேரின்பத்தை நிலை நாட்டுகின்றனர் என்று பெரியோர்கள் பணிப்பர். இது கடையாய காமத்தினை உடையவர்கட்குக் காட்டப்பெறும் உக்தி முறையாக இறையனார் களவியலிலும்[18] கூறப்பெற்றுள்ளமையை ஈண்டு ஒப்பு நோக்கி உணர்தல் தகும். ஆழ்வார்களின் முறுகிய பக்தி நிலையை உணர்த்துவதற்கேற்ற ஓர் இலக்கிய மரபே இஃது என்று கொள்ளினும் இழுக்கில்லை.

**(5)மகள் பாசுரங்கள்–தூது பற்றியவை :** தூது என்பது ஒருவர் தம்முடைய கருத்தை வேறொருவருக்கு இடை நின்ற ஒருவர் வாயிலாகக் கூறி விடுப்பது. சங்க இலக்கியங்களில் 'காமம் மிக்க கழிபடர்கிழவிகளாக' இருந்த துறையே பிற்காலத்தில் தூது இலக்கியங்களாக வடிவு கொண்டன என்பது ஆய்வாளர்களின் கருத்து . பக்தி இலக்கியங்கள் வளர்ந்த காலத்தில் ஆழ்வார் பெருமக்கள் இந்த அகத்துறைகளை மிக அருமையாகப் பயன்படுத்தியுள்ளனர். பெரும்பாலும் ஆழ்வார்கள் புள்ளினங்களையே தூது போகும்படியாகப் பாசுரங்களை அமைப்பர்; குருகினங்கள், நாரைகள், அன்னங்கள், பூங்குயில்கள், கிளி, மயில், பூவை, அன்றில்கள், வண்டினங்கள் முதலியன தூதுவிடும் பொருள்களாக அமைந்திருப்பதைக் காணலாம். இவற்றைத் தவிர, வாடை, மேகம், நெஞ்சு போன்றவற்றையும் இவர்தம் பாசுரங்களில் தூதுப்பொருள்களாக அமைந்திருப்பதைக் கண்டு மகிழலாம்.

18. இறை–கள நூற் 2. இன் உரை

இங்ஙனம் பறவைகளைத் தூது விடுத்தற்கு உட்பொருள் உண்டு. ஆசாரிய ஹிருதயம்,

> 'சேர்ப்பாரைப் பட்சிகளாக்கிப் ஜ்ஞான கர்மங்களைச் சிறகு என்று, குரு ஸப்ரஹ்மசாரி புத்ரசிஷ்ய ஸ்தாநே பேசும் சூத்திரம் (150)
>
> [ஸ்ப்ரமசாரி-ஒரு சாலை மாணாக்கர்; ஸ்தானே-இடத்தில்]

என்று குறிப்பிடுகின்றது. "விண்ணோர்பிரானார் மாசு இல் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே "(திரு.விரு. 55) என்று ஆழ்வாரே அருளிச் செய்துள்ளமையால் பகவத் விஷயத்தில் கொண்டு சேர்க்குமவர்கள் பறவைகளாகக் கொள்ளப்பெறுவர். இரண்டு சிறகுகளைக் கொண்டு பறவை கட்கு எங்ஙனம் விசும்பில் பறந்துசெல்லுதல் இயலுகின்றதோ அங்ஙனமே ஞானம் ஒழுக்கம்(அநுட்டானம்) என்னும் இரண்டாலும் இறைவன் அடையப் பெறுகின்றான் என்பது ஆன்றோர் கொள்கை. எனவே, ஞானத்தையும், அநுட்டானத் தையும் சிறகுகளாகக் கொள்ள வேண்டும். ஆசாரியர்களும் ஒரு சாலை மாணாக்கர்களும், புத்திரர்களும் இறைவனை அடையும் பேற்றுக்குத் துணையாக இருப்பார்கள் என்பது அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் கருத்தாகும்.

மேற்குறிப்பிட்ட பறவைகளிலும், அன்னம், வண்டு முதலியவையாகச் சொல்லப்பெறுபவர்கள் இன்னார் இன்னார் போன்றவர்கள் என்னும் உள்ளுறைப் பொருளும் அருளிச் செய்யப் பெற்றுள்ளது. அன்னமாகப் பேசப்பெறுபவர்கள் "செல்வநம்பி, பெரியாழ்வார், நாதமுனிகள், ஆளவந்தார்"

ஆகியோர்.[19] "நாதமுனிவர், லோக சாரங்க முனிவரால் தாங்கப் பெற்ற திருப்பாணாழ்வார், தம்பிரான்மார்(அரையர்)" போன்றவர்கள் தும்பி என்றும், வண்டு என்றும் பேசப் பெறுவர்.[20] அதே நூல் கிளி, பூவை, குயில், மயில் என்பவற்றிற்கு உள்ளுறைப் பொருளாக அமைபவர்கள் மதுரகவிகள், தொண்டரடிப் பொடியாழ்வார், கூரத்தாழ்வான், திருமாலை யாண்டான், எம்பார், அருளாளப் பெருமாள் எம்பெருமானார் முதலியோர்களைக் கூறும்[21] நாரை, கொக்கு, குருகு என்னும் பறவைகட்குக் "குலசேகரப் பெருமாள் ஆசாரியபதத்தில் நின்றவர்களான முதலிகள் போல்வார்" உள்ளுறைப் பொருள் களாக அமைவர்.[22] மேகத்திற்கு உள்ளுறையாக "திருமழிசைப் பிரான், திருமங்கையாழ்வார், இராமாநுசர்" முதலியோர் பேசப் பெறுவர்.[23]

**(6) தூதுப் பதிகங்கள் :** மயர்வறமதிநலம் அருளப்பெற்ற நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியில் தூது விடும் பதிகங்கள் 'அஞ்சிறையமடநாராய்' (1.4), 'வைகல் பூங்கழிவாய்' (6.1), 'பொன்னுலகாளீரோ?' (6.8), 'எம்கானல் அங் கழிவாய்' (9.7) என்ற நான்காகும். இவை முறையே வியூகத்திலும், விபவத்திலும், பரத்துவ, அந்தர்யாமித்துவத்திலும், அர்ச்சை யிலும் தூதுவிடும் பதிகங்களாக அமைகின்றன என்று ஆசாரியர்கள் அறுதியிட்டுள்ளனர்.

19. ஆசா–ஹிரு சூத் 151 உரையில் விளக்கம் தரப்பெற்றுள்ளது.
20. மேலது 152 (விளக்கம்) உரையில் காண்க.
21. மேலது 153 (விளக்கம்) உரையில் காண்க.
22. மேலது 154 (விளக்கம்) உரையில் காண்க.
23. மேலது 155 (விளக்கம்) உரையில் காண்க.

*எடுத்துக்காட்டாக 'அஞ்சிறைய மடநாராய்' (1.4) என்றதில்*[24] *தூது அமைந்திருக்கும் முறையை ஈண்டு விளக்குவேன். இத் திருவாய் மொழியில் பத்தாம் பாசுரத்தில் :*

**கடல்ஆழி நீர் தோற்றி**
**அதனுள்ளே கண்வளரும்**
**அடல் ஆழி அம்மானைக்**
**கண்டக்கால்..... (10)**

*என்பதால் வியூகத்தில் தூது என்பது தெளிவாகின்றது. இதில் நான்காம் அடியில் 'மட நெஞ்சே!' என்று வருவதால் இப்பாசுரம் நெஞ்சைத் தூது விடுவதாக அமைகின்றது.*

என்பிழையே நினைந்தருளி
அருளாத திருமாலார்க்கு
என்பிழைத்தாள் திருவடியின்
தகவினுக்குஎன்று ஒருவாய்ச் சொல்
என்பிழைக்கும் இளங்கிளியே!
யான்வளர்த்த நீ அலையோ? (7)

*இந்தப் பாசுரத்தில் கிளி தூதாக அமைகின்றது. 'என் பிழையே நினைந்தருளி' என்ற தொடரால் அறியப்படுவது; "எம் பெருமான் தனது சில குணத்தால் முதலில் ஆழ்வாருடன் கலந்து விட்டான்; கலந்த பிறகு அவரிடத்திலிருக்கும் குற்றங் களைக் கண்டான்; அதனால் அவரை வெறுத்துப் பிரிய*

24. இந்தப் பதிகத்தில் நாரை (1),குயில்கள் (2), அன்னங்கள்(3), அன்றில்கள் (4), சிறு குறுகு (5), வண்டு (6), இளங்கிளி (7), சிறு பூவை (8), வாடை (9), நெஞ்சு (10) என்பவற்றைத் தூது விடுகின்றாள் ஆழ்வார் நாயகி.

லுற்றான்; அவனிடம் பொறுக்கும் குணம் (க்ஷமை குணம்) நிரம்பயிருக்கும்போது ஆழ்வாரின் பிழைகளைப் பொருட் படுத்தக் காரணம் இல்லை. தன்னுடைய பிழைகள் அவனுடைய பொறுக்கும் பண்பையும் மறைபித்தன போலும் என்று கருதிய ஆழ்வார்நாயகி அப் பெருங்குணத்தைச் சிறிது நினைப்பூட்டி விட்டால் போதும் என்று கருதி பறவைகளைத் தூது விடு கின்றாள். சீதாப் பிராட்டியை ஆயிரக்கணக்கான வானரங்கள் தேடுவதைப்போலவே தன் கண்களில் கண்டவற்றையெல்லாம் தூது போகுமாறு ஏவுகின்றாள் ஆழ்வார் நாயகி. பறவைகளைத் தூது விடும் ஐதிகத்தைக் குறிப்பிடும் பராசரபட்டர்! "சக்கர வர்த்தித் திருமகனார் திருவவதரித்த பின்பு வானரஜாதி வீறு பெற்றது போல, ஆழ்வார்கள் திருவவதரித்த பின்பு பட்சி ஜாதி வீறு பெற்றது" என்று சுவையுடன் அருளிச் செய்வர்.

இவ்விடத்தில் ஓர் இதிகாசம்.[25] நஞ்சீயர் காலத்தில் சாமானியமாயிருப்பான் ஒருவன், விரக்தர்களும் வைதிகர் களுமான மகான்கள் பலரும் திருவாய் மொழிக் காலட்சேபத்தில் இது தத்துவ பரமாயிருக்குமென்று கருதி இத்திவ்வியப் பிரபந்தத்தைச் சேவித்து வந்து இத்திருவாய் மொழியில் வந்தவாறே இது காமுக வாக்கியமாயிருக்கிறது' என்று வெறுப்புக்காட்டிச் சென்றானாம். வேதாந்தங்களில் விதிக்கப் படுகின்ற பகவத் காமமே இப்படிப்பட்ட பாசுரங்களாகப் பரிணமித்ததென்று அவன் அறிந்திலன் கருவிலே திருவில் லாமையாலே - என்று நம்பிள்ளை வருந்திப் பேசுவர்.

பிரிவாற்றாமையுடன் இருக்கும் பராங்குச நாயகி நெய்தல் நிலத்தில் இருக்கின்றாள். பிரிந்தார் இரங்குவது நெய்தல்

25. இதிகாசம்—என்பது ஒரு வரலாறு அல்லது ஒரு கதை போல் வருவது.

*நிலமன்றோ? நீர் நிலத்தருகே இராநின்ற ஆழ்வார் நாயகி அண்மையிலிருக்கும் நாரையைப் பார்த்து "நாராய் நீ என் நிலைமையைக் கருடக் கொடியானுக்கு அறிவித்து என்னையும் அவனையும் சேர்க்க வேண்டும்" என்று இரக்கின்றாள்.*

**அஞ்சிறைய மட நாராய்!**
**அளியத்தாய்! நீயும்நின்**
**அஞ்சிறைய சேவலுமாய்**
**ஆ வா! என்று எனக்கருளி**
**வெஞ்சிறைப்புள் உயர்த்தார்க்கு**
**என்விடு தூதாய்ச் சென்றக்கால்**
**வன்சிறையில் அவன்வைக்கில்**
**வைப்புண்டால் என்செய்யுமே? (1.4:1)**

*[மடம் - இளமை; புள்- கருடன்; (1.4:1)வைப்புண்டால்- அநுபவித்திருப்பாயானால்]*

*என்பது பாசுரம். குழந்தை தாயினுடைய எல்லா உறுப்பு களையும்விட்டு முலையிலே வாய் வைப்பதுபோல், இங்கு நாரையின் மற்றைய உறுப்புகளை விட்டு அதன் சிறகிலே கண்வைப்பது விரைந்து செல்வதற்கு அதுவே சாதனம் என்பது பற்றி. சொன்ன சொல்மறுக்காமல் உடனே தயாராக இருப்பது போல ஆழ்வார் கண்ணுக்குத் தோற்றியதால் 'மட' என்ற அடை மொழியால் சிறப்பித்தார். நாயகன் விடுகின்ற தூதைக் காட்டிலும் நாயகி விடுகின்ற தூதுக்கு ஏற்றமுண்டு. இராமனால் தூது விடப்பெற்ற சிறிய திருவடிக்குப் பல இன்னல்கள் ஏற்பட்டன. பிராட்டியின் தூதனாக அவன் இராமனிடம் மீண்டுவந்த போது அவனுடைய திருமார்பிலே அணைக்கப் பெற்றான். நாரையின் உள்ளும் புறமும் வெண்மையாக*

இருப்பதுபோல் ஆசாரியர்களும் தூய்மை வாய்ந்த மனம் மெய் களையுடையவர்கள் என்பது நாரையின் உள்ளுறைப் பொருள்.

நாரையைத் தூது போகுமாறு இரந்த தலைவி அங்குச் சென்றால் சொல்ல வேண்டிய செய்திகளைச் சில குயில்கட்குக் கூறுகின்றாள். ஒருவரை அழைத்துவிட்டு மற்றொருவருக்குச் செய்தி சொல்லுகின்ற போக்கிலிருந்து ஆழ்வார் நாயகியின் மிகுதியான கலக்கம் நன்கு புலனாகும். இத்தகைய கலக்கத்தை உண்டு பண்ணியது விஷயாந்தரங்களை விட பகவத் விஷயத்தில் உண்டான ஏற்றம். இனக் குயில்கட்கு ஆழ்வார் நாயகி கூறும் செய்தி;

**முன்செய்த முழுவினையால்**
**திருவடிக்கீழ்க் குற்றேவல்**
**முன்செய்ய முயலாதேன்**
**அகல்வதுவோ? விதியினமே. (2)**

[முன்- எனக்குத் தெரியாதகாலம் முதலாக; வினை- பெரும் பாவம்; குற்றேவல் - அடிமைத் தொழில்]

என்பது. "அநாதி காலமாகத் திரட்டின பாவத்தாலே திருவடி வாரத்திலே அந்தரங்க கைங்கரியம் பண்ணுவதற்கு ஏற்கெனவே முயலப் பெறாத நான் அகன்று போக வேண்டியது தானோ? என்று கேளுங்கள்" என்கின்றாள்.

**முழுவினை :** இதனை விளக்கும் போக்கில் நம்பிள்ளை காட்டும் ஐதிகம்.[26] "பட்டர் திருக்கோட்டியூரில் எழுந்தருளி யிருந்த காலத்து அங்குத் தெற்காழ்வான் என்றும் கோளரி

26. ஐதிகம்–என்பது சம்பிரதாயஅடியாக வந்த ஒரு வார்த்தை, அதாவது முன் நடந்ததைத் தெரிவிப்பது.

யாழ்வான் என்றும் பெயர்களைக் கொண்ட இருவர் வாழ்கின்றனர். கோளரியாழ்வான் நற்குண நல்லொழுக்க முடையவன்; தெற்காழ்வான் சாதாரணமாகக் காணப்பெறும் ஒரு சராசரி மனிதன். இருவரும் சிறப்பான ஒரு திதியன்று ஒரு குளக்கரையில் சந்திக்கின்றனர். கோளரியாழ்வான் தெற்காழ்வானை நோக்கி "அப்பா, இது புண்ணியதினமாயிற்றே. இன்றாகிலும் ஒரு முழுக்கிடமாட்டாயா?" என்கின்றான். அது கேட்ட தெற்காழ்வான் "முழுக்கிடவேணுமென விதிக்கின்ற உன் அபிப்ராயம் என்னுடைய பாவங்கள் இந்த முழுக்கினால் தொலையக்கூடும் என்பது தானே; அந்தோ! என்னுடைய பாவம் திருக்கோட்டியூர் சௌமிய நாராயணப் பெருமாளுடைய திருக்கையிலுள்ள திருவாழியால் போக்கினால் போகுமேயல்லது ஒன்றிரண்டு முழுக்கால் போகக் கூடியதன்று காண்!" என்கின்றான். இச்சொற்கள் பட்டருடைய திருச்செவியில் விழுந்த அளவில் "ஆ! ஆ! எவ்வளவு ஆத்திகனாயிருந்தால் இந்த வார்த்தை சொல்ல முடியும்? இவனை மேலெழுந்தவாரியாகப் பார்த்து நாத்திகன் என்று நினைத்திருந்தோமே. இவ்வளவு பேசும் பரிபாக முடையவனா இவன்?" என்று மிகவும் ஈடுபட்டதாக வரலாறு.

நாயகி நிலையிலிருக்கும் ஆழ்வார் "கொம்மை முலைகள் இடர் தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல்" (நாச். திரு 13:9) என்ற ஆண்டாளைப் போல் "முலையால் அணைக்க" என்று சொல்ல வேண்டியிருந்தும், "திருவடிக்கீழ்க் குற்றேவல்" என்று சொல்லுகின்ற அழகு அற்புதம். இங்கே நம்பிள்ளை ஈடு: "பிராமணர் பிச்சேறினாலும் ஓத்துச் சொல்லுமாப் போலே, இவர் பிராட்டியானாலும் முலையால் அணைக்க நினையார்;

திருவடிகளில் அணையத் தேடும் அத்தனை" என்பதாக, வேதமோதிய அந்தணனுக்குப் பைத்தியம் பிடித்தாலும் வேதாத்யயனமே சொல்லித் திரிதல்போல, ஆழ்வாருக்கு நிலைமை மாறினாலும் பாசுரம் பேசும் முறைமை மாத்திரம் மாறவில்லை என்பது ஈண்டுக் கருதத் தக்கது.

பராங்குச நாயகியின் கண்வட்டத்தில் பேடையோடு களித்திருக்கும் அன்னங்கள் தென்படுகின்றன. அவற்றை நோக்கித் தூது செல்ல வேண்டிய இடத்தையும், தூதுச் செய்தியையும் குறிப்பிடுகின்றாள்.

**விதியினால் பெடைமணக்கும்**
**மென்னடைய அன்னங்காள்!**
**மதியினால் குறள்மாணாய்**
**உலகிரந்த கள்வர்க்கு**
**மதியிலேன் வல்வினையே**
**மாளாதோ என்றொருத்தி**
**மதியெல்லாம் உள்கலங்கி**
**மயங்குமால் என்னீரே (3)**

['விதி-பாக்கியம்'; குறள் மாணாய் - வாமன பிரம்மச்சாரி யாய்; கள்வர்- வஞ்சகர்; மயங்கும் - அறிவிழந்து கிடக்கும்]

என்ற பாசுரத்தில் **'விதி'** என்பதற்குச் **'சாத்திரவிதி'** என்றும் **'பாக்கியம்—பேறு'** என்று இரண்டு விதமாகப் பொருளுரைப்பர். பின்னதே சிறந்தது. இதனையொட்டி நம்பிள்ளை ஈடு: "பெருமாள் பிராட்டியாரைப் பிரிந்து கடலும் மலையும் அரித்துக் கொண்டு வாரா நிற்கச் செய்தே இராஜ்யதாரங்களை

இழந்து கிடந்த மகாராஜரைக்[27] கண்டு அவர் குறையைத் தீர்த்த பின்னரே தம் இழவில் நெஞ்சு சென்றது. அங்ஙனமின்றிக்கே, இப்போது இவை குறைவற்றிருக்கின்ற இதுதான் இவள் பாக்கியமாயிருக்குமிறே" என்பது

மேல் வருவனவற்றைத் தெரிந்து கொண்டு அதற்கிணங்கக் காரியம் செய்யவல்ல சாதுர்யமே 'மதி' எனப்படும்.[28] அப்படிப் பட்ட சாதுர்யத்தினால் மாண்குறள் கோலவடிவு காட்டிய யாசகனா யினான்.[29] 'அந்தக் குணத்தினால் என்னை ஈடுபடுத்தி என்னை இப்பாடுபடுத்துவதற்காகவே' என்ற ஆழ்வார் நாயகியின் கருத்து 'மதியினால்' 'கள்வர்க்கு' என்ற சொற்களில் கண்டு மகிழலாம். 'கள்வம்' என்பது முதலில் சிறிய வடிவினைக் காட்டிய பிறகு பெரிய வடிவான வஞ்சகம் என்று கூறுவர் திருமாலை ஆண்டான். ஒன்றை நினைத்து ஒன்றைச் செய்த மாயமே கள்வம் என்பதாக எம்பெருமானார் நிர்வகிப்பர்.

'ஒருத்தி மதியெல்லாம் உள்கலங்கி மயங்குமால்' என்ற செய்தியைக் கூறி வருமாறு பணிக்கின்றாள் ஆழ்வார் நாயகி.

27. மகாராஜர்–சுக்கிரீவன். இப்படி குறிப்பிடுவது வைணவ மரபு.

28. கீழே கழிந்து போன விஷயத்தைப்பற்றின உணர்வு 'ஸ்மிருதி" எனப்படும். மேலே வரப் போகின்ற விஷயத்தைப் பற்றின உணர்வு 'மதி' ஆகும். அப்போதைக்கப்போது நடக்க வேண்டிய உணர்வு 'புத்தி' எனப்படும்; முக்காலங்களையும் பற்றின உணர்வு 'பிரஜ்ஞை' (பிரக்ஞாவஸ்தை) என்று வழங்கப் பெறும்.

29. மறைந்த மாண்புமிகு தொழிலதிபர் ஜி.டி. நாயுடு ஒரு சமயம் என்னிடம் 'ரசசோக்தி' யாகச் சொன்னது; திருமால் சுய வடிவினனாகத்தான் மாவலியிடம் வந்தான். தான் இரக்கப் போகிறோமே என்ற எண்ணம் மனத்தைக் குறுகச் செய்தது; மனம் குறுகவே உடலும் குறுகி விட்டது– வாமனனாகிவிட்டான் என்பதாக (திருப்பதியில்1975 என்பதாக நினைவு).

'ஒருத்தி' என்றால் தெரியுமோ? இன்னாள் என்று குறிப்பிட வேண்டாவோ? என்னில்: வேண்டா; ஒருத்தி என்றபோதே அவள் பாரங்குச நாயகி என்று அறிந்து கொள்வார். இங்ஙனம் மதியெல்லாம் உள்ளடங்கி மயங்கும்படியாகத் தன்னைச் செய்து வைக்கப் பெற்றவள் இந்நிலத்தில் பராங்குச நாயகியைத் தவிர வேறு யாரும் இல்லையாதலால் சிறப்பித்துச் சொல்ல வேண்டியதில்லை. இங்கே நம்பிள்ளை ஈடு: "ஒருத்தி என்றால் அறியுமோ? என்னில் : எய்தவன் கை உண்ராதோ? இன்ன காட்டிலே மான் பெடை ஏவுடனே கிடந்து உழையா நின்ற தென்று ஊரிலே வார்த்தையாடினால் எய்தவன் கை உணராதோ 'நீயன்றோ எய்தாய்' என்று சொல்ல வேண்டா விறே" என்பது.

பாசுரத்தின் இறுதி அடியின் நயத்தையும் காண்போம். **'ஒருத்தி அறிவு கலங்கினாள்'** என்று கூறுங்கள் அது கேட்ட எம்பெருமான் 'தன்னதான அறிவு கலங்கப் பெற்றாலும் நாம் கொடுத்த அறிவு இருக்குமே அது கொண்டு ஆறியிருப்பள் என்பன்; அப்போது **'மதியெல்லாம் கலங்கிற்று'** என்று கூறுங்கள். அது கேட்ட எம் பெருமான் நாம் கொடுத்த அறிவு அப்படிக் கலங்கி விடாது 'கலங்கினாலும் மேலெழச் சிறிது கலங்குமேயல்லது உள்ளே கம்பீரமாகவே இருக்கும்' என்பன். அப்போது **'மதியெல்லாம் உள் கலங்கிற்று'** என்று எடுத்து இயம்புங்கள். அது கேட்ட எம் பெருமான் எல்லாம் கலங்கிப் போனால் என்ன? நாம் இருக்கிறோம். பின்பு நாம் அணுகும்போது அறிவு கொடுத்துக் கொள்ளுகிறோம்' என்பன். அப்போது 'மயங்குமால்' என்று கூறுங்கள். அதாவது 'முடியும் தருணமாயிற்று' என்று விளக்குங்கள். 'மயங்கினாள்' என்று

முடிந்ததாகவே சொல்லிவிட்டால், 'அப்படியா? முடிந்து போய்விட்டாளா? இனிப் போய் நாம் என்ன செய்வது?' என்று சொல்லி ஒரு முழுக்கு போட்டுவிட்டு நிற்பன். அப்படியின்றி 'அரைகுறையத் தலைகுறைய ஆனைக்கு உதவ ஓடி வந்தாற் போலே கடுக ஓடி வரும்படியாகச் சிறிது பசையிருப்பதாகச் சொல்லுங்கள்' என்கின்றாளாயிற்று.

'பூவை' என்ற பறவையிடம் பேசுகின்றாள் பராங்குச நாயகி. "ஏற்கெனவே உன்னை வேண்டிக் கொண்டிருந்தும், எனக்காக நீ தூது செல்லாது அசட்டையாய் இருந்து விட்டாய்-" நோயானது நுவலென்ன நுவலாதே இருந்தொழிந்தாய்" என்கின்றாள்.

**சாயலொடு மணிமாமை**
**தளர்ந்தேன்நான் இனியுனது**
**வாயலவில் இன்னடிசில்**
**வைப்பாரை நாடாயே (8)**

[மணிமாமை-அழகான நிறம்; இன்னடிசில்-மதுரமான இரை உணவு]

என்று தற்கால நிலையைக் கூறுகின்றாள். '**சாயல்**' என்பது சமுதாய சோபை; இது வடமொழியில் '**இலாவண்யம்**' எனப்படும்; மணிமாமை என்பது அழகு. 'இவ்விரண்டும் நீங்கப் பெற்றேன்' என்கின்றாள். இங்ஙனம் இவள் சொல்லக் கேட்ட பூவை 'இதோ விரைந்து சென்று எம்பெருமானுக்கு அறிவிக்கின்றேன்" என்று புறப்படத் தொடங்கும்போது இனி உனது வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே'

என்கின்றாள். 'நானோ முடியா நின்றேன்; இனி உனக்கு இரட்சகராவாரைத் தேடிக்கொள்' என்கின்றாள்.

இவ்விடத்தில் ஓர் ஐதிகம் : பெரிய திருமலை நம்பி என்னும் ஆசிரியர் **'வெண்ணெய்க்காடும் பிள்ளை'** என்ற கிருட்டிணத் திருமேனியை வழிபாடு செய்து வந்தார். அவர் திருவாராதனம் படைக்க ஆற்றலற்றவராய் அந்திமதசை அடைந்தார்; பெருமாள் சந்நிதி முன்பே தண்டம் சமர்ப்பித்துத் திருத்திரையை நீக்கச் செய்து "சாயலொடு மணிமாமை தளர்ந்தேன் நான்; இனி உனது வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே" என்று கை கூப்பி விண்ணப்பம் செய்தாராம். "அடியேன் ஆசாரியன் திருவடி அடையா நின்றேன்; இனித் திருவாராதனம் கண்டருளப் பண்ணுவாரைத் தேடிக் கொள்வாய்" என்பது குறிப்பு.

விரிவஞ்சி ஏனைய பாசுரங்களின் நயங்கள் விடப் பெற்றன.

# 4. பன்னிரு ஆழ்வார்கள்

*ஆழ்வார்கள் பன்னிருவர். எம்பெருமானின் திருக்குணங் களில் ஆழங்கால்பட்டுத் தம்மை மறந்த நிலையில் இருந்தமை யால் 'ஆழ்வார்கள்' என்ற திருப்பெயரைப் பெற்றுத் திகழ்ந்தனர். இதனைக் க்விஞர் நாரா. நாச்சியப்பன்,*

அண்ணலை மேக வண்ணன்
ஆகிய பெருமாள் தன்னை
எண்ணியே நாளும் நெஞ்சில்
இருத்தியே அன்பில் ஆழ்ந்து
நண்ணியே நின்ற தாலே
நல்முற ஆழ்வார் என்று
திண்ணமாய்ப் போற்றப் பெற்றார்
செல்வர்பன் னிருவர் தாமே.[1]

*என்று கூறுவார். இவர்கள் வரலாற்றைக் கால வரலாற்றின்படி ஈண்டுக் கூறுவேன்.*

*(1–3).* **முதலாழ்வார்கள் :** *இவர்கள்* **பொய்கையார் பூதத்தார், பேயார்** *என்ற திருப்பெயரினர் மூவர். இவர்கள் மூவரும் அயோநிஜர்களாய் (யோநி வழிப் பிறவாதவர்களாய்) ஓர் ஐப்பசித் திங்களில் அடுத்தடுத்த நாட்களில் அவதரித்தனர் என்பது குருபரம்பரைச் செய்தி. அதாவது பொய்கையார்*

---

1. ஆழ்வார்களின் ஆராஅமுது (கழகம்); சிறப்புப் பாயிரமாலை–1

'கல்லுயர்ந்த நெடுமதில்சூழ் கச்சி திருவெஃகாவில்' பொற்றாமரைப் பொய்கையில் திருவோண நட்சத்திரத்தில் திருமாலின் '**பாஞ்சசன்யம்**' என்ற திருச்சங்கின் கூறாக அவதரித்தார். பொய்கையில் அவதரித்த காரணமாகப் பொய்கையாழ்வார் என்ற திருநாமம் பெற்றார். பூதத்தார் திருக்கடல்மல்லையில் (மாமல்லபுரம்) நறுமணம் வீசித் திவ்வியமாய் இருப்பதொரு குருக்கத்திப் பந்தலில் ஒரு குருக்கத்தி மலரில் ஐப்பசித் திங்கள் அவிட்ட நட்சத்திரத்தில் திருமாலின் '**கௌமோதகி**' என்னும் கதையின் கூறாகப் பிறந்தார். வடமொழியில் (பூ-சத்தாயாம்) என்ற தாது வடிவாகப் பிறந்தது பூதம் என்ற சொல். இது சத்தைப் பெற்றது என்று பொருள் படும். எம்பெருமானின் திருக்குணங்களை அநுபவித்தே சத்தைப் பெற்றார் என்னும் காரணம்பற்றியே பூதத்தாழ்வார் என்று திருநாமம் ஆயிற்று. பேயார் திருவல்லிக்கேணி என்னும் திவ்விய தேசத்திற்குத் தெற்கிலுள்ள 'தேனமர் சோலைமாடமாமலையிலுள்ள' ஆதிகேசவப் பெருமாள் திருக்கோயிலின் திருக்குளத்தில் உண்டானதொரு செவ்வல்லி மலரில் ஐப்பசித் திங்கள் சதய நட்சத்திரத்தில் திருமாலின் '**நந்தகம்**' என்ற வாளின் கூறாகத் தோன்றினார். இவர் ஒப்புயர்வற்ற பக்தியுடையவராய் பார்ப்பவர்கள் கண்ணில் 'இவர் பேய் பிடித்தவர்' என்னும்படி நெஞ்சழிந்து கண் சுழன்று அழுதும் சிரித்தும் தொழுதும் எழுந்தாடியும் மகிழ்ந்து பாடியும் அலறியுமே பொழுது போக்கிக் கொண்டிருந்தமையால் 'பேயாழ்வார்' என்ற திருநாமம் பெற்றனர். இவர்கள் மூவரும் பார்ப்பனர் என்பதற்குத் தக்க சான்றுகள் இல்லை. இவர்தம் பிறப்பே அதற்கு அரணாக அமைகின்றது.

---

2. காஞ்சி சொன்ன வண்ணம் செய்த பெருமாள் கோயில்.

**ஓர் அற்புத நிகழ்ச்சி:** நடுநாட்டுத் திருப்பதிகளில் ஒன்றாகிய திருக்கோவலூரில்[3] ஓர் அற்புத நிகழ்ச்சி நடைபெறு கின்றது. கதிரவன் மறைந்த பின்னர் வானம் இருண்டு விடுகின்றது. மழை கொட்டப்போகும் அறிகுறிகள் தோன்று கின்றன. இந்நிலையில் தூறலில் நனைந்து கொண்டே மிருகண்டு என்ற ஓர் அந்தணர் இல்லத்திற்கு வருகின்றார் ஒருவர். மழைக்கு ஒதுங்கவும், இரவு நேரத்தைக் கடக்கவும் இடம் கேட்கின்றார். இல்லத்திற்குரியவர் வீட்டின் முன்புறமுள்ள இடைகழி (ரேழி- என்பது உலக வழக்கு) யைக் காட்டி அதில் ஒருவர் படுக்கலாம்' என்று கூறி இடம் கொடுத்துக் கதவினைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே போய்விடுகின்றார். வந்த இவர்தான் பொய்கையாழ்வார். மழையோவலுக்கத் தொடங்கு கின்றது. சிறிது நேரத்தில் இன்னொருவர் வந்து அதே வீட்டில் ஙங்க இடம் கேட்கின்றார். பொய்கையார் 'ஒருவர் படுக்கலாம் இருவர் இருக்கலாம்' என்று கூறிக் கொண்டே வந்தவருக்கு இடம் தருகின்றார். மேலும் சிறிது நேரம் கழிந்ததும் மழையில் நனைந்து கொண்டே மூன்றாவதாக மற்றொருவர் அதே இல்லத்திற்கு வந்து ஒதுங்க இடம் வேண்டுகின்றார். இடைகழியிலிருந்த இருவரும் 'ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; மூவர் நிற்கலாம்' என்று கூறிக் கொண்டே அவரையும் அழைத்துக் கொள்ளுகின்றனர். இப்போது வந்தவர் பேயாழ்வார்.

---

3. இது 108 திவ்வியதேசங்களில் ஒன்று. விழுப்புரம்–காட்டுபாடி இருப்பூர்த்தி நிலையத்திலிருந்து 3 கி.மீ. தொலைவிலுள்ளது.

இந்நிலையில் குரல் கொடுக்காமால் உள்ளே நுழைவதற்கு இசைவும் பெறாமல், நான்காவதாக யாரோ ஒருவர் நுழைந்து விடுகின்றார். நெருக்கத்தினால் இது தெரிகின்றது. இந்தப் புதியவரைத் தெரிந்து கொள்ள அந்த இருட்டிலும் மழையிலும் விளக்கு கிடைக்கவில்லை. பொய்கையாழ்வார் ஒரு விளக்கேற்றுகின்றார்.

**வையம் தகளியா வார்கடலே நெய்யாக**
**வெய்ய கதிரோன் விளக்காக – செய்ய**
**சுடராழி யான்அடிக்கே சூட்டினேன் சொல்மாலை**
**இடராழி நீக்குகவே என்று.[4]**

என்பதுதான் அந்த விளக்கு. உலகத்தை அகலாகவும், கடலை நெய்யாகவும், கதிரவனைத் திரியாகவும் கொண்டு ஒரு விளக்கை ஏற்றி விடுகின்றார். இந்தப் பாசுரத்தின் மகிமையால் அந்த இடைகழியில் **'பளிச்'** என்ற ஏதோ ஒரு திரை விலகி எப்படியோ ஒளியும் வந்து விடுகின்றது. புறத்தே கவிழ்ந்துகிடந்த இருளும் நீங்கி விடுகின்றது. அதே சமயத்தில் பூதத்தாழ்வாரும் ஞான விளக்கொன்றை ஏற்றுகின்றார்.

**அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக**
**இன்புருகு சிந்தை இடுதிரியா – நன்புருகி**
**ஞானச் சுடர்விளக்(கு) ஏற்றினேன், நாரணற்கு**
**ஞானத் தமிழ்புரிந்த நான்.[5]**

அன்பை அகலாகவும், பொங்கி வரும் ஆர்வத்தை நெய்யாகவும், சிந்தையைத் திரியாகவும் கொண்டு ஞான விளக்கை ஏற்று

---

**4.முதல் திருவந்1** **5.இரண்.–திருவந்.1**

கின்றார் பூதத்தார், இந்த விளக்கினால் அகத்தே மண்டிக் கிடந்த உள் இருட்டும் நீங்கி விடுகின்றது. உடனே அந்தப் பேயாழ்வார் நான்காவது ஆளைக் கண்டு பிடித்து விடுகின்றார். அந்த எக்களிப்பே ஒரு பாசுரமாக வடிவங் கொண்டு நான்காவது ஆள் எம்பெருமானே! ("திருக்கோவலூர் தீங்கரும்பே") என்று காட்டி விடுகின்றது.

**திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன், திகழும்**
**அருக்கன் அணி நிறமும் கண்டேன்;–செருக்கிளரும்**
**பொன் ஆழி– கண்டேன்; புரிசங்கம் கண்டேன்;**
**என் ஆழி வண்ணன்பால் இன்று.**[6]

என்பது பாசுரம். பேயாழ்வார் முதன்முதலாகப் பெரியபிராட்டியாரின் அருள் வடிவத்தைக் காண்கின்றார். பொன்மேனியையுடைய அன்னையாருடன்கூடிய எம்பெருமானின் மரகதத் திருமேனி இப்போது பொன்மேனியாகவே காட்சியளிக்கின்றது. மரகத மலையில் உதித்து ஒளிவீசி வரும் இளஞாயிறு போலத் தோன்றி இருவரது ஒளியையும் - பொன் ஒளியும் மரகத ஒளியும் கலந்து ஒளிர்கின்ற அந்தக் கலப்பு - ஒளியையும் காண்கின்றார். 'திகழும் அருக்கன் அணி நிறமும் கண்டேன்' என்பதால் இது பெறப்படுகின்றது. இருவர் சேர்த்தியால் சேர்ந்த 'சமுதாய சோபை' என்பது பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியான விளக்கம்.

ஆழ்வார்கள் மூவரும் எம்பெருமானைக் கண்டதும் பக்திப் பெருக்கில் திளைத்துப் போகின்றனர். பொய்கையாழ்வார் தமது பாசுரத்தைத் தொடர்ந்து முதல் திருவந்தாதியை

6. மூன்–திருவந்1

*100 பாசுரங்களால் பாடி நிறைவு செய்கின்றார். பூதத்தாழ்வார் தமது பாசுரம் தொடங்கி இரண்டாம் திருவந்தாதியை முடிக்கின்றார். பேயாழ்வார் தமது பாசுரத்தைத் தொடர்ந்து மூன்றாம் திருவந்தாதியைத் தலைக்கட்டுகின்றார். இங்ஙனம் குருபரம்பரை என்ற நூல் கூறுகின்றது. இந்த மூன்று திருவந்தாதிகளும் (முதல், இரண்டு, மூன்று) நாதமுனிகள் தொகுத்த நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் இயற்பா பகுதியில் முதலாவதாக இடம் பெற்றுள்ளன. அஞ்ஞான இருள்அகற்றப்பெறின் இறைவன் காட்சியளிப்பான் என்ற உண்மையை முதலாழ்வார்களின் வரலாற்றால் அறிகின்றோம்.*

> **நீயும் திருமகளும் நின்றாயால் குன்றெடுத்துப்**
> **பாயும் பனிமறைத்த பண்பாளா!– வாசல்**
> **கடைகழியா உள்புகாக் காமர்பூங் கோவல்**
> **இடைகழியே பற்றி இனி.[7]**

*என்ற பொய்கை யாழ்வாரின் பாசுரமும் இந்த நிகழ்ச்சிக்கு அகச் சான்றாக அமைந்து எடுத்துரைப்பதாக உள்ளது.*

*இங்ஙனம் முதலாழ்வார்கள்மூவரும் ஒருவரையொருவர் சந்தித்து அந்தாதிகள் அருளிச் செய்த திருக்கோவலூரை- திவ்வியப் பிரபந்தம் பிறந்த திவ்விய தேசத்தை - நினைந்து,*

> **பாவரும் தமிழால் பேர்பெறு பனுவல்**
> **பாவலர் பாதிநாள் இரவில்**
> **மூவரும் நெருக்கி மொழிவிளக்கு ஏற்றி**
> **முகுந்தனைத் தொழுத நன்னாடு.[8]**

7. முதல் திருவந்.86
8. வில்லிபாரதம்–சிறப்புப்பாயிரம்–6

என்று போற்றிப் புகழ்வர் வில்லிபுத்தூராரின் திருமகனார் வரந்தருவார். வேதாந்த தேசிகரும்,

> பாட்டுக்கு உரிய பழையவர்
> மூவரைப் பண்டு ஒருகால்
> மாட்டுக்கு அருள்தரும் மாயன்
> நலிந்து வருத்துதலால்
> நாட்டுக்கு இருள்செக நான்மறை
> அந்தி நடைவிளங்க
> வீட்டுக்கு இடைகழிக் கேவெளி
> நாட்டும்அம் மெய்விளக்கே.[9]

[மாடு - செல்வமாகிய ஆன்மா; நான்மறை அந்தி- உபநிடதம்; நடை-வழி; வெளி-உபாயங்கள்]

என்று போற்றியுள்ளார். அவரே இந்த வரலாற்றையும் 'தீங்கரும்பு கண் வளரும்?[10] என்ற திருமங்கையாழ்வாரின் திருமொழியையும் அடிப்படையாகக் கொண்டு மூன்று ஆழ்வார்களைக் கரும்பினைப் பிழியும் ஆலையின் உருளைகளாகவும், அவர்களால் நெருக்குண்ட எம்பெருமானை நெருக்குண்ட இடமாகிய திருக்கோவலூர் அருகில் விளையும் கரும்பாகவும் அந்த எம்பெருமானின் சௌலப்பிய குணத்தைச் சாறாகவும் உருவகித்து ஒரு வடமொழிச் சுலோகத்தாலும்[11] பாராட்டியுள்ளார். மேற்குறிப்பிட்ட திருக்கோவலூர் நிகழ்ச்சிக்குப் பின்னர், இம்மூவரும் திருவல்லிக்கேணியில்

9. தே.பி. 89
10. பெரி. திரு 2, 10;4
11. தேகளீஸ்வரஸ்துதி–7

திருமழிசையாழ்வாரைச் சந்தித்து அளவளாவியதாக வரலாறு. பின்னர் இவர்கள் திருக்கோவலூர் ஆயனாரைத் தொழுது விடை பெற்று நெடுங்காலம் திருப்பதிகள் தோறும் சென்று மங்களாசாசனம் செய்து யோகபலத்தால் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் இம்மண்ணுலகில் வாழ்ந்திருந்து வையத்தினரை வாழ்வித்தனர் என்பது வைணவர்களின் நம்பிக்கை. ஆனால் இவருக்குப் பின்னர் தோன்றின ஆழ்வார்களுள் ஒருவராவது இவரைச் சந்தித்ததாகச் சான்றுகள் இல்லை.

**இவர்கள் வாழ்ந்த காலம் :** ஆராய்ச்சியாளர்கள் இவர்கள் வாழ்ந்த காலத்தை ஏழாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியும் எட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியுமாக இருக்கலாம் என்று கருதுவர்.

**(4). திருமழிசையாழ்வார் :** இவர் தொண்டைநாட்டில் உள்ள திருமழிசை[12] என்ற திருத்தலத்தில் பகவானை வழிபட்டு வந்த **'பார்க்கவர்'** முனிவருக்கும் **'கனகாங்கி'** என்ற கட்டழகிக்கும் (தேவர் உலகிலிருந்து வந்தவள்) தைத்திங்கள் 'மகம்' நட்சத்திரத்தில் '**சுதர்சனம்**' என்னும் திருவாழியின் அம்சமாக அவதரித்தவர்-தசைப் பிண்டமாக. தேவமங்கை அப்பிண்டத்தை வெறுத்து அருகிலுள்ள பிரப்பம் புதரில் எறிந்து விட்டுத் தன்னுலகம் சென்று விடுகின்றாள். சின்னாளில்தசைப் பிண்டம் சிறந்ததோர் ஆண்குழந்தை வடிவமாகப் பரிணமித்து உயிர் பெறுகின்றது. பசி, நீர்விடாயால் பரிதவித்துத் தனியே அழுது கொண்டிருப்பதை அறிந்து அவ்விடத்தருகே திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஜெகந்நாதப் பெருமாள்

12. திருமழிசை—திருவள்ளூர்— சென்னை நெடுஞ்சாலையில் உள்ளது இத்தலம்.

பிராட்டியுடனே எழுந்தருளி அக்குழந்தையைக் குளிரக் கடாட்சித்து அதன் பசி தாகங்களை அகற்றி தமது திருமேனியைக் காட்டித் தேற்றி மறைந்தருள்கின்றார். பின்னர் அத் தெய்வக்குழந்தை அப்பெருமானது பிரிவை ஆற்றாமல் மீளவும் தேம்பித்தேம்பி அழுது கொண்டிருந்தது.

**வளர்ப்பு :** இந்நிலையில் அப்போது பிரம்பறுக்க வந்த 'திருவாளன்' என்னும் குறவன் குழந்தையின் அழுகுரலைக் கேட்டு அருகில் வந்து குழந்தையை வாரி எடுக்கின்றான். அவன் மக்கட்பேறு இல்லாதவன். அக்குழந்தையை எடுத்துவந்து தன் மனைவியான 'பங்கயச்செல்வியிடம்' தர, இருவரும் அதனை அன்புடன் போற்றி வளர்க்கின்றனர். குழந்தையும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து மிக்க இளமையிலேயே பரஞான முதிர்ச்சி பெற்று யோகியராக விளங்கியது. இவர்தம் குழவிப் பருவத்தில் ஆவின்பால் கொடுத்து வந்த பாகவதர் ஒருவருக்கு இவர் அருளால் பிறந்த 'கணிகண்ணன்' என்பான் இவருக்கு இணைபிரியாத் தொண்டனானான்.

திருமழிசையார்[13] உண்மைத் தத்துவம் இன்னதென அறிய முயன்று சமணம், பௌத்தம், சைவம் முதலிய எல்லாச் சமயங்களையும் ஆய்ந்து இறுதியில் திருமாலே முழுமுதற் கடவுள் எனத் தெளிந்து அப்பெருமானை இடைவிடாது தியானித்துக் கொண்டு திருவல்லிக்கேணியில் நெடுங் கால யோகத்தில் எழுந்தருளியிருந்தார். அப்போதுதான் முதலாழ்வார்கள் மூவரும் இவரைச் சந்தித்து அளவளாவிப்

13. இவர் வரலாறு மிக நீண்டது. இதனைக் காண விரும்புவோர் 'ஆழ்வார்களின் ஆராஅமுது' என்ற நூலில் பக்தி சாரர் (4வது கட்டுரை ) என்ற கட்டுரையில் காணலாம். (கழகம்).

பிரிந்தனர். பின்னர் இந்த ஆழ்வார் முதலாழ்வார்கள் அவதரித்த திருத்தலங்களைத் தரிசித்து விட்டுத் 'திருக்குடந்தை' செல்லத் திருவுள்ளம் கொண்டார் இடையில் 'கச்சிநகர் திருவெஃகாவில்' எழுந்தருளியிருந்து தமக்கு உரிய பணிபுரிந்து வந்த மூதாட்டி ஒருத்தியைக் குமரியாக்கினார். இதனை அறிந்த அந்நகரத்து வேந்தன் தன் கிழத்தனத்தையும் போக்கியருளுமாறு கணி கண்ணன்மூலம் ஆழ்வாரை வேண்ட, அவர் அதற்கு இணங்க வில்லை. அரசன் அவ்விருவரையும் நகரை விட்டு வெளி யேறுமாறு ஆணையிட்டான். உடனே வெஃகணைக் கிடந்த திருமாலையும் தம்முடன் வெளியேறுமாறு வேண்டி மூவருமாக நகரை விட்டேகினர். இச்செய்தியை அறிந்த மன்னன் ஆழ்வாரின் பெருமையை உணர்ந்து அவரை மீண்டும் நகருக்கு வருமாறு வேண்டியழைத்து அவருக்குத் தொண்டு பூண்டனன் ஆழ்வார் தம் வாணாளின் இறுதியில் திருக்குடந்தையில் வாழ்ந்து திருநாட்டை அலங்கரித்தனர். இதனால் கும்பகோணத்தைத் 'திருமழிசைப் பிரான் உகந்த இடம்' என்று பேசுகின்றார். வியாக்கியானச் சக்கரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளை. கும்பகோணத்திற்கு 'குடமூக்கு' 'குடமூக்கில்' என்ற திருநாமங்கள் உண்டு. எனவே, திருமழிசையாழ்வார் "குடமூக்கிற் பகவர்"(கும்ப கோணத்து பாகவதர்) என்று ஒரு சமண ஆசிரியர்குறிப்பிடுகின்றார். 'முக்காலமும் உணர்ந்த முனிவர்களில் ஒருவர்' என்றும் பாராட்டுகின்றார் அந்த ஆசிரியர். இதனால் குருபரம்பரைக் கதைகள் தோன்றுவதற்கு முன்னரே பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார் இவர்களைப்போல் திருமழிசையாரும் தமிழர்களால் பெரிதும் போற்றப் பெற்றனர் என்பதை அறியமுடிகின்றது.

**இவர்தம் அருளிச் செயல்கள் :** (1) திருச்சந்த விருத்தம். (2)நான்முகன் திருவந்தாதி என்ற இரண்டும் இவர்தம் அருளிச் செயல்களாகும். இவற்றுள் முன்னது கம்பீரமான சந்த விருத்தத்தாலான 120 பாசுரங்களைக் கொண்டது. ஓதுவார் உள்ளத்தில் உணர்ச்சியைக் கிளரச் செய்யும் பான்மையது. இது முதலாயிரத்தில் பெருமாள் திருமொழியை அடுத்து இடம் பெற்றுள்ளது. பின்னது 96 வெண்பாக்களைக் கொண்டது. இஃது இயற்பாத் தொகுதியில் முதலாழ்வார் பிரபந்தங்களை அடுத்து இடம் பெற்றுள்ளது.

**வாழ்ந்தகாலம்:** இவர் வாழ்ந்த காலத்தைச் சரியாக அறுதியிடுவதற்கு ஏற்ற சான்றுகள் இல்லை. எட்டாம் நூற்றாண்டுக்குமுன் முதலாழ்வார்கள் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்திருக்கக் கூடும் என்று அறுதியிடுவர் ஆய்வாளர்கள்.

**(5). தொண்டரடிப் பொடியாழ்வார்:** சோழ நாட்டில் கும்பகோணத்திற்கு அருகில் உள்ளது. புள்ளம் பூதங்குடி[14] இது திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பெற்றது (பெரி. திரு 5.1) இதன் அருகில் சுமார் ஒன்றரை கிலோ மீட்டர் தொலைவில் **'திருமண்டங்குடி'** என்ற ஒரு சிற்றூரில் திருமாலின் **'வைஜயந்தி'** என்னும் வனமாலையின் கூறாக ஆடித் திங்கள் 'கேட்டை' நட்சத்திரத்தில் ஒரு முன்குடுமிப் பார்ப்பனருடைய திருமகனாகப் பிறந்தார் இந்த ஆழ்வார். இவரது பிள்ளைத் திருநாமம் **'விப்ர நாராயணன்'** என்பது. இளமையிலேயே நான்கு திருமறைகளையும் ஆறு சாத்திரங்களையும் கசடறக் கற்றுத் துறை போய வித்தகர். ஞானவைராக்கியங்கள் நிறையப் பெற்று வளர்ந்து வந்தார். இவருக்கும் வைகுண்டத்தினின்றும்

**14. இது சோழ நாட்டிலுள்ள 40 திவ்விய தேசங்களில் ஒன்று.**

சேனை முதலியார் (விஷ்வக்சேனர்) எழுந்தருளி 'பஞ்சசம்ஸ்காரம்' முதலிய சடங்குகளைச் செய்து வைத்தார் என்று நம்புவர் வைணவப் பெருமக்கள். திருமணத்தில் விருப்பமற்று மாணியாக நின்று திவ்விய தேசங்கட்குச் சென்று எம்பெருமான்களை மங்களாசாசனம் செய்யக் கருதி முதலில் கோயில் என வழங்கும் 'திருவரங்கத்தை' அடைந்தார், அழகிய மணவாளனின் வடிவழகினால் கவரப்பற்று திருவரங்கத்திலேயே தங்கி விட்டார். திருநந்தவனம் அமைத்து திருத்துழாய் மாலைகள், பல்வேறு பூ மாலை வகைகள் முதலியவற்றைத் தயாரித்து அரங்க நகர் அப்பனுக்குச் சமர்ப்பிக்கும் கைங்கரியத்தில் ஈடுபட்டு நின்றார். தமது நிலைக்கேற்ப அந்தணர் திருமாளிகையில் அன்னபிட்சை வாங்கி அமுது செய்து வந்தார்.

இவர் வாழ்வில் ஏற்பட்ட 'மாற்றம் தேவதேவி' என்ற விலைமாதின் வலையில் சிக்கியது. 'பொன்வட்டில் களவு' என்ற நிகழ்ச்சியை உண்டாக்கி எம்பெருமான் ஆழ்வாரை அந்த வலையினின்றும் விடுவித்தது இவர்தம் வாழ்வில் நேரிட்ட அற்புத நிகழ்ச்சி. பிறகு பெரியோர்களின் யோசனைப்படி தாம் செய்த பிழையைப் போக்கும் கழுவாயாக அடியார்களின் ஸ்ரீபாத தீர்த்தத்தை உட்கொண்டு தூய்மையானார். அடியார்க்கு அடிமை பூண்டு ஒழுகி அதன்காரணமாகத் 'தொண்டரடிப்பொடி' என்ற திருநாமம் பெற்றனர். இந்த ஆழ்வார் 105 ஆண்டுகள் வாழ்ந்து அதன்பிறகு நலம்அந்தம் இல்லதோர் நாட்டை அடைந்ததாகப் பெரியோர்கள் பணிப்பர்.

**இவரது அருளிச் செயல்கள்:** இந்த ஆழ்வார் அருளிச்செய்த பிரபந்தங்கள் (1) திருமாலை (45 பாசுரங்கள்), (2) திருப்பள்ளி எழுச்சி(10 பாசுரங்கள்)என்பவை. முன்னது அறுசீர் விருத்தத்தாலாயது இது முதலாயிரத்தில் திருச்சந்த

விருத்தத்தை அடுத்து இடம் பெற்றுள்ளது. பின்னது எண்சீர் விருத்தத்தாலாயது. முன்னதை அடுத்து முதலாயிரத்தில் இடம் பெற்றுள்ளது.

**இவரது காலம் :** திருமங்கை மன்னனும் இவரும் சம காலத்தவர் (ஏழாம் நூற்றாண்டு) எனக் கருதுவார் பேராசிரியர் மு. இராகவய்யங்கார்.[15] திருமங்கையாழ்வார் திருவரங்கம் திருமதிலையும் சிகரங்களையும் பெருஞ்செலவிட்டுக் கட்டுவித்த பொழுது தொண்டரடிப் பொடியாழ்வார் திருத்தொண்டு செய்து வந்தார் என்று 'குரும்பரம்பரைகள்' கூறுவதாலும் திருமங்கையாழ்வார் காலத்தே சமணம் முதலிய புறச்சமயங்கள் வைதிகச் சமயக் கடவுளரை இகழ்ந்து வந்த செய்தியை இந்த ஆழ்வார் குறிப்பிடுவதாலும் அங்ஙனம் கருதினர் பேராசிரியர் அய்யங்கார் அவர்கள். ஆயினும் பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் வேறு சில சான்றுகளைக் கொண்டு இவரைத் திருமங்கையாழ்வாருக்கு முற்பட்டவராகக் கருதுவார்.[16]

**(6). குலசேகராழ்வார் :** கேரள மாநிலத்தில் 'கோழிக்கோடு' (கொல்லிநகர்), என்ற பகுதியை ஆண்டுவந்தவன் திடவிரதன் என்னும் அரசன். இவனுடைய அரசமாதேவி நாதநாயகி. பல்லாண்டுகள் இவர்கட்கு மக்கட்பேறு இல்லை. பின்னர் திருமாலுக்குச் சிறப்பான ஆராதனங்கள் செய்து வழிப்பட்டதன் காரணமாக மாசித் திங்கள் புனர்ப்பூச நட்சத்திரத்தில் திருமாலின் மார்பிலுள்ள **'கௌத்துவமணியின்'** கூறாக இளவரசராகத் தோன்றினார். இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் 'குலசேகரன்'

15. ஆழ்வார்கள் கால நிலை—பக் 139
16. Religion and Philosophy of Nalayira Divya Prapandham with Reference to Nammalvar (Ph.D thesis p.123)-S.V. Univesity Publication)

என்பது. இளமையிலிருந்தே குலசேகரர் திருமால் பக்தியில் தலைசிறந்து விளங்கினார். இளமையிலேயே அரசுரிமையை வெறுத்துத் திருவரங்கம் சென்று திருக்கோயில் திருப்பணியில் ஈடுபட்டனர் என்று குருபரம்பரை கூறும். தம் திருமகனாருக்குப் பட்டம் கட்டிவிட்டுத் துறவு பூண்டனர் என்று செப்பும் திவ்விய சூரி சரிதம். தாம் அரசு புரிந்த காலத்தில் அரவணையில்பள்ளி கொண்ட எம்பெருமானையும் அவனடியார்களையும் பெரிதும் ஆதரித்து வந்தார் ஆழ்வார். இதன் காரணத்தால்தான் இவருக்கு உலக பற்றின்மை ஏற்பட்டது என்று கருதி அரசர்க்கு அடியார்களின்மீது ஒரு வெறுப்புண்டாக ஒரு திட்டம் வகுத்தனர் அமைச்சர்கள். அரண்மனையில் களவு போன அரதனமாலையைக் கவர்ந்தவர்கள் அடியார்கள் என்று அவர்கள்மீது ஓர் அடாப் பழியைச் சுமத்தினர். ஆயின் ஆழ்வார் பரமனடியார் ஒருபோதும் அது செய்யார் என்று பாம்புக் குடத்தில் கைவிட்டு சூளுறவு செய்து அவ்வடியார் பெருமையை நிலை நாட்டியதை,

ஆரம் கெடப்பரன் அன்பர்கொள்
ளார் என்(று) அவர்களுக்கே
வாரங் கொடுகுடப் பாம்பின்கை
இட்டவன் மாற்றலரை
வீரம் கொடுத்தசெங்கோல்கொல்லி
காவலன் வில்லவர்கோன்
சேரன் குலசே கரன்முடி
வேந்தர் சிகாமணியே.[17]

என்ற பாசுரத்தின் மூலம் அறியலாம்.

17. தனியன் = மணக்கால்நம்பி அருளியது.

**இவரது அருளிச்செயல்:** ஒரே ஒரு பிரபந்தம் - **'பெருமாள் திருமொழி'** (105 பாசுரங்கள்). இது முதலாயிரத்தில் நாச்சியார் திருமொழிக்கு அடுத்து இடம் பெற்றுள்ளது.

**இவர் வாழ்ந்த காலம்:** பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் இவர் வாழ்ந்த காலம் எட்டாம் நூற் றாண்டின் தொடக்கம் என்று அறுதியிடுவர்.[18] பேராசிரியர் மு. இராகவய்யங்கார் இந்த ஆழ்வாரும் திருமங்கை மன்னன், தொண்டரடிப் பொடிகள் ஆகிய மூவரும் சமகாலத்தவர் என்று கருதுவர்.

**(7). திருப்பாணாழ்வார் :** இவர் 'கங்கையிற் புனிதமாய காவிரி' நதிக் கரையிலுள்ள திரிசிரபுரம் - 'உறையூரில்' திருமாலின் **'ஸ்ரீவத்சத்தின்'** (மறு) கூறாகக் கார்த்திகை மாதம் உரோகிணி நட்சத்திரத்தில் ஓர் அந்தணாளனது நெற்பயிர்க்கழநியில் தோன்றினார். பாணர் குலத்துப் பிறந்தான் ஒருவன் தன் நல்லூழின் காரணமாக மருவிய காதல் மனையாளின் மலடு நீங்க அந்தத் தெய்விகக் குழந்தையை எடுத்து வளர்த்து வந்தான். அந்தக் குழந்தையும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தது. இயற்கையிலேயே இளமைதொட்டு உலகப் பற்றற்று எம்பெருமானது இணைத் திருவடித் தாமரைகட்கே தம் மனத்தைப் பறி கொடுத்தார். வேதாந்த தேசிகர் இவரைப் 'பாண்பெருமாள்'[19] என்றே சிறப்பித்துப் பேசுவர். 'பாணர்' என்ற திருநாமத்துடன் விளங்கிய 'பாண்பெருமாள்' நாரத முனிவர் போன்று ஞான பக்தி வைராக்கியங்களுடன் இசைத் திறனும் வாய்க்கப்பெற்ற பாணருக்குச் சேனை முதலியார்

18. History of Tamil language and literature-p.110
19. தே.பி. 130 (அமிர்தாசுவாதினி)

*(விஷ்வக்சேனர்) எழுந்தருளி ஒருவரும் அறியா வண்ணம் திருவிலச்சினை சாதித்துச் சென்றார் என்பது வைணவர்களின் நம்பிக்கை. காவிரியின் தென் கரையிலிருந்து கொண்டே திருவரங்கப் பெருமான்மீது யாழில் வைத்துப் பாடிச் சேவித்து வந்த இவரை எம்பெருமான் தன் கனவில் கட்டளையிட்டவாறு திருவரங்கப்பெருமானின் அர்ச்சகர் உலகசாரங்க முனிவர் பாண்பெருமாளைத் தம் முதுகில் சுமந்து சென்று அரங்கநகர் அப்பன் முன்னர் இறக்கி விட்டார்.*[20] *ஆழ்வாரும் அணியரங்கனது திருமேனியைப் பாதாதிகேசமாகச் சேவித்து அதில் ஆழ்ந்து அதன் அழகை அநுபவித்தார். அந்த அநுபவம் பின்புள்ளாருக்கும் தெளிவாகும் பொருட்டுப் பத்துப் பாசுரங்களாக அருளினார். இறுதியாக,*

**அண்டர்கோன்அணி**
**அரங்கன்என் அமுதினைக்**
**கண்ட கண்கள்மற்(று)**
**ஒன்றினைக் காணாவே.**[21]

*என்று தம் துணிவினை வெளியிட்டு மிகவும் உவப்புடன் நின்றார். எம்பெருமான் அவரை அங்கீகரிக்க அவரும் அனைவரும் காண அப்பிரானது திருவடிகளில் கலந்து மறைந்து இரும்புண்ட நீராயினார்.*[22]

20. இதனால் இந்த ஆழ்வாருக்கு 'முனிவாகனர்' என்ற மற்றொரு திருநாமமும் ஏற்பட்டது. 21. அமலனாதி.–10
22. திரு நீலகண்டயாழ்ப்பாணர் என்ற சிவனடியார். திருவாலவாய், திருவாரூர்த் திருக்கோயில்களின் வாயில்களில் நின்று பாட, அவரைச் சிவபிரான் தம் திருமுன்பு அழைத்துக் கொண்டார் என்ற பெரிய புராணத்தில் வரும் செய்தி இப்பாண்பெருமாள் வரலாற்றுடன் ஒப்பிடற்பாலது.

**இவரது அருளிச்செயல் :** அரங்கநகர் அப்பன்மீது பாடிய பத்துப் பாசுரங்கள் கொண்ட '**அமலனாதிபிரான்**' என்ற பிரபந்தம். இது நாலாயிரத்தில் முதலாயிரத்தின் இறுதியில் 'கண்ணிநுண் சிறுத்தாம்புக்கு, முன்னர் இடம் பெற்றுள்ளது.

**இவரது காலம் :** இப் பூவுலகில் இந்த ஆழ்வார் நடையாடினகாலம் 50 ஆண்டுகள். தொண்டரடிப் பொடியாழ்வார் வாழ்ந்த காலமே இவர் வாழ்ந்த காலம் என்பதாகக் கருதுவர் பேராசிரியர் மு. இராகவய்யங்கார்.[23]

(8). **திருமங்கையாழ்வார் :** சோழ மண்டலத்தில் '**திருவாலி நாடு**' என்பது ஒரு பகுதி. அப்பகுதியில் '**குறையலூர்**' என்பது ஓர் ஊர். அவ்வூரில் கள்ளர் குலத்தில் திருமாலின் '**சார்ங்கம்**' என்ற வில்லின் கூறாகக் கார்த்திகைத் திங்கள் கார்த்திகை நட்சத்திரத்தில் அவதரித்ததாகக் கொள்வர் வைணவப்பெருமக்கள். பிறந்த குழந்தை நீலநிறமாக இருந்தது பற்றி '**நீலன்**' என்ற பெயர் வழங்கியது. பெற்றோர் இட்ட பெயர் '**கலியன்**' என்பது. இத்திருநாமத்துடன் வளர்ந்து அறிவு, ஆற்றல்கள் நிரம்பப் பெற்றவராய் தக்க பருவம் வந்ததும் தம் தந்தையின் உரிமைகளைப் பெற்றுத் தாமே ஆலி நாட்டின் தலைவராகவும், சோணாட்டரசன் கீழ்த் தானைத் தலைவர் களுள் ஒருவராகவும் திகழ்ந்தார். திருநாங்கூர் பகுதியில்[24] 'அண்ணன் கோயில்' என வழங்கும் '**திருவெள்ளக்குளம்**' என்னும் திருப்பதியில் மருத்துவத்தொழிலை மேற்கொண்

23. ஆழ்வார்கள் கால நிலை–பக். 157
24. இப்பகுதியில் சோழநாட்டுத் திவ்விய தேசங்களில் 11 தேசங்கள் அடங்கியுள்ளன.

டிருந்த வைணவர் ஒருவரால் அருமையாக வளர்க்கப் பெற்று வந்த 'குமுதவல்லி' என்ற பெண்மணியை ஒரு சில நிபந்தனைகளின்படி திருமணம்புரிந்து கொண்டு தாமும் பரமபாகவதராகி அவளுடன் திருமாலடியார்களை ஆராதிப் பதில் செல்வங்களையெல்லாம் செலவிட்டார். அரசிறையாகத் தம்மிடமிருந்த பொருளும் இச்செலவில் கரைந்தது. நாளடைவில் இவருடைய இச்செயல் வெளிப்பட அரசன் இவரது சிற்றரசு உரிமையையும் பறித்துக் கொண்டதுடன் இவரையும் சிறையிலிட்டனன். பின்னர் திருமாலின்அருளால் கச்சியில் பெரும்பொருள் பெற்று அரசனுக்குரிய கடனைத் தீர்த்துச் சிறையினின்று விடுதலை பெற்றார்.

திருமால் கைங்கரியம் புரிவதற்குக் கையிலே வேறு 'பொருளின்மையால்' 'நீர்மேல்நடப்பான்' 'நிழலில்ஒதுங்குவான்', 'தாள்ஊதுவான்', 'தோலாவழக்கன்' ஆகிய நால்வரின் துணை கொண்டு ஆறலைத்துப் பொருளீட்டி அப்பொருளைக் கொண்டு அன்பர்கட்கு அமுது செய்வித்து வரலாயினர். ஒருநாள் தம் பதிக்கு (திருநகரிக்கு) அடுத்த திருமணங்கொல்லை என்ற ஊர்ப்புறத்தில் ஓர் அரசமரத்தில் பதுங்கியிருந்தபொழுது 'வயலாளி மணவாளன்' அந்தண இளைஞர் வடிவத்துடன் மணவாளக் கோலத்துடன் புதுமணம் புணர்ந்த தம்மனைவி யுடன் எல்லாவிதப் பொன் அணிகளைப் புனைந்து கொண்டு பரிவாரம் சூழ வந்து கொண்டு இருந்தார். கலியன் தம் கூட்டத்துடன் அவர்கள்மேல் விழுந்து பொன் அணிகளை யெல்லாம் களையச் செய்தார். அவற்றையெல்லாம் ஒரு மூட்டையாகக் கட்டி தூக்கிச் செல்ல முயன்றபோது தூக்க இயலாமல் 'மந்திரம் பண்ணினைபோலும்' என்று தம்

வாளையுருவி நெருங்கிக் கேட்க அவரும் கலியனது வலத்திருச் செவியில் திருமந்திரத்தை உபதேசித்தார். அன்றியும், தாமும் பெரிய திருவடிமேல் காளமேகம் போன்ற திருமேனியுடன் பெரியப்பிராட்டியார், பூமிப் பிராட்டியார் சமேதராகச் சேவை சாதித்தார். இங்ஙனம் வழிப்பறி செய்யப் பெற்றவர் ஆண்டாளை மணம் புரிந்து வந்த திருவரங்கப் பெருமானே என்று திவ்விய சூரி சரிதம் குறிப்பிடும்.

கலியனுக்கு ஞான பக்தி வைராக்கியம் ஏற்படலாயிற்று. 'வாடினேன் வாடி' என்று தொடங்கி 'நான்கண்டு கொண்டேன்' 'நாராயணா என்னும் நாமம்', என்று முடியும் பத்துப் பாசுரங்களைப் பாடி முடித்தார். பின்னர் எம்பெருமானின் பெருங்கருணைத் திறத்தை வியந்து அம்மந்திரம் பிறந்த திவ்வியதேசத்தை (பதரி)வணங்கத் திருவுள்ளங் கொண்டு அங்குச் சென்று அதனை மங்களாசாசனம் செய்கின்றார். தொடர்ந்து வடநாடு, நடுநாடு, சோழநாடு, பாண்டிநாடு, மலை நாடு ஆகியவற்றிற்கு திருத்தலப் பயணங்களை மேற்கொண்டு 86 திவ்விய தேசங்களை மங்களாசாசனம் செய்கின்றார். இங்ஙனம் தொடர்ந்து இறையநுபவம் பெற்று நெடுங்காலம் வாழ்ந்து முடிவில் நெல்லை மாவட்டத்திலுள்ள திருக்குறுங்குடியில்[25] இறைவன் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளினர்.

**இவரது அருளிச் செயல்கள் :** இவர் அருளிச் செய்த பிரபந்தங்கள் ஆறு. அவை. (1) பெரிய திருமொழி (2) திருக்குறுந்தாண்டகம் (3) திருநெடுந்தாண்டகம் (4) திருவெழுக்கூற்றிருக்கை (5) சிறிய திருமடல் (6) பெரிய திருமடல் என்பவையாகும். இவற்றை 'மாறன் பணித்த தமிழ்

25. பாண்டிநாட்டுத் திருப்பதிகள் 18இல் இஃது ஒன்று.

மறைக்கு மங்கையர் கோனின் ஆறங்கங்கள்' எனக் கருதுவர் வைணவப் பெருமக்கள்.இவற்றில் முதல் மூன்றும் 'பெரிய திருமொழியாக' வடிவம் கொள்ளுகின்றன. இறுதி மூன்றும் இயற்பாப் பகுதியில் இடம் பெறுகின்றன.

**இவரது காலம்:** இந்த ஆழ்வார் வாழ்ந்த காலம் கி.பி. (716-881) என்று கொள்வர் ஆய்வாளர்.

**ஒரு குறிப்பு :** இவரது முறுகிய பக்தி நிலையை உணர்ந்து 'திருநெடுந்தாண்டகமே' இவர் இறுதியாகப் பாடியது (சரமப்பிரபந்தம்) என்பர் ஒரு சாரர், பிறிதொரு சாரர் 'பெரிய திருமடலே இறுதியாகப் பாடியது' (சரமப்பிரபந்தம்) என்று வற்புறுத்துவர். எது எங்ஙனமாயினும் இரண்டுமே உயர்ந்த பக்தி நிலைகளை காட்டுகின்றன என்பதை நாம் அறிகின்றோம். இரண்டையும் ஆழ்ந்து கற்று ஆழ்வார் பெற்ற அநுபவத்தைப் பெற முயல்பவருக்கு அவரவர் மனப்பக்குவத்திற்கு ஏற்ப எது 'சரமப்பிரபந்தம்' என்ற உண்மை தட்டுப்படும்.

**(9). பெரியாழ்வார்:** தென்தமிழ் நாட்டில் மதுரை மாவட்டத்தில் **'ஸ்ரீவில்லிபுத்தூரில்'** வேயர் குலத்தில் பாகவத சம்பிரதாயத்தைத் தழுவியிருந்த குடும்பத்தில் பெரிய திருவடியின் (கருடன்) கூறாக ஆனி மாதம் **'சுவாதி'** நட்சத்திரத்தில் தோன்றினார். தந்தையார் முகுந்த பட்டர்; அன்னையார் பதுமவல்லி. இவரது பிள்ளைத் திருநாமம். **விஷ்ணுசித்தர்.**[26] இவர் மாலவனுக்கு மலர்த்தொண்டு புரியும் கைங்கரியத்தை மேற்கொண்டிருந்தார். அதற்காக அழகிய நந்தவனம் ஒன்று அமைத்து அதனைப் பரிபாலித்து வந்தார்.

---

**26. இவர் திருமொழியின் பதிகம்தோறும் உள்ள முத்திரைக் கவியால் (திருக்கடைக் காப்புச் செய்யுளாலும் உறுதிப்படும்)**

இவர் திருமாலின் பரத்துவத்தைப் பலரும் அறிந்து மகிழுமாறு வாதம் செய்து நிலைநாட்டியதற்காக பாண்டிய மன்னனிடம் பொற்கிழி பெற்றுப் 'பட்டர்பிரான்'என்ற விருதையும் பெற்றார்.

**பாண்டியன் கொண்டாடப்**
**பட்டர்பிரான் வந்தான் என்று**
**ஈண்டிய சங்கம்**
**எடுத்தூத– வேண்டிய**
**வேதங்கள் ஓதி**
**விரைந்து கிழியறுத்தான்**
**பாதங்கள் யாமுடைய**
**பற்று.[27]**

என்ற வெண்பாவால் அறியலாம். இங்ஙனம் தான் பெற்ற பொருளைத் தம்மூர்த் திருமால் கைங்கரியத்தில் செலவிட்டு அப்பெருமானை - ஆலிலைப் பள்ளியானை-வழிபட்டு வாழ்ந்தார் என்பது குருபரம்பரைகளால் அறியப்பெறும் செய்தி. இதனை இவர்தம் திருவாக்குகளும் உறுதி செய்கின்றன.[28] இங்ஙனம் இவரது வரலாற்றோடு இவரது திரு வாக்குகள் பெரிதும் ஒத்துள்ளன.

இந்த ஆழ்வார் காலத்துப் பாண்டிய மன்னன் ஸ்ரீவல்லபன் என்பான்.[29] இப்பெரியார் காலத்தே இராச

27. பாண்டிய பட்டர் அருளிச்செய்த தனியன் இவர் பிற்கால ஆசிரியர்களில் ஒருவர்.
28. திருப்பல் 8,9, பெரியாழ். திரு 5,1:3.5.
29. பெரியாழ் திரு 4–2;7 இதில் நெடுமாறன் என்று ஆழ்வார் குறிப்பிடுவர். இவன் காலம் கி.பி. 835–862.

புரோகிதராக இருந்தவர் திருக்கோட்டியூர்த் தலைவரான செல்வ நம்பி என்னும் சீரியோர்.[30]

**இவரது அருளிச் செயல்கள்:** இவர் இயற்றிய பிரபந்தங்கள் இரண்டு. (1) திருப்பல்லாண்டு. (2) பெரியாழ்வார் திருமொழி. இவை இரண்டும் முதலாயிரத்தில் தொடக்கத்திலேயே அமைந்திருப்பவை. வேதாந்த தேசிகர் திருப்பல்லாண்டு தனிப் பிரபந்தம் அன்று;பெரியாழ்வார் திருமொழியின் முதல் பத்தை சேர்ந்ததேஎன்று நிலை நாட்டுவர்.

**இவர்காலம் :** ஆராய்ச்சியாளர் இவர்காலம் சீமாறன் சீவல்லபன் (கி.பி. 835-862) காலத்தவர் என்று கருதுவர்.[31] பெரியாழ்வார் 85 திருநட்சத்திரங்கள் வாழ்ந்தவர் என்பது குரு பரம்பரைகளால் அறியப் பெறுகின்றது. ஆகவே, இவர் கி.பி. 9 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவராகக் கொள்ளலாம்.

**(10). கோதை நாச்சியார் :** பெரியாழ்வாரின் 'பெண் கொடி' எனத் திகழ்ந்த இவர் ஆடித் திங்கள் பூர நட்சத்திரத்தில் பூமிப்பிராட்டியாரின் கூறாக அவதரித்தவர். ஆழ்வார் அமைத்த நந்தவனமே இவர்தம் தோற்றத்திற்குஇடனாய்ப் பொருந்தியது. அந்த மலர்வனத்தில் ஒருபுறம் பச்சை பசேலென்று செழித்து வளர்ந்த திருத்துளவே இவர் வீற்றிருந்ததற்கு நிலைக்களனாய் அமைந்தது. பெரியாழ்வார் அக் குழவியைக் கண்டெடுத்து தமது மகளாகவே கருதி கோதை என்ற திருநாமம் சூட்டிச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து

30. திருப்பல் 8,9; பெரியாழ் திரு 4.48
31. Gopinatha Rao; History of Sri Vaishnavas p.23; K.A.-N.Sastri; History of South India-p 415.

வந்தார். இளமையில் கலைகள் முழுதும் தன்னடைவே நிரம்பப் பெற்று வளர்ந்து வந்தாள் கோதை. ஆழ்வாரைப் போன்றே கோதையாரும் இளமை தொட்டே கண்ணன் பக்தியில் ஈடுபட்டாள். தந்தையருளால் குழந்தையாகக் கருதின கண்ணன் இவளுக்குக் காதலனாக அமைந்து விடுகின்றான். தந்தைக்குத் தெரியாமல் அவன் வடபத்திரசாயிக்கு (ஆலிலைப்பள்ளி யானுக்கு)க் கட்டி வைத்த திருமாலையைச் சூட்டிக் கொண்டும், காறை பூண்டு கூறையுடுத்து, கைவளை குலுக்கிக் கோவைச் செவ்வாய்திருத்தித் தன் அழகைக் கண்ணாடியில் கண்டு பல நாளும் கோதை மகிழ்ந்து வந்ததை ஒரு நாள் ஆழ்வார் கண்டு விட்டார். தன் மகளுடைய அடாத செயலுக்கு அவளைக் கடிந்து கொண்டார். அன்றிரவு வடபெருங் கோயிலுடையான் ஆழ்வார் கனவில் தோன்றி அவர் மகள் சூடிக் கொடுத்த மாலைதான் தனக்கு விருப்பமாகும் என்று குறிப்பிட்டார். அன்றுமுதல் தன் திருமகளார் சூடிய திருமாலைகளையே நாளும் சாத்திப் பெருமாளை உவப்பித்து வரலானார். அதுமுதல் அவளுக்குச் 'சூடிக்கொடுத்தாள்' எனத் திருநாமம் வழங்கலாயிற்று. தம் மகளாரின் பெருமையை மெச்சிய ஆழ்வார் 'என்னை ஆண்டாள் இவளே' என்று தன் மகளைத் தழுவி உச்சி மோந்தார். அன்று முதல் கோதையாருக்கு 'ஆண்டாள்' என்ற திருப்பெயரும் நிலைத்து விட்டது. மங்கைப் பருவமடைந்ததும் ஆண்டாள்'மானிடவர்க்கென்று பேச்சுப்படின் வாழகில்லேன்'[32] என்று கூறித் திருவரங்கப் பெருமானையே கணவனாக வரித்தாள். ஆழ்வாரும் தன் கனவில் பெருமாள் உரைத்தபடியே தன் மகளை அழகிய

32. நாச்.திரு1;5

மணவாளன் முன் நிறுத்த, அவ்வெம்பெருமானும் அவளை வரவேற்றுப் பெருவிருப்புடன் அங்கீகரித்தருளினான். ஆண்டாளும், அப்பெருமானுடன் கலந்து மறைந்தாள். இவ்வரலாறு பின் பழகிய பெருமாள் ஜீயர் 'குருபரம்பரை' முதலியவற்றில் நுவலப் பெற்றதாகும்.

**இவரது அருளிச் செயல்கள் :** இப்பெருமாட்டி அருளிச் செய்தவை (1) திருப்பாவை (2) நாச்சியார் திருமொழி. என்ற இரண்டு பிரபந்தங்களாகும். இவை இரண்டும்முறையே முதலாயிரத்தில் பெரியாழ்வார் திருமொழிக்கு அடுத்து இடம் பெற்றுள்ளன.

**இவர் காலம்:** பெரியாழ்வார் வாழ்ந்த காலமே. 'வெள்ளியெழுந்து வியாழம் உறங்கிற்று.' (திருப் 13) என்ற குறிப்பினை எடுத்துக் கொண்டு ஆய்ந்து இக் காலத்தை அறுதியிடுவர் மு.இராகவய்யங்கார் (கி.பி. 731) பேராசிரியர் டாக்டர் ந.சுப்பு ரெட்டியார் இவர் வாழ்ந்த காலம் கி.பி. 850 ஐச் சுற்றிய ஆண்டுகளாகக் கொள்வர்.[33] இவர் காலத்தைக் கடைச்சங்க காலமாகக் கருதுவது பொருந்தாது.[34]

**(11) நம்மாழ்வார் :** இவர் பாண்டி நாட்டில் நெல்லை மாவட்டத்தில் பொருநையாற்றங் கரையிலுள்ள '**ஆழ்வார் திருநகரி**' என்று வழங்கும் திருக்குருகூரில் திருமாலிடம் வழி வழியாக அன்பு பூண்டொழுகும் வேளாளர் குலத்தில் சேனை முதலியாரின் கூறாக வைகாசித் திங்கள் பௌர்ணமியுடன்

33. Religion and Philosophy of Nalayiram with Special Reference to Nammalvar.
34. ஈ.எஸ். வரதராச ஐயர்: தமிழ் இலக்கிய வரலாறு வைணவமும் தமிழும் – அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு –1957

கூடிய விசாக நட்சத்திரத்தில் அவதரித்தார். தந்தையார் காரியார் என்னும் செல்வர். அன்னையார் உடைய நங்கையார். பெற்றோர் இவருக்கு இட்ட பெயர் 'மாறன்' என்பது மற்றொரு பெயர் 'சடகோபன்' என்பது. பிறந்த நாள் தொட்டுக் குழந்தை பாலுண்ணல் முதலிய இயல்புகள் ஒன்று மின்றி இருந்தது. அது பிறந்த பன்னிரண்டாம் நாள் அவ்வூரில் எழுந்தருளியுள்ள பொலிந்து நின்ற பிரானின் திருமுன்பு அக்குழந்தையை விட்டனர் பெற்றோர். அஃது அங்குள்ள புளிய மரத்தடியில்[35] சென்று அமர்ந்தது. அங்ஙனம் அமர்ந்த குழந்தை பதினாறு வயது வரை கண்விழித்துப் பார்த்தல் பேசுதல் முதலியன ஒன்றுமின்றி இறைவனை நினைந்து அமர்ந்திருந்தது.

அயோத்தி முதலான இடங்கட்கு திருத்தலப் பயணமாகச் சென்ற மதுரகவி ஆழ்வார் தென் திசையில் தோன்றிய பேரொளியை வழிகாட்டியாகக் கொண்டு திருநகரிக்கு வந்து சேர்ந்தார். ஆழ்வார் நிலையைக் கண்டு ஒரு சிறு கல்லை எடுத்து அவர்முன் இட்டு ஒலியுண்டாக்கினார். ஆழ்வார் கண் விழித்துப் பார்த்தார். மதுரகவிகள் அவருடன் பேச நினைத்து "செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?"[36] என வினவினார். அதற்கு நம்மாழ்வார். "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்று விடையளித்தார்.

35. இஃது உறங்காப்புளி என வழங்கப் பெறும். திருவனந்தாழ்வானே இந்த மரமாக வந்து அவதரித்தருளியதாக ஐதிகம். ஆழ்வார் எழுந்தருளிய மரத்தைப் பின்னுள்ளோர் திருப்புளியவாழ்வார் என வழங்கினார்.

36. செத்தது –உடல் அறிவற்றது; சிறியது – உயிர்; அஃது அணு வடிவமானது; பிறத்தல் – உயிர் தன் வினைகட்கேற்ப உடம்பை அடைதல்; எத்தைத் தின்று– எதனை அநுபவித்து.

அவ்விடையைச் செவிமடுத்த மதுரகவிகள் மிக மகிழ்ந்து அவரையே ஆசாரியனாகக் கருதி அவருக்குத் தொண்டு பூண்டொழுகுகின்றார். ஆழ்வார் மதுரகவிகளுக்குச் சித்து, அசித்து, ஈசுவரன் என்ற மூன்று தத்துவங்களையும் உபதேசித்தார். இறைவனை நினைந்த வண்ணம் மகிழ்ச்சிப் பெருக்கினால் ஆழ்வார் கவி பாடத் தொடங்கினார். அக் கவிகளே அவரது அருளிச் செயல்களாகும்.

**இவரது அருளிச் செயல்கள் :** இந்த ஆழ்வாரின் அருளிச் செயல்கள்;(1) திருவிருத்தம், (2) திருவாசிரியம், (3) பெரிய திருவந்தாதி, (4) திருவாய்மொழி. இவை முறையே இருக்கு, யஜுர், அதர்வணம், சாமம் என்ற நான்கு மறைகளின் சாரமாக அமைந்துள்ளன என்பது அறிஞர்களின் கொள்கை. இவற்றுள் முதல் மூன்றும் இயற்பாத் தொகுதியிலும் நான்காவது இசைப்பாத் தொகுதியிலும் அமைந்துள்ளன.

**இவரது காலம் :** இவர் வாழ்ந்த காலம் கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்று கொள்வர் ஆய்வாளர்.[37]

**(12) மதுரகவியாழ்வார் :** இவர் குமுதருடைய[38] கூறாகச் சடகோபர் தோன்றுவதற்கு அருணோதயம்போல் நெல்லை மாவட்டத்தில் திருக்குருகூர்க்கு அருகியிலுள்ள 'திருக்கோளூரில்' சாம வேதிகளான பூர்வசிகைப் பார்ப்பனர் குலத்தில் சித்திரை மாதம் சித்திரை நட்சத்திரத்தில் தோன்றினார். இளமையிலேயே வேதம் சாத்திரம் முதலியவற்றைப் பயின்று செந்தமிழில்

37. Gopinatha Rao; History of Srivaishnavas-p.21
38. நித்திய சூரிகளில் ஒருவர்.

நேர்ச்சிப் பெற்று செவிக்கினிய செஞ்சொற்கவிகளைப் பாட வல்லவராய்த் திகழ்ந்தார். அதனால் 'மதுரகவி' என்ற திருநாமமும் பெற்றார். மெய்யுணர்வினால் அவாவற்றுத் திருமால் பக்தி விஞ்சி தீர்த்த யாத்திரையிலும், திவ்விய தேசயாத் திரையிலும் திருவுள்ளங் கொண்டு வடநாட்டுத் திருப்பதி களைச் சேவித்துக் கொண்டு திருஅயோத்தியில் தங்கியிருந்தார்.

ஒருநாள் திருக்கோளூர் எம்பெருமானைத் திசை நோக்கித் தொழக் கருதித் தெற்குத் திசையில் கண்செலுத்திய பொழுது அப்பக்கத்தில் வானுறவோங்கி விளங்கும். திவ்வியமான ஒரு பேரொளியைக் கண்டார். இங்ஙனமே அடுத்த இரண்டு மூன்று நாட்களிலும் கண்டு வியப்புற்று விடுப்பூக்கத்தினால் (Curiosity) உந்தப்பெற்று அந்த ஒளியையே குறியாகக் கொண்டு நெடுவழி கடந்து ஆழ்வார் திருநகரியை அடைந்தார். அடைந்தவர் உறங்காத்திருப்புளியாழ்வாரின் அடியில் யோகத்திலிருந்த நம்மாழ்வாரின்திருமேனியைச் சேவித்தார். கண்மூடி மௌனியாய் இருந்த அவரைச் சோதிக்கும் பொருட்டு சில உபாயங்களை மேற்கொண்டார். ஆழ்வாரும் அவர் கேட்ட வினாக்கட்கு விடையருள மதுர கவியும் அவரது ஞான பக்தி வைராக்கியத்தில் ஈடுபட்டு அவரையே ஞானாசிரியனாகக் கொண்டு சரணம் புகுந்தார். நம்மாழ்வாரும் தாம் அருளிய நான்கு பிரபந்தங்களையும் மதுர கவிகளுக்கு உபதேசித்தார். அவரும் அப்பிரபந்தங்களைக் கைத்தாளமெடுத்துப் பண்ணிசையோடு ஓதிக் கொண்டு ஆழ்வாரின் தலைமைச் சீடராய்த் திகழ்ந்தார். ஆழ்வார் திரு நாட்டை அலங்கரித்த பின்னரும் அவருடைய அர்ச்சை உருவமான திருமேனியை அத்திருநகரில் எழுந்தருளப்பண்ணி

நித்திய நைமித்திக உற்சவங்களை நடத்திக் கொண்டும், தம் ஆசாரியரின் பெருமைகளை வெளியிட்டுக் கொண்டும் சிலகாலம் அத்தலத்திலேயே காலங்கழித்துப் பின்பு அத்திருத் தலத்திலேயே சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தான அந்தமில் இன்பப் பெருவீட்டை அடைந்தார்.

**இவரது அருளிச் செயல் :** தம்முடைய குருநாதர்மீது கண்ணிநுண் 'சிறுத்தாம்பு' என்ற பதினொரு பாசுரங்களடங்கிய திவ்வியப் பிரபந்தத்தை அருளிச் செய்தார். இது நாலாயிரத்தில் முதலாயிரத்தின் இறுதிப் பிரபந்தமாகச் சேர்க்கப் பெற்றுள்ளது. இஃது எட்டெழுத்து மந்திரமாகிய பெரிய 'திருமந்திரத்தின் மிக முக்கியமான 'நமப் பதத்தின்' பொருளை விளக்குவதாகக் கொண்டுள்ளனர் பெரியோர்கள்.

**இவர் வாழ்ந்த காலம் :** இவரை நம்மாழ்வார் வாழ்ந்த காலமாகக் கொள்வர். ஆராய்ச்சி அறிஞர்கள். பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் கி.பி. 9ஆம் நூற் றாண்டின் முற்பகுதியாகக் கொள்வர்.

**இறுவாய் :** ஆழ்வார்களை பன்னிருவரில் பொய்கையார், பூதத்தார் பேயார், ஆண்டாள், திருப்பாணாழ்வார் ஆகிய ஐவரும் மனித யோநியில் பிறந்தவர்களல்லர். திருமழிசையார் தேவயோநியில் மனித உருவத்தில் பிறந்தவர். அல்லர். பெரியாழ்வார், தொண்டரடிப் பொடிகள், மதுரகவிகள் ஆகிய மூவரும் பார்ப்பன மரபினர். குலசேகராழ்வார் அரச(சத்திரிய) மரபினர். திருமங்கையாழ்வார் கள்ளர் குலத்தவர். நம்மாழ்வார் வேளாளர் மரபினர். இப்படிச் சொல்வதைவிட எல்லோரும் தொண்டக்குலத்தைச் சேர்ந்தவர்கள் என்று சொல்வதே சிறப்பு.

# 5. திவ்வியப் பிரபந்த இலக்கியப் பெருவிழா

தமிழுக்கு ஏற்றம் அளித்த பெருமை வைணவர்க்கு உண்டு. திவ்வியப் பிரபந்த சேவையன்றி திருமால் திருக்கோவில்களில் வழிபாடு இல்லை. இது தவிர, திவ்வியப் பிரபந்தத்திற்குத் திருக்கோயில்களில் விழா எடுத்து வரும் பெருமை இவர்கட்கு உண்டு. ஆண்டுதோறும் மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளில் ஏகாதசிக்கு முன்பும் பின்பும் திருமால் திருக் கோயில்களில் 'அத்யயன உற்சவம்' என்னும் இலக்கியப் பெருவிழா நடைபெற்று வருகின்றது. விழா நாட்களில் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பகுதிகளையும் ஆசாரியர்கள் அருளிச் செய்த உரைகளையும் நாடோறும் அநுசந்தித்தும், சில பாசுரங்கட்கு அபிநயம் பிடித்தும் பாசுரங்களில் கூறப் பெற்றுள்ள சில செய்திகளை நாடகமாக நடித்தும் அரையர்[1] தாம் உருகுவதுடன் கூடியிருக்கும் மக்களையும் உருக்குவார்.

---

1. அரையர்– அரசர்; ஆழ்வார்களின் சார்பாளர்களாக இருந்து இவர்கள் இத்திருப்பணியைச்செய்வதால் ஆழ்வார் பாசுரங்களுக்கு இவர்கள் அரசர் ஆகின்றனர். பாசுரங்களைச் சொல்வதால் இவர்கள் அரசர் எனப் பெற்றனர். இவர்களை 'விண்ணப்பம் செய்வார்' 'நம்பாடுவான்' என்றும் குறிப்பிடுவதுண்டு. திருவரங்கப்பெருமானே இங்ஙனம் சேவிப்பவர்கட்கு 'அரையர்' என்ற விருதை அளித்ததாக உடையவர் 'அருளிய கோயில் ஒழுகு' (Temple manual) என்ற நூலால் அறியக் கிடக்கின்றது.

இன்று திருவரங்கம், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆழ்வார்திருநகரி ஆகிய திருத்தலங்களில் இப்பெரிய இலக்கியத் திருநாள் சீருடனும் சிறப்புடனும் நடைபெற்று வருகின்றது. இத்திருநாளில் அரையர் சேவைதான் உயிராய நிகழ்ச்சியாகும். இத் திருநாள் மார்கழி மாதம் வளர்பிறையில் முதல் நாளான பிரதமையில் தொடங்கும் திருவரங்கத்தில் மட்டும் அதற்கு முந்தியநாளாகிய அமாவாசையன்று இரவில் திருநெடுந்தாண்டகச் சேவையுடன் தொடங்கும். இந்த விழாவைப்பற்றிச் சுருக்கமாக ஈண்டுத் தரப்பெறுகின்றது.[2]

இந்த இலக்கியப் பெருவிழா 'திருமொழித் திருநாள்' 'திருவாய்மொழித் திருநாள்' என்ற இரு பகுதிகளாக அமைகின்றது. திருமொழிகளையே கொண்ட முதல் ஈராயிரம் பாசுரங்களைப் பகற்பொழுதிலும், திருவாய்மொழி ஆயிரத்தை இராப்பொழுதிலும் சேவிப்பதால் இப்பகுதிகளை முறையே 'பகல்பத்து', 'இராப்பத்து' என்று வழங்குவர். கோயிலில் (திருவரங்கத்தில்) இவ்விழா நடைபெறும் முறை ஈண்டுத் தரப்பெறுகின்றது. மார்கழி அமாவாசையன்று இரவு அரையர்கள் பெருமாளுடைய கருவறைக்கு எழுந்தருளி பெருமாளுடைய அருளப்பாடும், வரிசையும் பெற்று தேவகானத்தில் 'மின்உருவாய்' என்ற திருநெடுந்தாண்டகத்தின் முதற்பாசுரத்தைத் தாளத்துடன் அநுசந்திப்பர். பெருமாளிடம் விடைபெற்று வெளிப்போந்து அப்பாசுரத்திற்கு அபிநயம் பிடித்து 'தம்பிரான்படி' வியாக்கியானம் சேவிப்பர். திருநெடுந்

2. விரிவாக அறிய வேண்டுவோர் இவ்வாசிரியரின் 'ஆன்மிகமும் அறிவியலும்' என்ற நூலில் (8வது கட்டுரை) காணலாம். (கழகத்தில் கிடைக்கும்).

தாண்டகம் முதல் பத்துப் பாசுரங்களையும் தம்பிரான் படியையும் சேவிப்பதுடன் அன்றைய நிகழ்ச்சி நிறைவுபெறும்.

## (1). பகல் பத்து

**முதல் திருநாள் :** இன்று அரையர் 'திருப்பல்லாண்டு' தொடங்கி 'வெண்ணெய் விழுங்கி' என்ற இரண்டாம் பத்து 9ஆம் திருமொழி முடிய 212 பாசுரங்களைச் சேவிப்பர். எம்பெருமானுக்குக் காப்பிட்டு பெரியாழ்வார் குறிப்பிடும் கண்ணன் அவதாரம், அழகு, சிறுகுறும்பு முதலிய அனைத்தையும் காட்டி ஆய்ச்சியர் யசோதையிடம் கண்ணனின் குறும்புகளை முறையிடுவதோடு நிற்கும். இவற்றுள் 'பல்லாண்டு, பல்லாண்டு', 'அடியோ மொடு' என்று தொடங்கும் முதல் இரு பாசுரங்கட்கு மட்டும் அரையர் அபிநயம் பிடிப்பார்; வியாக்கியானம் செய்வார்.

**இரண்டாம் திருநாள் :** இன்று அரையர் 'ஆற்றிலிருந்து விளையாடுவோங்களை' (பெரியாழ். திரு2-10;1) என்று தொடங்கும் முதல் பதிகம் முதல் 'துக்கச் சுழலைச் சூழ்ந்து கிடந்த வலை' (மேலது5-3;1) எனத் தொடங்கும் பதிகம் ஈறாகவுள்ள 250 பாசுரங்களைச் சேவிப்பார். இவற்றுள் கண்ணன்பற்றிய பல செய்திகள் அடங்கும். 'ஆற்றிலிருந்து' (2.10;1), 'தன்னேர்ஆயிரம் பிள்ளைகளோடு' (3.1;1) என்ற இரண்டு பாசுரங்கட்கு அரையர் அபிநயம் பிடித்து வியாக்கியானம் செய்வார்.

**மூன்றாம் திருநாள் :** இன்று அரையர் 'சென்னியோங்கு' (5.4;1) என்ற பெரியாழ்வார் திருமொழி, திருப்பாவை முப்பது, நாச்சியார் திருமொழியில் 'தையொரு திங்களும்' (1:1) என்று

தொடங்கும் திருமொழி தொடங்கி 'மற்றறிருந்தீர்கட்கு (12:1) என்று தொடங்கும் பதிகம் முடிய 164 பாசுரங்களைச் சேவிப்பார். இவற்றிலுள்ள நிகழ்ச்சிகளை அநுபவித்து அநுபவிக்கச் செய்து 'சென்னி ஓங்கு தண்திருவேங்கடம்' (பெரியாழ், திரு.5,4;1)என்ற பாசுரத்திற்கு அபிநயமும் வியாக்கியானமும் நிறைவு பெற்றதும் அத்திருமொழியின் 2,3,4,5,6 பாசுரங்கள் 7ஆம் பாசுரத்தில்,

**பருப்பதத்துக் கயல்பொறித்த**
**பாண்டியர் குலபதிபோல்**
**திருப்பொலிந்த சேவடிஎன்**
**சென்னியின்மேல் பொறித்தாய்**

என்பது வரையில் அபிநயத்தோடு பாசுரங்களைச் சேவிப்பார். இங்கு நிறுத்திக்கொண்டு 'திருபொலிந்த சேவடி' ஆகிய 'பெருமாளுடைய சடகோபனைத்' தமது திருமுடியில் ஏற்றிக் கொள்வார். அங்குள்ள ஆழ்வார், ஆச்சார்யர்கள் அனைவருக்கும் அரையர் தமது திருக்கையாலேயே 'சடகோபனை'ச் சாதிப்பார். குழுமியிருக்கும் அனைவருக்கும் சாதிப்பார். இங்ஙனம் சாதித்தபின் பெரியாழ்வார் திருமொழியில் எஞ்சிய 4½ பாசுரங்களைச் சேவித்துப் பெரியாழ்வார் திருமொழியைத் தலைக்கட்டுவர்.

இதன்பின் திருப்பாவை தொடங்கப்பெறும். 'மார்கழித் திங்கள்' எனத் தொடங்கும் முதற் பாசுரத்தை அபிநய வியாக்கியனங்களுடன் சேவிப்பார். இவ்வியாக்கியானத்தில் பல அரியக் கருத்துகள் மிளிரும். இக்கருத்துகள் அனைத்திற்கும் அபிநயம் காட்டும்போது குழுமியிருப்போர் கண்ணும், செவியும், மனமும் ஓடி அரையரிடம் அணையும்.

**நான்காம் திருநாள் :** இன்று அரையர் காலையில் பாசுரம் சேவித்தல், அபிநயம் பிடித்தல், வியாக்கியானம் சேவித்தலோடு பிற்பகலில் 'கம்சவதம்' நாடகத்தையும் நடித்துக் காட்டுவார். நாச்சியார் திருமொழி 'கண்ணன் என்னும் கருந்தெய்வம்' (13:1) என்ற பாசுரத்திற்கு அரையர் அபிநயம் பிடித்து, வியாக்கியானம் செய்வார். அடுத்த பாசுரத்தைச் (13:2)சேவித்து விட்டு அதற்கு அடுத்த 'கஞ்சனைக் காய்ந்த கருவில்லி' (13:3) என்று மட்டும் சொல்லி நிறுத்துவார். அழகிய மணவாளப் பெருமாள் கம்சனைக் கொன்றதைப் பிற்பகலில் காட்ட எண்ணி, அப்பதிகத்தில் எஞ்சிய பாடல்களைச் சேவிக்காமல் அடுத்த பதிகமான 'பட்டிமேய்ந்த காரேறு' (14) சேவித்துவிட்டுப் 'பெருமாள் திருமொழியில்' நுழைவார்.

முதற் பாசுரமாகிய 'இருள்இரிய' (1:1) என்பதற்கு அபிநயம் பிடித்து வியாக்கியானம் செய்து எஞ்சிய பெருமாள் திருமொழி முழுவதும், திருச்சந்தவிருத்தம் முழுவதும் சேவிக்கப்பெறும். இன்றைய பாசுரத்தொகை 243. சில திருப்பதிகளில் 'இருள்இரிய' (1:1) என்பதற்குப் பதிலாக 'ஊனேறு செல்வத்து' (1:4) என்ற பாசுரத்திற்கு வியாக்கியானம் உண்டு. பிற்பகலில் முன் நிறுத்திய 'கஞ்சனைக் காய்ந்த கருவில்லி' (13:3) என்ற நாச்சியார் திருமொழிப் பாசுரத்தை எடுத்துக்கொண்டு அரையர் தம்பிரான்படி வியாக்கியானம் சேவித்து கிருட்டிணாவதாரம் தொடங்கி 'கம்சவதம்' வரை நாடகமாக நடித்துக் காட்டுவார். இப்பதிகத்தில் எஞ்சிய பாசுரங்களையும் சேவித்துத் தலைக் கட்டுவர்.

**ஐந்தாம் திருநாள் :** இன்று அரையர் 'திருமாலை' தொடங்கி 'காவலில் புலனை வைத்து' என்ற முதற்பாசுரத்திற்கு அபிநயம் பிடித்து வியாக்கியானமும் செய்வார். மேலும்

(1)'பச்சைமாமலைபோல்மேனி', (2)'வேதநூல்பிராயம் நூறு', (3) 'மொய்த்தவல் வினையுள் நின்று', (4) 'பெண்டிரால் சுகங்கள்', (5) 'மறஞ்சுவர் மதில் எடுத்து', (6) என்ற பாசுரங்கள் அனைத்திற்கும் 'அரங்கனார்க்கு ஆள் செய்யாதே' என்பது வரை அபிநயம் பிடிப்பார் அரையர். அரங்கனார்க்கு ஆள் செய்வதில் நம்பெருமாள் புறப்பாடு, திருஆராதனம், வேத விண்ணப்பம், அருளிப்பாடு உற்சவங்களையெல்லாம் அபிநயத்துக் காட்டி எஞ்சிய திருமாலைப் பாசுரங்கள் அனைத்தையும் சேவிப்பார். இன்றைய பாசுரத்தொகை 67.

**ஆறாம் திருநாள் :** இன்று தொடங்கப்பெறும் பாசுரம் 'கண்ணிநுண் சிறுத்தாம்பின்' முதற்பாசுரம். இப்பாசுரத்திற்கு அரையர் அபிநயம் பிடித்து வியாக்கியானம் செய்தபின் இப்பதிகத்தின் எஞ்சிய பாசுரங்களையும் சேவிப்பார். அடுத்து திருமங்கையாழ்வாரின் 'பெரிய திருமொழி' தொடங்கும். தொடங்கும் பாசுரமாகிய 'வாடினேன் வாடி' என்பதற்கே அபிநயமும் வியாக்கியானமும் உண்டு. அபிநயவியாக்கியானங் களுக்குப் பின் அரையர் பெரிய திருமொழியின் மூன்றாம் பத்து ஐந்தாம் திருமொழியாகிய 'வந்து உனது அடியேன் மனம் புகுந்தாய்' (3.5) என்ற பதிகம் முடிய 250 பாசுரங்களைச் சேவிப்பார். இவை திருப்பிரிதி, வதரி ஆச்சிரமம், சாளக் கிராமம், நைமிசாரண்யம், சிங்கவேள்குன்றம், திருவேங்கடம், திருஎவ்வுள், திருவல்லிக்கேணி, திருநீர்மலை, திருக்கடல் மல்லை, திருஇடஎந்தை, அட்டபுயகரம், பரமேச்சுர விண்ணகரம், திருக்கோவலூர், திருஅயிந்திபுரம், திருசித்திர கூடம், காழிச் சீராமவிண்ணகரம் என்ற திவ்விய தேசங்களைப் பற்றியன. திரு ஆலியில் (3.5)இன்றைய பாசுரங்கள் அடைவு பெறும்.

*ஏழாம் திருநாள் : இன்று பெரிய திருமொழி மூன்றாம் பத்து ஆறாம் திருமொழியில் (3.6) - திருவாலிபற்றியது - விழா தொடங்கும். 'தூவிரிய மலர் உழக்கி' (3.6;1) என்ற பாசுரம் தலைவி வண்டை விளித்துத் தலைவனுக்குத் தன் நிலைமையை உணர உரைக்குமாறு வேண்டுவது. வண்டிற்குக் கொடுத்துள்ள அடைமொழிகளின் பொருள் உணர்ந்து, அபிநயத்தில் கண்டு, இசையில் கேட்டு, மனத்தில் அசைபோட்டுச் சிந்திக்க உரியன. இப்பாசுர அபிநயவியாக்கியானங்கள் நிறைவு பெற்றதும். மேலும் மூன்று பாசுரங்களைச் சேவிப்பார். ஐந்தாம் பாசுரத்தில்,*

வாளாய கண்பனிப்ப
மென்முலைகள் பொன்அரும்ப
நாள்நாளும் நின்நினைந்து
நைவேற்கு ஓ! மண்அளந்த;
தாளாளா!

*என்பதோடு நிறுத்திக் கொள்வார். 'மண் அளந்த தாளாளன்' என்பதிலுள்ள கதை பிற்பகலில் நாடகமாக நடித்துக் காட்டப் பெறும். அடுத்த திருமொழி 'கள்வன் கொல்', (3.7) தொடங்கி 'கைம்மான மழகளிற்றை' (5.6) என்ற திருமொழி முடிய 240 பாசுரங்கள் இன்று சேவையாகும். இவை திருவாலி, திருநாங்கூர்த் திருப்பதிகளாகிய மணிமாடக் கோயில், வைகுந்த விண்ணகரம், அரிமேய விண்ணகரம், திருத்தேவனார்த் தொகை, வண்புருடோத்தமம், செம்பொன் செய்கோயில், திருத்தெற்றியம்பலம், திருமணிக்கூடம், காவளம்பாடி, திருவெள்ளக்குளம், பார்த்தன்பள்ளி ஆகிய பதினொரு திருப்பதிகள்; திருவிந்தளூர், திருவெள்ளியங்குடி, திருப்புள்ளம் பூதங்குடி, திருக்கூடலூர், திருவெள்ளறை, திருவரங்கம் ஆகிய சோழ நாட்டுத் திருப்பதிகள் பற்றியவை.*

பிற்பகலில் முன்பு விட்ட 'மண் அளந்த தாளாளா' என்ற சொற்றொடரைக் கொண்டு வாமன-திரிவிக்கிரமாவதாரத்தைத் தம்பிரான்படியில் சேவித்து அவ்வவதாரத்தை நடித்துக் காட்டுவார். இதற்குமேல் 'தண்குடந்தை நகராளா!' முதல் பதிக இறுதிவரைச் சேவிப்பார்.

**எட்டாம் திருநாள் :** இன்று 'பண்டைநான்மறையும்' (5.7;1) திருவரங்கம்பற்றிய திருமொழி தொடங்குகின்றது. இப்பாசுரத்திற்கு அபிநயமும் வியாக்கியானமும் முடிந்த பின்னர் அரையர் 'அரங்கம்' என்ற சொல் பயிலும் இடங்களை யெல்லாம் கோவையாக்கிச் சேவிப்பார். அடுத்த இரண்டு பாசுரங்களைச் சேவித்து 4-ஆம் பாசுரத்தில் 'ஆயிரம் தோளால் அலைகடல் கடைந்தான்' என்ற இடத்தில் நிறுத்தி அலைகடல் கடைந்ததைப் பிற்பகலில் நடித்துக் காட்டுவார். இத்துடன் இப்பகுதிக்குத் தம்பிரான்படி வியாக்கியானமும் சேவிக்கப் பெறும். இப் பதிகத்தின் எஞ்சிய பாசுரங்களைச் சேவித்துத் தலைக்கட்டுவார். இன்று பெரியதிருமொழி எட்டாம் பத்து முதல் பாசுரம் 'சிலை இலங்குபொன் ஆழி' (8.1:1) பதிகம் முடிய 250க்கு திருப் பாசுரங்கள் சேவையாகும்.

**ஒன்பதாம் திருநாள் :** இன்றைய திருநாளை பெரிய திருமொழி எட்டாம் பத்து இரண்டாம் திருமொழி 'தெள்ளியீர்'! (8.2:1) என்ற பாசுரத்துடன் தொடங்கும். இது தாய்ப்பாசுரம். தலைமகளின் நிலை கண்ட தாய் தன்மகளின் இளமையை எடுத்துக் காட்டி இவளை அலைக்கழித்தல் தலைமகளின் இயல்புக்குத் தகாது என்பது பதிகத்தின் உட்பொருள். இனி பத்தாம் பத்து முதல் திருமொழி 'ஒருநல்சுற்றம்' (10.1;1) என்ற பதிகம் முடிய 200 பாசுரங்கள்

அரையரால் சேவிக்கப்பெறும். இதனோடு காலைநிகழ்ச்சிகள் நிறைவு பெறும்.

பிற்பகல் திருநெடுந்தாண்டகம் சிறப்பு நிகழ்ச்சியாகும். 'மின்உருவாய்' (1) என்ற முதற் பாசுரத்திற்கு அரையர் அபிநயம் பிடித்து,பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் சேவிப்பார். இப்பாசுரத்திலிருந்து 'பட்டுடுக்கும்'? (11) என்ற பதினொராம் பாசுரம்வரை தம்பிரான்படி சேவிப்பார். இந்தப் பாசுரம் காதல் கொண்ட மகளின் நிலையைத் தாய் கூறுவதாக அமைந்த தாய்ப் பாசுரம். 'இவளுடைய நிலைக்கு எவர் காரணம்?' என்று குறி சொல்லும் கட்டுவிச்சியைத் தாய் கேட்பதும், கட்டுவிச்சி கூறும் விடையுமாக அமைந்தது. குறத்தி குறி பார்ப்பதற்காக முத்துகளைப் பரப்பி அதனால் நிகழ்ந்தவற்றையும் நிகழப்போகின்றவற்றையும் பார்ப்பது வழக்கம். இன்று அரையர் குறத்தியாக நின்று 'முத்துக்குறி' பார்ப்பார். அக்குறி பார்க்க அவர் பெருமானிடம் தீர்த்தமும், திருவடிநிலையான சடகோபமும் பெற்று அங்கு எழுந்தருளியுள்ள ஆழ்வார், ஆசாரியகட்கும் குழுமியுள்ளவர்கட்கும் அவற்றைச் சாதிப்பார். இது 'முத்துக்குறி' என்று வழங்கப்பெறும்.[3]

**பத்தாம் திருநாள் :** இன்று மீண்டும் அரையர் பெரிய திருமொழிக்குப்போய் 'இரக்கம் இன்றி' (10.2;1)என்ற பாசுரம் தொடங்கி பெரியதிருமொழி இறுதி வரை சேவித்துத் தலைக்கட்டுவார். பின்னர் திருக்குறுந்தாண்டகம், திருநெடுந் தாண்டகம் இரண்டையும் சேவித்து முடிப்பார். இன்றைய

3. ஆழ்வார் திருநகரியில் இன்று 'அக்கும் புலியின் அதளும்' (9.6:1) முந்துற உரைக்கேன்' (9.8:1) என்ற பாசுரங்களுக்கு அபிநய வியாக்கியானம்; நாளையே முத்துக்குறி.

பாசுரத்தொகை 224. 'இன்று இரக்கம் இன்றி' (10,2;1) என்ற பாசுர அபிநய வியாக்கியானம் நடைபெறும். இராம ராவணப்போர் முடிந்தது. இராவணன் அழிந்தான்; சில அரக்கர் எஞ்சினர். அவர்கள் தம் தோல்வியை ஒப்புக் கொண்டு பறை கொட்டி 'பொங்கத்தம் பொங்கோ' (10,2) என்ற ஒலிக் குறிப்புத் தோன்றக் கூத்தாடுவதைக் கூறும் பாசுரம் இது.[4]

பிற்பகலில் பெரிய திருமொழியின் சாற்றுப் பாசுரமான 'மாற்றமுள ஆகிலும்' (11.8) பதிகத்தின் இறுதிப் பாசுரமான 'குன்றம் எடுத்து' (11.8;10) என்பதைச் சேவிப்பார். பின்னர் திருநெடுந்தாண்டகத்தின் சாற்றுப் பாசுரமான,

**அன்றுஆயர் குலமகளுக்கு**
**அரையன் தன்னை**
**அலைகடலைக் கடைந்துஅடைத்த**
**அம்மான் தன்னைக்;**
**குன்றாத வலியரக்கர்**
**கோனை மாளக்**
**கொடுஞ்சிலைவாய்ச் சரம்துரந்து**
**குலம்க ளைந்து வென்றானை (29)**

என்பதைப் பாடும்போது பெருமாள் அருளிப்பாடு இட, இப் பாசுரத்தில் கூறப்பெற்றுள்ள இராவணவதத்தை நடித்துக் காட்டுவார்அரையர். இராவணவதம் முடிந்து, சாற்று முறையை 'மின்னுமா மழைதவழும்' (30) என்ற பாசுரம் தலைக்கட்டியதும் இலக்கியப் பெருவிழாவின் முதற்பகுதியான 'திருமொழித் திருவிழா' (பகல் - பத்து உற்சவம்) நிறைவு பெறும்.

4. ஆழ்வார் திருநகரியிலும், ஸ்ரீவில்லிபுத்தூரிலும் இப்பதிக வியாக்கியானம் இல்லை.

## (2). இராப்பத்து

*முதல் திருநாள் :* ஏகாதசியன்று பெருமாள் அதிகாலையில் கருவறையிலிருந்து புறப்பட்டுப் பரமபத வாசல் வழியாகத் திருமாமணி மண்டபத்தை நோக்கி எழுந்தருள்வார். கிழக்குக் கோபுரவாசல் எதிரில் உள்ள மண்டபத்தில் நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், இராமாநுசர் ஆகிய மூவரும் பெருமாளை எதிர்கொள்வர். அவர்கட்கு எதிரில் அரையர் 'உயர்வற உயர்நலம் உடையவன்' (1.1:1) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தைத் தொடங்குவார். நம்மாழ்வார் பெருமாள் பக்கல் எழுந்தருள, அனைவரும் திருமாமணிமண்டபம் அடைவர். ஒவ்வொரு நாளும் இவ்வாறே அன்றைய பதிகத்தின் முதல் பாசுரத்தை ஆழ்வார் முன் அரையர் சேவித்து ஆழ்வாரைப் பெருமாள் பக்கல் எழுந்தருளச் செய்வது வழக்கமாக உள்ளது.

அன்று மாலை அரையர் அபிநயம் பற்றித் தம்பிரான்படி வியாக்கியானம் சேவிப்பார். அதனோடு நம்பிள்ளைஅருளிய 'ஈடு' என்னும் திருவாய்மொழி வியாக்கியானத்தின் 'மகாப் பிரவேசம்' என்னும் தோற்றுவாய் (அவதாரிகை) 'மூன்றாம் திருமகள் கேள்வனையும்', (ஸ்ரீய;பதி)-முதல் பாசுரத்தின் வியாக்கியானத்தையும் சேவிப்பார். முதல் பாசுரம் ஆழ்வார் தம் மனத்தை விளித்துக் கூறுவது. இதில் பிரணவ எழுத்துகள் உ,ம,அ பயின்று வந்துள்ளமை நோக்கத்தக்கது. உ-எழுத்து திருமகளைக் குறிக்கும் மங்கல எழுத்தோடு பிரபந்தம் தொடங்கும். ஈட்டின் 'மூன்றாம் திருமகள் கேள்வன்' அளவால் சிறியது. இதில் பொதுவாக நம்மாழ்வாருடைய நான்கு பிரபந்தங்களிலும் (திருவிருத்தம், திருவாசிரியம், திருவாய்

மொழி, பெரியதிருவந்தாதி) கூறப்பெற்றுள்ள பொருள்கள், அவற்றிலுள்ள இராமாயணக் கருத்துகள், திருவாய்மொழியில் கூறப்பெற்றுள்ள பொருள் இவற்றைக் கூறி அப்பொருளின் சுருக்கம் முதல் திருப்பதிகத்தின் சுருக்கம் முதல் அடி என முடிப்பார் ஈட்டாசிரியர்.

அரையர் இப் பாசுரத்தைச் சேவித்து, அபிநயம் பிடித்து, 'மூன்றாம் திருமகள் கேள்வனையும்' ஈடுவியாக்கியானத்தையும் சேவித்தபின் முதல் பத்து முழுவதையும் இசையோடு சேவிப்பார்.

**இரண்டாம் திருநாள் :** இன்று அரையர் சேவிக்கும் பாசுரங்கள், திருவாய்மொழி இரண்டாம் பத்து, 'கிளர் ஒளி இளமை' (2.10:1) என்ற பாசுரத்திற்கு அபிநய வியாக்கியானம் சேவிக்கப்பெறும்.இது திருமாலிருஞ்சோலை மலையை இளமைப் பருவம் நீங்குவதற்கு முன்பே அடைவது சிறந்தது என்று கூறுவது.

**மூன்றாம் திருநாள் :** இன்று அரையர் சேவிக்கும் பாசுரங்கள் திருவாய்மொழி மூன்றாம் பத்து 'ஒழிவில் காலமெல்லாம்' (3.3;1) என்னும் பாசுரத்திற்கு அபிநய வியாக்கியானம் சேவிக்கப்பெறும். இந்தப் பாசுரம் 'அடிமை எக்காலத்தும் எவ்விடத்தும் எந்நிலைமையிலும் எம் பெருமானுக்கே உரியது ; அத்தகைய அடிமை செய்வது என் கடமை' என்ற கருத்தை வலியுறுத்துவது

**நான்காம் திருநாள் :** இன்று அரையர் சேவிக்கும் பாசுரங்கள் திருவாய்மொழி நான்காம் பத்து. 'ஒன்றும் தேவும்' (4.10;1)என்ற பாசுரத்தின் அபிநய வியாக்கியானம் சேவிக்கப்

பெறும். அர்ச்சாரூபத்தில் எம்பெருமானைத் திருக்குருகூரில் கண்ட ஆழ்வார் 'இவனை உலகோர் அநுபவியாமல் உள்ளனரே' எனக் கழிவிரக்கம் கொள்ளுகின்றார் இப்பாசுரத்தில்.

**ஐந்தாம் திருநாள் :** அரையர் இன்று சேவிக்கும் பாசுரங்கள் திருவாய்மொழி ஐந்தாம் பத்து. 'எங்ஙனேயோ அன்னை மீர்காள்!' (5.5;1) என்ற பாசுரத்தின் அபிநய வியாக்கியானம் சேவிக்கப்பெறும். திருவாய்மொழி அபிநய வியாக்கியானங்களில் இதுவே முதல் அகப்பொருள் பாசுரம். தாய்[5] மகளை நோக்கி "நீ எம்பெருமானை உலகு அறிய ஆசைப்படுவது உனக்கும் அவனுக்கும் இழுக்கு தருவதாகும். பெண்ணிற்கு உரிய நாணம் துறந்து உன் ஆசையை வெளிப்படுத்தல் ஆகாது. அவ்வாறு வெளிப்படுத்திய பின்பும் அவன் வாராதிருப்பதால் உலகோர் அவனை இரக்கம் அற்றவன் எனக் கூற ஏதுவாகும்; அவனுக்கு உண்டாகும் பழிச் சொல் நம்மையும் சாரும் அன்றே?" என்று கூறிச் சினம் கொள்ளுகின்றனர். உருவெளிப்பாடு கண்ட தலைவியின் விடையாக அமைவது இப்பாசுரம்.

**ஆறாம் திருநாள் :** இன்று அரையர் சேவிக்கும் பாசுரங்கள் திருவாய்மொழி ஆறாம் பத்து. அபிநயவியாக்கியானம் 'உலகம் உண்ட பெருவாயா' (6.10:1) என்ற பாசுரத்திற்கு. இத்திருவாய் மொழியில் திருவேங்கடமுடையானின் குணங்களைக் கூறி, இதன் இறுதிப் பாசுரத்தில் அவனைச் சரணம் அடைகின்றார்.

5. தலைவிக்கு ஐவகைத் தாயர் இருப்பதாகக் கொள்ளுதல். தமிழ்க் கவி மரபு. பெற்றதாய், ஊட்டும் தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய். இவர்களேயன்றி தாய் முறையில் உள்ள அனைவரையும் விளித்துக் கூறுகின்றாள்.

**ஏழாம் திருநாள் :** அரையர் இன்று சேவிக்கும் பாசுரங்கள் திருவாய்மொழி ஏழாம் பத்து. அபிநயவியாக்கியானம் 'கங்குலும் பகலும்' (7.2;1) என்ற பாசுரத்திற்கு. இது தாய்ப் பாசுரம். இன்று ஆழ்வார் பெண்கோலம் கொண்டிருப்பார். முன்நாளில் திருமாலிடம் சரணம் அடைந்ததும் இன்னமும் உலகத்தொடர்பு அற்றுத் திருமாலை அடையவில்லையே என்று தலைவனை அடையாத தலைவியின் நிலையை அடைகின்றார் ஆழ்வார். எம்பெருமானோ, 'ஆழ்வார் இப்பிரபந்தத்தைத் தலைக்கட்ட வேண்டும்; அதுவரையில் அவருக்கு ஆறுதல் அளிப்பது எவ்வாறு?' என்று நினைத்துக் கொண்டிருந்தான். ஆழ்வார் இதனை அறியாமல் பிரிவுத் துயரால் நலிந்து செயல் மறந்து, மயக்கத்தில் இருந்தார். அது கண்ட நற்றாய் தலைவனிடம் முறையிடுகின்றாள். தாயாகிய அரையருக்கோ ஆழ்வாரைக் காட்டிலும் துயர் அதிகம்; 'இவள்திறத்து என் செய்கின்றாயே?' என்று மன்றாடுவது உருக்கமான பகுதி.

இப்பதிகம் ஐந்தாம் பாசுரம் சேவிக்கும்போது 'அந்திப் போது அவுணன் உடல் இடந்தானே!' என்ற விளி வருகின்றது. இப்போது அரையர் தம் சேவையை நிறுத்தி அவுணன் இரணியனின் உடலைக் கீண்ட நரசிங்கஅவதாரக் கதையை நாடகமாக நடத்திக் காட்டி, பெருமானுடைய தீர்த்தத்தையும் சடகோபனையும் குழுவாக (கோஷ்டியாக) உள்ள அடியார்கட்குச் சாதித்துவிட்டுப் பிறகு எஞ்சியப் பாசுரங்களைச் சேவிப்பார்.

**எட்டாம் திருநாள் :** அரையர் இன்று சேவிக்கும் பாசுரங்கள் திருவாய்மொழி எட்டாம் பத்து. அபிநய

வியாக்கியானம் 'நெடுமாற்கு அடிமை செய்வேன்போல்' (8.10;1) என்ற பாசுரத்திற்கு. இப்பதிகம் எம்பெருமானுக்கு அடிமை யாக இருத்தலினும், அவன் அடியாருக்கு அடிமையாக இருத்தல் உயர்ந்தது என்ற கருத்து பற்றியது.

**ஒன்பதாம் திருநாள் :** இன்று அரையர் சேவிக்கும் பாசுரங்கள் ஒன்பதாம் பத்து. அபிநயவியாக்கியானம் 'மாலை நண்ணித் தொழுது' (9.10;1) என்ற பாசுரத்திற்கு. திருக்கண்ணபுரம் சேருமாறு பிறருக்கு உபதேசம் செய்வது இப்பாசுரம்.

**பத்தாம் திருநாள் :** இன்று அரையர் சேவிக்கும் பாசுரங்கள் பத்தாம் பத்து. விழாமுறையில் முந்தைய நாட்களினின்றும் சிறிது வேறுபாடு உண்டு. ஆழ்வாரைக் காலையிலேயே திருமஞ்சனம் (நீராடல்), செய்வித்துத் திருத்துழாமாலை அணிவிப்பர். 'சந்திரபுஷ்கரிணி' அருகில் 'ஸ்ரீரங்கராஜஸ்தவம்' 'உத்தர சதகம்' சேவிப்பர். இச்சேவை நிறை வெய்தியதும் 'பட்டரைப் பிரம்மரதம்' ஏற்றி வரிசைகளுடன் அவருடைய திருமாளிகைக்குக் கொண்டு சேர்ப்பர். பெருமாள் திருமணிமண்டபத்திற்கு எழுந்தருளியதும் அரையர் அபிநய வியாக்கியானம் செய்வது 'தாளதாமரைத்தடம்' (10.1;1) என்ற பாசுரத்திற்கு. ஆழ்வாருக்குத் தாம் பரமபதம் போவது உறுதியாகத் தெரிந்தது. தாம் அங்குப் போகும் வழி புதிது; பழகிய உடலையும் உலகையும் விட்டுப் புதுஉடல் கொண்டு புதிய இடத்திற்குப் போகையில், எம்பெருமானே வழித்துணை என்கின்றார்.

பத்தாம்பத்தில் முதல் எட்டுப் பாசுரங்களையும் அரையர் சேவித்தபின் ஆழ்வாரைத் தம் கைத்தலத்தில் ஏந்திக் கொண்டு

'சூழ்விசும்பு பணிமுகில்' (10.9) என்ற பதிகத்தின் ஒவ்வொரு பாசுரத்தையும் இருமுறை சேவிக்கப் பெருமாளிடம் கொண்டு விடுவார். ஆழ்வாரைப் பெருமாள் திருவடியில் கிடத்தி 'முனியே! நான்முகனே!' (10-10) என்ற பதிகத்தின் ஒவ்வொரு பாசுரத்தையும் இருமுறை சேவிப்பார். இதனோடு அரையர் சேவை நிறைவு பெறும். பிரபந்தத்தைத் தலைக் கட்டடியதும், பெருமாள் 'அரையரைப் பிரம்மரதம்' ஏற்றி வரிசைகளுடன் அவருடைய திருமாளிகைக்குச் சேரவிடுவார். அதன்பிறகே தம் கருவறைக்கு எழுந்தருள்வார்.

அன்றிரவு பெரிய கோவிலுக்குள் ஒரு மண்டபத்தில் இயற்பாவையும், திருவரங்கத்து அமுதனாரின் இராமாநுஜ நூற்றந்தாதியையும் இயலாக இசை நாடகம் இன்றிச் சேவிப்பார். இச்சேவை நிறைவெய்தியதும் மறுநாள் பகல் 'அமுதனாரைப் பிரம்மரதம்' ஏற்றி வரிசைகளுடன் அவருடைய திருமாளிகை சேர விடுவார். இத்துடன் இலக்கியப்பெருவிழா நிறைவேறுகின்றது.

# 6.வைணவ உரைவளம்

வைணவம் உரைவளத்தால் ஏற்றம்பெற்றது என்றும், சைவம் சாத்திர வளத்தால் சிறப்புற்றது என்றும் பெரியோர்கள் பணிப்பதுண்டு. இந்த இரண்டு சமயங்களையும் நுணுகி ஆராய்வாருக்கு இது தெளிவாக புலனாகும்.

**உரையாசிரியர்கள் :** இவர்களை வைணவப் பெருமக்கள் 'வியாக்கியாதாக்கள்' என்று குறிப்பிடுவர். நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தின் பாசுரங்களையும் அவற்றின் பொருள் சிறப்புகளையும் ஆழ்வாரிடம் நேரில் பெற்று அவற்றை உலகில் பரவச் செய்தவர் நாதமுனிகள். ஆதலின் அப்பெரியாரையே முதல் உரையாசிரியராகக் கொள்வது வைணவ மரபு. அவர் முதலாக வந்த அவ்வுரை உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி, ஆளவந்தார் (நாதமுனிகளின் பேரர்), பெரியநம்பிகள், திருமாலையாண்டான், இராமாநுசர் காலம்வரையிலும் கேள்விவழியாகவே வழங்கி வந்து எம்பெருமானார் காலத்தில் தான் 'வியாக்கியானம்' என்ற பெயரால் எழுத்து வடிவம் பெற்றது. இங்ஙனம் உரை வளர்ந்த வரலாற்றை இவண் காண்போம்.

**1. ஆறாயிரப்படி :** இராமாநுசர் திருவாய்மொழி முதலான திவ்வியப் பிரபந்தங்கள் செழித்து வளரத் திருவுள்ளங் கொண்டார். முதன்முதலாகத் திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்ற தம் சீடரைக் கொண்டு 'ஆறாயிரப்படி' என்ற வியாக்கியானம் இட்டருளினார்.

தெள்ளாரும் ஞானத் திருக்குரு கைப்பிரான்
பிள்ளான் எதிராசர் பேரருளால் —உள்ளாரும்
அன்புடனே மாறன் மறைப்பொருளை அன்றுரைத்தது
இன்பமிகும் ஆறா யிரம்.[1]

என்று கூறுவர் மணவாளமாமுனிகள். 'ஆறாயிரப்படி' என்பது 'ஆறாயிரக் கிரந்தங்கள்' என்னும் அளவினை யுடையது என்பது பொருள். ஒற்று ஒழித்து உயிரும் மெய்யுமான முப்பத்திரண்டு எழுத்துகளையுடையது ஒரு கிரந்தம் எனப்படும்.[2] 'படி' என்பது 'அளவு' என்னும் பொருளையுடையதாக இவ்வியாக்கியானம் செய்யப்பட்ட தாதலின் 'ஆறாயிரப்படி' என்ற பெயரைப் பெற்றது. இறைவனைப்பற்றி நுவல்கின்ற 'விஷ்ணுபுராணம்' ஆறாயிரம் கிரந்தங்களையுடையது. இதனை யொட்டி இறைவனைப்பற்றிக் கூறுகின்ற இத்திருமறைக்கும் அத்தொகையளவிலேயே இவ்வியாக்கியத்தை அருளிச்செய்தார் பிள்ளான்.

**2. ஒன்பதினாயிரப்படி :** இதனை அருளிச் செய்தவர் நஞ்சீயர்.

தஞ்சீரை ஞானியர்கள் தாம்புகழும் வேதாந்தி
நஞ்சீயர் தாம்பட்டர் நல்லருளால் —எஞ்சாத
ஆர்வமுடன் மாறன் மறைப்பொருளை ஆய்துரைத்தது
ஏரொன் பதினா யிரம்.[3]

என்பர் மணவாளமாமுனிகள். பிரம்மசூத்திரத்திற்கு இராமாநுசர் அருளிச் செய்த 'ஸ்ரீபாஷ்யம்' ஒன்பதாயிரம்

1. உபதேச ரத்தினமாலை (உ.ர.மா)—41
2. யாப்பருங்கலக்காரிகை— பாயிர உரை.
3. உ.ர.மா—42

கிரந்தங்களையுடையதாதலின் அத்தொகையளவில் 'ஒன்பதி னாயிரப்படி' என்னும் இவ்வியாக்கியானம் எழுந்தது. இதுபற்றிய ஒரு சுவையான வரலாறு உண்டு.

**வரலாறு இது:** நஞ்சீயரின் ஆசாரியர் பட்டர். அவரிடம் ஆறாயிரப்படியை முறைப்படி கேட்டவர் நஞ்சீயர். அதனைச் சற்று விரிவாகச் செய்யத் திருவுள்ளம் பற்றினார். இதனைத் தம் ஆசாரியரிடம் விண்ணப்பித்து அவர்தம் இசைவு பெற்று ஒன்பதினாயிரப்படி என்ற இதனை அருளிச் செய்தார். பட்டர் திருநாடலங்கரித்த பின்னர் ஆசாரிய பதவி நஞ்சீயரை வந்தடைந்தது. இந்த ஒன்பதாயிரப் படியை செவ்வைப்படியாக எழுதித் தரும் பொறுப்பு இவர்தம் சீடர்களில் ஒருவரான 'நம்பூர் வரதராசர்' என்பாருக்குத் தரப்பட்டது. அவரும் தம் ஊரில் இதனை எழுதிக் கொண்டு வருவதாகச் சொல்லி அதனை வாங்கிச் சென்றார்.

சென்றவர் காவிரியைக் கடந்து செல்லும்போது ஓரிடத்தில் நீரில் நீந்திச் செல்லும் நிலை வந்தது. பட்டோலை யைத் தலையில் கட்டிக்கொண்டு நீந்திச் செல்லுகையில் அது எப்படியோ வெள்ளத்தில் அடித்துப் போய்விட்டது. கரையை அடைந்த இவர் அவ்விழப்புக்கு மிகவும் வருந்தினார். வீட்டினை அடைந்தவர், நித்திய கருமங்களை முடித்துக் கொண்டு தம் திருவாராதனப் பெருமாளுக்குச் செய்ய வேண்டிய அனைத்தையும் செய்து, தாம் மாத்திரம் உணவு கொள்ளாமல் சயனித்துக் கொண்டார். அந்த இரவில் திருவரங்கத்து இறைவன் அவர் கனவில் எழுந்தருளி "அன்பனே, ஏன் வருந்துகின்றாய்? உன்னுடைய ஆசாரியனை முன்னிட்டு கொண்டு நீ எழுதத் தொடங்கினால் நாம் உனது

நினைவிலிருந்து கொண்டு உதவுவோம்" என்று கூறி மறைந்தனன்.

வரதராசரும் இறைவன் பணித்தவண்ணம் எழுதத் தொடங்கி சில நாட்களில் ஒன்பதினாயிரப்படியையும் எழுதி முடித்தார். தாம் தமிழில் கற்றுத் துறைபோகிய வித்தகராதலின் பற்பலஇடங்களில் சில சிறப்புப் பொருள்களையும் எழுதினார். நிறைவு செய்த பணியை நஞ்சீயரிடம் சமர்ப்பித்து, அவரிடம் நிகழ்ந்தவற்றை அனைத்தையும் விண்ணப்பிக்க, நஞ்சீயரும் அவரது கூரிய அறிவிற்கு மெச்சி அவரை ஆரத்தழுவி "இவர் இன்று முதல் நம்முடைய பிள்ளை; இவருடைய திருநாமமும் கலி கன்றிதாசர்", என்று அருளிச் செய்து இவரைத் தம் அணுக்கத் தொண்டராக்கிக் கொண்டார். அன்று முதல் வரதராசருக்கு 'நம்பிள்ளை' என்ற திருநாமமும் வழங்கலாயிற்று.

**3. பன்னீராயிரப்படி :** இதனை அருளிச் செய்தவர் வாதிகேசரி அழகிய மணவாள சீயர்.

> **அன்போ டழகிய மணவாளச்சீயர்**
> **பின்போரும் கற்றறிந்து பேசுகைக்கா—தம்பெரிய**
> **போதமுடன் மாறன் மறையின் பொருளுரைத்தது**
> **ஏதமில்பன் னீரா யிரம்.**[4]

என்பர் மணவாள மாமுனிகள். 'பாகவதம்' பன்னீராயிரம் கிரந்தங்களையுடையது. அதனையொட்டி அத்தொகையளவில் இவ்வியாக்கியானம் எழுந்தது. இந்த ஆசிரியரைப் பற்றியும் ஒரு சுவையான வரலாறு உண்டு.

---

4. உ.ர.மா.45

வரலாறு இது : இவர் இல்லற வாழ்க்கையினர். ஒருநாள் ஓர் இடத்தில் சேர்ந்து கற்கும் மாணக்கர்களைக் காண நேர்ந்தது. அவர்களை நோக்கி "நீங்கள் கற்பது என்ன?" என்று வினவினார். அவர்களும் இவர் எழுத்துவாசனை அற்றவர் என்பதை அறிந்தவர்களாதலின் 'முசல கிசலயம்'[5] படிப்பதாக மொழிந்தனர். இவரும் அதனையறியாது தம் ஆசிரியரான பெரியவாச்சான்பிள்ளைக்கு விண்ணப்பம் செய்தார். பிள்ளை யவர்களும் நகைத்து "நீர் கல்வி வாசனையே அறியாதவ ராதலின்" உலக்கை தளிர்க்குமோ? ஆதலின், இதனை நீர் ஏன் கேட்கின்றீர்? உமக்கு இதனால் ஆக வேண்டியதென்ன"? என்று எள்ளி நகையாடியுள்ளனர் என்று விளக்கினார். இவரும் பெருநாணம் கொண்டு பிள்ளையவர்களின் திருவடியில் விழுந்து வணங்கி "அடியேனைப் புலவனாகும்படி திருவருள் புரிதல் வேண்டும்" என்று வேண்டினார் பிள்ளையவர்களும் முப்பத்திரண்டு அகவை முதிர்ந்த இவரை மாணாக்கராக ஏற்றுக் கொண்டு அனைத்தையும் கற்பித்தார். இதனால் இவரும் சிறந்த புலவரானார். 'முசலகிஸலயம்' என்ற பெயரில் காவியம் ஒன்றையும் அருளிச் செய்து தம்மை எள்ளி நகையாடிய மாணாக்கர்க்குக் காண்பித்து அவர்களைத் தலை குனிய வைத்தார். பின்னர் வாழ்க்கையை வெறுத்து துறவறத்தை மேற்கொண்டு பிற சமயவாதிகளையெல்லாம் வாதத்தில் வென்று 'வாதிகேசரி' என்ற விருதையும் பெற்றார்.

பின்னர் பெரியோர்கள் அருளிச்செய்த வியாக்கியானங் களையெல்லாம் கற்று அவற்றின் சாரமான பொருட் சிறப்புகளையெல்லாம் சுருக்கி, எல்லார்க்கும் எளிதாகவும்

5. முசலகிசலயம்– உலக்கைக் கொழுந்து; கிசலயம்–தளிர்

விளக்கமாகவும் இருக்குமாறு 'பன்னீராயிரப்படி' என்ற வியாக்கியானத்தை அருளிச் செய்தார்.

**4. இருபத்து நாலாயிரப்படி :** இந்த வியாக்கியானத்தை அருளிச் செய்தவர் பெரியவாச்சான் பிள்ளை.

**நம்பிள்ளை தம்முடைய நல்லருளா லேவியிடப்**
**பின்பெரிய வாச்சான்பிள் ளையதனால் –இன்பா**
**வருபத்தி மாறன் மறைப்பொருளைச் சொன்னது**
**இருப்பத்து நாலா யிரம்** [6]

என்று உரைப்பர் மணவாளமாமுனிகள். 'இராமாயணம்' இருபத்து நாலாயிரம் சுலோகங்களையுடையது. அத் தொகையளவில் இவ்வியாக்கியானம் எழுந்தது. நம் பிள்ளையின் நியமனத்தால் 'வியாக்கியான சக்கரவர்த்தி' என்று வழங்கும் பெரியவாச்சான் பிள்ளை பற்றியும் சுவைமிக்க வரலாறு ஒன்று உண்டு.

**வரலாறு இது :** நம்பிள்ளை கூரத்தாழ்வானுடைய[7] திருப்பேரனான நடுவில் திருவீதிப் பட்டருக்குத் திருவாய் மொழியின் வியாக்கியானத்தை தனியாக அருளிச்செய்து கொண்டு வந்தார். பகலில் கேட்டவற்றையெல்லாம் ஒன்று கூடக் குறையாமல் இரவில் எழுதி வந்தார். நூலும் முடிந்தது. இவர் எழுதியதும் முடிந்தது. எழுதியவற்றைப் பட்டர் ஒருநாள் பிள்ளையவர்களின் திருமுன் வைத்து விவரத்தைச் சொன்னார். ஏட்டினை அவிழ்த்துப் பார்த்த பிள்ளை அது மகாபாரதத்தின் தொகையளவில் இலட்சத்து இருபத்தையாயிரம்

6. உ.ர.மா.43
7. இவர் இராமாநுசருடைய முதன்மைச்சீடர்.

*கிரந்தங்களாக இருக்கக் கண்டார். மிகவும் வருந்தித் தம்முடைய அனுமதியின்றி எழுதியதனால் நீரினைச் சொரிந்து கரையானுக்கு இரையாக்கினார். பின்னர் நம்பிள்ளை தம் விருப்பத்திற்குகந்த மாணவரும், சாத்திரங்கள் அனைத்தையும் முற்றக் கற்றுத் துறை போய வித்தகருமான பெரியவாச்சான் பிள்ளையை நோக்கி, திருவாய்மொழிக்கு ஒரு வியாக்கியானம் செய்யுமாறு நியமித்தார். அவரும் ஆசாரியர் நியமனப்படி இவ்வியாக்கியானத்தை அருளிச் செய்தார். இதைத் தவிர இவர் நாலாயிரத்தில் மற்றைய மூவாயிரத்திற்கும் வியாக்கியானம் அருளிச் செய்துள்ளார்.*

**5. *முப்பத்து ஆறாயிரப்படி* :** *இதனை எழுதி உதவியவர் வடக்குத் திருவீதிப் பிள்ளை.*

தெள்ளியதா நம்பிள்ளை செப்பு நெறிதன்னை
வள்ளல் வடக்குத் திருவீதிப் பிள்ளை— இந்த
நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்தது
ஈடுமுப்பத் தாறா யிரம்.[8]

*என்ற மணவாளமாமுனிகளின் திருவாக்கால் இதனை அறியலாம். பிரம்மசூத்திரத்திற்கு இராமாநுசர் அருளிச் செய்தது. ஸ்ரீபாஷ்யம் என்ற பேருரை. அதன் ஆழ்பொருளை யெல்லாம் அவனிக்கு விளக்கும் பொருட்டு சுதரிசனபட்டர் என்பார் 'சுருதப் பிரகாசிகை' என்ற நூலொன்றைச் செய்தார். அது 'முப்பத் தாறாயிரம் கிரந்தங்க' ளையுடையது. அத்தொகை அளவில் இவ்வியாக்கியானம் எழுந்தது.*

*இந்த வியாக்கியத்தை 'ஈடு' என்ற பெயராலேயே வழங்குவர். 'ஈடும் எடுப்பும் இல் ஈசன்' (திருவாய் 1. 6:3) என்ற*

8. உ.ர.மா.44

இடத்து 'ஈடு' என்ற சொல் ஒப்பு என்ற பொருளில் வந்திருத்தல் போற்றத்தக்கது. ஈடு : கவசம். கவசமானது உடலைக் காத்தல் போன்று முப்பத்தாறாயிரப்படி என்ற இந்த வியாக்கியானமும் கற்போராலும், எழுதுவோராலும் வேற்று மக்களாலும் தன்னிலை திரிந்து மாறுபடாதபடி திருவாய்மொழியைக் காத்து நிற்றலின் இவ் வியாக்கியானத்திற்கு 'ஈடு' என்ற தனிச் சிறப்புப் பெயரினை நம் பெருமக்கள் வைத்து வழங்கினர். இனி, இது நம்பிள்ளை நாடோறும் காலட்சேபத்தில் அருளிச் செய்தனவற்றை வடக்குத் திருவீதிப் பிள்ளையால் எழுதி வைக்கப்பட்டதாதலின் இதனை ஈடு என்று வழங்கினர் எனக் கொள்ளலும் பொருந்தும். இடுதல் - எழுதுதல் இனி இது சுருதப் பிரகாசிகையினை ஒத்திருத்தலின் இதனை 'ஈடு' என்று வழங்கினர் என்றும், தன்னைக் கற்பார் எல்லாரையும், இறைவனிடத்து ஈடுபடச் செய்வதாதலின் ஈடு என்று வழங்கினர் என்றும் கூறுவதுண்டு. நம்பிள்ளை நாள்தோறும் காலட்சேபத்தில் சொல்லியது ஆதலானும் இதற்கு ஆசிரியர் நம்பிள்ளையே யாதலானும் அப் பெரியாரின் திருப்பெயரைச் சேர்த்து இதனை 'நம்பிள்ளை ஈடு' என்றும் வழங்குவர். இது பற்றியும் ஒரு வரலாறு உண்டு.

**வரலாறு இது :** வடக்குத் திருவீதிப் பிள்ளையின் ஆசாரியர் நம் பிள்ளை. ஒரு முறை நம்பிள்ளை திருவாய்மொழி பற்றி நாள்தோறும் அருளிச் செய்து கொண்டுவரும் உரைகளைக் கேட்டுக் குறிப்பெடுத்து வைத்தவற்றைத் தனியே ஏடுகளில் விரித்து எழுதிவரலாயினார். அவ்வாறு எழுதிவைத்த குறிப்பின் விரிவே 'ஈடு முப்பாத்தாறாயிரப்படி' என்பது. தம் ஆசாரியரின் உரை முற்றுப் பெற்றதும் ஒரு நாள் தாம்

எழுதியவற்றைத் தம் ஆசிரியரின் திருமுன் வைத்தனர் வடக்குத் திருவீதிப்பிள்ளை. ஆசாரியப் பெருமகனாரும் அந்த ஏட்டினை முற்றிலும் நோக்கியதால் அது மிகச் சுருக்கமும் மிக விரிவுமின்றி சுருதப்பிரகாசிகையளவில் முப்பத்தாறாயிரம் கிரந்தங்களோடு கூடியதாய் இருக்கக் கண்டு மிகவும் திருவுள்ளம் உவந்தார். ஆயினும் தம் இசைவு பெறாமல் எழுதியதனால் அதனை வாங்கிக் கட்டி தம் இல்லத்தில் வைத்துக் கொண்டார்.

இச்செய்தியினைக் கேள்வியுற்ற நம்பிள்ளையின் மாணாக்கருள் மற்றொருவரான 'ஈயுண்ணி மாதவப்பெருமாள்' என்பார் அதனை அடைய வேண்டுமென்ற பெருவிருப்பங் கொண்டார். தம் கோரிக்கையை திருவரங்கநாதனிடம் விண்ணப்பித்தார். ஒருநாள் அரங்கநகர் அப்பன் தன் திருவடி தொழ வந்த நம்பிள்ளையை அர்ச்சகர் மூலமாக நோக்கியருளி ஈடுமுப்பத்தாறாயிரப் படியை மாதவப் பெருமாளுக்கு பிரசாதிக்குமாறு கட்டளையிட்டார். அக்கட்டளையினைத் தலைமேற்கொண்டு தம் மாணாக்கரான மாதவப்பெருமாள் என்னும் சிறியாழ்வான் அப்பிள்ளைக்கு ஈட்டைக் கொடுத்து அவரை வாழ்வித்தார்; அத்னால் அவர் மூலமாக உலகோரையும் வாழ்வித்தருளினார்.

**சீரார் வடக்குத் திருவீதிப் பிள்ளைஎழு**
**தேரார் தமிழ்வேதத் தீடுதனைத் – தாருமென**
**வாங்கிமுன் நம்பிள்ளை ஈயுண்ணி மாதவர்க்குத்**
**தாங்கொடுத்தார் பின்னதனைத் தான்.**[9]

என்று இதனைப் பதிவு செய்தார் மணவாளமாமுனிகள்.

9. உ. ர.மா. 48

திருவாய்மொழி 'பகவத் பிரபந்தம்' என்று திருநாமம் பெற்று வழங்குவது போன்று, இவ்வியாக்கியானங்களின் தொகுதியும் 'பகவத் விஷயம்' என்றே போற்றப்பெறுகின்றது. மேலும் திருவாய்மொழியும், இந்த வியாக்கியானங்களும் எந்தவிதக் குற்றமின்றி 'திருமாலவன் கவி' (திருவிரு. 48) என்று முற்றிலும் பகவான் விஷயமாகவே இருக்கையால் இவற்றிற்கே 'பகவத்விஷயம்' என்ற சிறப்புப் பெயரை வைத்துப் போற்றினார்கள் என்றலும் பொருந்தும்.

**வேறுசில உரைகள் :** பெரியவாச்சான் பிள்ளை திருவாய்மொழிக்கு வியாக்கியானம் இட்டருளியதுபோலவே ஏனைய பிரபந்தங்கள் அனைத்திற்கும் வியாக்கியானம் செய்தருளினர். பெரியாழ்வார் திருமொழியின் முதல் நான்கு பத்திற்கு இவர்தம் வியாக்கியானம் கிடைக்கவில்லை. அந்த நான்கு பத்திற்கு மட்டிலும் மணவாளமாமுனிகள் வியாக்கியானம் செய்துள்ளார். நஞ்சீயர், அழகிய மணவாளசீயர், அழகிய மணவாளப் பெருமாள் நயினார் என்னும் பெரியோர்களும் 'திருப்பாவை அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு' ஆகியவற்றிற்கு வியாக்கியானம் இட்டருளினர். மணவாளமாமுனிகளின் சீடர் 'அப்பிள்ளை' என்பார் 'இயற்பா'வுக்கு அருளிச் செய்த வியாக்கியானமும் உண்டு. மணவாளமாமுனிகளும், பிள்ளை லோகாச்சாரியசீயரும் இராமாநுச நூற்றந்தாதிக்கு வியாக்கியானம் செய்துள்ளனர். இவை தவிர, முப்பத்தாறாயிரப்படிக்கு ஜீயர் அரும்பதம், அடைய வளைந்தான் அரும்பதம் என்ற இரண்டு குறிப்புரைகளும் உள்ளன.

**6. பதினெண்ணாயிரப்படி :** பெரிய பரகால சுவாமி என்பவர் ஆறாயிரப்படி என்னும் உரைக்கு ஓர் உரை வரைந்துள்ளார். இது 'பதினெண்ணாயிரப்படி' என வழங்குகின்றது. இதில் ஒவ்வொரு சொல்லுக்குப் பொருளும் ஒரு பாசுரத்தின் விளக்கமும் அமைந்துள்ளன.

**உரைகளின் நயம் :** நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களால் அருளிச்செய்யப் பெற்றது போன்றே, வியாக்கியானங்களும் இறைவனுடைய திருவருளுக்கு முற்றிலும் இலக்காய், ஆழ்வார்களின் பேரருளுக்குப் பாத்திர பூதர்களாய், வடமொழி, தென்மொழி ஆகிய இருமொழிகளிலும் பேரறிவுபடைத்தவர்களாய் இருந்த பெரும்க்களால் அருளிச் செய்யப் பெற்றவையாதலின், திவ்வியப் பிரபந்தம் போன்றே வியாக்கியானங்களும் அருமை பெருமைகளையுடையன. இவ்வியாக்கியானங்கள் மணிப்பிரவாள நடையில் அமைந்தவை; சுவானுபவத்தோடு செய்யப்பெற்றதாதலின், கற்போர்க்கும் சுவானுபவத்தை விளைவிக்கக் கூடியவை.

இந்த உரைகளுள் ஈட்டின் நடையழகு தனிச்சிறப்பு வாய்ந்தது. பொருளுணர்வோடு பயிலப் பயிலப் பேரின்பம் பயப்பது; சொல்லாற்றல்கள், பொருளாற்றல்கள், அமைந்தது. சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல் என்னும் வனப்பு வாய்ந்தது; கூறப்புகும் பொருளை விளக்குவதற்குக் காட்டப் பெறும் மேற்கோள்கட்குப் பொருள்கூறும் முறை எத்தகை யோரும் வியக்கத்தக்கது. பதச்சாரம் கூறுவதில் ஈட்டா சிரியருக்கு ஒத்தாரும் மிக்காரும் இத்தமிழ் நாட்டில் இலர். ஒரு பதிகத்தோடு, மற்றொரு பதிகத்திற்கும், ஒரு பாசுரத்தோடு,

மற்றொரு பாசுரத்திற்கும் உள்ள பொருள் தொடர்பைக் கூறிச் செல்லும் பாங்கு வேறு எவ்வுரையிலும் காண்டல் அரிது. இவ் வியாக்கியானங்கள் இன்றேல் திவ்வியப் பிரபந்தத்தின் பொருள் சிறப்பினையெல்லாம் அறிந்து கூறவல்லார் ஒருவரும் இலர்.

**முந்துறவே பிள்ளான் முதலானோர் செய்தருளும்**
**அந்த வியாக்கியைகள் அன்றாகில் – அந்தோ**
**திருவாய் மொழிப்பொருளைத் தேர்ந்துரைக்க வல்ல**
**குருவார்இக் காலம்நெஞ்சே கூறு.**[10]

என்று மணவாளமாமுனிகளும் கூறியுள்ளதைக் காணலாம்.

**ஒரு முக்கிய நிகழ்ச்சி :** மணவாளமாமுனிகள் காலத்தில் நடைபெற்ற நிகழ்ச்சியொன்று ஈட்டின் பெருமைக்குச் சான்றாக அமைகின்றது. மணவாளமாமுனிகளின் ஆசாரியர் திருவாய்மொழிப்பிள்ளை. மாமுனிகள் பிள்ளையவர்களிடம் திருவாய்மொழி முதலான திவ்வியப் பிரபந்தங்களின் பொருட் சிறப்பினையெல்லாம் ஐயம் திரிபறக் கேட்டுத் தெளிந்தவர். தாம் அறிந்தவற்றை அனைவரும் கேட்டு அறிந்து உய்யும்படி கூற வேண்டும் என்பது மாமுனிகளின் திருவுள்ளம். இத் திருவுள்ளம் கொண்டவராய் திருவரங்கத்தில் வாழ்ந்திருந்த காலத்தில் திருவரங்கப்பெருமான் அர்ச்சகர் மூலம் மாமுனிகளை அழைத்தருளித் தாமும், தம் அடியார்களும் 'திருவாய்மொழியின்' பொருட்சிறப்பினைக் கேட்டு மகிழ்ந்து வாழும்படி பெரிய திருமண்டபத்தில் நடத்துமாறு அருளப் பாடிட்டு நியமித்தருளினார். இதனை,

---

10. உ.ர.மா.40

நாமார் பெரியதிரு மண்டபமார் நம்பெருமாள்
தாமார் நம்மைத் தனித்தழைத்து– நீமாறன்
செந்தமிழ்வே தத்தின் செழும்பொருளை நாளுமிங்கு
வந்துரையென் றேவுவதே வாய்ந்து.

என்ற அப்பெரியாரின் திருவாக்காலும் அறியலாம்.

மாமுனிகளும் இறைவன் இட்டகட்டளையைத் தலை மேற்கொண்டு அப்படியே தொடங்கி நடத்தி வரலாயினர். பெரிய பெருமாளும், திருவாய்மொழியின் முதற் பாசுரம் முதல் இறுதிப் பாசுரம் முடியவுள்ள திருப்பாசுரங்கட்கு இவர்தம் விளக்கத்தைக் கேட்டருளி மிகவும் மனம் உவந்து 'முப்பத் தாறாயிரப் பெருக்கர்' என்ற திருநாமத்தையும் இவருக்குச் சாற்றியருளினார் என்பது வரலாறு. இவ்வரலாற்றாலும், மற்றும் பல காரணங்களாலும் இவ்வியாக்கியானம் எம்பெருமானுக்கும் அவனடியார்கட்கும் திருவாய்மொழி யினைப் போன்றே ஆராஅமுதமாய் இன்பமாரியாய், எங்ஙனே சொல்லினும் இன்பம் பயப்பதாய் இருப்பது என்பதற்குத் தட்டில்லை.

# 7. வைணவ ஆசாரியர்கள்

வைணவ சித்தாந்தத்தில் ஆழ்வார்கள், ஆசாரியர்கள் இவர்களின் வரலாறுகளே சிறந்த வழிகாட்டிகள். அவை சேதநனுக்கு ஞானத்தையும் காட்டக்கூடியவை. அவர்கள் பரம்பரையை நாளும் சிந்திப்பார் இராமாநுசரின் திருவருளுக்கு என்றும் இலக்காகி சதிராக வாழ்ந்திடுவர். ஆழ்வார்கள் வரலாறு இந்நூலில் தனி இயலில் காணலாம். ஈண்டு ஆசாரியர்களின் வரலாற்றைக் காண்போம்.

**1. பெரியபெருமாள் :** (ஸ்ரீமந்நாராயணன் முதல் ஆசாரியர்.) சீடர்கள் : பெரிய பிராட்டியார், பூமிப் பிராட்டியார், நீளாதேவி. திருநட்சத்திரம் - திருவோணம்.

**2. பெரிய பிராட்டியார் :** சீடர்கள் : திருவனந்தாழ்வான், (ஆதிசேடன்), பெரியதிருவடி, விஷ்வக்சேநர் (சேனை முதலியார்) ஆகிய நித்திய சூரிகள். திருநட்சத்திரம் - பங்குனி உத்தரம்.

**3. விஷ்வக்சேநர் :** சீடர்கள் : ஆழ்வார்கள், திருநட்சத்திரம் - ஐப்பசி பூராடம்.

மதுரகவியாழ்வாரின் சீடர் பராங்குசதாசர். இவர் தந்த குறிப்பினால்தான் நாதமுனிகள் 'கண்ணிநுண் சிறுதாம்பை'ப் பன்னீராயிரம் உரு நியமத்தோடு அநுசந்தித்து அர்ச்சை நிலையைக் கடந்து வந்த நம்மாழ்வார் மூலம் நாலாயிரமும் பெற்றனர் என்பது வரலாறு.[1]

---

1. **இவ்வரலாற்றைப்போலவே சைவ சமயத்தில் நம்பியாண்டார் நம்பி திருநாரையூர் பொல்லாப் பிள்ளையார் மூலம் திருமுறைகளைப் பெற்றதாக வரலாறு.**

**4. நாதமுனிகள் :** *(கி.பி. 823-903) கஜாவதாரம்சம். இவர் காட்டுமன்னார் கோயில் எனப்படும் வீரநாராயண புரத்தில் (தென்ஆர்க்காடு மாவட்டம்) ஈசுவரபட்டர் என்பாருக்குத் திருமகனாக அவதரித்தார். அரங்கநாதர் என்பது இவரது பிள்ளைத் திருநாமம். வேறு திருப்பெயர்கள் : 'அரங்கநாதமுனிகள், நாதப்பிரம்மர்'; தேவிகள், அரவிந்தப் பாவை. குமாரர், ஈசுவர முனிகள்.*[2] *மாமியார், வங்கிபுரத்து ஆய்ச்சி. ஆசாரியர் நம்மாழ்வார் (ஆழ்வாரை யோகத்தில் கண்டவர்). சீடர்கள் : 'உய்யக் கொண்டார், குருகைக் காவலப்பன், திருக்கண்ணமங்கையாண்டான், தெய்வநாயக ஆண்டான், நம்பி கருணாகரதாசர், ஏறு திருவுடையார், திருக்கண்ணமங்கையாண்டான், வானமாமலை தேவி யாண்டான், உருப்பட்டுர் ஆச்சான் பிள்ளை,சோகத்தூர் ஆழ்வான்' ஆகிய பதின்மர். திருநட்சத்திரம் - ஆனி அனுஷம். அருளிச் செயல்கள்; நியாச தத்துவம், புருஷநிர்ணயம்' முதலியன,*

**5. உய்யக்கொண்டார் :** *(கி.பி. 826-931) ஐயத்தேனாம்சம். திருச்சி மாவட்டம் திருவெள்ளறையில் அவதரித்தார். திருநட்சத்திரம் சித்திரையில் கார்த்திகை.வேறு திருநாமங்கள் பத்மாட்சர், புண்டரீகாட்சர். தேவிகள், ஆண்டாள், ஆசாரியர் நாதமுனிகள். சீடர்கள் : 'மணக்கால நம்பிகள், திருவல்லிக்கேணி பாண் பெருமாள் அரையர், சேட்டலூார்' செண்டலங்காரதாசர் புண்டரீகதாசர், கோமடம் திருவிண்ணகரப்பன், உலகப் பெருமாள் நங்கை (நாதமுனிகளின் பேரர்-ஈசுவர முனிவர்களின்*

---

2. தந்தையாரை அடுத்து இவர் ஆசாரியராக வரவில்லை என்பது நினைக்கத் தக்கது.

திருக்குமாரர்) நாதமுனிகளால் தம் திருப்பேரர் யமுனைத் துறைவருக்கு எல்லா இரகசியங்களை உபதேசிக்கவும், ஆழ்வார் தமக்குக் காட்டிக் கொடுத்த பவிஷ்யதாசார்ய விக்கிரகத்தைக் காட்டிக்கொடுத்து, இதையும் தாம் விரும்பிய பொருள் எனக் கூறித் தஞ்சமாகக் காட்டிக் கொடுக்கவும் நியமிக்கப்பட் டார்.

**6. மணக்கால் நம்பி :** *(கி.பி. 889-994)* குமுதாம்சம் திருச்சி மாவட்டம் இலால்குடிக்கருகிலுள்ள (இது வட்டம்). மணக்கால் என்னும் சிற்றூரில் அவதரித்தார். திருநட்சத்திரம் - மாசிமகம். இவருக்கு இராமமிஸ்ரர் என்ற மற்றொரு திருப்பெயரும் உண்டு. ஆசாரியர் உய்யக் கொண்டார். சீடர்கள்: 'யமுனைத் துறைவர் (ஆளவந்தார்), திருவரங்கப்பெருமாள் அரையர், தெய்வத்துக்கரசு நம்பி, பிள்ளையரசுநம்பி, சொட்டைநம்பி, சிறு புள்குருடையார் பிள்ளை, திருமாலிருஞ் சோலைதாசர், வங்கிபுரத்து ஆய்ச்சி'. ஆசாரியர் பெண்களைதம் முதுகில் சுமந்து சேற்று வழியைக் கடந்தவர். யமுனைத் துறைவருக்கு தூதுளங்கீரை பரிமாறி ஒருநாள் நிறுத்தி அவருக்கு இரகசியங்களை உபதேசித்தவர்.

**7. யமுனைத்துறைவர் :** *(கி.பி.916-1041)* இவர் ஆள வந்தார். சிம்மாசநாசம் அம்சம், இவர் வீரநாராயணபுரத்தில் நாதமுனிகளின் திருக்குமாரராகிய ஈசுவரமுனிகட்கு திருக்குமரராய் அவதரித்தார். திருத்தாயார், அரங்க நாயகி அம்மை. திருநட்சத்திரம் - ஆடி, உத்திராடம். மாபாடியபட்டர் என்பாரை நாடி இலக்கணம் தருக்கம் முதலிய நூல்களைக் கற்றவர். அரசவைப் புலவர் ஆக்கியாழ்வானை வாதில் வென்றவர். வேறு திருப்பெயர்கள் : 'யாமுனாசாரியர், யாமுநேயர்'. திருக்குமாரர்கள் : 'சொட்டை நம்பி, திருவரங்கப் பெருமாள்

அரையர், தெய்வத்துக்கரசு நம்பி, பெரிய திருமலைநம்பி, பின்னை அரசுநம்பி'. ஆசாரியர் மணக்கால்நம்பி. சீடர்கள்: 'பெரிய நம்பி, பெரிய திருமலையாண்டான், திருமோகூரப்பன், மாறனேர் நம்பி, திருக்கச்சி நம்பி, அரசபத்தினி திருவரங்கத்தம்மன், திருவரங்கப் பெருமாளரையர், ஆளவந்தார் ஆழ்வான், வானமாமலை யாண்டான், தெய்வவாரி ஆண்டான், ஈசனாண்டான், சீயராண்டான், திருக்குருகூரப்பன், திருமோகூர் நின்றான்; தெய்வப்பெருமாள், வகுளாபரண சோமாசியார், திருமோகூர்தாசர், திருமாலிருஞ்சோலைதாசர், வடமதுரைப் பிறந்தான், ஆட்கொண்டி அம்மங்கி' ஆக 20 திருநாமங்கள். இவருக்கு உடையவரையும் (இராமாநுசர்) சீடராகச் சொல்வர். இவர்தம் அருளிச் செயல்கள்: 'சித்தித்திரயம் (ஆகம சித்தி ஸம்வித்சித்தி, மோட்சசித்தி'). திரயம் மூன்று, கீதார்த்தசங்கிரகம், ஆகமப்பிரமாண்யம் தோத்திரரத்னம் சதுஸ்லோகி, மகாபுருஷநிர்ணயம்' என்ற ஆறு கிரந்தங்கள்

8. **பெரியநம்பிகள் :** (கி.பி. 997-1102); குமுதாம்சம். திருவரங்கத்தில் அவதரித்தார். திருநட்சத்திரம் - மார்கழி கேட்டை வேறு திருநாமங்கள்; பராங்குச தாசர், மகாபூர்ணர், பூர்வாசாரியர். குமரர் : புண்டரீகாட்சர். குமாரி : அத்துழாய் அம்மாள். சீடர்கள் : 'எம்பெருமானார், திருக்கச்சிநம்பி, மலைகுனிய நின்றார். சடகோபதாசர், அணிஅரங்கத்து அமுதனார் பிள்ளை, திருவாய்க்குலமுடையார் பட்டர்' ஆகிய அறுவர். இவர் எம்பெருமானாரை மதுராந்தகத்தில் கண்டு

பஞ்சசம்ஸ்காரம்[3] செய்தவர். இவர் மாறனேர் நம்பிக்கும் பணி விடைகள் செய்து பிரம்ம மேத சமஸ்காரம் பண்ணினார். அஷ்டதிக்கஜங்களில் ஒருவரான கந்தாடையண்ணன் முதலானவர்கள் மாறனேர் நம்பிக்கு பிரம்மசமஸ்காரம் செய்ததற்குப் பெரிய நம்பிகளைச் சமூகத்தினின்றும் நீக்கி வைத்தனர். பெருமாள் திருத்தேரில் அணி வீதியில் எழுந்தருளினபோது தேர்நின்றது. "பெரிய நம்பிகளை உனது திருத்தோளின்மேல் எழுந்தருளப் பண்ணி வாரும்" என்று கந்தாடை அண்ணனுக்கு பெருமாள் அர்ச்சகர் மூலமாக அருளிச் செய்ய, அப்படி அநுட்டித்துக் காட்டியபின்தான் திருத்தேர் நகர்ந்ததாம்.

**9. இராமாநுசர் :** *(கி.பி. 1017-1137);* சேஷாம்சம். திருப்பெரும்புதூரில் கேசவ தீட்சிதருக்கும் காந்திமதி அம்மைக்கும் திருக்குமாரராய் அவதரித்தார். திருநட்சத்திரம் சித்திரை-திருவாதிரை. குடி-ஆசூரிகுலம். இவரை பகவதாம்சம், இலக்குமி அம்சம், சேனை முதலியார் அம்சம், பஞ்சாயுத அம்சம் என்றும் சொல்வர். வேறு திருநாமங்கள்; 'இளையாழ்வார், உடையவர், யதிராசர், இலட்சுமணமுனி, சடகோபன் பொன்னடி, கோயிலண்ணன், பாஷ்யக்காரர், எம்பெருமானார், பூதபுரீசர், தேசிகேந்திரர், திருப்பாவை ஜீயர்' என்பன. திருத்தமக்கையார் நாச்சியாரம்மாள். தேவிகள், தஞ்சமாம்பாள். திருவேங்கடமுடையானுக்கு இலட்சத்தலத்தில் அலர்மேல்

3. ஐந்து அங்கங்கள் : (1) சங்கமும் சக்கரமுமாகிய இவற்றின் இலச்சினையைத் தோளில் தரித்தல் (2) நெற்றியில் திருமண காப்பு தரித்தல் (3) தாஸ்ய நாமம் தரித்தல். (4) திருமந்திரத்தை உபதேசித்தல் (5) திருமகள் நாதனை ஆராதித்தல் என்பவை.

மங்கை நாச்சியாரை எழுந்தருளப்பண்ணி திருவாழி திருச்சங்கு சாதித்தருளினார். இதனால் அவனுக்கு மாமனாரும் ஆசாரியரு மானார். திருக்குறுங்குடி நம்பிக்குப் பஞ்சசம்ஸ்காரம் செய்து 'இராமாநுச நம்பி' என்ற தாசிய நாமம் சாத்தியருளினார். தில்லி பாட்சாவிடமிருந்த செல்வபிள்ளையை திரு நாராயண புரத்தில் எழுந்தருளப் பண்ணினார். இவருக்கு ஆசாரியர்கள்: 'பெரிய நம்பி, திருமாலையாண்டான், திருக்கோட்டியூர் நம்பி, திருவரங்கப்பெருமாளரையர், பெரிய திருமலைநம்பி, திருக்கச்சி நம்பி'.[4] சீடர்கள் : 'எம்பார், முதலியாண்டான், கூரத்தாழ்வான், கந்தாடையாண்டான், புண்டரீகாட்சர், (பெரிய நம்பியின் திருக்குமாரர்), தெற்காழ்வான், (திருக்கோட்டியூர்நம்பியின் திருக்குமாரர்) சொட்டைநம்பி (ஆளவந்தாரின் திருமகனார்), அணியரங்கத் தமுதனார் பிள்ளை, கோவிந்த சீயர் (யாதவப் பிரகாசர்), பிள்ளை உறங்கா வில்லிதாசர், பொன்னாச்சியார் (வில்லிதாசரின் தேவிகள்) இன்னும் பல அம்மையார்கள், அருளாளப்பெருமாள் எம்பெருமானார் சீயர், வடுகநம்பி, சுந்தரத் தோளுடையார் (திருமலையாண்டான் குமாரர்), பிள்ளைத் திருமலைநம்பி (பெரியதிருமலை நம்பி குமாரர்), திருக்குருகைப் பிரான் பிள்ளான்', இன்னும் ஆயிரம் சீடர்கள், 12000 ஏகாங்கள்,74 சிம்மாசனாதிபதிகள்,700சீடர்கள் 300 கொத்தை யம்மைஷியகளும், சாத்தின.சாத்தாத முதலிகளும், மகாராசர்களும், திருநாராயணபுரத்தில் ஐம்பத்திருவரும் மற்றும் பலரும்.

இவருடைய திருமேனிகள் நான்கு. (1) நம்மாழ்வார் நாதமுனிகளுக்குக் கொடுத்தருளிய 'பவிஷியதாசார்யர்

4. பார்ப்பனர்கள் எழுதிய நூல்களின் திருக்கச்சி நம்பியைத் தவிர்த்திருப்பது வருந்தத் தக்கது.

அணிக்கிரகம், (2) உடையவர்தானே திருநாராயணபுரத்தில் ஐம்பத்திருவர்க்காக ஏறியருளப் பண்ணியது; (3) கந்தாடையாண்டான் திருப்பெரும்புதூரில் நிறுவச் செய்து அதனை உடையவர் ஆலிங்கனம் செய்தது, (4) பின்பு கந்தாடையாண்டான் நம்பெருமான் நியமனத்தினால் அருளப் பண்ணியது. கந்தாடையாண்டானும், பட்டரும் அவர் திருநட்சத்திரங்கள் தோறும் பெருவிழாவாக நடத்திக் கொண்டிருந்தனர். இவருக்குப் பாலமுதம் காய்ச்சும் கைங்கரிய பரர்கிடாம்பிப் பெருமாளும், வடுக நம்பியும், பிரசாதம் தயாரிக்கும் கிடாம்பியாச்சானும் திருமடைப்பள்ளித் தொண்டர்கள். இவர்தம் அருளிச் செயல்கள்; 'ஸ்ரீபாஷ்யம், வேதாந்தசாரம், வேதாந்ததீபம்,வேதாந்த சங்கிரகம், கத்தியத்திரயம், நித்தியம், கீதாபாஷியம்' ஆகிய ஒன்பது. வயது 120.

இராமாநுசருக்குப் பின் சில ஆசாரியர்கள் சில வடமொழி-தென் மொழி அருளிச் செயல்கட்குப் பொருளுரைப் பதில் கருத்து வேறுபாடுகள் காரணமாக பிளவுகள் ஏற்பட்டு வடகலை தென்கலை சம்பிரதாயமாகப் பிரிந்தனர். வடகலை ஆசாரிய பரம்பரை, தென்கலை ஆசாரிய பரம்பரை என்று இரு ஆசாரிய பரம்பரைகள் வளர்ந்தன. முன்னவர் வடமொழி நூல்கட்கு முன்னுரிமையும், அருந்தமிழ்நூல்கட்குப் பின் னுரிமை தருவதாகவும்; பின்னவர் ஆழ்வார் அருளிச்செயல்கள் போன்ற தமிழ்நூல்கட்கு முன்னுரிமையும், வடமொழி நூல்கட்குப் பின்னுரிமையும் தருவதாகச் சொல்வர். வெளிப் படையாக வடகலையார்திருமண் காப்பில் பாதம் இல்லை; தென்கலையார் திருமண் காப்பில் பாதம் உண்டு. இல்லத்தில் பிற லௌகிக நிகழ்ச்சிகளிலும் சிலவேறுபாடுகள் உண்டு.

## (அ) வடகலை ஆசாரிய பரம்பரை

*(1).* **திருக்குருகைப்பிரான் பிள்ளான் :** *(பிறப்பு. கி.பி. 1068) பிரசண்டாம்சம். திருமலையில் இவர் பெரிய திருமலை நம்பியின் திருமகனாக அவதரித்தவர், 'பிள்ளான்' என்றே வழங்குவர். உடையவருக்கு திருவடிசம்பந்தி; ஞானபுத்திரரும் ஆவார். உடையவரின் நியமனப்படி 'திருவாய்மொழிக்கு' ஆறாயிரப்படி என்ற முதல் வியாக்கியானம் அருளிய அருட் செல்வர். இவர் அருளிச் செய்த மற்றொரு நூல் 'திருக்குருகைப் பிரான் பிள்ளான் பரமரகசியம்' என்பது.*

*(2).* **எங்களாழ்வான் :** *(பிறப்பு கி.பி. 1108): விஜயாம்சம். இவர் திருவெள்ளறையில் சோழியர் குடியில் அவதரித்தவர். திருநட்சத்திரம் : ஆனி-சுவாதி. எம்பெருமனார் நியமனத்தால் விஷ்ணுபுராணத்திற்கு விசிட்டாத் வைதபரமாக ஸ்ரீபாஷியத்திற் கிணங்க வியாக்கியானம் செய்தருளினார். திருக்குருகைப்பிரான் பிள்ளானிடம் ஸ்ரீபாஷ்யம் சேவித்தவர். நாடாதூரம்மாளைச் சுவீகரித்து பாஷ்யம் முதலிய கிரந்தங்களைச் சொல்லி வைத்தவர். 'சாரார்த்த சதுஷ்டம்', 'சங்கதிமாலை' இவர்தம் அருளிச் செயல்கள்.*

*(3).* **நடாதூரம்மாள் :** *(பிறப்பு. கி.பி. 1165); சுபத்திராம்சம். இவர் (பெண் அல்லர்) காஞ்சியில் தேவராசப்பெருமாள் என்பாருக்கு வரதகுரு என்று அவதரித்தார். திருநட்சத்திரம் : சித்திரையில் சித்திரை. இவர் உடையவரின் மருமகனாரான நடாதூர் ஆழ்வானுக்கு திருப்பேரர் வேறு திருநாமம் : வரதாச்சாரியார். ஆசாரியர், எங்காழ்வான். சீடர்கள் : 'சுருதப்' பிரகாசிக பட்டர், வாதி ஹம்சம்பு, தாராசாரியர், கிடாம்பி*

அப்புள்ளார், 'ஸ்ரீகிருஷ்ணபாதர் என்ற வடக்குத் திருவீதிப் பிள்ளை'. இவர் எங்களாழ்வானிடம் ஸ்ரீபாஷ்யம் சேவிக்க விரும்பித் தந்தையாரின் கட்டளைப்படி எங்காழ்வானின் திருமாளிகையில் வாயிற்கதவினைத் திறக்க ஆழ்வான் 'யார்?' என்றனர். வரதகுரு மறுமொழியாக 'நான்தான்' என்றனர். இதைச்செவியுற்ற எங்களாழ்வான் "நான் செத்தபிறகு வருக" என்று கூறி அனுப்பினார். வரதகுரு நடந்ததைத் தந்தையாரிடம் தெரிவிக்க, தந்தையாரும் "ஆசாரியரிடம் நான் என்னும் அகங்காரத்தையொழித்து 'அடியேன்' என்று கூறிச் செல்க" என்று அறிவுறுத்தித் திரும்பவும் அனுப்பினார். வரதகுரு மீண்டும் சென்று அடியேன் இராமாநுசதாசன் என்று கூறித் தண்டன் சமர்ப்பித்தார். ஆசாரியரும் களிப்பு மிகுதியினால் புத்திரன்மீது கொள்ளும் பாசத்தைப்போல் அன்புடையராய் "எனக்கும் கொள்ளியிட்டு இறுதிச் சடங்கு செய்வதாய் வாக்குறுதி செய்து தருவீராகில் ஸ்ரீபாஷ்யம் சேவிக்கலாம்" என்று கூறினார். வரதகுருவும் தந்தையாரின் அனுமதி பெற்று ஸ்ரீபாஷ்யம் படியைக் கையில் வைத்துக் கொண்டு வாக்குறுதி செய்து கொடுத்து ஸ்ரீபாஷ்யம் முதலிய கிரந்தங்களை ஐயம் திரிபு அறச் சேவித்தார்.

ஒருநாள் பெருமாளுக்குப் பாலமுது சமர்ப்பிக்கையில் பால் அதிக வெப்பமாய் இருப்பது கண்டு எம்பெருமானிடத்துப் பரிவாலே சாத்திர நியமத்தையும் கடந்து அப்பாலமுதை வாயிட்டு ஊதிப் ஆற்றப்புக பெருமாளும் மகனிடத்து மாதாவுக்கு உண்டான அன்பு தம் விஷமாக இவருக்கு உண்டானது கண்டு "எனக்கு நீர் அம்மாவோ?" என்று உகந்தருளினான். அதுமுதல் இவருக்கு "அம்மாள்" என்ற

திருநாமம் வந்து "நடாதூரம்மாள்" என வழங்கப்பெற்றார். மற்றொரு நாள் இவர் காட்டுவழியே திருவேங்கடத்தை நோக்கிச் செல்லுகையில் வழியில் பெருமாளுக்குப் பிரசாதம் அமுது செய்விக்கத் தகுந்த இடம் வாய்க்காமல் இருந்தது. இதனால் இவர் பெருமாளுக்குத் திருவாராதானம் செய்ய முடியாமல் உபவாசமாக இருந்தார். திருவேங்கட முடையானே ஒரு வேதியன் வடிவில் பிரசாதம் கொணர்ந்து 'இது பெருமாளுக்கு ஆராதனம் செய்தது' என்று சொல்லிக் கொடுக்க அதே அம்மாள் அமுது செய்ததும் வேதியனாக வந்த வேங்கடமுடையான் மறைந்தருளினான்.

**(4). கிடாம்பிஅப்புள்ளார்:** *(பிறப்பு. கி.பி. 1221);* இவருக்கு ஆத்ரேய இராமாநுசர் என்ற பெயரும் உண்டு. இராமாநுசருக்கு மடைப்பள்ளி கைங்கரியம் புரிந்து வந்த கிடாம்பி ஆச்சானின் கொள்ளுப் பேரர். வாத்சய வரதாசாரியரின் சீடர். 'நித்தியகுலிசம்' என்ற வாதத்திற்குரிய நூலின் ஆசிரியர். மாற்றுக் கருத்துக் குரியவர்கள் இவரைக் காணவே அஞ்சுவர். அவ்வளவு வேகமாக வாதிடுவர்.

**(5). வேதாந்த தேசிகர் :** *(பிறப்பு. கி.பி. 1268-1369)* கண்டாம்சம். அவதாரத் தலம் காஞ்சி. தூப்புல். திருத்தந்தையார் ஆனந்த சூரியர். திருத்தாயார் தோதாத்திரி அம்மை. திருக்குமாரர் நயினாராசாரியர். வேறு திருநாமங்கள் : 'வேங்கடநாதன், கவிதார்க்கிக கேசரி, சர்வதந்திரசுவதந்திரர், துப்புல் பிள்ளை' முதலியன. ஆசாரியர், நடாதூர் அம்மாளின் சீடரும், தம் மாதுலரும் உடையவர் திருவடி சம்பந்தியும் சுப்பிரதிஷ்டாம் சான கிடாம்பி அப்புள்ளார். சீடர்கள் : 'நயினாராசாரியர் (தம்

குமாரர்), பிரம்மதந்திரசுவதந்திர சீயர். திருவாராதனப் பெருமாள் : திருவேங்கடமுடையான், திருப்பாணாழ்வார்'. ஹயக்ரீவ உபாசகர். இவர் திருவடிகளை ஆச்ரயித்தவர்கள் : கந்தாடை எம்பார், குமாண்டூர் அப்பை, குமாண்டூர் பிள்ளை. இவர் திருவடிச் சம்பந்திகள் : கிடாம்பிப்பிள்ளை, குஞ்சம்பூர் இராமாநுசாசாரியர் துப்புல் அப்பை, அருளிச்செயல்கள். 'தேசிகப்பிரபந்தம் (தமிழ்ப்பிரபந்தங்களின் திரட்டு) இது தவிர மணிப்பிரவாளநடையில் அமைந்த ஸ்ரீமத்ரகசியதிரயசாரம்' மிகுபுகழ் வாய்ந்தது. மற்றும் வடமொழியில் ஸ்தோத்ர கிரந்தங்கள் 28; காவிய கிரந்தங்கள் 4; நாடகக்கிரந்தம் 1; வேதாந்த கிரந்தங்கள் 14; வியாக்கியானகிரந்தங்கள் 8; அநுட்டானகிரந்தங்கள்2; இரகசிய கிரந்தங்கள் 32. இவர் அருளிச் செயல்கள் மொத்தம் 121 கிரந்தங்கள்.

**(6). நயினாராச்சான் பிள்ளை :** (பிறப்பு.கிபி.1316); வேதாந்த தேசிகரின் திருக்குமாரர். திருநட்சத்திரம் - ஆவணி-ரோகிணி. ஆசாரியர், தந்தையார் வேதாந்த தேசிகர். திருநாமங்கள்; குமார வேதாந்தாசாரியர், குமார வரதாசாரியர். சீடர், பிரதிவாதி பயங்கரம் அண்ணன். இவரும் தந்தையைப்போல் வாதத்தில் வல்லவர். திருவடி சம்பந்திகள் : எம்பெருமானாரப்பன், குமாண்டூர் ஆச்சான், பேராளிப்பாக்கம் நயனார். அருளிச் செயல்கள் : 'பிள்ளை அந்தாதி, இது தவிர அநிரவச நீயகண்டம், விரோதி பரிகாரம் ஆசாரிய மங்களம்' முதலியன.

இவருடன் வடகலை ஆசாரியர் பரம்பரை முற்றுப் பெறுகின்றது.

## (ஆ) தென்கலை ஆசாரிய பரம்பரை

*1). **எம்பார்** : (பிறப்பு. கி.பி. 1025); இராமாம்சம். திருப்பெரும்புதுரை யடுத்த மழலை மங்கலத்தில் கமலநயன பட்டருக்கும், உடையவரின் சிறிய தாயாரான பெரிய பிராட்டியாருக்கும் திருக்குமாரராய் அவதரித்தார். தம் தாய்மாமனாகிய பெரிய திருமலை நம்பியால் 'கோவிந்தபட்டர்' என்று திருநாமம் சாத்தப்பெற்றார். யாதவப்பிரகாசரிடம் உடையவருடன் வேதாந்தங்களைக் கற்று வந்தார். இவர் கங்கையில் நீராடும்போது ஓர் இலிங்கம் கையில் வந்து சேர 'உள்ளங்கை கொணர்ந்த நாயனார்' என்று திருநாமம் சாத்திக் காளத்தியில் வழிபாடு செய்து வந்தார். இவரைத் திருமலை நம்பி திருத்திப் பணி கொண்டார். இவரை 'இராமாநுச பாதசாயை' என்றும் சொல்லுவர். ஆசாரியர் 'எம்பெருமானார்' சீடர்கள்; கூரத்தாழ்வான் குமாரர்களாகிய பெரிய பராசரபட்டரும், சீராமப்பிள்ளையும். வயது 105.*

*(2). **பட்டர்** : (பிறப்பு. கி.பி. 1062); பராசாரம்சம். திருவரங்கத்தில் கூரத்தாழ்வானுக்கும், கூரத்தாண்டாளுக்கும் திருமகனாக அவதரித்தார். திருநட்சத்திரம் : வைகாசிஅனுஷம் வேறு திருநாமங்கள் : 'பெரிய பட்டர், பராசாபட்டர், வேதாந்தாசாரியர் பட்டர், திருவரங்கப்பெருமாள் பட்டர்'. ஆசாரியர், எம்பார். கூர்மையான அறிவுடைய இவரைப்பற்றிய குறிப்புகள் வைணவ உரைகளில் வருகின்றன. 'பட்டர் நிர்வாகம்' என்பது மிகுப்புகழ் பெற்றது. எம்பெருமானாரின் கட்டளைப்படிவிஷ்ணு சகஸ்ரநாமத்திற்குப் பேருரை வகுத்த பெருமகனார். திருநெடுந்தாண்டகத்தின் 'மைவண்ண*

நறுங்குஞ்சி' (21) என்ற பாசுரத்திற்கு இவர் அருளிய வியாக்கியானம் தனிப்பெருஞ்சிறப்புடையது ஆசாரியர், எம்பார். சீடர்கள்; 'நஞ்சீயர், பிள்ளைப்பெருமாள் அய்யங்கார், செடியெடுத்த நல்லான், நம்பி கோவர்த்தனதாசர், பிள்ளை விழுப்பரையர், அம்மன் ஆழ்வான், நலந்திகழ் நாராயண சீயர், உத்தண்ட பட்டர் என்னும் நடுவில் திருவீதிப் பிள்ளைபட்டர், கடகத்துப் பிள்ளை, வாக்விசயபட்டர், வீரசிகாமணி வில்லவராயன், அழகிய மணவாளப்பட்டர், அவர் காலத்தவர் அழகிய மணவாளப் பெருமாளரையர், ஆப்பன், ஆப்பன் திருநறையூரரையர், ஆப்பன் திருவழுந்தூரரையர், இவர் குமாரர் உத்தண்ட பட்டர், இவர் குமாரர் சீரங்கப்பட்டர், இவர் குமாரர் சுதர்சன பட்டர், இவர் குமாரர் சீரங்கராசபட்டர், இவர் குமாரர் திருவேங்கடபட்டர்'. இவர் திருநெடுந்தாண்டகப் பாசுரம் (21) ஒன்றிற்குப் பொருள் அருளிச் செய்யாநிற்க, அப்போது வைகுந்த நாதன் பெரிய திருவடி மேலே எழுந்தருளக் கண்டு அதைத் தம் திருப்பவளத்தாலே அருளிச் செய்து திருக் கண்களை மலர விழித்து, திருமேனிபுளகாங்கிதமாய் முறுவல் செய்து, திருமுடியிலே அஞ்சலி செய்து கொண்டு கிரக்க பாலம் வெடித்து திருநாட்டிற்கு எழுந்தருளினார். வயது 28. இவர்தம் அருளிச் செயல்கள் : ஸ்ரீ ரங்க ராஜஸ்தவம், ஸ்ரீ குணரத்ன கோசம், தத்துவதிரயசாரம், பிரவணவிவரணம், இலட்சுமி கல்யாணம், விஷ்ணு சகஸ்ரநாம பாஷியம், கிரியாதீபம், அஷ்டசுலோகி, சதுலோகி, துவிசுலோகி, தனிசுலோகி, மைவண்ண நறுங்குஞ்சி வியாக்கியானம்' ஆகியவை.

**(3). நஞ்சீயர் :** (பிறப்பு. கி.பி. 1173); இவர் திருநாராயண புரத்தில் அவதரித்தவர். திருநட்சத்திரம் - பங்குனி உத்தரம். இவர்

வேதாந்தி என்று முதலில் திருநாமம் பெற்றிருக்கையில் வாதபிட்சைக்கு வந்த பட்டரிடம் வாதிட்டுத் தோற்றவர். பின்னர் பட்டரின் திருவடிச் சம்பந்தம் பெற்று அவருடைய சீடரானார். ஒரு நாள் பிச்சைக்கு வந்த வைணவருக்குப் பிச்சையிட மறுத்த தேவியாரை வெறுத்துத் திரவியத்தைப் பகுத்து தேவியாருக்கு அளித்து, குருதட்சிணை கொண்டு சந்நியாச ஆசிரமத்தை ஏற்றார். தம் ஆசாரியரைக் காணச் செல்லுகையில் பட்டர் 'நம்சீயர்' வந்தார் என்று கூற அன்று முதல் 'நஞ்சீயர்' என்ற பெயர் உண்டாயிற்று. இவருக்குச் 'ஶ்ரீராங்கநாதர்', வேதாந்த வேதியர் மாதவாசார்யர் என்ற வேறு திருநாமங்களும் உண்டு. சீடர்கள்; நம்பிள்ளை; ஶ்ரீசேனாபதிசீயர், குட்டிக்குறி இளையாழ்வார். இவர் அருளிச் செய்த கிரந்தங்கள் : திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படி, திருப்பாவைக்கு 'ஈராயிரப்படி' திருவந்தாதிகள், கண்ணிநுண் சிறுத்தாம்பு, திருப்பல்லாண்டு இவற்றிற்கு உரை. இவர் திருவாய்மொழியை நூறு உரு வியாக்கியானம் செய்தபடியால் திருவாய்மொழிக்குச் சதாபிஷேகம் பண்ணினர் என்ற புகழ் இவருக்கு உண்டு. பெற்றி என்பார் இவருக்கு அடிமைப்பட்டுச் சிறப்பான பொருளைக் கேட்டார். வயது 100.

**(4). நம்பிள்ளை:** (பிறப்பு.கி.பி.1147-1252); இவர் காவிரியின் தென்கரையிலுள்ள நம்பூரில் அவதரித்தார். இவருடைய பிள்ளைத் திருநாமம் 'வரதராசர்' என்பது. திருநட்சத்திரம் - கார்த்திகையில் கார்த்திகை. நஞ்சீயரால் நம்பிள்ளை எனத் திருநாமம் பெற்றவர். வேறு திருநாமங்கள் : 'கலி வைரி, திருக்கலிகன்றிதாசர், லோகாசார்யர், ஶ்ரீ சூக்தி சாகரர், உலகாரியன், அபயப்பிரதாசர். இவர் காலத்தவர் அப்பிள்ளை,

அம்மங்கி பெரிய முதலியார், ஏறு திருவுடையதாசர், பெரிய கோயில் வள்ளலார்'. சீடர்கள் : வடக்குத் திருவீதிப்பிள்ளை, கந்தாடை தோழப்பன், பின்பழகிய பெருமாள் சீயர், ஈயுண்ணி மாதவப்பெருமாள், வாதிகேசரி அழகிய மணவாளசீயர், நடுவில் திருவீதிப் பட்டர், வேல்வெட்டிப்பிள்ளை, பெரிய வாச்சான்பிள்ளை, ஏறுதிருவுடையதாசர், சீனிக்கரபிள்ளை இராமானுசாசார்யர், வானமாமலைதாசர், திருக்குருகூர்தாசர்.' இவர் அருளிச் செய்த கிரந்தங்கள்: திருவாய்மொழிக்கு ஈடுமுப்பத்தாறாயிரப்படி, திருவிருத்தத்திற்கு ஈடு, கண்ணிநுண் சிறுத்தாம்புக்கு ஈடு, திருவாய்மொழிக்கு 'இருபத்து நாலாயிரப்படி' என்னும் வியாக்கியானம் வரையுமாறு பெரியவாச்சான் பிள்ளைக்குக் கட்டளையிட்டார். நம்பெருமாள் நம்பிள்ளையைக் கடாட்சித்து அவரைத் தம்முடைய திருமுடிப்பக்கத்திலிருந்து திருவாய்மொழியை நிர்வகிக்குமாறு நியமனம் செய்ய, நம்பிள்ளையும் "நாயினேன் தேவரீருடைய நியமனத்தைத் தப்பமுடியாது. ஆகிலும் அவ்விடம் முன்பு துரியோதனன்பற்றிய இடமாலையாலே, அடியார்க்குப் பற்றும் இடம் ஆகாது"என்று விண்ணப்பம் செய்ய,பெருமாளும் உகந்து அதை ஆமோதிக்க, அது கண்டு அங்கிருந்தோர் அனைவரும் வியப்பெய்தினர்.

**(5). வடக்குத் திருவீதிப் பிள்ளை :** *(பிறப்பு.கிபி.1167-1285);* ஐயாம்சம். திருவரங்கத்தில் பிள்ளை உலக ஆசிரியருக்கு திருமகனாய்த் திருவவதரித்தார். கோயில் வடக்குத் திருவீதியில் இவரது திருமாளிகை இருந்ததால் இப்பெயரால் வழங்கப் பெற்றவர். திருநட்சத்திரம் : ஆனி-சுவாதி. திருநாமங்கள் திராவிடவேதாந்த தேசிகர், ஸ்ரீகிருஷ்ணபாதர். தேவிகள்,

ஸ்ரீரங்கநாச்சியார். திருக்குமாரர்கள் : பிள்ளை உலக ஆசிரியர். (பாட்டன் பெயரை வைத்தனர் போலும்), அழகிய மணவாளப்பெருமாள் நாயனார். சீடர்கள் : 'தம் குமாரர்கள் இருவரும், ஈயுண்ணிமாதவர், பத்மநாமப் பெருமாள், பராங்குச சீயர், நாயனார் கூரகுலோத்தும் தாசர், வங்கிபுரம் சீரங்காசாரியர் வானமாமலை தாசர்', அருளிச் செயல்கள்; திருவாய்மொழிக்கு ஈடு முப்பதாறாயிரப் படி (நம்பிள்ளை அருளியவற்றை மனத்திலிருந்து எழுதியவர்). வயது 97

**(6). பிள்ளை உலகஆசிரியர்:** (பிறப்பு. கி.பி. 1300); தேவப்பெருமாள் அம்சம். திருவரங்கத்தில் வடக்குத் திருவீதிப் பிள்ளைக்கும், சீரங்க நாச்சியாருக்கும் திருக்குமாரராக அவதரித்தவர். திருநட்சத்திரம் : ஐப்பசி திருவோணம். திருநாமம், உலக ஆசிரியர். துருக்கர் காலத்தில் பெருமாள் நாச்சியாருடன் வெளியேறிய பொழுது அவர் பிரிவற்றாது தாமும் முதலிகளுடன் புறப்பட்டு 'சோதிடக்குடி' என்னும் சிற்றூரில் பெருமாளுடைய எல்லாச் சொத்துகளையும் கள்வர் அபகரித்ததைக் கேட்டுத் தாமும் தம்முடைய அனைத்தையும் பறி கொடுத்தார். சாதி வேறுபாடின்றி,பேதையரும் பெண்களும் உய்யக்கருதி அரிய பெரிய பதினெண்கிரந்தங்களை ('அஷ்டதசா இரகசியங்களை'; அஷ்டம்-எட்டு தசா-பத்து)வெளியிட்ட ஆசார்யர்களில் இவருக்கு ஒப்பாவார் ஒருவரும் இலர். இவை தவிர, 'தத்துவ விவேகம், நாலுவார்த்தை' என்பவையும் இவர்தம் அருளிச் செயல்கள். இவர் கருத்தைப் பின்பற்றி மணவாள மாமுனிகள் வரைந்த வியாக்கியானத்தின் பொரு ளமைப்பும், நடையழகும் ஒருவராலும் அளவிடக்கூடியதல்ல. இவருடைய திருவடிசம்பந்தம் பெற்றவர்கள் :'திருவாய்மொழிப்

பிள்ளை, வங்கிபுரம் சீரங்காசாரியர், கோட்டூரிலண்ணன், விளாஞ்சோலைப்பிள்ளை, வாதிகேசரி அழகிய மணவாளசீயர், கிடாம்பி இராமாநுசப்பிள்ளான். மணப்பாகத்தது நம்பி, சடகோப சீயர், நாலூர்பிள்ளையாச்சான் பிள்ளை, திருப்புட்குழி சீயர், நாலூர்பிள்ளை தாசர், கூரகுலோத்துமதாசர், திருவாய்மொழிப் பிள்ளை, தமப்பனாரண்ணர். திருவாய்மொழிப் பிள்ளை, திருத்தாயார், கொல்லிகாவல்தாசர், கோட்டூர் அழகிய மணவாளப்பிள்ளை, திகழக்கிடந்தாரண்ணன் ஈயுண்ணி அழகிய பெருமாள் நாயனார்' ஆகியோர். வயது 105.

**(7). திருவாய்மொழிப்பிள்ளை :** (பிறப்பு. கி.பி.1380); குந்தீ நகரத்தில் அவதரித்தார். இவர் தாய், பிள்ளை லோகாசாரியர் கோயிலை விட்டு வெளியேறியதனால், அதனைத் தரியாது உயிர்விட, சிறிய தாயாரிடம் வளர்ந்தனர். திருநாமங்கள்: 'திருமலையாழ்வான், ஸ்ரீசைலேசர், சடகோபதாசர், காட்டு வெட்டிஐயன்'. ஆழ்வார் திருநகரில் நம்மாழ்வாரைப் பிரதிஷ்டை செய்வித்து 'சதுர்வேதிமங்கலம்' என்னும் ஓர் ஊரை உண்டாக்கி உடையவருக்கு ஒரு கோயிலையும் கட்டிவைத்தார். திருவனந்தபுரத்தில் விளாஞ்சோலைப்பிள்ளை யிடத்து இரகசிய விசேடங்களைக் கேட்டு திருவாய்மொழியில் வல்லவராய் திருவாய்மொழிப்பிள்ளை என்ற திருநாமம் பெற்றார். ஆசாரியர்; பிள்ளை உலக ஆசிரியர். சீடர்கள்: மணவாள மாமுனிகள், சடகோபசீயர் எம்பெருமானார் சீயர். வயது 105

**(8). மணவாள மாமுனிகள் :** (பிறப்பு. கி.பி. 1371-1443); சேஷாம்சம். திருநட்சத்திரம் : ஐப்பசி-மூலம். பாண்டிநாட்டில் சிக்கில் கிடாரம் என்ற சிற்றூரில்அவதரித்தார்(திருக்குருகூரில் அவதரித்ததாகவும் கொள்வர் சிலர்). திருத்தந்தையார்

திகழக்கிடந்தான் திரு நாவீறுடைய பிரான் தாசரண்ணர்; திருத்தாயார் ஸ்ரீரங்கநாச்சியார். பார்பனமரபினர். அழகிய மணவாளன் என்பது இவர் இயற்பெயர். வேறு திருநாமங்கள்; 'யதீந்திரப்பிரவணர், திருமலை தந்த பெருமாள், முப்பத்தாறாயிரப் பெருக்கர், சௌமிய ஜாமாத்ரு யோகீந்தரர், காந்தேபாயந்தர், வரவரமுனி, வரயோகி, இராமாநுசன் பொன்னடி, ருசிர ஜாமாத்ருயோகீந்தரர், அழகிய மணவாளசீயர், பெரியசீயர், துப்பில் குலமுடையார்தாசர், சடகோபசீயர். திருக்குமாரர், சீயர் நாயனார். (இராமாநுசய்யன்). ஆசாரியர்: திருவாய்மொழிப்பிள்ளை. தாம் திருக்குருகூரில் இராமாநுசருக்கு எடுப்பித்த குன்றம் அனைய திருக்கோயிலின் நிர்வாகத்தையும் தம் சீடராகிய இவரிடம் ஒப்படைத்தார். மேலும் அவர் வடமொழி கிரந்தங்களில் பலகாலும் கண் வையாமல், ஸ்ரீபாஷ்யத்தை ஒருகால் கேட்டு, தமக்கும் எம்பெருமானார்க்கும் பிரியமான திருவாய்மொழி முதலிய அருளிச் செயல்களை நாடோறும் ஓதிக்கொண்டு தென்னரங்கர் செல்வமுற்று அத்திருத்தலத்து 'மாறன் உரை செய்த தமிழ் மறையை' வளர்த்து, இந்தலீலா விபூதியை நித்திய விபூதியாக்கிக் கொண்டு திருவரங்கம் பெரிய கோயிலில் நித்திய வாசம் செய்யும்படி பணித்தார். ஆசாரியரின் ஆணையை அவ் வண்ணமே நிறைவேற்றினார் அருமைச் சீடர்.

பெரிய பெருமாள் ஆணைப்படி கோயிலின் பெரிய திருமண்டபத்தில் ஆழ்வாருடைய திருவாய்மொழிப் பொருளை ஈடு முப்பத்தாறாயிரப்படியுடன் ஓராண்டு முழுதும் காலட்சேபம் செய்து 'முப்பத்தாறாயிரப்பெருக்கர்' என்ற விருதையும் பெற்றார். சீடர்கள்: 'வானமாமலை இராமாநுச சீயர்,

அப்பிள்ளை, அப்பிள்ளான், நம்மையதிராச ராமாநுசன், அழகிய மணவாளன் (நம்பெருமாள்), சிங்கரயர், கோயில் கந்தாடையண்ணன், பரவஸ்து பட்டர்பிரான் சீயர், பிரதிவாதி பயங்கரம் அண்ணன், வண்சடகோப சீயர் என்கின்ற திருவேங்கட சீயர், எறும்பியப்பா, மகாராஜாக்களும் சாத்தின சாத்தாத ஸ்ரீவைணவர்கட்குக் கணக்கில்லை.

இவர் திருவடி சம்பந்தி வேட்டூர் சிங்கராசாரியார், மதுரை மகாபலிராயனுக்கு இரகசியங்களை உபதேசித்து முத்தரசு என்னும் கிராமம் பெற்று, அதற்கு அழகிய மணவாளபுரம் என்று பெயரிட்டார். இவர் இருந்தவிடத்தைச் சிலர் தீயிட்டுக் கொளுத்தி விட, இவர் பாம்புருக் கொண்டு வெளிவந்ததாக ஒரு வரலாறும் உண்டு. ஆசாரியருக்குத் தமது உண்மை உருவமான சேஷாவதாரத்தைக் காட்டியதாக மற்றொரு வரலாறும் உண்டு. சடகோபக்கொற்றி என்னும் ஓர் அம்மையார் பெரிய சீயர் திருக்காப்புச் சோத்துக் கொண்டு தனியான ஓரிடத்தில் பகவதநுபவத்தில் இருக்கும்போது கதவின்புரையில் இவரைத் திருவனந்தாழ்வானாகக் கண்டதாக இன்னொரு வரலாறும் உண்டு.

மகாபலி வாணராயன் என்னும் அரசன் ஒருநாள்இரவில் பெரிய சீயருக்குத் தெரியாமல் அவருக்குச் சீபாதம் தாங்கிக் கொண்டுசென்றான். மறுநாள் சீயர் இதனை அறிந்து ஆச்சரியப் பட்டருளினார். இவர் நியமித்த அஷ்டதிக் கஜங்களாகிய 'வானமாமலை சீயர், பட்டர்பிரான் சீயர், திருவேங்கட சீயர், கோயில் கந்தாடையண்ணன், பிரதிவாதி பயங்கரம் அண்ணன், எறும்பியப்பா, அப்பிள்ளை, அப்பிள்ளான்' ஆகியோர் இவர் திருவடிகளில் ஆச்ரயித்தவர்கள். 'கோயில் கந்தாடையண்ணன்,

உடையவருக்கு முதலியாண்டானைப் போலே இவருக்குப் பாதுகாவலராயிருப்பவர். எறும்பியப்பா வடுக நம்பியைப் போலே தேவுமற்றியாத அளவுக்கு மீறிய அன்பாயிருப்பவர். பிரதிவாதிபயங்கரம் அண்ணன் ஆழ்வானைப்போலே உசாத் துணையாயிருப்பவர். அப்பிள்ளார் மடத்தில் எல்லா நிகழ்ச்சி கட்கும் பொறுப்பாயிருப்பவர். வானமாமலை சீயர் பிரியாது அடிமை செய்பவர். பட்டர் பிரான் சீயர் எம்பாரைப் போலே பாதச்சாயாப்பன்னராயிருப்பவர்'. இறுதிக் காலத்தில் ஸ்ரீசடகோபர் சீயர் மூலம் இவர் துறவறத்தை (துரியாசிரமத்தை) மேற்கொண்டு 'அழகிய மாமுனிகள்' என்ற திருப்பெயருடன் திகழ்ந்தார்.

**அருளிச் செயல்கள் :** 'தத்துவத்திரயம், இரகசியத்திரயம், ஸ்ரீவசனபூஷணம், ஆசாரிய ஹிருதயம், ஞானசாரம், பிரமேயசாரம், சப்தகாதை, ஏழு பாட்டு, பெரியாழ்வார் திருமொழி (401 பாசுரங்கள்), இராமாநுச நூற்றந்தாதி' ஆகிய பத்து பிரபந்தங்கட்கு வியாக்கியானம் இட்டருளினார். 'திருவாய்மொழி, நூற்றந்தாதி, உபதேசரத்னமாலை, ஈட்டுக்கு பிரமாணத்திரட்டு, தத்துவத் திரயத்திற்குப் பிரமாணத்திரட்டு, ஸ்ரீவசனபூஷணபிரமாணத்திரட்டு, ஆர்த்திப்பிரபந்தம், தேவ ராசமங்களம், எதிராச விம்சதி, திருவாராதானக் கிரமம், இயல் சாத்து' முதலியன. மேலும் அவ்வப்பொழுது பாடிய தனிப்பாடல்களும், விடுதிச் சுலோகங்களும் உண்டு. இவர் வாழ்ந்த காலம் 74 ஆண்டுகள்.

இவருடன் தென்கலை ஆசாரியர்கள் வரலாறு முற்றுப் பெறுகின்றது.

குறிப்பு : இந்த வரலாற்றில் பிள்ளை, முதலியார் என்று வருபவர்கள் யாவரும் பார்ப்பனர்களே. வடுக நம்பி (தெலுங்கர்) மாறனேர் நம்பி ( திருக்குலத்தார்) பிள்ளையுறங்காவில்லிதாசர் (வேடர்குலத்தவர்) முதலியோர் மட்டிலும் பார்ப்பன ரல்லாதார். பார்ப்பனர்கள் மட்டிலுமே சிறந்த இலக்கிய, தத்துவ நூல்களில் வல்லுநர்களாகத் திகழ்ந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது.

# 8. வைணவ சீலர்கள்

உடையவர் காலத்திற்கு முன்னும் பின்னுமாக இருந்த ஆசாரியர்களைப்பற்றி 'வைணவ ஆசாரியர்கள்' என்ற தலைப்பில் சொல்லப்பட்டவர்கள் போக உடையவர் காலத்திலிருந்த ஆசாரியர்கள், அடியவர்கள் பற்றிய குறிப்புகள் ஈண்டுத் தரப்பெறுகின்றன.

## 1. ஆசாரியர்கள் :

*(1).* **திருக்கச்சி நம்பி :** சுப்ரதிஷ்டாம்சம். இவர் சென்னைக்குச் சுமார் 24 கி.மீட்டர் தொலைவிலுள்ள பூவிருந்தவல்லியில் பிறந்தவர். தந்தையார் வீரராகவன் என்ற வணிகர்; தாயார் கமலை. தொடக்கக் காலத்தில் கச்சி அருளாளனுக்குப் பூத்தொண்டு புரிந்து வந்தார். பின்னர் அப்பெருமானுக்கு ஆலவட்டக் கைங்கரியம் புரிந்து வந்தவர். உடையவர் இளமைக் காலத்தில் அவருடைய திருத்தாயார் சொற்படி இவருடன் நெருங்கிப் பழகி வந்தார்; அவருக்குத் தொண்டும் புரிந்து வந்தார். திருக்கச்சி நம்பி உடையவருக்கு வரதராசப்பெருமாள் திருவுள்ளமாக வெளியிட்ட ஆறு வார்த்தைகள் மிகுபுகழ் பெற்றவை. அவை; (1) திருமாலே பரம்பொருள், (2) சீவான்மாவுக்கும் - பரமான்மாவுக்கும் உள்ள வேறுபாடுபற்றியது (3) பிரபத்தியே (சரணாகதி) சிறந்த முத்தி நெறி (4) மரணகாலத்தில் உள்ளத்தை இறைவனிடம் ஒருமைப் படுத்தவேண்டும் என்பதுகூட அவசியமில்லை. (5) சரீரத்தின் முடிவில் பாகவதர்கட்கு முக்தி நிச்சயம் (6) பெரிய நம்பியைக்

குருவாகக் கொள்ளவேண்டும். இந்த ஆறு வார்த்தைகளையும் நம்பி சொல்ல இராமாநுசர் இறைவனே நம்பியின் இதயத்திலிருந்து வந்தவை போன்ற உணர்ச்சியுடன் கேட்டார். இதனால் ஒரு முறையில் ஆசாரியருமாகின்றார் என்று கொள்வதில் தவறு இல்லை. இவர் 55 திருநட்சத்திரம் வாழ்ந்திருந்தார்.பூவிருந்தவல்லி திருமால் திருக்கோயிலில் இவருக்குப் பெருமாள் சந்நிதிபோல் சிறப்புடன் அமைந்துள்ளது. இரண்டு சந்நிதிகளும் அருகில் உள்ளன. அருளிச்செயல்; 'தேவராஜஷ்டகம்'.

**(2). பெரிய திருமலைநம்பி :** சுகுமாம்சம். திருமலையில் சித்திரையில் சுவாதி நட்சத்தில் அவதரித்தார். இவரை 'ஸ்ரீசைலபூர்ணர்' என்று வழங்குவதும் உண்டு. இவருக்கு இரண்டு சகோதரிகள். மூத்தவள் காந்திமதி (இராமாநுசரின் திருத்தாயார்). இளையவள் ஸ்ரீதேவி( எம்பாரின்திருத்தாயார்) காந்திமதியின் குழந்தைக்குத் தாய் மாமன் திருமலை நம்பி இலட்சுமணன் (இளையாழ்வார்) என்ற திருநாமம் இட்டு வழங்கினார். இராமனுக்குப் பணி புரிந்ததைப்போல், ஆதிசேடனைப்போல், இளையாழ்வாரும்பணிபுரிய வேண்டும், பேரறிவுள்ளவனாகவும் திகழ வேண்டும் என்பது மாதுலரின் ஆசை. இவரிடம் இளையாழ்வார் இராமாயணம் கேட்டதாக வரலாறு. இவர் ஆளவந்தாரின் திருவடிச் சம்பந்தி. வயது 100.

**(3). திருக்கோட்டியூர் நம்பி :** (கோஷ்டிபூர்ணர்); புண்டரீகாம்சம். திருக்கோட்டியூரில்[1] அவதரித்தார். திருநட்சத்திரம் வைகாசி உரோகிணி. வேறு திருநாமம்:

1. காரைக்குடி – மதுரை நெடுஞ்சாலையில் உள்ள திருப்பத்தூரி லிருந்து சிவகங்கை செல்லும் சாலையில் 3 கி. மீ. தொலைவில் உள்ளது.

கோஷ்டிபுரீசர். குமாரர்: தெற்காழ்வான்; குமாரத்தி : தேவகி பிராட்டியார், சீடர்: இராமாநுசர். இராமாநுசருக்கு திருமந்திரம் உபதேசித்தார். சொல்லற்கரிய சிரமம் கொடுத்து உபதேசித்த வரலாறு கல்நெஞ்சத்தையும் உருக்கும். திருவரங்கத்திலிருந்து திருக்கோட்டியூருக்குப் பதினெட்டு முறை வரவழைத்து, பின்னர் ஒருமாதகாலம் உண்ணாவிரதம் அநுசரிக்கச் செய்து அது வெற்றி பெற்றதும் உபதேசித்தார். உடையவர் துறவியாதலின் தண்டு பவித்திரங்களோடு தனிமையாக வரச்செய்தார். உடையவரோ 'முதலியாண்டான்' (தண்டு), பவித்திரம் ('கூரேசன்') இவர்களோடு சென்றார்; அதற்கு விளக்கமும் சொன்னார். நம்பிக்கு ஒரே வியப்பு. ஓராண் வழியாக (குரு சீடர் முறையில்) உபதேசிக்கப்படும் இதனை எவர்க்கும் தெரிவிக்கக்கூடாது என்ற உறுதிமொழியும் பெற்றார். ஆயினும், 'தான் அறப்பெய்து மாயும் தடமுகில்' என்று பாராட்டப்பெறும் இளையாழ்வார் திருக்கோட்டியூர் கோபுரத்தின்மீதேறி சாதிபேதமின்றி திருமந்திரத்தையும், அதன் பொருளையும் அனைவரும் கேட்குமாறு முழக்கினார். போர்க்களத்தில் கண்ணன் காண்டீபனுக்குக் கீதையை உபதேசிக்கவில்லையா? அது போல எனலாம். ஆசாரியரும் உடையவரை 'எம்பெருமானாரே'! என்று அழைத்து மகிழ்கின்றார். இது வரையில் 'பரமவைதிக சித்தாந்தம்' என்று வழங்கிவந்த இந்தச் சித்தாந்தம்" இன்று முதல் 'எம்பெருமானார்தரிசனம்' என்று வழங்குவதாகும்'' என்று வாழ்த்திப் போற்றுகின்றார்.

> **"காரேய் கருணை இராமாநுசா!**
> **இக்கட லிடத்தில்**
> **ஆரே அறிபவர் நின்அருளின்**
> **தன்மை? (இராமா. நூற். 25)**

என்று திருவரங்கத்தமுதனார். அருளிச் செய்த இந்த வாக்கில் 'திருமந்திரதானம்' செய்தது போன்ற உடையவரின் கருணைப் பெருஞ்செயல் குறிக்கப்பெற்றதாகக் கொள்ளலாமல்லவா? இத்தகைய வள்ளலை 'தான்அறப் பெய்து மாயும் தடமுகில்' என்று உருவகித்தது எவ்வளவு பொருத்தம்? என்று நாம் வியந்து சிந்தித்து மகிழ்கின்றோம். வயது. 105.

**(4). திருமாலையாண்டான் :** வனமாலை அம்சம். அழகர் திருமலையில் அவதரித்தவர்; திருவரங்கத்தில் வாழ்ந்தவர். திருநட்சத்திரம் : மாசி-மகம், வேறு திருநாமங்கள் 'மாலாதரர், ஞானபூர்ணர்'. ஆசாரியர்: ஆளவந்தார். சீடர் : இராமாநுசர். திருக்குமாரர்: சுந்தரத்தோளுடையான். வயது 100

**(5). திருவரங்கப் பெருமாள் அரையர் :** சங்குகரணாம்சம். திருவரங்கத்தில் ஆளவந்தாரின் திருக்குமாராக அவதரித்தார். ஆசாரியர்; ஆளவந்தார். சீடர் : இராமாநுசர். இசையில் வல்லவர். தெய்வகானமாய் இசைப்பாடல் பாடுவதில் வல்லுநர். இசைக்குப் பிரியரான காஞ்சி வரதராசர் முன் திவ்வியப் பிரபந்தத்திலிருந்து சில பாசுரங்களை இயலாகச் சேவித்தும், இசையாகப் பாடியும், நாடகமாக அபிநயித்துக் காட்டியும் அருளாளனை மயக்கி, அவன் அடிநிழலில் இருந்த இராமாநுசரைத் தந்திரமாக அரங்கனின் அடிநிழலுக்குக் கொண்டு வந்து சேர்த்த தந்திரசாலி. அரங்கத்தில் சில காலம் வாழ்ந்தவர். உடையவர், இவரிடம் நம்மாழ்வார் திருவாய் மொழியையும், மங்கை மன்னனின் பெரிய திருமொழியையும் கற்றுத் தேர்ந்தார். ஆக, பெரிய நம்பியுடன் உடையவருக்கு அறுவர் ஆசாரியரா்க அமைந்தனர்.

(6). **வாதிகேசரி அழகிய மணவாளசீயர் :** திருவாய் மொழிக்கு 'பன்னீறாயிரப்படி' என்ற வியாக்கியானத்தை அருளிச் செய்தவர். இவருடைய வாழ்க்கை வரலாறு சற்று வியப்பானது.

இவர் இல்லற வாழ்க்கையில் இருந்தபோது ஒரு நாள் ஓரிடத்தில் சேர்ந்து பயிலும் மாணவர்களைக் கண்டு அவர்கள் பயிலும் நூலைப்பற்றி வினவினார். அவர்கள் இவர் எழுத்து வாசனையற்றவர் என்பதை அறிந்தவர்களாதலின் 'முசலகிசலயம்'[2] படிப்பதாகக் கூறினர். இப்படியும் ஒன்று உண்டோ? என்று திகைத்தவர், தமது ஆசிரியரான பெரியவாச்சான் பிள்ளைக்கு விண்ணப்பம் செய்ய அவரும் இதன் விளக்கத்தை அருளிச் செய்ய, பெருநாணமுற்ற இவர் தம் ஆசாரியரின் திருவடியில் வீழ்ந்து வணங்கி தம்மை வித்துவானாக்கும்படி வேண்டிக் கொண்டார்.

ஆச்சான்பிள்ளையும் திருவுள்ளம் உவந்து முப்பத்து இரண்டு அகவையில் இவரை மாணவராக ஏற்றுக்கொண்டு கல்வி கற்பித்தார். படிப்படியாக இவர்தம் அறிவை மலரச் செய்து இவரைக் காவியம், நாடகம், அலங்காரம், வியாகரணம் பூர்வ உத்தரமீமாம்சை முதலிய சகல சாத்திரங்களிலும் வல்லுநராகச் செய்தருளினார். இவரும் பிள்ளையவர்களின் திருவருளால் சிறந்த புலமையடைந்து தம்மை எள்ளி நகையாடிய மாணாக்கர்கள் வியந்து தலைகுனியும்படி 'முசலகிசலயம்' என்ற பெயரில் காவியம் ஒன்றையும் அருளிச் செய்தார். பின்னர் இல்லறவாழ்க்கையில் வெறுப்புற்று

2. முசலகிசலயம்–உலக்கைக் கொழுந்து. முசலம்–உலக்கை; கிசலயம் – கொழுந்து – தளிர்.

துறவறத்தை மேற்கொண்டு பிறசமயங்களையெல்லாம் வென்று 'வாதிகேசரி' என்ற விருதையும் பெற்றார்.

அருளிச்செயல்கள் : பின்னர் முன்புள்ள நான்கு வியாக்கியானங்களையும் ஆழ்ந்து கற்று அவற்றின் சாரமான பொருள் சிறப்பினையெல்லாம் சுருக்கி 'பன்னீராயிரப்படி' யை அருளிச் செய்தார். வேறு நூல்கள் தீபப்பிரகாசிகை, தீப சங்கிரகம். தத்துவநிரூபணம், தத்துவ தீபம், தத்துவ பூஷணம், தந்துவ தீப சங்கிரகம், கீதாசாரம், தமிழ்க்கவிபிரபந்தம், இரகசிய விவரணமாலை, இருபத்து நாலாயிரப்படிப் பிரமாணத்திரட்டு, சுலோகரூபத்தால் திருவாய்மொழி சங்கதி முதலியன.

(7). பெரியவாச்சான்பிள்ளை : திருக்குடந்தைக் கருகிலுள்ள 'சேங்கனூரில்' யாமுன தேசிகருக்கும், நாச்சியாரம்மைக்கும் திருமகனாய்த் தோன்றியவர். திருநட்சத்திரம் : ஆவணி - உரோகிணி. வேறு திருநாமங்கள் : ஸ்ரீகிருஷ்ணபாதர், அபயப்ரதாசர், ஸ்ரீமத் கிருஷ்ணர், ஆச்சான் பிள்ளை. திருக்குமாரர்: நயனாச்சான் பிள்ளை. சீடர்கள் : 'திருக்குமாரர் நயனாச்சான் பிள்ளை, பரகாலதாசர், பின்பழகிய பெருமாள் சீயர், ஸ்ரீரங்க சாரியார், வாதிகேசரி அழகிய மணவாளப்பெருமாள் சீயர், வாதிகேசரி (அன்போடழகிய மணவாளசீயர்)'. அருளிச் செயல்கள்; நம்பிள்ளை நியமனப்படி திருவாய்மொழிக்கு "இருபத்து நாலாயிரபடி வியாக்கியானம்"; இது தவிர, 'மற்றைய மூவாயிரத்துக்கும் வியாக்கியானமும், பரந்தரகஸ்யவிவரணமும், மாணிக்கமாலை, நவரத்தினமாலை, சகலபிரமாணதாத்பரியம், உபகாரரத்தினம், கத்யத்திரயத்திற்கு, வியாக்கியானம், ஆளவந்தார் தோத்திரத்திற்கு வியாக்கியானம், அபயப்பிரதான வியாக்கியானம், அநுசந்தானரகசியம், சரமரகசியம், நிகமனப்படி, தனிசுலோகி', முதலிய வேறு நூல்களும் உரைகளும் இவர் தம் படைப்புகள்.

(8). பிள்ளை உலக ஆசிரியார் : தேவப்பெருமாள் அம்சம் : திருவரங்கத்தில் வடக்குத் திருவீதிப்பிள்ளைக்கும், ஸ்ரீரங்க நாச்சியாருக்கும் முதல் திருக்குமாராய் அவதரித்தார். திருநட்சத்திரம்; ஐப்பசி- திருவோணம். திருத்தம்பியார் அழகிய பெருமாள் நாயனார். திருநாமம்; உலகாசிரியர். துருக்கர் காலத்துப் பெருமாள் நாச்சியாருடன் வெளியேறின பொழுது அவன் பிரிவற்றாது தாமும் முதலிகளுடன் புறப்பட்டு 'சோதிடக்குடி' என்னும் சிற்றூரில் பெருமாளுடைய எல்லாச் சொத்துகளையும் கள்ளர் அபகரித்ததைக் கேட்டு தாமும் தம்முடையவற்றையெல்லாம் பறி கொடுத்தார். பெண்டிரும், பேதையரும் உய்யக்கருதி அரிய பெரிய பதினெட்டு இரகசிய கிரந்தங்களை 'அஷ்டாதசா இரகசியங்கள்' (அஷ்டம் எட்டு. தசம்-பத்து) என்ற பெயரில் வெளியிட்டு தமக்கு ஒப்பாரும் மிக்காரும் ஒருவரும் இலர் என்ற திருப்பெயரை நிலை நாட்டினார். இவைதவிர "தத்துவ விவேகம்", "நாலு வார்த்தை" என்பவையும் இவர்தம் அருளிச் செயல்கள். இவர்தம் கருத்தைப் பின்பற்றி மணவாளமாமுனிகள் வரைந்த வியாக்கியனத்தின் பொருளமைப்பும், நடையழகும் ஒருவராலும் அளவிடக் கூடியதல்ல. இவருடைய திருவடிசம்பந்தம் பெற்றவர்கள்: திருவாய்மொழிப்பிள்ளை, வங்கிபுரம் சீரங்காசாரியர், கோட்டுரிலண்ணன், விளாஞ்சோலைப்பிள்ளை, வாதிகேசரி அழகிய மணவாள சீயர், கிடாம்பி இராமாநுசப் பிள்ளான் மணப்பாக்கத்து நம்பி, சடகோபசீயர், நாலூராச்சான், நாலூர் பிள்ளை, கூரகுலோத்துங்கம் தாசர், திருவாய் மொழிப்பிள்ளை தமப்பனாரண்ணர், திருவாய்மொழிப் பிள்ளைத் திருத்தாயார் கொல்லிகாவல்தாசர், கோட்டூர் அழகிய மணவாளப்

பெருமாள் பிள்ளை, திகழக் கிடந்தாரண்ணன், ஈயுண்ணி அழகிய பெருமாள் நாயனார்' ஆகியோர். வயது 105.

**(9). அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்:** நம்பெருமாள் அம்சம். திருநட்சத்திரம் : மார்கழி அவிட்டம். திருவரங்கத்தில் பிள்ளை உலக ஆசிரியரின் திருத்தம்பியாக அவதரித்தார். ஆசாரியர் : பிள்ளை உலக ஆசிரியர். இவர்தம் அருளிச் செயல்கள்; 'ஆசாரிய ஹிருதயம், அருளிச் செயல் ரகசியம், மாணிக்கமாலை, அமலனாதி பிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானங்கள், திருப்பாவை வியாக்கியானம். ஆறாயிரம்படி திருவந்தாதிகளுக்கு வியாக்கியானம் முதலியன.

**(10). திருவரங்கத்தமுதனார் :** அணியரங்கத்தமுதனாரின் திருமகனார். கூரத்தாழ்வானின் திருவடி சம்பந்தி. அருளிச் செயல் : இராமாநுச நூற்றாந்தாதி.

**(11). ஆத்தான் சீயர்:** ஆத்தான் யதி என்றும் வழங்கப் பெறுபவர். காஞ்சி பெருமாள் கோயிலில் எழுந்தருளியிருந்த ஒரு சுவாமி இவர். ஆந்திர வைணவர். ஒரு சமயம் ஐதராபாத்தில் அமைச்சராக இருந்தவர். மிக வனப்பாக இருந்த இவரைத் துருக்க அரசரின் மகள் திருமணம் செய்துகொள்ள விரும்பி இவரை வற்புறுத்தத் தொடங்கினாள். அதனைத் தவிர்க்கும் பொருட்டு இவர் தமது பதவியைத் துறந்து[3] ஒருவரும் அறியாவண்ணம் ஓடி வந்து பெருமாள் கோயிலில் துறவறம் பூண்டு கிழக்குச் சந்நிதிக்குத் தெற்கே மதிலோரத்தில் மடம் கட்டிக்கொண்டு அதில் எழுந்தருளியிருந்தார். அந்தத்

3. தாயுமான அடிகளின் வாழ்க்கையில் இதையொத்த நிகழ்ச்சியை நினைக்கின்றோம்.

திவ்வியதேசத்தில் பெருந்தேவித்தாயார் சந்நிதி மண்டபம், திருமஞ்சன மண்டபம் முதலியவற்றைக் கட்டிப் பகவத் விஷயத்திற்கு ஓர் அரும்பதவுரை எழுதச்செய்தார். திருவரங்கம் பெரியபெருமாளுக்கு அடையவளைந்தான் மதில்போலே பகவத் விஷயத்திற்கு இது இரட்சகமாயிருந்ததாலே 'அடைய வளைந்தான் அரும்பதவுரை' என்ற திருநாமம் சாற்றி அதனை இலக்கிய உலகில் புகழோங்கச் செய்தார். இதுதவிர, 'திருப்பல்லாண்டு வியாக்கியானம்' 'அரும்பதம்' என்ற நூலும் இவருடையவை.

***(12). பிள்ளைப்பெருமாள் அய்யங்கார் :*** 'அழகியமணவாளதாசர்' என்ற மாற்றுப்பெயரினையுடையவர். சோழ நாட்டில் 'திருமங்கை' என்னும் பகுதியில் தோன்றியவர். சிறந்த வைணவ பக்தர். 'மறந்தும் புறந்தொழா மாண்புடையவர்'. பெரிய திருமலைநாயகன் அரசவையில் பணியாற்றியவர். அவ்வரசன் இவரது திருமால் பக்தியைக் கண்டு உகந்து, திருவரங்கத்தில் தங்குவதற்கு ஓர் இருப்பிடம் அமைத்துத் தந்ததுடன், நாடோறும், தளிகைப் பிரசாதமும் கிடைக்க ஏற்பாடும் செய்தருளினன். அய்யங்காரும் கோயிலில் எழுந்தருளியிருந்த காலத்தில் "திருவரங்கத்தந்தாதி, திருவரங்கத்து மாலை, திருவரங்கக் கலம்பகம், சீரங்கநாயகர் ஊசல், திருவேங்கட மாலை, திருவேங்கடத்தந்தாதி, அழகரந்தாதி, நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி" என்னும் எட்டுப் பிரபந்தங்களைப் பாடியருளினார். (அஷ்ட பிரபந்தம்) வைணவ நூல்களை நன்கு கற்றுத் தேர்ந்தவர் என்பதும் சம்பிரதாயங்களைத் தெளிவாக அறிந்தவர் என்பதும், அவருடைய நூல்களால் புலனாகின்றன. பாடல்களின் இனிமை கருதி வைதிக சமூகம் இவருடைய

பெயருடன் 'திவ்விய கவி' என்ற முன்னொட்டையும் சேர்த்து மகிழ்கின்றது. இவர் "சிலேடை, யமகம், திரிபு, அந்தாதி, கலம்பகம், ஊசல்" முதலியவற்றை விசித்திரமாகப்பாடுவதில் வல்லவர் என்பதும் இவர்தம் நூல்களால் தெளிவாகும். நாலாயிரத்தின் சாரப் பொருள்களும், இவர்தம் பாடல்களில் பொதிந்திருக்கும் மாத்திரமேயன்றி, "சொல் நோக்கும், பொருள் நோக்கும், தொடைநோக்கும், நடைநோக்கும், துறையின் நோக்கும், என்நோக்கும் காண" இலக்கியமாகவும் இனிப்பன வாக அமைந்தனவாகும். இவர்தம் பாடல்களைக் கற்போர் சிறந்த புலவர்களாகத் திகழ்பவர் என்பதில் ஐயம் இல்லை.

## 2. அடியார்கள்

**(1). கூரத்தாழ்வான்:** இராமாம்சம். காஞ்சியை அடுத்த 'கூரம்' என்ற ஊரில் இராமசோமயாசிக்குத் திருமகனாய் அவதரித்தார். திருநட்சத்திரம் - தை-அஸ்தம். வேறு திருநாமங்கள் : 'ஸ்ரீவச்சின்ன மிஸ்ரர், நடையாடு பதஞ்சலி, யதீந்திர சரணன், கூரேசர், கூராதிபர், கூராதிபதி, கூரநாதன், ஸ்ரீவத்ஸசிஹ்நர்'. தேவிகள் : கூரத்தாண்டாள். குமாரர்கள் : பட்டர், சீராமப்பிள்ளை சீடர்கள் : பிள்ளைப் பிள்ளை ஆழ்வான், திருவரங்கத்தமுதனார், நாலூரரான் அகளங்க பிரம்மராயன்'. இவர் அருளிய நூல்கள்; "வரதராஜஸ்தவம், சுந்தர பாகூஸ்தவம், அதிமாநுஸ்தவம், ஸ்ரீவைகுண்டஸ்தவம், யமனரத்னாரம், கத்யதிரய; (திரயம்-மூன்று) வியாக்கியானம்" ஆகியவை.

இவர்தம் ஆசாரியர் இராமாநுசர். குரு-சீடர் தொடர்பு அற்புதமானது. கல்நெஞ்சத்தையும் உருக்கும் தன்மையது. இராமாநுசர் வேடத்துடன் சோழன்முன் சென்று தம்

கண்களையே பிடுங்கிக் கொண்டவர். அரசனுக்கு 'இவர் இராமாநுசர் அல்லர்' என்று காட்டிக் கொடுத்தவன் "நாலூரரான்" என்ற அமைச்சர்.. அரங்கர் சந்நிதியில் பெரிய பெருமாள் அர்ச்சகர் மூலமாக "உமக்கு என்னவேண்டும்?" என்று கேட்டதற்குக் கூரேசன் "நான் பெற்ற பேறு நாலூரரானும் பெற வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார். இந்தக் கருணை எவரெஸ்டு சிகரம் போல் இவர்தம் பேருள்ளத்தின் பெருமையைக் காட்டி நிற்கின்றது.

(2). **முதலியாண்டான் :** பரதாம்சம் பூவிருந்தவல்லிக் கருகிலுள்ள பச்சை வண்ணப்பெருமாள் கோவில் என்கின்ற "புருஷமங்கலத்தில்" அவதரித்தவர். உடையவரின் சகோதரி புத்திரர், திருநட்சத்திரம் : சித்திரையில் புனர்பூசம். ஆசாரியர்: இராமாநுசர். வேறு திருநாமங்கள் : "தாசரதி, மாதுல தேசிகன், ஸ்ரீவைணவதாசன், இராமாநுசபாதுகை". திருக்குமாரர்; கந்தாடையாண்டான். சீடர் : இவர் திருக்குமாரர், கந்தாடை தோழப்பர். 74 சிம்மாசனாதிபதிகளில் ஒருவர். ஸ்ரீபெரும் புதூரில் எம்பெருமானாரின் திருமேனியை எழுந்தருளப் பண்ணினவர். வயது 105.

(3). **அனந்தாழ்வான் :** சத்துருக்கனாம்சம். சிறுபுத்தூரில் அவதரித்தார். திருநட்சத்திரம் : சித்திரையில் சித்திரை. தம் ஆசாரியராகிய உடையவர் கட்டளைப்படி, ஏனையோர் தயங்க, திருவேங்கடமுடையானுக்குக் கைங்கரியம் செய்ய முன் வந்தவர். இதனால் எம்பெருமானார் "நீதான் ஆண் பிள்ளை" என்று பாராட்டினார். இதனால் இவருக்கு 'அனந்தாழ்வான் ஆண்பிள்ளை' என்ற சிறப்புத் திருநாமும் ஏற்படலாயிற்று. திருமலையில் ஓர் ஏரிவெட்டி அதற்கு 'இராமாநுசன் புத்தேரி'

என்ற திருப்பெயரையும் அமைத்தார். ஏரிகட்டும்போது இவர் மண்சுமவாநிற்க பெருமாள் ஒரு சிறுவனாய் வந்து அவர் கூடையை வாங்கப்புக "என் பிழைப்பை ஏன் கெடுக்கப் பார்க்கிறாய்? நீயும் ஒன்றெடுத்துச் சுமக்கலாகாதோ?" என்றார். பின்னர் ஒரு நாள் நிறைகர்ப்பவதியான தேவிகளும் மண்சுமவா நிற்க, அதை அந்த பகவச் சிறுவன் வாங்கி ஒத்தாசைச் செய்வதைக் கண்ட இவர் கொட்டெடுத்து ஓடி அடிக்க, திருவேங்கடச் செல்வன் கோயிலுள்ளே புகுந்தான் என்பர். இவர் கட்டிய ஏரிக்கருகில் ஒரு நந்தவனத்தை உண்டாக்கி அதிலிருந்து மலர்களைப் பறித்துத் திருவேங்கடமுடையானுக்கு நாடோறும் மலர்த்தொண்டு புரிந்து வந்தார். ஒருநாள் மலர் கொய்கையில் நல்ல பாம்பு ஒன்று இவர் கையில் தீண்டியது. இவர் அவற்குப் பரிகாரம் ஒன்றும் செய்யாமல் மீண்டும் நீராடி,பின்னரும் நந்தவனத்திற்குச் சென்று மலர்களைக் கொய்து மாலை தொடுத்துத் திருவேங்கடமுடையானைச் சேவிக்கச் சென்றார். அவ்வளவில் இறைவன் அர்ச்சகர் மூலமாக "அரவு தீண்டியும் அந்நஞ்சைத் தீர்க்க வேண்டா என்றிருப்பது என்னை?" என்று கேட்டருள, இவரும் "கடியுண்ட அரவு வலிதாகில் திருக்கோனேரியில் தீர்த்தமாடித் திருவேங்கடமுடையானைச் சேவிக்கின்றேன்; கடித்த அரவு வலிதாகில் விரஜையில் தீர்த்த மாடி வைகுந்த நாதனைச் சேவிப்பேன் என்றிருந்தேன்" என்று மறுமொழி தந்த பரமயோகி. இவரைக் கூரத்தாழ்வானுக்குப் பின் பிறந்தவர் (இளையவர்) என்று கூறுவர். இன்று திருமலையில் கட்டப்பெற்றுள்ள அனந்தாழ்வான் ஏரிவிடுதிகள் (Ananthalvan Tank Cottages) என்று திருநாமம் இடப்பெற் றிருப்பது இவர்தம் தொண்டைநினைவு கூருவதற்காக.

**(4). கிடாம்பி ஆச்சான் :** கண்டாம்சம். திருநட்சத்திரம்: சித்திரையில் அஸ்தம், பெரிய திருமலைநம்பிக்கு மருமகன். குமாரர் : இராமாநுசப்பிள்ளான். திருக்கோட்டியூர் நம்பி நியமனத்தால் மடப்பள்ளி கைங்கரியம் செய்தவர். சாத்திர ஞானம் மிக்கவர். வயது 100.

**(5). வடுக நம்பி :** உடையவரின் சீடர், ஆசாரியரைத் தவிர வேறு தெய்வம் அறியாதவர். உடையவருக்குப் பாலமுதம் காய்ச்சித் தரும் சேவையைப் புரிந்தவர். ஒருநாள் பெரிய திருநாளில் பெரிய பெருமாள் வீதி உலாவில் இவர் திருவாசல் முன்பு எழுந்தருள, உடையவர் 'பெருமாளைச் சேவிக்க வருக' என்று அழைக்க, இவரும் 'அடியேன் தேவருடைய பெருமாளைச் சேவிக்க வந்தால் என்னுடைய பெருமாளுக்குப் பாலமுதம் கும்பிப்போகும். ஆதலால் இச் செயலைத் துறந்து வரமுடியாது' என்று விண்ணப்பித்தாராம். எம்பெருமானாருக்கு இவர் எண்ணெய்க் காப்பும் சாத்தியருள்பவர்.

**(6). மிளகாழ்வான் :** இராமாநுசர் நியமனம் செய்த 74 சிம்மாசனாதிபதிகளில் ஒருவர். திருவானைக்காவில் இலிங்கத்திற்குத் திருமுழுக்காட்டின பாலைக் கொண்டு ததீயாராதனத்தில் சேர்ப்பிப்பதை அறிந்த இவர் அப்படிச் செய்யலாகாது எனத் தடுத்தவர். பிரசாதத்திற்கு உரலில் நுணுக்காமல் முழு மிளகைப் பயன்படுத்தியதைக் கண்ட உடையவர் காரணம் வினவினார். தேவதாந்தரம் சம்பந்தப் படாமல் மிளகைச் சேர்ந்ததாக மறுமொழி பகர்ந்தார். மிளகாழ்வான். இலிங்கமும் குழவியும் இவர்மனத்தில் சிவபரமாகக் காட்சியளித்ததைக் கண்ட உடையவர் இவருடைய பக்திக்கு வியந்தார்.

**(7). பிள்ளை உறங்காவில்லிதாசர் :** உறையூரை ஆண்டு வந்த சிற்றரசன் அகளங்க சோழன். இவன் அத்தாணிச் சேவகர்களில் முக்கியமானவர் உறங்காவில்லி என்ற மல்லன், சிலம்பம், குத்துச் சண்டை, மற்போர் முதலிய பயிற்சிகளில் நிகரற்றவர், பின்னர் இராமாநுசரால் ஆட்கொள்ளப்பெற்று அவர்தம் அருமருந்தன்ன சீடரானார். உடையவரின் கருவூலங் காக்கும் காவலர் பொறுப்பில் அமர்த்தப்பெற்றார். ஞான பக்தி, வைராக்கியங்களில் மிக்க இவர் உடையவரின் ஞான புத்திரர் என்ற நிலையையும் அடைந்தார். இவருடன் இவர்தம் மருமக்களான வண்டவில்லியும், செண்ட வில்லியும் முறையே வண்டலங்காரதாசர், செண்டலங்காரதாசர் என்ற தாஸ்ய நாமங்கள் பெற்று வைணவர்களாயினர்.

**(8). பொன்னாச்சியார் :** இவர் பிள்ளை உறங்கா வில்லிதாசரின் தேவியார். அழகு கொழிக்கும் வனப்புடையவர். உடையவரின் கடைக் கண் நோக்கினால் வைணவ தத்துவத்தில் ஆழங்கால் பட்டவர். கேள்வி ஞானத்தாலேயே பல நுட்பங்களை அறிந்து கொண்டிருந்தார். வைணவர்கள் பலர் இவரிடம் சம்பிரதாயத்தின் நுண்ணிய கருத்துகளைக் கேட்டு பயன் பெறும் அளவுக்கு ஞானச் செல்வத்தைப் பெற்றிருந்தார். கணவரிடம் ஆழ்ந்த பக்தியுடையவர். கணவர் பரமபதித்த அப்போதே தம் உடலைத் துறந்து விட்ட உத்தமி.

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

வில்லிதாசர் தம் அந்திமதசையில் தம் துணைவியாரை நோக்கி "என்பிரிவு குறித்து நீ கலங்க வேண்டா. நம் அன்பு நெறியில் பிரிவுக்கோ மறைவுக்கோ இடம் இல்லை?" என்று சொன்னார். அவரும் அப்படியே ஆறுதல் அடைந்தவர்போல் 'இராமாநுசரின் திருவடிகளே சரணம்' என்று சொல்லிக்

கொண்டு தம் கணவர் அருகில் இருந்தார். இந்நிலையில் உடையவர் திருவடி நிலைகளைத் தம் முடியலே வைத்துக் கொண்டும், தம் திருவடிகளைத் தம் துணைவியார் மடியில் வைத்தநிலையிலும் மீண்டும் விழித்துக் கொள்ள முடியாத உறக்கத்தில் ஆழ்ந்து விட்டார்; பரமபதித்தார்.

தாசரின் திருமேனியை விமானம்போல அலங்கரித் திருந்த பூந்தேரில் ஏற்றி வைத்து ஏகாங்கிகளும் மற்றப் பாகவதர்களும் மாறி மாறித் தோள்கொடுத்துத் தூக்கிக் கொண்டு போக, அதைப் பொன்னாச்சியார் வைத்த கண் வாங்காமல் அந்தக் கண்களில் துளிநீரும் அரும்பாமல் பார்த்துக் கொண்டே மங்கை மன்னனின் பிரிவாற்றாமைப் பற்றிய திருமொழியை (பெரி.திரு.8:5) அநுசந்திக்கத் தொடங்கினார். முதற்பாசுரம் அநுசந்தித்து இரண்டாம் பாசுரம் அநுசந்திக்கும் அளவில் முன்னே பூத்தேரை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு செல்பவர்கள் விரைந்து செல்லுவதனால் திருத்தேர் மறைய, அதற்குத் தகுதியாகப் பொன்னாச்சியாரின் அநுசந்தானம்.

**தேரும் போயிற்று; திசைகளும்**
**மறைந்தன; செய்வதொன் றறியேனே (8.5:2)**

என்ற பெரிய திருமொழிப் பாசுர அடிகளில் நடைபெற்ற நிலையில், திருத்தேர் சென்ற திசையை நோக்கித் தொழுத வண்ண(ம்) கீழே விழுந்து விட்டார். அவர் உயிரும் தன்னடைவே பிரிந்து போயிற்று. உடையவரின் ஆணைப்படி இவர்தம் திருமேனியையும் வில்லிதாசரின் திருமேனியுடன் பள்ளிப்படுத்தி அந்திமச் சடங்குகளை நடத்தினர்.

**(9). அகளங்க நாட்டாழ்வான் :** உறையூரைத் தலைமை ஊராகக் கொண்டு சோழ அரசின் ஒரு பகுதியை ஆண்டு வந்த சிற்றரசன் அகளங்கன். உறங்காவில்லி முதலியோர் இவனை அண்டிதான் வாழ்ந்தனர். இவர்கள் இராமாநுசரால் ஆட்கொள்ளப்பெற்ற பின்னர் இவர்களின் இயல்புகள் மாறிவருவதைக் கண்டான். இவர்கள் முகத்தில் சாந்தியையும் ஒளியையும் கண்ணுற்றான். தன்னையும் உடையவரிடம் இட்டுச் செல்லும்படி வேண்ட, வில்லிகளும் அங்ஙனமே இட்டுச் சென்று செய்தியை உடையவரிடம் தெரிவித்தனர். வேடர்களை உகந்து ஆட்கொண்டிருந்த உடையவரின் கருணை வேந்தனையும் உகந்து ஆட்கொண்டது. உடனே அவனுக்குப் பஞ்சசம்ஸ்காரம் செய்வித்து 'அகளங்க நாட்டாழ்வான்' என்ற தாஸ்ய நாமமும் வழங்கினார். இங்ஙனம் ஆட்கொண்டபின் கோயில் கைங்கரியங்களை மேற்பார்வையிடும் அதிகாரி யாகவும் நியமித்தார். அரசனுக்குரிய மாட்சியைவிட இந்தப் பணியில் தனக்குக் கிடைந்தத மாட்சியே பெரிது என்று அகமகிழ்ந்தான். அகளங்கன். குலசேகரப் பெருமாளைப்போல வெற்றரசைக் கைவிட்டு வீட்டரசுக்கு வழிவகுத்துக் கொண்டு அரங்கன் பணியில் ஆழங்கால் பட்டுவிட்டான்.

**(10). அம்மங்கி அம்மாள்:** அருளாளப் பெருமான் எம்பெருமானுடைய சீடர். ஒரு நோயில் வருந்தியிருந்தபோது நஞ்சீயரும், நம்பிள்ளையும் நலன் விசாரிக்கச் சென்றனர். அப்போது அவர் மிகவும் கிலேசப்படுவதைக் கண்டு நஞ்சீயர் "சுவாமி, தேவரீர் சாமானிய மனிதரன்றே, எவ்வளவோ பகவத் பாகவத கைங்கரியங்கள் பண்ணி இருக்கின்றீர். சுவாநுபவத் தோடல்லாது போது போக்கியறியீர். இப்படியிருக்க உம்மையும்

மற்றவர்களைப் போலவே இப்படிக் கஷ்டப்படுத்துகின்றானே! என்றாராம்'' அதற்கு அவர் "நீயாள வளையாள மாட்டோமே'' (பெரி.திரு. 3;6;9) என்பதன்றோ கலியன்பாசுரம்? என்றாராம். பிறகு வெளியில் எழுந்தருளியபின் நஞ்சீயர், நம்பிள்ளையை நோக்கி "பார்த்தீரா இவருடைய எண்ணத்தை ? என்ன பாசுரம் எடுத்துக் காட்டினார்!" என்று அருளிச்செய்து மகிழ்ந்தாராம்.

**(11). எறும்பியப்பா** : சோளசிங்கபுரத்திற்கருகிலுள்ள (சோளிங்கர்) 'எறும்பி' என்ற ஊரில் அவதரித்தவர், மணவாள மாமுனிகளின் திருவடிசம்பந்தி. இவருடைய ஆசாரியரான மாமுனிகள் விஷயமாக "வரவரமுனி சதகம், பூர்வ தினசரியை, உத்தரதினசரியை, விலட்சண மோட்சாதிகாரி நிர்ணயம், சுப்ரபாதம், சம்பூப் பிரபந்தம், ஆர்த்திப் பிரபந்தம்" முதலிய கிரந்தங்களைச் செய்து தலைக்கட்டித் தம் ஆசாரியரான சீயர் சந்நிதிக்கு வந்தார். சீயரும் "அபிமான நிஷ்டராகில் இப்படி இருக்க வேண்டாவோ?'' என்று உகந்தருளி அப்பாவை எழுந்தருளச் செய்தார். அங்ஙனமே அப்பாவும் எழுந்தருளிச் சீயர் திருவடிகளில் அடிமை செய்து கொண்டு வாழ்ந்தார். பின்னர் தம் சீடர்களுக்குத் தம் "ஆசாரிய கிருபாலப்த மால, விலட்சண மோட்சாதிகாரி நிர்ணயம்'' முதலிய கிரந்தங்களை பிரசாதித்தருளினர்.

**(12). கூரநாராயணசீயர்** : இவர் எம்பாரின் திருக்குமாரர். ஆசாரியர் : பெரிய பட்டர்; சீடர்கள் : திருக்குருகைப்பிரான் சீயர்,சேமஞ்சீயர், சுந்தரபாண்டியதேவன். வேறு திருநாமங்கள்: நலந்திகழ் நாராயணசீயர், சீரங்க நாராயணசீயர், இவர் திருவல்லிக்கேணி முதலான பல திருக்கோயில்களில் திருப்பணி செய்தவர், அருளிச்செயல்கள் : "உபநிஷத்கூர நாராயண பாஷ்யம், தோத்திரவியாக்கியானம், சுதர்சன சதகம்'' ஆகியவை.

**(13). நடுவில் திருவீதிப் பட்டர்:** இவர் பெரும்புலவர். அரசவைக்கு எழுந்தருளினபோது இவருடைய புலமையைக் கண்டு அரசர் மிகு தனங்களை நல்கினார். அவற்றை நம்பிள்ளையின் திருவடிகளில் சமர்ப்பித்து "தேவரீருடைய திவ்விய சூக்தியில் பதினாயிரம் கோடியிலே சிந்தின ஒரு ஸ்ரீசூக்தி பெற்ற தவம் இவை. இவற்றை அங்கீகரித்தருள வேண்டும் என்று விண்ணப்பிக்க, நம்பிள்ளை அவற்றை அங்கீகரியாமல் பட்டரை வாரி அணைத்துக் கொண்டு பல சிறப்புகளைச் செய்தார். பட்டரும் நம்பிள்ளையின் பெருமையைக் கண்டு அவருக்கு "ஸ்ரீசூக்தி சாகரம்" என்ற திருநாமம் சாத்தி மகிழ்ந்தார். அருளிச் செயல்; "ஸ்ரீவத்ஸ சிஹ்ந, பஞ்சவிம்சதி."

**(14). கந்தாடை அண்ணன் :** இவரைக் கோயில் கந்தாடை அண்ணன் என்றும் வழங்குவர். மாறனேர் நம்பிக்குப் பிரம்ம மேத சம்ஸ்காரம் செய்த பெரிய நம்பிகளை ஸ்ரீவைணவர்கள் தம் சாதியினின்றும் விலக்கி வைத்தனர். ஓர் உற்சவத்தில் திருத்தேர் தன் நிலையை விட்டு அசையாதிருந்தது. கந்தாடை அண்ணனுக்குப் பெருமாள் அர்ச்சகர் மூலமாக "பெரிய நம்பியை உமது திருத்தோளின் மேல் எழுந்தருளப் பண்ணி வாரும்" என்ற நியமத்தை உடனே அநுட்டித்துக் காட்டிய உத்தமர். இதனை நிறைவேற்றியவுடன் திருத்தேரும் நகர்ந்து திருவீதி வலம் வந்தது. அரியபெரிய அநுட்டானத்தை நிறைவேற்றிக் காட்டினமையால் "பெரிய நம்பிகள்" என்ற திருநாமம் பெற்றார் போலும்!

**(15). கந்தாடை ஆண்டான் :** பிரம்மதந்தர சுதந்தர சீயர் திருவடி சம்பந்தி, முதலியாண்டானின் திருக்குமாரர். குமாரர்; கந்தாடை தோழப்பர். வேறு திருநாமம் : இராமாநுசதாசர்.

'இருக்குவேதம், சாத்திரம், பிரபந்தம், ஸ்ரீபாஷ்யம்' ஆகிய வற்றைச் சாதித்தவர் இவர். தம் திருத்தந்தையார். சகல இரகசியப் பொருள்களைச் சாதித்தவர் ஆட்கொண்டவல்லி சீயர். இவர் ஸ்ரீபெரும்புதூரில் எம்பெருமானாரைத் திருமேனியாக எழுந்தருளப் பண்ணினார். சீடர் : கந்தாடை தோழப்பர்.

**(16). கந்தாடை இலட்சுமானாசாரியார் :** இவர் ஆசாரிய புருஷரில் ஒருவர். இவர் தேசிகர் காலட்சேபம் செய்கையில் அவ்வழிச் சென்றனர். இவரது சீடர்கள் தமது ஆசாரியருக்குத் தேசிகர் மரியாதை செய்யவில்லை என்று அவரது காலைப் பிடித்து இழுத்து அவமதித்தனர். இதனைத் தேசிகர் பொறுத்திருந்தனர். மாணாக்கர் செய்தது ஆசாரியரைப் பற்றுமாகையால் சில நாட்களில் இலட்சுமணாசாரியர் நோய் ாய்ப்பட்டனர். இதன் காரணம் அறிந்து தேசிகரைச் சரணம் புடைந்து அவரது திருவடித் தீர்த்தத்தைப் பெற்றுக் கொண்டு நாய் நீங்கப் பெற்றார். மேலும் தீர்த்தத்தின்கனத்தால் ஒரு குமாரரையும் பெற்று அவருக்குத் "தீர்த்தப் பிள்ளை" என்ற திருநாமமும் இட்டு மகிழ்ந்தவர்.

**(17). பிள்ளைத் திருநறையூர் அரையர் :** இவர் கீழை நாட்டில் கோயிலுக்கு முக்காத வழிதொலைவில் உள்ள 'தொட்டியம் திருநாராயணபுரத்திலே' பெருமாளைச் சேவிக்க குடும்பத்தோடு எழுந்தருளின சமயத்தில் சில பகவத் விரோதிகள் சந்நிதியில் நெருப்பை வைத்தனர். இதனைக் கண்ணுற்ற அரையர் அவ்வெம்பெருமானுடைய திருமேனிக்கு உண்டான ஆபத்தைக் கண்டு தாமும் பிள்ளைகளுடன் அத் திவ்விய மங்கள விக்கிரகத்தைக் கட்டிக் கொண்டு திருமேனியை விட்ட உபேய அதிகாரி. 74 சிம்மாசனாதிபதிகளுள் ஒருவர். உரைகளில் இவரைப் பற்றி பல குறிப்புகள் உள்ளன.

***(18). பிரதிவாதி பயங்கரம் அண்ணன் :*** நயினாரா சார்யரிடம் ஸ்ரீபாஷியம் சேவித்தவர். பெருமாள் கோயிலில் (காஞ்சி) மிகச் செல்வாக்குடன் திகழ்ந்தவர். இவரை மணவாள மாமுனிகள் வருவித்து இவருக்கு முப்பத்தாறாயிரப்படி அருளிச் செய்தனர். இதனைக் கேட்டு வந்த இவர் மணவாள மாமுனிகளிடம் பஞ்ச சம்ஸ்காரமும் பெற்றனர். இவருக்கு **'வைணவ தாசர்'** என்ற ஒரு திருநாமும் உண்டு. இவர் அஷ்டதிக்கஜங்களுள் ஒருவர். இவர்தம் அருளிச் செயல்கள்: "ஸ்ரீபாஷ்யவியாக்கியானம் (சுகபட்சியம்) பாகவதவியாக்கி யானம், பிரபத்தி யோக காரிகைகள், அஷ்டசுலோகீ வியாக்கியானம்" ஆகியவை.

***(19). கந்தாடைதோழப்பர்:*** கந்தாடையாண்டான் திருக்குமாரர். இவர் நம்பிள்ளையிடத்துச் சிறிது பொறாமைப் பட்டு வாசிகமாக அபசாரப்பட்டார். சிறந்த வித்துவானாதலாலும் திருவம்சப் பிரபாவத்தாலும் பின்பு தெளிந்தார். நம் பிள்ளையின் திருவடிகளைப்பற்றிப் புகழ்ந்து அவருக்கு 'உலகஆசிரியர்' என்ற திருநாமம் சாத்தினார், இவருடைய திருப்பாட்டனார் முதலியாண்டான். திருநாமங்கள் : பச்சைவாரணப் பெருமாள் வாராகுதீசர், சீயாம்ஹஸ்தீசர்.

***(20). விளாஞ்சோலைப் பிள்ளை:*** பிள்ளை உலக ஆசிரியரின் திருவடிசம்பந்தி. திருவாய்மொழிப்பிள்ளைக்கு இரகசியப் பொருள்களை உபதேசித்தவர். அருளிச்செயல்: சப்தகாதை.

விரிவஞ்சி நூற்றுக்கு மேற்பட்டவர்கள் விடப்பெற்றனர். விரைம் வேண்டுவோர் இவ்வாசிரியரின் 'வைணவச் செல்வம்'-பகுதி 2 இல் காணலாம்.[4]

4. தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு (தஞ்சை. 613005)

# 9. வைணவ சமயத் தத்துவம்

திருமாலை முதற்கடவுளாகக் கொண்டு பல உயரிய கொள்கைகள் அடங்கிய பரந்த சமயமே வைணவ சமயம் ஆகும். இச் சமயத்தின் கொள்கைகளை **(1)தத்துவம், (2) இதம், (3) புருஷார்த்தம்** என்று சுருக்கமாகக் கூறலாம். தத்துவங்கள் மூன்று. அவை சித்து, அசித்து ஈசுவரன் என்று வழங்கப் பெறுவன. சித்து என்பது, உயிர்களின் தொகுதி. அசித்து என்பது, மக்கள் விலங்கு முதலியவற்றின் உடம்பு முதலிய உலகப்பொருள்கள் எல்லாவற்றிற்கும் காரணமான பிரகிருதி என்பது. இதனை மூலப்பகுதி என்றும் வழங்குவர். ஈசுவரன், இறைவன், இவை மூன்றும் தத்துவத்திரயம் (திரயம் -மூன்று) என்ற பெயரால் வழங்கி வருகின்றன. தத்துவத் திரயம் என்ற ஒரு நூலும் உள்ளது. இது பிள்ளை உலக ஆசிரியர் என்பார் எழுதியுள்ள அஷ்டதசா இரகசியங்கள் (அஷ்டம்-எட்டு; தசம்-பத்து) என்ற நூலில் ஒன்றாகும். அஷ்டதசா இரகசியங்கள் என்பதை பதினெட்டு இரகசியங்கள் என்று அருந்தமிழில் வழங்கலாம்.

## 1. சித்து

ஞானத்திற்கு இடமான ஆன்மா அல்லது உயிர் - சித்து என வழங்கப்பெறுகின்றது. இஃது அன்னமயம், பிராணமயம் மனோமயங்கட்கு அப்பாலாயிருப்பது. தேகம் இந்திரியங்கள், மனம், பிராணன், ஞானம் இவற்றிற்கு வேறுபட்டது. அறிகின்ற தலைவனும் அறிவும், அறியப்பெறும் பொருளும் தானாகவே

இருப்பது. அணுவின் வடிவினையுடைய இந்த ஆன்மா ஆனந்த வடிவினைக் கொண்டது; என்றும் நிலை பெற்றிருப்பது. இது கண்முதலிய இந்திரியங்கட்குத் தோற்றாது; மனத்தாலும் இதனை நினைக்க முடியாது. இதனைப் பகுதிகளாகவும் பிரிக்க முடியாது; அவயவமும் அற்றது. வளர்தல், 'பருத்தல்', குன்றுதல் முதலிய வேறுபாடுகள் இதற்கு இல்லை. அறிவு மயமாக இருக்கும் இந்த ஆன்மா அறிவுக்கும் இருப்பிடமானது. இந்த அறிவு '**தர்மபூதஞானம்**' என வழங்கப்பெறும். இதனால் ஆன்மா 'தர்மிபூதஞானம்' என வேறொரு பெயராகவும் வழங்கப் பெறும். இந்தச் சீவான்மா தனக்கு எப்பொழுதும் தோன்றிக் கொண்டே இருக்கும். தன்னைத் தான் என்று அறியும்பொழுது தர்மபூதஞானம் உதவ வேண்டும் என்பதில்லை. ஆனால் சீவான்மா தன்னைத் தவிர வேறு எந்தப் பொருளையும் தன் தர்மபூதத்தால் மட்டிலுமே அறிய முடியும். தன் சொரூபத்தைத் தர்மபூதஞானத்தைக் கொண்டும் அறியலாம். ஆன்மா இறைவன் ஏவியபடி நடப்பது, அவனால் தரிக்கப்பெற்று, அவனுக்கு அடிமையாகவே இருப்பது. இதனை நன்கு உணர்ந்த ஆழ்வார்கள் தம் பாசுரங்களில் இத்தன்மையை வெளியிட்டுள்ளனர். பூதத்தாழ்வார் "நேர்ந்தேன் அடிமை"[1] என்பார்;" "அவற்குப் அடிமைப்பட்டேன்"[2] என்று கூறுவர் பேயாழ்வார். திருமழிசையாழ்வாரோ "ஏன்றேன் அடிமை ; இழிந்தேன் பிறப்பிடும்பை"[3] என்று இக்கருத்தில் ஊற்றம் காட்டுவர். நம்மாழ்வார் தமக்கே உரிய தனி முறையில் "உறுவதாவது..... திருக்குருகூர் அதனுள், குறிய மாண் உரு ஆகிய நீள் குடக் கூத்தனுக்கு ஆட் செய்வதே"[4] என்று அருளிச் செய்வர்.

1. இரண்–திருவந்– 80.
2. மூன்–திருவந். 37
3. நான்– திருவந்–95.
4. திருவாய். 4.10:10

*ஆன்மா பற்றிய கருத்துகளை ஒருவாறு தொகுத்து திவ்வியகவி பிள்ளைப்பெருமாள் அய்யங்கார் இவ்வாறு கூறுவர் :*

**மாத வங்களென் றோத வங்களின்**
**மருவு சீவனென் றொருவ! நீபெரும்**
**பூத மல்லை; யிந்திரிய மல்லை;ஐம்**
**புலனும் அல்லைநற்; புந்தி யல்லைகாண்;**
**சீத ரன்பரந் தாமன் வாமனன்**
**திருவ ரங்கனுக் கடிமை; நீயுனக்**
**கேது மில்லை யென்றறி; யறிந்தபின்**
**ஈதின் மாதவம் இல்லை எங்குமே.**[5]

*இதில் தம் மனத்திற்குத் தாமே உபதேசிக்கும் முகத்தால் சீவன்மாவின் சொரூபம் இத்தன்மையது என விளக்குகின்றார் அய்யங்கார்.*

***சித்தின் வகை :*** *சித்து எனப்படும் ஆன்மாவின் தொகுதியில் எண்ணற்ற சீவான்மாக்கள் உள்ளனர். இவர்களின் தொகுதி பத்தர் (தளைப்பட்டிருப்பவர்),'முத்தர்', நித்தியர் என்று மூவகைப்படுவர். இவர்களுள் 'பத்தர்' என்பவர் "மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத்தாய, காலமும் கணக்கும் நீத்த காரணனான"*[6] *பகவானின் மாயையில் மறைக்கப் பெற்ற சொரூபத்தையுடையவர்கள்; அநாதி அஞ்ஞானத்தால் நேடிய புண்ணிய பாவமாகிய வினைகளால் சூழப்பெற்றவர்கள்; அவரவர்களுடைய வினைக்குத் தக்கபடி மாறிமாறித் தேவ, மனித விலங்கு, தாவர வடிவங்களைப் பெற்று*

5. திருவரங். கலம். 63
6. கம்ப. சுந்தர–பிணிவீட்டு. 80

*துக்கபரம்பரைகளை அநுபவிக்கும் சம்சாரிகளாவர். "முத்தர்" என்பவர் இவ்வுலகத் தளைகள் கழிந்து பரமபதத்தில் பகவதநுபவ கைங்கரிய போகரானவர்கள். 'நித்தியர்' என்பவர், ஒருநாளும் சம்சார சம்பந்த உறவு இல்லாத அனந்தன் (ஆதிசேடன்) சேனைமுதலியார் (விஷ்வக்சேனர்), பெரிய திருவடி(கருடன்) தொடக்கமானவர்கள். இவர்களை வேதாந்த தேசிகர்,*

**பல்வினை வன்கயிற் றால்பந்த**
**முற்றுழல் கின்றனரும்**
**நல்வினை மூட்டிய நாரண**
**னார்பதம் பெற்றவரும்**
**தொல்வினை என்றுமில் லாச்சோதி**
**வானவ ருஞ்சுருதி**
**செல்வினை யோர்ந்தவர் சீவரென்**
**றோதச் சிறந்தனமே[7]**

*என்று எடுத்துக்காட்டுவர் "கர்மங்களால் கட்டுப்பட்டவர் பத்தர்; எமபெருமான் சந்நிதியை (பரமபதத்தை) அடைந் தவர்கள் முத்தர்; அநாதியான கர்மபந்தம் இல்லாதவர்கள் நித்தியசூரிகள்" என்கின்றார்.*

## 2. அசித்து :

*'**அசித்து**' என்பது அறிவில்லாத பொருள். அசித்தினால் கிடைக்கக்கூடிய பொருள்களை அநுபவிப்பவர்கள் சீவான் மாக்களே. அசித்து விகாரத்திற்கு இடமானது. ஒருபொருள் ஒரு நிலையினின்றுப் பிறிதொரு நிலையை அடைவதுதான் விகாரம் என்பது. அஃதாவது, அசித்து முன்னைய நிலையை*

7. தே. பி. 26

விட்டு வேறுவேறு நிலைகளை அடைவதாகின்ற வேறுபாட்டிற்கு இடமாக இருக்கும். அசித்தில் ஞானத்திற்குச் சிறிதும் இடம் இல்லை. இந்த அசித்தைச் 'சுத்த சத்துவம்', 'மிச்ர தத்துவம்', 'சத்துவசூனியம்' என்று மூன்று வகையாகப் பிரித்துப் பேசுவர் மெய்விளக்க இயலார்.

**(அ). சுத்த சத்துவம் :** இராசச தாமச குணங்கள் கலவாதது. ஆதல், அழிதல் இல்லாதது; என்றும் நிலைபெற்றிருப்பது. இது ஞானத்தையும், ஆனந்தத்தையும் உண்டாக்கக் கடவதாக இருக்கும். இறைவனின் அநுபவத்தின் பொருட்டே உண்டான இச்சையாலே நித்திய விபூதியில் (பரமபதத்தில்) விமானம், கோபுரம், மண்டபம், உப்பரிக்கை முதலிய வடிவுடன் தோற்றம் கொள்ளும். தீ, கதிரவன் முதலிய ஒளியுள்ள பொருள்களும் மின்மினிக்கு ஒப்பாம்படி அளவிறந்த ஒளி வடிவினைக் கொண்டது. இது நித்தியர், முத்தர், ஈசுவரன் இவர்களாலும் அளவிடற்கு அரியது, கண நேரத்திற்குக் கணநேரம் முன்பில்லாத வியப்பினை உண்டாக்க வல்லதாகவும் இருக்கும். நித்தியர், முத்தர், ஈசுவரன் இவர்கள் ஞானத்தால் தன்னை அறியவொண்ணாதபடி ஒளி விட்டுத் திகழும். ஆயினும் சம்சாரிகட்கு அங்ஙனம் தோற்றாது. இது வைகுந்தத்திலிருந்து மேலே எல்லையின்றி எங்கும் பரவி நிற்கும் தன்மையுடையதாக இருக்கும்.

**(ஆ). மிச்ர தத்துவம் :** இதுவே மூலப்பிரகிருதி என்பது. இது சாத்துவிகம், இராசசம், தாமசம் என்னும் மூன்று குணங்களையுடையது. ஆதலின் இத்தத்துவம் 'திரிகுணம்' என்ற திருநாமத்தாலும் வழங்கும். இவற்றுள் சத்துவ குணமானது ஞானத்தையும், சுகத்தையும் நல்கி அந்த ஞான

சுகங்களாகின்ற இரண்டிலும் ஆசையை உண்டாக்கும். இராசச குணமானது ஆணும் பெண்ணும் ஒருவருக்கொருவர் கொள்ளும் ஆசையையும் சுவை, ஒளி முதலான ஐம்புலன்களால் உண்டாகும் இன்பங்களில் ஆசையையும், உழவு, வாணிகம் முதலிய தொழில்களில் ஆசையையும் உண்டாக்கும். தமோகுணமானது விபரீத ஞானத்தையும் சோம்பலையும் தூக்கத்தையும் உண்டாக்கும். இந்த முக்குணங்கள் சமமான நிலையில் உள்ளபோது பிரகிருதியின் விகாரங்கள் நாமரூப விசேடம் இல்லாமல் பிரமாணங்களால் காணக்கூடாதபடி அதிசூக்குமங்களாக இருக்கும் (இதுவே மகாப்பிரளய நிலையாகும்). இந்தக் குணங்கள் ஏற்றத் தாழ்வை அடையுங்கால் இந்தப் பிரகிருதி பலவித தத்துவங்களாக மாறி நாமரூப விசேடத்தை உடையனவாகும். இவை பிரமாணங்களால் காணக் கூடியவை. இந்த மூன்று குணங்களுள் சாத்துவிக குணத்தை யுடையவனுக்கு வீடணனையும், இராசச குணத்தை உடையவனுக்கு இராவணனையும், தாமசகுணம், உடையவனுக்கு கும்பகருணனையும் எடுத்துக்காட்டுகளாகக் கொள்வர் தவத்திரு சித்பவானந்த அடிகள்.

இந்த மூன்று குணங்களும் சேர்ந்த நிலையில் கர்மவான்களாகிய சம்சாரியினுடைய ஞானம் ஆனந்தம் இவற்றிற்கு மறைவை உண்டாக்கும். அதுவல்லாததனை அதுவாக நினைக்கும் விபரீத ஞானத்தையும் உண்டாக்கும். ஆன்மா அல்லாத உடலை ஆன்மா எனக் கொள்ளல், இறைவனுக்கு அடிமையாக உள்ள ஆன்மாவை சுதந்திரமானது எனக் கருதுதல், ஈசுவரன் அல்லாதவர்களை ஈசுவரனாகக் கருதுதல், புருஷார்த்தம் அல்லாத கைவல்யார்த்திகளையே புருஷோர்த்த

மாகக் கொள்ளல், உபாயமல்லாதவற்றை உபாயமாகக் கொள்ளல் போன்றவை விபரீத ஞானத்திற்கு எடுத்துக் காட்டுகளாகும். இன்னும் இத்தத்துவம் ஆதல் அழிதல் இல்லாதது. இஃது ஈசுவரனுடைய உலகப் படைப்பு முதலியவற்றிற்கு விளையாட்டுக் கருவியாக அமைந்து ஏற்றத்தாழ்வு உள்ள இடம், ஏற்றத்தாழ்வு அற்ற இடம் என்ற இடவேறுபாட்டாலும், அழிக்குங்காலம் படைப்புக்காலம் என்ற இரண்டு வகையான காலவேறுபாட்டாலும் சூக்கும விகாரங்களையும் தூல விகாரங்களையும் உண்டாக்கும் தன்மையது.

இந்த மிச்ர தத்துவம் இருபத்து நான்கு வடிவங்களாக இருக்கும். அதாவது சீவான்மாவைப் பூரிக்கும்படிச் செய்ய வல்ல சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற புலன்கள் ஐந்தும்; மெய், வாய்,கண், செவி, மூக்கு ஆகிய பொறிகள் ஐந்தும்; வாக்கு, கால், கை, எருவாய், கருவாய் ஆகிய கருமேந்திரியங்கள் ஐந்தும்; மண், நீர், எரி, கால், ஆகாயம் என்னும் பூதங்கள் ஐந்தும்; இங்குள்ள இந்த ஆன்மாக்கள் பொருந்தியுள்ள மூலப்பிரகிருதி ஒன்றும்; மகத் (மான்) தத்துவம் ஒன்றும்; அகங்காரத் தத்துவம் ஒன்றும்; மனம் ஒன்றும் என இருப்பத்து நான்காம். அசித்தின் இந்த இருபத்து நான்கு தத்துவங்களையும் கலந்துதான் ஈசுவரன் தானாகாவும்,நான்முகன் மூலமாகவும் இந்த அகிலத்தைப் படைக்கின்றான்.

இத் தத்துவங்களை வடமொழியிலுள்ள முதல் 24 எழுத்துகள் குறிக்கின்றன. எவ்வாறெனில்; 'க' இனத்தைச் சேர்ந்த ஐந்து எழுத்துகளால் பூதங்கள் ஐந்தும்; 'ச' இனத்தைச் சார்ந்த ஐந்து எழுத்துகளால் கருமேந்திரியங்கள் ஐந்தும்; 'ட'

இனத்தைச் சேர்ந்த ஐந்து எழுத்துகளால் ஞானேந்திரியங்கள் ஐந்தும்; 'த' இனத்தைச் சார்ந்த ஐந்து எழுத்துகளால் ரூபம், சத்தம், மணம், சுவை, ஸ்பர்சம் (ஊறு) ஆகிய ஐந்தும்; 'ப' இனத்தைச் சார்ந்த முதல் நான்கு எழுத்துகளால் மனம், அகங்காரம் மகத் தத்துவம், மூலப்பிரகிருதி ஆகிய நான்கும்; இவ்வினத்தைச் சார்ந்த 25-ஆம் எழுத்தாகிய மகாரத்தால் ஆன்மாவும் சொல்லப் பெறுகின்றன.

**படைப்பு வகைகள் :** எம்பெருமான் அண்டத்தைப் படைத்து அதற்குள் நான்முகனைப் படைத்தல் **'சமஷ்டி'** சிருஷ்டி என்று வழங்கப்பெறும். இதனை அத்வாரக **'சிருஷ்டி'** என்றும் கூறுவர். நான்முகன் வாயிலாக இந்த அண்டத்திற்குட் பட்ட பதினான்கு உலகங்களையும் தேவர், மனிதர், விலங்குகள், பறவைகள், தாவரங்கள் முதலியவற்றைப் படைத்தல் 'வியஷ்டிசிருஷ்டி எனப்படும். இது சத்வராக சிருஷ்டி' எனவும் வழங்கப்பெறும். நான்முகனுடைய முகம், புயம் துடை, கால்களில் முறையே பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் எனப் பிறந்த சத்துவ இராசச, தாமசகுணங்களை உடையவரான சேதநர்களைப் படைத்தல் மிச்ரசிருஷ்டி என்று கூறப்பெறும்.

**அண்டங்கள் :** இவை அசித்தின்பாற்பட்டவை. எம்பெருமான் படைத்த அண்டங்கள் எண்ணிறந்தவை.

> அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
> அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
> ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
> நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன[8]

8. திருவா. திருவண்டப்பகுதி (1–4) அடிகள்

என்று மணிவாசகப் பெருமான் கூறியுள்ளதை நினைவு கூரலாம். பாரதியாரும்,

> நக்க பிரானருளால்—இங்கு
> நடைபெறும் உலகங்கள்— கணக்கிலாம்!
> தொக்கன அண்டங்கள்— வளர்
> தொகைபல கோடிபல் கோடிகளாம்!
> இக்கணக் கெவரறிவார்—புவி
> எத்தனை யுளதென்ப தியாரறிவார்!
> நக்க பிரானறிவான்;— மற்று
> நானறி யேன்பிற' நரரறியார்[9]

என்று கூறியுள்ளதை நினைவு கூர்ந்து மகிழலாம்.

**அண்டங்கள் அமைப்பு வருமாறு :** கீழ் அண்ட கபாலத்தின்மேல் எண்பத்துமூன்றரை (83½) இலட்சம் யோசனை உயரம் உள்ளது **'கர்ப்போதகம்'**. இதன் மேல் ஒவ்வொன்றும் பதினாயிரம் யோசனை உயரமும் அகலமும் உள்ள அதலம், விதலம், நிதலம், தராதலம், மகாதலம்,சுதலம், பாதளம் என்ற பெயர்களையுடைய ஏழு உலகங்கள் உள்ளன. இவற்றின்மீது மனிதர்கள் வாழும் பூலோகம் உள்ளது. இஃது எழுபதினாயிரம் யோசனை அகலமுடையது. இதில் ஏழு தீபங்களும், ஏழு மாக்கடல்களும், ஏழு குலபர்வதங்களும் அடங்கியிருக்கும். இந்த உலகிற்குமேல் சூரியனுக்குக்கீழ் நூறாயிரம் யோசனை உயரமுடையதாய் இருப்பது 'புவர் லோகம்'. இதில் கந்தர்வர்கள் வசிப்பர். சூரியனுக்குமேல் துருவனுக்குக்கீழ் பதினான்காயிரம் யோசனை உயரத்தி லுள்ளது **'சுவர்லோகம்'**. இதில் நட்சத்திரங்கள், கிரகங்கள்,

9. பா.க.தோ.பா. கோமதியின் மகிமை-(4-5)

இந்திரர் முதலியோர் வசிப்பர். துருவனுக்குமேல் ஒரு கோடி யோசனை உயரமுள்ளதாக இருப்பது 'மகர்லோகம்'. இதில் அதிகாரத்திலிருந்து விடப்பட்டவரும், அதிகார அபேட்சித ருமான இந்திரர் முதலியோர் இருப்பர். இந்த உலகிற்குமேல் இரண்டு கோடியோசனை உயரத்திலிருப்பது 'ஜனர்லோகம்'. இதில் சனகர் முதலிய பரமயோகியர் வசிப்பர். ஜனர் லோகத்திற்குமேல் எட்டுக்கோடியோசனை உயரத்திலிருப்பது 'தபோலோகம்' ஆகும். இதில் வைராக்கியரான பிரஜாபதிகள் வசிப்பர், தபோலோகத்திற்குமேல் நாற்பத்தொரு கோடி யோசனை உயரமுள்ளது 'சத்தியலோகம்'. இங்குத்தான் நான்முகன், விஷ்ணு, சிவன் இவர்கள் வசிப்பர்.

இந்தப் பதினான்கு உலகங்களையும் கோடி யோசனை எடுப்புள்ள அண்டகடாகமும், அதை அதனினும் பதின்மடங்கு அதிகமான ஜலதத்துவமும், அதனை அதனினும் பதின்மடங்கு அதிகமான தேஜஸ் தத்துவமும், அதை அதனினும் அதிகமான வாயு தத்துவமும், அதை அதனினும் பதின்மடங்கு அதிகமான ஆகாய தத்துவமும், அதை அதனினும் பன்மடங்கு அதிகமான அகங்கார தத்துவமும், அதை அதனினும் பதின்மடங்கு அதிக மான மகத் தத்துவமும், அதை அளவிறந்ததாயும் பதின்மடங்கு அதிகமானதாயும் உள்ள அவ்யக்தமும் அதாவது மூலப் பிரகிருதியும் ஆவரித்துக் கொண்டிருக்கும். ஆக, இப்படி கடாகாவரணம், அக்கினி ஆவரணம், வாயுவாவரணம், ஆகாயவாவரணம், அகங்கார ஆவரணம், மகத்ஆவரணம், அவ்யக்தாவரணம் என ஏழு ஆவரணங்களாலும் இந்தப் பதினான்கு உலகங்களும் சூழப்பெற்றிருக்கும். சிறார்கட்கு விளையாட்டுக்குரிய பந்து போலே பகவானுக்கு இந்த உலகங்கள் விளையாட்டுக்குரிய கருவிகளாக இருக்கும். மேலும் இவை ஒவ்வொரு படையாக வைத்து வீடு கட்டுவது போல

ஒவ்வொரு அண்டமாகப் படைக்கப்பெறாமல் நீர்க்குமிழிகள் போல் ஒரே காலத்தில் பகவானுடைய சங்கற்பத்தினால் படைக்கப் பெறும்.

**(இ). சத்துவ சூனியம் :** இதுவே அசித்தின் இரண்டாவது பகுதியாகிய காலத்தத்துவமாகும். காலம் என்பது எங்கும் பரந்து நிற்கும் ஒரே திரவியம். இதில் சாத்துவிகம், இராசசம், தாமசம் என்ற முக்குணங்கள் இல்லை. எதிர்,நிகழ், கழிவு என்ற கால நிலைகட்கு இதுவே காரணமாகும். காலம் என்பது விநாடி நிமிடம், நாழிகை, முதல் பரார்த்தம் வரையிலுள்ள பகுதிகளைக் கொண்டது. "நிமிடம் பதினைந்து கொண்டது காஷ்டை; காஷ்டை முப்பது கொண்டது கலை; கலை முப்பது கொண்டது முகூர்த்தம்; முகூர்த்தம் முப்பது கொண்டது. நாள்; நாள்முப்பது கொண்டது மாதம்; மாதம் இரண்டு கொண்டது இருது; இருது மூன்று கொண்டது அயனம்; அயனம் இரண்டு கொண்டது ஆண்டு;......பரார்த்தம்"

இங்ஙனம் மனித ஆண்டு 360 கொண்டது. தேவ ஆண்டு; தேவ ஆண்டு 12,000 கொண்டது ஒரு சதுர்யுகம். 71 சதுர்யுகம் கொண்டது. ஒரு மந்வந்தரம். 14 மந்வந்தரம் கொண்டது 1000 சதுர்யுகம். இது நான்முகனுக்கு ஒரு பகல்; 2000 சதுர்யுகம் நான்முகனுக்கு ஒருநாள். இந்த நாட்களால், மாதம், வருடங்களைப்பெருக்கி அந்த வருடங்கள் 100 ஆனால் நான்முகன் ஆயுள் முடியும். இதற்குப் 'பரம்' என்று பெயர். இங்ஙனம் பல்வேறு வடிவாகத் தோன்றக் கடவதாய், ஆதி, அந்தம் அற்றதாய், ஈசுவரனுடைய உலகப் படைப்பு, அளிப்பு, அழிப்பு - ஆகிய விளையாட்டுக் கருவியாய் ஈசுவரனுக்குச் சரீரமாக அமைந்தது இக் காலத் தத்துவம் . இவ்வாறு காலத்தின் கூறுகளை பராசரபகவான் விஷ்ணுபுராணத்தில் பேசுவர்.

ஆதியும் அந்தமும் இல்லாத இக்கால நியமத்திற்கு உட்பட்டே இக்கர்ம லோகத்திலுள்ள மாறுபாடுகள் எல்லாம் எம்பெருமான் சங்கற்பத்தினால் நடைபெறுகின்றன. காலம் நித்திய விபூதியில் (பரமபதத்தில்) நித்தியம். இந்த லீலா விபூதியில் (நம் உலகத்தில்) காலம் அநித்தியம், அதாவது பரமபதத்தில் காலம் நடையாடாது; இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற நிலைகள் அங்கு இல்லை; ஆகவே, நித்தியம், ஆனால் முன்பின் என்ற அளவிற்கு வேறுபாடு உண்டு. ஆயினும், அதன் சம்பந்தம் இன்றி அனைத்தும் எம்பெருமானது சங்கற்பத்தில் மட்டும் நடைபெறுவனவாகும். இந்த உலகில் இஃது அநித்தியமாதலால் இறப்பு, நிகழ்வு எதிர்வு என்ற பேச்சு உண்டு. இந்தக் காலம் ஈசுவரப்படைப்பின் பரிணாமங்கட்குக் காரணமாய், அவனுடைய படைப்பு, அளிப்பு, அழிப்பு ஆகிய விளையாட்டுக் கருவியாய்ப் பயன்படுகின்றது.

சித்து, அசித்து என்ற தத்துவங்கள் எம்பெருமான் திருமேனியில் அடங்கியிருக்கும் நிலையை வேதாந்த தேசிகர். அழகாகப் பாசுரம் இட்டுக் காட்டுவர்.

புருடன்மணி வரமாகப் பொன்றா மூலப்
பிரகிருதி மறுவாக மான்தண் டாகத்
தெருள்மருள்வாள் உறையாக ஆங்கா ரங்கள்
சார்ங்கஞ்சங் காகமனம் திகிரி யாக
இருடிகங்கள் ஈரைந்தும், சரங்க ளாக
இருபூத மாலைவன மாலை யாகக்
கருடன்உரு வாம்மறையின் பொருளாங்கண்ணன். [10]
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

10. தே.பி.80

இதில் கருடனுடைய உடலாக நிற்கின்ற வேதத்தின் பொருளாகவுள்ள எம்பெருமான் திருமேனி காட்டப் பெறுகின்றது. சீவன் இரத்தினங்களுள் சிறந்த கௌஸ்த்துவ இரத்தினமாகவும், அழியாத மூலப்பிரகிருதி 'ஸ்ரீவத்ஸம்' என்னும் மறுவாகவும், மகாந் என்றும் தத்துவம் 'கௌமோதகி' என்னும் கதையாகவும், ஞானம் 'நந்தகம்' என்னும் கத்தி யாகவும், அஞ்ஞானம் கத்தியின் உறையாகவும் தாமசாகங் காரம் 'சார்ங்கம்', என்னும் வில்லாகவும், சாத்துவிக அகங்காரம் 'பாஞ்சசன்னியம்' என்னும் சங்காகவும், மனம் என்னும் தத்துவம் 'சுதர்சனம்' என்னும் சக்கரமாகவும், ஞானேந் திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும், அம்புகளாகவும், தந்மாத்திரைகள் ஐந்தும், பூதங்கள் ஐந்தும் ஆகியவற்றின் வரிசை 'வனமாலையாகவும்' எம்பெருமானின் திருமேனியில் இருப்பதை அழகாகக் காட்டுவர் சுவாமிதேசிகன்.

### 3. ஈசுவரன் :

சீமந் நாராயணனே சர்வேசுவரன். இவன் எப்பொழுதும் மாறுபடாத் தன்மையுடையவன். சத்தியம், ஞானம், ஆனந்தம், அனந்தம் இவற்றின் சொரூபமாக இருப்பவன். இடத்தாலும் காலத்தாலும் அளவிடப்பெறாதவன். மூன்றுவித சேதந-அசேதந பரிமாண ரூபமான வேறுபாட்டின் குறைகள் தட்டாதவன். அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்குவித பலன்களையும் உயிர்கட்கு நல்கி அவற்றின் புகலிடமாக இருப்பவன். தன் சொரூபத்தாலும் திருமேனியாலும் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன். ஞானம் சக்தி, பலம், ஐசுவரியம், வீரியம் தேஜஸ் முதலிய மங்களக் குணக் கூட்டங்

களால் அலங்கரிக்கப்பெற்றவன். அவனிடம் இக்குணங்கள் ஆதல் அழிதல் இன்றி எப்பொழுதும் நிறைந்திருக்கும். இவற்றைத் தவிர, வாத்சல்யம், சௌசீல்யம், சௌலப்பியம் முதலிய எண்ணற்ற குணங்களையும் கொண்டவன்.

இந்தப் பூவுலகில் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றின் காரணபூதன், அனைத்திற்கும் ஆதாரமானவன்; அனைத்தையும் அடக்கி ஆள்பவன்; அனைத்தினுடைய பலனையும் அநுபவிப்பவன். தன்னை அடைந்தவருடைய எல்லா வினைகளையும் போக்குபவன். சகல வேதங்களாலும் போற்றப்படுபவன். சகல கர்மங்களாலும் தானே ஆராதிக்கப் பெற்று பலன்களைத் தருபவன். நான்முகன் முதலிய சகல தேவர்களையும் படைப்பவன். அவர்கள் அனைவரும் இவனுடைய கட்டளைக்கு அடங்கி நடப்பவர்களே. இந்த லீலாவிபூதியில் (உலகில்) உயிர்களைத் தம் வினைகட்கேற்ப உடல்களை அடைவதற்கும், பிறகு அவை வீடுபேறு அடைவதற்கும் இவனே காரணன். இவன் விரும்பிப் பெற முடியாதது ஒன்றும் இல்லை.

நித்திய விபூதியாகிய பரமபதத்தில் இவனுக்கெனத் தனியான திருமேனி உண்டு. அஃது ஈடும் எடுப்பும் அற்ற பேரொளியினை உடையது. பேரழகு வாய்ந்து; கண்டாரை ஈர்ப்பது; யோகியரின் தியானத்திற்கு ஏற்றது. அந்த உருவத்துடன் பெரிய பிராட்டியார், பூமிப்பிராட்டியார், நீளாதேவி ஆகியோருக்கு நாயகனாக இருப்பவன்.

**ஐந்து நிலைகள் :** இறைவனுடைய திருமேனி (திவ்விய மங்கள விக்கிரகம்) பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யா மித்துவம், அர்ச்சை என்ற ஐந்து வகையோடு கூடியிருக்கும்.

**(அ) பரத்துவம் :** இது நித்திய விபூதியில் பெரிய பிராட்டியார், பூமிப் பிராட்டியார். நீளாப்பிராட்டியார் என்ற மூன்று தேவிமார்களைக் கொண்டிருக்கும் இருப்பு; பஞ்சாயுதங்களையும் தாங்கிக் கொண்டிருக்கும் இருப்பு மாகும். ஞானம். சக்தி, பலம், ஐசுவரியம், வீரியம், தேஜஸ் என்ற ஆறு திருக்குணங்களும் இவனுக்கு உண்டு. இவனைப் **'பரவாசுதேவன்'** என்ற திருப்பெயரால் வழங்குவர்.

**(ஆ) வியூகம் :** இது லீலாவிபூதியில் (இந்த உலகில்) அதன் படைப்பு, அளிப்பு, அழிப்பு இவற்றை நடைபெறச் செய்வதற்காகவும் சம்சாரிகட்கு வேண்டியவற்றை ஈந்து வேண்டாதவற்றைப் போக்கி அவர்களைக் காத்தற்பொருட்டும் மோட்சத்தை விரும்பி. தன்னை இடைவிடாது நினைப்பவர் கட்கு (உபாசிப்பவர்கட்கு) அவர்தம் தளைகளைப் போக்கித் தன்னை வந்து அடைவதற்குக் காரணமான பேரருளைச் சுரப்பதற் காகவும் வியூகம் **"வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்யும்நன், அநிருத்தன்"** என்ற பெயர்களுடன் இருக்கும் இருப்பாகும்.

(i) **வாசுதேவர் :** இவர் வியூக வாசுதேவன் என்று வழங்கப் பெறுவார். வாசுதேவரூபமான பரத்துவத்தில் இருப்பது போல இவரிடமும் ஞானம், சக்தி பலம், ஐசுவரியம், வீரியம்,தேஜஸ் என்ற ஆறு குணங்களும் நிறைந்திருக்கும். ஏனைய மூன்றில் அவரவர் மேற்கொண்ட செயலுக்குத் தக்கவாறு ஒவ்வொன்றிலும் இரண்டிரண்டு குணங்கள் விளக்கமாக இருக்கும். படைக்கப்பெற்ற சேதநர்களைக் காத்தற் பொருட்டு, தேவர் முதலியவர்கட்கு ஆபத்து நேரிட்ட காலத்துச் சென்று அறிவிக்கலாம்படி அவதாரங்கட்கெல்லாம் நாற்றங்காலான திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான்மீது

உலகப் பாதுகாப்பில் சிந்தை செலுத்தி உறங்குவான்போல் யோகத்தில் ஆழ்ந்து கிடப்பார்; இந்த வியூகாவதாரங்களைப் பற்றிய குறிப்புகளை ஆழ்வார் பாசுரங்களில் காணலாம்.

(ii) **சங்கர்ஷணர் :** ஞானம், பலம் என்ற இரண்டு குணங்களோடு கூடியிருப்பார். இவர் பிரகிருதிக்குள் உயிர்த் தத்துவத்திற்குத் தலைவனாகி நிற்பார். இந்தத் தத்துவத்திற்குப் பிரகிருதியினின்றும் வேறாக்கி பிரத்யும்நர் நிலையை அடைந்து வேதம் முதலிய சாத்திரங்களை வெளியிடுவார். உலக அழிப்பிற்கும் காரணமாக இருப்பவரும் இவரேயாவார்.

(iii) **பிரத்யும்நர் :** இவர் ஐசுவரியம், வீரியம் ஆகிய இரண்டு குணங்கள் பொருந்தியிருப்பவர். இவர் ஞானத்திற்கு ஊற்றுவாயான மனம் என்ற தத்துவத்திற்குத் தலைவராக இருப்பார். மேலும் , இவர் சாத்திரமுறைப்படி ஒழுக வேண்டிய தர்மோபதேசத்தையும் சுத்தவர்க்க சிருஷ்டியையும் செய்பவராக இருப்பார்.

(iv)**அநிருத்தர்:** சக்தி,தேஜஸ் என்ற இரண்டு குணங்களோடும் கூடியவர். இவர் உலகப் பாதுகாப்பிற்கும் உயிர்கள் ஈடேறுவதற்கும் தகுதியான தத்துவஞானங்களைக் கொடுத்தற்கும் காலப் படைப்பிற்கும் மிச்ரவர்க்க சிருஷ்டிக்கும் உரியவராக இருப்பார்.

**கிளை வியூகங்கள் :** மேற்குறிப்பிட்ட நான்கு வியூகங்கள் ஒவ்வொன்றும் மும்மூன்றாகப் பன்னிரண்டு கிளை வியூகங்களாகப் பிரிந்து நிற்கும். வியூக வாசுதேவரிடத்தினின்று கேசவன், நாராயணன், மாதவன் என்ற மூவரும் பிரிவர். சங்கர்ஷணரிடத்திருந்து கோவிந்தன், விஷ்ணு,

மதுசூதனன் என்ற மூவரும் தோன்றுவர். பிரத்தியும்னரிடத்தி னின்று திரிவிக்கிரமன், வாமனன், சிரீதரன் ஆகிய மூவரும் பிரிந்து நிற்பர். அநிருத்தரிடத்தினின்று இருடிகேசன், பதுமநாபன், தாமோதரன் என்ற முவரும் பிரிவர். இவர்களைப் பற்றிய குறிப்பு திருவாய்மொழியில் 'பன்னிரு திருநாமப் பாட்டு'[11] ஒன்பதில் காணலாம். வேதாந்த தேசிகரும் பன்னிருதிருநாமம் என்ற தலைப்பில் ஒரு பிரபந்தம்[12] அருளிச் செய்துள்ளார்.

**(இ) விபவம் :** இது அவதாரங்களைப் பற்றிக் கூறுவது. இவை ஆவேச அவதாரம்,முக்கிய அவதாரம் என்று இரு வகையாகப் பகுத்துப் பேசப்பெறும். ஆவேச அவதாரத்தைக் **'கௌணாவதாரம்'** என்றும் வழங்குவர். முக்கிய அவதாரம் **சாட்சாத் அவதாரம்** என்றும் கூறப்பெறும்.

**(i) ஆவேச அவதாரம் :** ஆவேச அவதாரத்தில் கபிலர், தத்தாத்ரேயர், பரசுராமன் போன்ற அவதாரங்கள் அடங்கும். இவற்றுள் ஆவேச அவதாரங்களில் அகங்காரத்துடன் கூடிய சீவர்களை ஈசுவரன் ஒரு காரியத்தின் பொருட்டு ஆவேச முகத்தால் அதிட்டித்து நிற்கையாலேஇவை புபூட்சுகளுக்கு[13] உபாசிக்கத் தக்கவையேயன்றி முமுட்சுகளுக்கு உபாசிக்கத் தக்கவை அல்ல.

**(ii) முக்கிய அவதாரம் :** இதில் "ஆதிஅம்சோதியுருவை அங்கு வைத்து இங்குப் பிறந்த"[14] இராமர், கிருஷ்ணர், வாமன திரிவிக்கிரமர்" முதலான மனித அவதாரங்களும் "மச்சம் கூர்மம்

11. திருவாய்–2.7
12. தே.பி. (280–292)
13. முமுச்சுகள்–மோட்சத்தில் விருப்பமுள்ளவர்கள் புபூட்சுகள்–உலகாயதர்
14. திருவாய் 3, 5:5

வராகம்" போன்ற திர்யக் (= விலங்கு) அவதாரங்களும் குப்ஜாமரம்(குட்டை மாமரம்) முதலான தாவரவடிவங்களும் அடங்கும். முக்கிய அவதாரங்கள் யாவும் ஒரு விளக்கினின்றும் கொளுத்திய மற்றொரு விளக்கு தனக்குக் காரணமான விளக்கின் தன்மைகளைப் பெற்றிருக்குமாப்போலே அசாதாரண விக்கிரகத்தின் தன்மையைக் கொண்டிருத்தலால் முமுட்சுகளுக்கு உபாசிக்கத் தக்கவையாக அமைகின்றன.

இந்த இரண்டு வகை அவதாரங்களும் எம்பெருமானின் இச்சையாலே ஏற்பட்டவையாகும். ஈசுவரனின் அவதாரங்களின் பலன் அடைந்தாரைக் காத்தல் அவர்தம் விரோதிகளைப் போக்கல், வைதிக தருமத்தை நிலைநிறுத்தல்[15] ஆகிய மூன்றுமாகும்.

**(ஈ) அந்தர்யாமித்துவம் :** சேதநர்களின் உள்ளே புக்கிருந்து அவர்களுடைய எல்லாச் செயல்கட்கும் தான் ஏவுபவனாக இருக்கும் நிலையாகும். அதாவது நல்வினை காரணமாக துறக்கம் அடைதல். தீவினைகாரணமாக நரகம் புகுதல்,நல்வினை தீவினைகளாகிய இரண்டின் காரணமாக கருப்பத்தில் புகுதல் முதலிய எல்லா நிலைகளிலும் எல்லாச் சேதநர்க்கும் ஆன்மாவிற்குள்ளே தனது சொரூபத்தாலே வியாபித்து நின்று அவர்கட்குத் துணையாய் அவர்களை ஒருகாலும் விடாமல் அந்தராத்மாவாய் இருக்கும் இருப்பே இது. சேதநர்க்குத் தியானருசி பிறக்கும்போது தியானத்திற்கு உரியவனாதற்காகவும் அவர்களைக் காப்பதற்காகவும் அழகே வடிவெடுத்தாற்போன்ற மங்களகரமான திருமேனியுடன் எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பெற்றவனாய்ப் பெரிய பிராட்டியரோடு கட்டை விரல் அளவாய் (அங்குஷ்ட

15. கீதை 4;8

பிரமாணமாய்) எழுந்தருளியிருக்கும் இருப்பே இந்த நிலையாகும். இது விக்கிரக வியாப்தியாகும்.

(உ) அர்ச்சாவதாரம் : அடியார்கள் எதைத் தமக்குத் திருமேனியாகக் கொள்ளுகின்றார்களோ அதனையே இறைவன் தனக்கு வடிவமாகவும், அவருகந்து வைத்த பெயரையே தனக்குப் பெயராகவும் கொண்டுள்ள நிலையாகும். இந்நிலையில் இறைவன் இன்ன இடத்தில் இன்னகாலத்தில் இன்னாரிடத்தில் தோன்றி சந்நிதி பண்ண வேண்டும் என்கின்ற நிலை இல்லாதபடி விரும்பிய எந்த இடத்திலும், எந்தக் காலத்திலும் எவரிடத்திலும் தோன்றிச் சந்நிதி பண்ணி நீராட்டம், தளிகை, இருப்பு முதலான எல்லாச் செயல்களையும் உடையவனாய் திவ்விய தேசங்களிலும், அடியார்களின் திருமாளிகையிலும் எழுந்தருளியிருக்கும் இருப்பாகும். உலகியலில் மண்டியிருப்போருக்குத் தன்பக்கல் ருசியை உண்டாக்குதலும் பிறகு தன்னைத் துதிப்பவர்களுடைய கண்ணுக்கும் நெஞ்சுக்கும் இனிதாம்படி போக்கியத்திற்கு இடமாயிருத்தலும், தன்னை உபாயமாகப் பற்றுமளவில் எல்லா உலகினரும் உபாயமாகப் பற்றுதற்குத் தகுதியா யிருத்தலும் பரமபதத்தில் போய் அநுபவிக்க வேண்டாமல்,

> **அண்டர்கோன் அணிஅரங்கன் என் அமுதினைக்**
> **கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே.**[16]

என்று திருப்பாணாழ்வார் அநுபவித்தவாறு அநுபவிக்கத் தக்கதாக இருத்தலும் இந்த அர்ச்சாவதாரத்தில் முற்றுப் பெற்றிருக்கும்.

16. அமலனாதி–10

**பிள்ளை உலக ஆசிரியரின் விளக்கம் :** இந்த ஐந்து நிலைகளையும் பிள்ளை உலக ஆசிரியர்,

> **"பூகத ஜலம்போலே அந்தர்யாமித்துவம்; ஆவரண ஜலம் போலே பரத்துவம்; பாற்கடல் போலே வியூகம்; பெருக்காறு போலே விபவம்; அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்"[17]**
>
> [பூகதம் -பூமிக்குள்ளே இருக்கின்ற ஆவரணம்- மூடிக் கொண்டிருப்பது]

என்று அழகாக விளக்குவர்.

இந்த வாக்கியத்தில் பரத்துவம் முதலான எம் பெருமானின் நிலைகளின் அருமையையும் அர்ச்சாவதாரத்தின் எளிமையையும் சில எடுத்துக்காட்டுகள் மூலம் விளக்குவர். இந்த ஆசாரியப் பெருமகனார்.

தண்ணீர் வேட்கை கொண்டவனுக்கு வேறு இடங்கட்குச் செல்லவேண்டாதபடி தண்ணீர் தான் நிற்கும் இடத்தில் பூமிக்கடியில் இருந்தாலும் கொட்டும் குந்தாலியும் கொண்டு கல்லினால் அல்லது குடிக்கக்கிடைக்காதிருப்பதைப் போல, ``எம்பெருமானைக் கண்டு பற்றவேண்டும் என்ற அவா இருந்தும் கட்கிலீ!"[18] என்று நம்மாழ்வார் குறிப்பிட்டபடி கண்களால் காணமுடியாதவாறு அட்டாங்க யோகமுயற்சியால் மட்டிலும் காணக்கிட்டுபவன் அந்தர்யாமித்துவ நிலையி லுள்ள இறைவன். 'அப்பால் முதலாய் நின்ற அளப்பரிய ஆரமுது'[19] என்று பரகாலர் கூறியபடி இந்த லீலாவிபூதிக்கு (படைப்பு, ஆழிப்பு முதலான விளையாட்டிற்குரிய உலகங்

17. ஸ்ரீவச.பூஷ.42
18. திருவாய் 7.2:3
19. திருநெடுந். 14

கட்கு) அப்பாற்பட்டிருப்பவன் பரத்துவ நிலை எம்பெருமான். அப்படி மிக்க நெடுந்தொலைவு அன்றியே இந்த உலகின் எல்லைக்குள்ளே இருப்பினும் "பாலாழி நீ கிடக்கும் பண்பையாம் கேட்டேயும்"[20] என்று நம்மாழ்வார் கூறுகிறபடி கேட்டிருக்கும் என்பதன்றிச் சென்று காண அரிதாம்படி இருப்பவன் வியூகநிலை எம்பெருமான்.

மிக அண்மையில் இருந்தும் வெள்ளம் வருங்காலத்தில் இருந்தவர்கட்கு மட்டிலும் பருகலாம்படியாய் வேறு காலங்களில் இருப்பவர்கட்குப் பருகுவதற்கு அரியதாய் இருக்கும் பெருக்காறு போலே, "மண்மீது உழல்வாய்!"[21] என்று நம்மாழ்வார் கூறுவதுபோல் பூமியிலே அவதரித்துச் சஞ்சரித்தும் அக்காலத்தில் வசித்தவர்கட்குமட்டிலும் அடையத்தக்கவர்களாய்ப் பிற்காலத்தில் உள்ள இவனுக்குக் கிட்டாதபடி இருப்பவர்கள் விபவநிலை எம்பெருமான்கள். மேற்கூறிய எம்பெருமான்கள் போலன்றி காண்பதற்குத் தேசத்தாலும், காலத்தாலும், கரணத்தாலும் கிட்டுவதற்குச் சேயதாய் அன்றி. திருக்கோயில்களிலும், திருமாளிகைகளிலும் என்றும் ஒக்க எல்லார்க்கும் கண்ணுக்கு இலக்காகும்படி "பின்னானார் வணங்கும் சோதியாக"[22] இருப்பவன் அர்ச்சாவதார எம்பெருமான், பல இடங்களிலும் எழுந்தருளியிருக்கும் நிலைகளை நினைந்து 'மடுக்கள்போலே' என்று பன்மையால் அருளிச் செய்தார். அவதாரங்களின் குணங்கள் எல்லாம் அர்ச்சையிலேயே குறைவற்று நிறைந்திருப்பதாலும் அவதாரங்களின் திருவுருவங்களை அர்ச்சை வடிவமாகப் பலவிடங்களில் மேற்கொண்டிருப்பதனாலும் "அதிலே தேங்கின மடுக்கள் போலே" என்று குறிப்பிட்டார் இந்த ஆசாரியப் பெருமகனார்.

20. பெரி. திருவந். 34 21. திருவாய் 6.9:5 22. திருநெடுந்.10

# 10. வைணவ மந்திரங்கள்

எம்பெருமானைக் கிட்டப்பெற்று, அவனுக்கு அநுபவ கைங்கரியங்களைச் செய்து, அவனுடைய முக உல்லாசத்தைப் பெறவேண்டும் என்னும் இச்சையால் சமுசாரத்தில் வெறுப்புக் கொண்டவனாகிய முமுட்சுக்கு-மோட்சத்தில் விருப்பமுடையவனுக்கு ஆன்மசொரூபம்[1] இன்னது என்றும், அவ்வான்மா நலம் அடைவதற்கு உபாயம்(வழி) இன்னதென்றும், அவ்வழியைப் பற்றுவதனால் உண்டாகும் பயன் இன்னது என்றும் தெரிந்து கொள்ள வேண்டும். இவற்றைத் தெரிவிப்பனவே "திருமந்திரம்,துவயம், சரமசுலோகம் என்ற மூன்று மந்திரங்கள். இம்மூன்றும் சகல வேதங்க்ளின் சாரமான பொருளைத் தெரிவிப்பதனாலும், இவற்றின் பெருமையை உணராதார் காதில் விழாதவாறு இவற்றை மறைக்க வேண்டியிருத்தலினாலும் இவை 'மந்திரங்கள்' என்ற திருநாமம் பெற்றன.

இம் மூன்று மந்திரங்களுள் (1) திருமந்திரம் முக்கியமானது. ஆதலால் இதனை முதலில் தெரிந்து கொள்ளவேண்டும். "ஓம் நமோ நாராயணாய". என்பது திருமந்திரம்.[2] இதில்

---

1. ஆன்மசொரூபம்—உடலைக் காட்டிலும் வேறுபட்ட ஆன்மா தனக்கும் பிறருக்கும் உரிமையுடையதாயிராமல் ஈசுவரனுக்கே அடிமைப் பட்டவனாய் (சேஷபூதனாய்) இருத்தல்.

'ஓம்' 'நமோ'; 'நாராயணாய' என்ற மூன்று பதங்கள் அடங்கியுள்ளன. இவற்றுள் 'ஓம்' என்ற பதத்தின் பொருளையே 'நம' 'நாராயணாய' என்னும் மற்ற இருபதங்களும் நன்கு விரிவுபடுத்துகின்றன. இவ்விரு பதங்களின் பொருளையே 'துவயம்' விரிக்கின்றது. துவயத்தின் பொருளையே 'சரமசுலோகம்' மேலும் விரிக்கின்றது. இதனாலும் திருமந்திரத்தின் முதன்மை விளங்குகின்றதன்றோ? மேலும், இத்திருமந்திரம் முக்கியமாக அர்த்தபஞ்சக ஞானத்தையும், நவவித சம்பந்தஞானத்தையும் உள்ளடக்கிக் கொண்டுள்ளது.[3] மேற்குறிப்பிட்ட மூன்றிலும் 'ஓம்' என்ற பிரணவம் சேதநனுடைய சேஷத்துவத்தையும்[4] 'நமஸ்' என்ற நடுப்பதம் ஈசுவரனுடைய பாரதந்திரியத்தையும்[5], 'நாராயணாய' என்பது சேதநன் ஈசுவரனுக்குப் புரிய வேண்டிய கைங்கரியத்தையும்[6] தெரிவிப்பனவாகும்.

'ஓம்' என்ற பிரணவம் இரண்டு நிலைகளைக் கொண்டது. சேர்ந்திருக்கும் நிலையில் ஓர் எழுத்தை யுடையது; பிரிந்திருக்கும் நிலையில் அ, உ, ம என்ற மூன்று எழுத்துகளை உடையது. இம்மூன்று எழுத்துகளும் மூன்று பதங்களாய் மூன்று பொருள்களைத் தெரிவிக்கும். அகாரம் பகவானையும்

2. இது பதரிகாசிரமத்தில் இறைவன் நரனாகவும் நாராயணனாகவும் அவதரித்து நரனுக்கு நாராயணன் உபதேசித்ததாக வரலாறு, பத்ரிகாசிரமம் இமய மலையிலுள்ள திவ்விய தேசம். 108 இல் ஒன்று.
3. இவற்றின் விளக்கம் வேறோர் இடத்தில் தரப்பெற்றுள்ளது.
4. சேஷத்துவம்– பிறருக்கு (ஈசுவரனுக்கு) அடிமையாயிருத்தல் என்பது பொருள்.
5. பாரதந்திரியம்–பரனுக்கு (பகவானுக்கு) அடிமை என்பது பொருள்.
6. கைங்கரியம்:(கிங்கரன்–வேலையாள்) அவன் செய்யும் தொழில் கைங்கரியம். அதாவது அடிமைத்தொழில், இதனைச் சேதநன் ஈசுவரனுக்குச் செய்வது ஈசுவரனுடைய முக உல்லாசத்தின் பொருட்டு.

அதில் ஏறி மறைந்துள்ள (தொக்கி நிற்கும்) நான்காம் வேற்றுமை (சதுர்த்தி)-அதாவது நாராயணாய என்பதிலுள்ள 'ஆய' என்பது - சேஷத்துவத்தின் அநந்யார்ஹத்துவத்தையும்[7] மகாரம் ஞானவானாகிய சீவனையும் (சேதநனையும்)குறிக்கின்றன.

நமஸ்ஸு என்பதை ந+ம : என்று பிரிக்கலாம். இதில் ம; எனக்கு உரியன் என்றும், ந-அல்லன், அஃதாவது 'எனக்கு நான் உரியன் அல்லன்' என்றும் பொருள் கிடைக்கின்றது. 'எனக்கு நான் உரியன் அல்லன்' என்பதனால் 'பிறனுக்கு (ஈசுவரனுக்கு) உரியன்' என்பது பெறப்படுகின்றது. இம்முறையில் நமஸ் என்ற பதம் ஈசுவர பாரதந்திரியத்தைத் தெரிவிக்கின்றது என்பது தெளிவு.

'நாராயணாய' என்ற பதத்தின் பொருள். 'நாராயணன்' இப் பதம் வடசொல். இதில் நார+அயன என்ற இரண்டு பதங்கள் சேர்ந்து ஒரு பதமாக உள்ளது. இதற்கு இரண்டு வகையாகப் புணர்ச்சி இலக்கணம் கூறப்படும்.

முதல் வகை : நாரணாம் + அயநம் என்பது, தத்புருஷஸமாஸம்; இது வேற்றுமைப்புணர்ச்சி எனப்படும். இது நாரங்களுக்கு அயநமாயிருப்பவன் என்ற பொருளைத் தரும். 'அயநம' என்ற சொல் உபாயம், பலன், ஆதாரம் என்ற மூன்று பொருள்களை உணர்த்தும். நரனாகிய சீவான்மாவின் கூட்டம் 'நாரம்' எனப்படும். எம்பெருமான் சேதநர்களின் கூட்டத்தின் உபாயமாகவும் அநுபவிக்கப்படும் பலனாகவும், தன்னிடமிருந்து சேதாநாசேதநங்களுக்கு ஆதாரமாகவும் ஆகின்றான் என்பது வேற்றுமைப் புணர்ச்சியால் ஏற்பட்டது.

7. அநந்யார்ஹத்துவம் – மற்றவருக்கன்றி ஈசுவரனுக்கே உரித்தாயிருத்தல்.

**இரண்டாம் வகை :** நார+அயநம்+யஸ்ய என்பது, பஹு விரீஹி ஸமாசம். இஃது அன்மொழித்தொகை எனப்படும். இதனால் நாரங்களை அயநமாக உடையவன் என்ற பொருள் கிடைக்கும். 'அயந' பதம் 'பிரவேசிக்கப்படும் பொருள்' என்ற பொருளைத் தரும். ஆகவே சர்வேசுவரன் சேதநா சேதங்களைப் பிரவேசிக்கப்படும் பொருளாகக் கொண்டவன் என்று அன்மொழித் தொகையால் ஏற்பட்டது.

மேலும், 'அயந' என்ற பதம் வசிக்குமிடம் எனவும் பொருள்படும். எனவே, முற்கூறியபடி முதல் வகை இலக்கணப் புணர்ச்சியால் சேதந - அசேதநங்களுக்கு இருப்பிடமானவன் என்றும், இரண்டாவது வகை இலக்கணப்படி அவற்றைத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டவன் என்றும் பெரியோர் பொருள் கூறுவதுண்டு. இவ்வாறாயின் முதற்பொருளில் சேதந-அசேதநங்கள் இல்லாதவிடத்திலும் எங்கும் சர்வேசுவரன் உளன் என்று தேறும். இது 'பஹீர்வியாப்தி' எனப்படும். இரண்டாவது பொருளில் சேதநஅசேதநங்கள் உள்ளவிடத்தில்தான் இல்லை என்னவொண்ணாதபடி சர்வேசுவரன் கலந்து நிற்பவன் என்று தேறும். இஃது **'அந்தர்வியாப்தி'** எனப்படும்.

திருமந்திரத்தின் மூன்று பதங்களில் 'ஓம்' என்பதில் ஓர் எழுத்தும் 'நம' என்பதில் இரண்டு எழுத்தும், 'நாராயணாய' என்பதில் ஐந்து எழுத்துகளும் உள்ளன. இவற்றின் கூட்டுத் தொகை 1+2+5=8 என்றவாறு எட்டு எழுத்துகளாக அமைகின்றது. இதனால் இதனைத் தமிழில் 'எட்டெழுத்து மந்திரம்' என்றும், வடமொழியில் **'அஷ்டாட்சர மந்திரம்'** என்றும் வழங்குகின்றது. (அஷ்டம்-எட்டு; அட்சரம்- எழுத்து).

**பெருமையும் சிறப்பும் :** மந்திரங்கள் அனைத்திலும் சிறந்தது திருமந்திரம். பல சிறப்பான பொருள்களைக் கொண்டது; எல்லாப் பலன்களையும் அளிக்கவல்லது. மாதர்களும், நான்காம் வருணத்தாரும் இதனை அநுசந்திக் கலாம். இந்த மந்திரம் ஒரு முழுமையையும் பெற்றுள்ளது. இவ்வுலகிலுள்ள விண்ணும் மண்ணும் அவற்றிலுள்ள உயிர்களும் பொருள்களும் எம்பெருமானுடைய விபூதிகள். வைணவ தத்துவமான 'சரீர-சரீரிபாவனை' (உயிர் உடல் உறவு) இதனை நன்கு விளக்கும். இந்த உயிர்களுள்ளும் பொருள்க ளுள்ளும் ஈசுவரன் இருத்தலால் அவற்றை 'வியாப்பியப் பொருள்' என்று வழங்குவர். ஈசுவரன் வியாபகப்பொருள் ஆகின்றான். இங்ஙனம் எல்லாப் பொருள்களிலும் இருக்கும் அவனுடைய இருப்பு **'வியாப்தி'** என்றும்,அவன் ஒவ்வொரு பொருளிலும் அந்தர்யாமியாக இருப்பதை 'வியாப்பித் திருக்கும் விதம்' என்றும் கூறப்பெறும். உடலுக்கு உயிர் சத்தைத் தருவதுபோல ஈசுவரனும் ஒவ்வோர் உயிர்ப்பொருளிலும் ஆன்மாவாக இருந்து அந்தந்தப் பொருளின் சத்தை நிர்வகிப்பதையே பயனாக அமைகின்றான்.

திருமந்திரமாகிய நாராயணபதத்தை அருமறைகளும் விரும்பின. முனிவர்களும் ஆசாரியர்களும் ஆழ்வார்களும் விரும்பினர். ஆசாரியர்களுள் தங்களை வந்தடைந்தவர்கட்கு உபதேசித்து அவர்களை உய்வித்தனர்.

இம் மந்திரத்தின் பொருளான ஈசுவரனைக் காட்டிலும் இம் மந்திரத்தின் பெருமை மிகச் சிறந்தது. "வாச்யப்பிரபாவம் போலன்று வாசகப் பிரபாவம்" (முமுட்சு-14, என்று முமுட் சுப்படியும் பேசும். (பிரபாவம்-மேன்மை). இத்திருமந்திரத்திற்கு

உரியவனாகச் சொல்லப்பெறும் எம்பெருமான் அருகிலில் லாமல் தொலைவிலிருப்பினும் அவனைப்பற்றிக் கூறும் இத் திருநாமம் அருகிலிருந்து தன்னைப் பக்தியுடன் சொன்னவர் களுடைய விருப்பங்களை நிறைவேற்றும். திரௌபதி "கோவிந்தா !" என்று கூறியதும் அவளுடைய புடவை சுரந்ததல்லவா?

இம் மந்திரத்தைச் சொல்ல வேண்டும் என்ற எண்ண மின்றிச் சொன்னாலும், தம் குழந்தைகட்கு இப்பெயரையிட்டு அழைத்தாலும், பரிகாசமாகவோ, இழிவாகவோ பொரு ளுணர்ச்சியின்றிச் சொன்னாலும் காக்கும் செயலினின்றும் தவறாது. திருமங்கையாழ்வார் இத்திருநாமத்தின் பெருமையை - மகிமையை - "குலந்தரும் செல்வம்" (பெரி.திரு. 1.1;9) என்ற பாசுரத்தால் வெளியிட் டுள்ளதை நினைக்கலாம்.

(2) **துவயம் :** எல்லாச் சாத்திரங்களும் ஒருவனுக்குத் தேகத்தாலே பேறு கிடைக்கும் என்று ஒருமுகமாகப் பேசும். திருமந்திரம் ஆன்மாவால்தான் அப்பேறு கிட்டும் என்று கூறும். சரமசுலோகம் ஈசுவரனாலேயே அப்பேறு கிடைக்கும் என்று அறுதியிடும். ஆனால், துவய மந்திரமோ ஒருவனுக்குப்பேறு கிடைப்பது பெரியபிராட்டி யாராலே என்று இயம்பும். (முமுட்சு 117) 'துவயம்' என்பதற்கு இரண்டு என்பது பொருள்.

**ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே!**
**ஸ்ரீமதே நாராயணாய நம;!**

என்பது துவயமந்திரம். இதில் இரண்டு வாக்கியங்கள் அமைந்திருத்தலின் 'துவயம்' என்று திருநாமம் பெற்றது. இந்த இரண்டு வாக்கியங்களும் கடவல்லியில்(கடஉபநிடதம்) இரண்டிடத்திலிருந்து ஒன்று திரட்டி எம்பெருமானால்

வெளியிடப்பெற்றதால் இம்மந்திரம் எல்லாச் சூக்திகளிலும் சிறந்து நிற்பதாகப் பெரியோர்கள் கருதுவர். இதனை ஒருகால் உச்சரித்தாலும் வீடுபேறு வரையிலுள்ள எல்லாப் பலன் களையும் பெறலாம். இதனால் இது **'மந்திர இரத்தினம்'** என்ற சிறப்புப் பெயரையும் பெற்றது.

இதன் பொருளை விளக்கும்போக்கில் பிள்ளை உலக ஆசிரியர்,

> **"இதன் முற்கூற்றால், பெரியபிராட்டியாரை முன்னிட்டு ஈசுவரன் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது; பிற்கூற்றால் அச்சேர்த்தியிலே அடிமை இரக்கிறது."** (முமுட்சு-122)

என்று சூக்தியிட்டு விளக்குவர். இதில் முதல் வாக்கியத்தால் "பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈசுவரனுடைய இரண்டு திருவடிகளையும் உபாயமாகப் பற்றுகின்றேன்" என்னும் பொருள் கிடைக்கின்றது. இரண்டாவது வாக்கியத்தால் "பெரியபிராட்டியாரும் ஈசுவரனுமான சேர்த்தியில் என்றும் கைங்கரியத்தைப் புரிவேனாக" என்னும் பொருள் கிடைக் கின்றது. அதாவது முதல் வாக்கியம் உபாயத்தையும், இரண்டாவது வாக்கியம் பலனையும் வெளியிடுகின்றன என்று இதனைச் சுருக்கமாக உரைக்கலாம்.

துவயமந்திரத்தின் முக்கியமான பகுதி பெரிய பிராட்டியார் புருஷகாரபூதை[8]யாகச் செயற்படுவது. சேதநன் தான் எம்பெருமானுக்குச் சேஷபூதன்(அடிமை) ஆகவும், எம்பெருமான் தனக்குச் சேஷி (தலைவன்) யாகவும் இருக்கும்

8. புருஷகார பூதை– தகவுரை கூறுபவள்.

தொடர்பை நன்கு உணர்ந்தவன். ஆயினும், "இவள் தாயாம் தன்மையால் வந்த வாத்சல்யத்தை மிகுதியாக உடையவள்; தந்தையாகிய எம்பெருமானைப்போல் வன்மையும் மென்மையும் கலந்திராமல் மென்மையே வடிவு கொண்டவள்; பிறர் கண்குழிவு காணமாட்டாத தன்மையள்; தீய மனமுடையவர்களையும் மருவித் தொழும் மனமுடையவர்களாக்குகைக்குத் தக்க செயல் புரிபவள்; குற்றமுடையவர்களும் கூசாமல் வந்து காலிலே விழலாம்படி இருப்பவள். ஆண்மையால் வந்த வன்மையோடே தந்தையாம் தன்மையால் வந்த நலம் செயும் தன்மையுடையவனாயும் குற்றங்களைப் பத்துப் பத்தாகக் கணக்கிட்டுக் கொடிய தண்டனைகளை விதிக்கும் செய்கையாலே, குற்றமுடையவர்கள் முன் செல்லக் குடல்கரிக்கும்படி இருக்கும் சர்வேசுவரனைத் தக்க வழிகளாலே குற்றங்கள் அனைத்தையும் மறப்பித்துச் சேர்ப்பிக்கும் தன்மையள். இத்தகையவள் பாவமே செய்து பாவிகளான மக்கள் சர்வேசுவரனைப் பற்றுங்கால் புருஷகாரமாக வேண்டும்"[9] என்பது மணவாளமாமுனிகளின் கருத்தாகும். இதனைப் பிள்ளை உலக ஆசிரியர்,

> "நீரிலே நெருப்புக் கிளருமாப்போலே, குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தால் பொறுப்பது இவளுக்காக" *(முமுட்சு-127)*

என்று விளக்குவர். பகவான் மிகவும் அருள் நிறைந்த திருவுள்ளத்தனாய் இருப்பினும், சேதநன் செய்த அளவுகடந்த குற்றங்கள், குளிர்ந்த நீரில் நெருப்புப் பிறத்தல் போன்று, அவனுக்குச் சீற்றத்தை உண்டாக்குகின்றன. அச்சீற்றத்தை

9. ஸ்ரீவச.பூஷ–7 இன் உரை (புருடோததம நாயுடு பதிப்பு).

மாற்றிக் கொண்டு இவனுடைய குற்றங்களைப் பொறுப்பது பிராட்டியாருக்காகவே என்பதாகும்.

பிராட்டியார் உலகஉயிர்கட்குத் தாயாக இருப்பதால், இவர்களுடைய துக்கத்தைப் பொறாதவராயும் இருக்கின்றார். பகவானுக்குப் பத்தினியாக இருப்பதால் அம்முறையில் அவனுக்கு இனிய பொருளாக இருக்கின்றார். இக் காராணத்தால் இவர் அருள் நிறைந்த புருஷகாரமாக அமைந்து விடுகின்றார். இதனால் இருவரையும் உபதேசத்தால் திருத்துகின்றார். ஸ்ரீவசனபூஷணம் இதனை,

**'இருவரையும் திருத்துவது**
**உபதேசத்தாலே' (12)**

என்று பகர்கின்றது.

பிராட்டியார் இறைவனை நோக்கிப் பேசுவது; இவனுடைய குற்றங்களைக் கணக்கிட்டு நீர் இப்படித் தள்ளிக் கதவடைத்தால் இவனுக்கு வேறு ஒரு புகல் உண்டோ? உமக்கும் இவனுக்கும் உண்டான உறவு முறையைப் பார்த்தால் **'உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது'** (திருப் 28) என்றவாறு குடநீர் வழிந்தாலும் போகாதது ஒன்றன்றோ? உடைமையாக இருக்கின்ற இவனை அடைதல் சுவாமியான[10] உம்முடைய பேறாக அன்றோ இருப்பது? **'எதிர்சூழல் புக்குத்'** (திருவாய் 2.7:6) திரிகின்ற உமக்கு நான் சொல்ல வேண்டுமோ? காப்பாற்ற வேண்டும் என்று விருப்பத்தோடு வந்த இவனைக் காப்பாற்றாத போது 'எல்லாப் பொருள்களையும் காப்பவர்' என்ற உம்முடைய தன்மை குலைந்து போகாதோ? அநாதி காலமாக

10. சுவாமி–சொம்மையுடையவன் சுவாமி; சொம்–சொத்து, உடைமை.

நம்முடைய ஆணையை மீறித் தன் இச்சையின்படி ஒழுகிப் போந்த இவனைக் குற்றங்களுக்கேற்பத் தண்டிக்காமல் நாம் ஏற்றுக் கொள்ளின் நாம் ஏற்படுத்திய சாத்திரங்களின் மரியாதை குலையாதோ? என்றல்லவா நும் திருவுள்ளத்தில் ஓடுகின்றது?. அங்ஙனமாயின் நும்மை நாடி வந்த இவனைக் காக்காமல் இவனுடைய குற்றங்களை மட்டிலும் நோக்கித் தண்டித்தால் உம்முடைய அருட்குணம் நிலைப்பது எவ்வாறு? இவனைக் காப்பாற்றியபொழுதன்றோ உம் அருட்குணம் ஒளிபெறும்? " இவனைத் தண்டிக்கவில்லையேல் சாத்திரம் நிலையாது; இவனைக் காக்கவில்லையேல் அருள் முதலிய குணங்கள் ஒளி பெறா" என்று அஞ்ச வேண்டா. உம்மைச் சிறிதும் நோக்கிப் பாராது தன்னிச்சையில் செல்பவனிடம் சாத்திரத்தைப் பயன்படுத்துவீர்; உம்மை அன்புடன் நாடி வந்த இவனைப் பாவங்களினின்றும் நீக்கிக் காப்பாற்றுவீர். இப்படிச் செய்தால் சாத்திரமும் பழுது படாது; உம்முடைய அருட்குணமும் உயிர் பெற்றுத் துலங்கும், இவ்வாறு எம்பெருமானுக்கு ஏற்ற பற்பல இனிய சொற்களைப் பகர்ந்து, அவன் சினத்தை மாற்றி, அவனுக்குச் சேதநனிடம் அருள் பிறக்குமாறு செய்வர். இவ்வினிய சொற்களாலும் ஈசுவரனது நெஞ்சம் இளகவில்லையேல், பிராட்டியார் தம் அழகைக் காட்டி அவனைத் தம் வசப்படுத்திச் சேதநனை அங்கீகரிக்குமாறு செய்வர்.

பிராட்டியார் சேதநனை நோக்கிப் பேசுவது; "உன் குற்றங்களின் மிகுதியைப் பார்த்தால், உனக்கு ஓரிடத்திலும் காலூன்ற இடம் இல்லை. ஈசுவரன் யாதொன்றாலும் தடை செய்யப்பெறாத சுவாதந்திரனாதலால் குற்றங்களைப் பத்துப் பத்தாகக் கணக்கிட்டும் அறுத்து அறுத்து நுகர்விப்பான்.

இதற்கு நீ தப்ப வேண்டுமானால் அவன் திருவடிகளில் தலை சாய்க்கையைத் தவிர வேறு வழி இல்லை. குற்றங்கள் நிறைந்த உன்னை அவன் ஏற்றுக் கொள்வானோ? என்ற ஐயம் வேண்டா. ருசி பிறந்த அளவில் உன்னுடைய குற்றங்கள் அனைத்தையும் பொறுப்பான்; இனியவையாகவும், கொள்ளுதற்கு ஈடானவு மான குணங்களால் நிறைந்தவன் என்ற புகழ் பெற்றவன். ஆகவே நீ உய்ய வேண்டுமானால் அவனை அடைந்திடுக " என்று நல்லுபதேசம் செய்வார். இதனைப் பிள்ளை உலக ஆசிரியர்,

> "உபதேசத்தால் மீளாதபோது
> சேதநனை அருளாலே திருத்தும்;
> ஈசுவரனை அழகாலே திருத்தும்"[11]

என்று அழகாக விளக்குவர். பெரிய மிடுக்கனும் முரடனுமான அநுமனையே தம் உபதேசத்தாலே பொறுக்குமாறு செய்தவர்."[12] தம் அழகில் சிக்குண்டு தம்மிடம் அளவுகடந்த அன்புடையவனும்,[13] தம் சொல்லின்படி நடப்பவனுமான பெருமானைப் பொறுக்குமாறு செய்வார் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

துவயமந்திரத்தின் முதல் வாக்கியத்தில் ஸ்ரீ + மந் + நாராயண + சரணௌ+ சரணம்+ ப்ரபத்யே என்ற ஆறு பதங்களும் பதினைந்து எழுத்துகளும்; இரண்டாம் வாக்கியத்தில் ஸ்ரீமதே+நாராயண+ஆய+நம: என்ற நான்கு பதங்களும், பத்து எழுத்துகளும் உள்ளன.

11. ஸ்ரீவச. புஷ 14 (புருஷோத்தம நாயுடு பதிப்பு).
12. அசோகவனத்தில் அநுமன்பிராட்டியை இம்சித்த அரக்கியரைத் தம்மைத் துன்புறுத்தியது அரசாணைப்படியேயன்றித் தாமே பிழை செய்திலர் என்று மாருதியைச் சமாதானப்படுத்தினர் என்பது இராமாயண நிகழ்ச்சி.
13. 'திரு' விடம் 'மால்' கொண்டவனாதலால் 'திருமால்' ஆனான் என்று நகைச் சுவையுடன் கூறுவர் கவிராஜ பண்டிதர் ஜகவீர பாண்டியனார்.

(3) சரமசுலோகம் : பாரதப் பெரும்போர் தொடங்கு வதற்கு முன்னர் கண்ணன் தேர்த்தட்டிலிருந்துகொண்டு காண்டீபனுக்கு உபதேசித்த கீதையில் 18-ஆவது இயலின் இறுதி சுலோகமாக அமைவது (கீதை-18:66)இது. சரமம்-இறுதி.

> **"ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ!**
> **அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோட்சயிஷ்யாமி மாசுச :!"**

என்பது. இதனை வைணவப் பெருமக்கள் அப்படியே மூன்றாவது மந்திரமாக எடுத்துக்கொண்டு விட்டனர். இந்த சுலோகத்தின் பிண்டப்பொருள் : "சாத்திரங்களைப் பயின்று" சிறப்பான ஞானத்தைப் பெற்றவர்களே கர்மயோகம், ஞான யோகம், பக்தியோகம் ஆகியவற்றைச் செவ்வனே அநுட்டிக்க முடியும். மற்றவர்கள் 'இவற்றை நம்மால் அநுட்டிக்க முடியாது' என்று நினைத்துத் தாம் விலக்கநேரும் ஆதலின் சிறந்த அவ்வுபாயங்களை அநுட்டிக்கக்கடவர். "அதற்கு ஆற்றல் அற்றவர்கள் என்னைச் சரண் அடைந்தால் நான் அந்தந்த அரிய உபாயங்களின் இடத்தில் நின்று அவ்வற்றின் பலனைக் கொடுப்பேன்" என்பது.

இந்த மந்திரத்தில் இரண்டு வாக்கியங்கள் உள்ளன. முதல் வாக்கியத்தில் ஸர்வதர்மாந்+பரித்யஜ்ய+மாம்+ ஏகம்+சரணம்+ வ்ரஜ என்ற ஆறு பதங்களும், இரண்டாம் வாக்கியத்தில் அஹம்+த்வா+ஸ்ர்வபாபேப்யோ+மோட்சயிஷ்யாமி+மாசுச: என்னும் ஐந்து பதங்களும் இரண்டு வாக்கியங்களிலும் முப்பத்திரண்டு எழுத்துகளும் உள்ளன.

**துவயத்துக்கும் சரமசுலோகத்துக்கும் உள்ள தொடர்பு:** (1)துவயத்தின் முன்வாக்கியம் எம்பெருமானை உபாயமாகப்

பற்றுகிறேன் என்பதைச் சொல்லுகின்றது. இதைத்தான் சரமசுலோகத்தின் முன் வாக்கியம் விதிமுகத்தால் விளக்கு கின்றது. இங்ஙனம் கட்டளை இடுங்கால் பல தருமங்களை உபதேசித்து அவற்றை நிலைநிறுத்துபவனான பகவானே, மற்ற தருமங்களை விட்டுத் தன்னையே பற்றுமாறு கூறுவதனால் இஃது அவனுக்கு உகந்த தருமம் என்பது புலப்படுகின்றது. இவ்வாறு அவனைப் பற்றும்போது மற்ற தருமங்களை விட்டே பற்ற வேண்டியிருத்தலின் அவற்றின் விடுகையையும், தாம் எம்பெருமானைப் பற்றும் பற்றும் தன் பேற்றிற்கு உபாய மன்று, அவனே உபாயம் என்னும் அவன் உபாயத் தன்மையை யும் இவ்வாக்கியம் தெளிவாகத் தெரிவிக்கின்றதைக் காணலாம்.

துவயத்தின் பின் வாக்கியம் 'பெரிய பிராட்டியாரும் எம் பெருமானும் ஆகிய சோத்தியில் எல்லா அடிமைகளும் செய்யப் பெறுவேனாக' என்பதைப் பகருகின்றது. இத்தொண்டு எம் பெருமானை அடையவொட்டாமல் தடைசெய்யும் பாவங்கள் கழிந்த காலத்திலேயே ஏற்படும். அப் பாவங்களின் கழிவைச் சரமசுலோகத்தின் பின் வாக்கியம் தெளிவாகக் கூறுகின்றது. இவற்றால் இரண்டு மந்திரங்களின் தொடர்பு அறியப்படும்.

(2) பாரதப் பெரும்போரில் தேர்த் தட்டில் இருந்த பார்த்தன் தனக்குச் சாரதியாக இருந்த பரந்தாமனைச் சரண் அடைந்து தனக்குமுன் நிற்கும் உறவினர்கள், ஆசாரியர்கள் இவர்களைக் கொல்வதால் வரும் பாவத்திற்கு அஞ்சி நிலை குலைந்து பரந்தாமனைச் சரணடைந்து தனக்கு இதத்தை உபதேசிக்குமாறு வேண்டினான். அவனும் பார்த்தன்மீது கருணைகொண்டு கீதையின் வாயிலாக ஆன்ம சொரூபத்தையும் கர்ம ஞான பக்திகளாகிய உபாயங்களையும் விரிவாக

உபதேசித்தான். இவற்றைச் செவிமடுத்த பார்த்தன் பக்தியோகம் கடினமாயும் காலங்கடந்து பலன் தருவதாயும் இருப்பதைக் கண்டு மீண்டும் கலக்கமடைய, பார்த்தசாரதியும் எளிமையாக மேற்கொள்ளக் கூடியதும் சொரூபத்திற்கு ஏற்றதும், விரைவில் பலன் தரக்கூடியதுமான பிரபத்திநெறியை (சரணாகதி தத்துவத்தை)ப் போதித்தான். இஃது இறுதி உபாயமாக இருத்தலினாலும் கீதையின் இறுதி சுலோகமாக (18;66) அமைந்திருப்பதினாலும் இவற்றைத் தெரிவிக்கும் சுலோகம்' 'சரமசுலோகம்' என்று திருநாமம் பெறுவதாயிற்று.

(3)இச் சுலோகத்தின் முன் வாக்கியம் பிரபத்திக்கு அதிகாரியான சேதநன் செய்யவேண்டியவை இன்னவை என்பதை விளக்குகின்றது; பின் வாக்கியம் உபாயபூதனான தான் (ஈசுவரன்) தன்னைப் பற்றின சேதநன் செய்ய வேண்டிய வற்றைத் தெரிவிக்கின்றது. இதற்குச் சேதநனிடம் அமைய வேண்டியவை **ஆகிஞ்சன்னியமும் அநந்யகதித்துவமும்**. ஆகிஞ்சன்யம் என்பது, கன்மஞானபக்திகளாகின்ற மற்ற உபாயங்களின் தொடர்பற்று இருத்தல். அநந்யகதித்துவம் என்பது, ஆன்ம இரட்சணத்திற்கு எம்பெருமானைத் தவிர வேறோர் இரட்சகப்பொருள் அற்றிருத்தல். ஆகிஞ்சன் னியத்தை 'சர்வ தர்மாந்பரித்யஜ்ய' என்ற தொடரால் தெரிவிக்கின்றான். அநந்யகதித்துவத்தை 'மாமேகம் சரணம் வ்ரஜ' என்ற தொடரில் அறிவிக்கின்றான். இதனைத்தான் '**புகல் ஒன்று இல்லா அடியேன் உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே**' (6.10;10) என்ற திருவாய்மொழிப் பாசுரப் பகுதியில் தெரிவிக்கின்றார் ஆழ்வார்.

இஃதன்றியும் பகவானைப் பற்றும் இப்பற்றுதலைத் தன்பேற்றிற்கு உபாயமாகக் கொள்ளின் எம்பெருமானின் வேறு

பட்டதாகிய இப்பற்றுதலில் (அதாவது வேறு உபாயத்தில்) இவனுக்குத் தொடர்பு ஏற்படுகின்றது. இதனால் 'ஆகிஞ் சன்னியம்' நழுவி விடும். ஆதலின் இப்பற்றுதல் உபாயமன்று என்பதை 'ஏக' என்ற பதத்தில் வெளியிடுகின்றான் பகவான். ஆக, இச் சேதநனுக்கு எம்பெருமான் உபாயப் பொருளா யிருப்பினும் ஆகிஞ்சன்னியம், அநந்யகதித்துவம் ஆகிய இரண்டும் கைகூடுதற்பொருட்டு இவன் மற்ற உபாயங்களை விடுகையும், அவனையே உபாயமாகப் பற்றுகையும், அவனைப் பற்றும் பற்றுகையை உபாயமாக நினையாமையும், இவனுக்கு இன்றியமையாது வேண்டற்பாலனவாகும். இந்த ஆகிஞ்சன்னி யமும், அநந்யகதித்துவமும் சித்திப்பதற்காக இவன் செய்ய வேண்டுவன இவையேயாகும். இந்த மந்திரத்தின் முன் வாக்கியம் இவற்றையே தெரிவிக்கின்றது.

(4). சேதநன் இன்றியமையாது செய்ய வேண்டுவது பகவானாகிய உபாயத்தைத் தனக்கு உபாயமாகப் பற்றி இருத்தலேயாகும். இதனை மற்ற உபாயங்களை விடுதலாகின்ற அங்கத்தோடு சேர்த்தே விதிக்கின்றான், இதன் விளக்கம் மற்ற உபாயங்களைச் செய்தற்கேற்ற அறிவு, ஆற்றல் உடையவர்கள் மற்ற உபாயங்களைச் செய்தேயாக வேண்டும் என்றும், அவை அற்றவர்களே எம்பெருமானாகின்ற தன்னை உபயமாகப் பற்ற வேண்டும் என்றும் அவன் கூறுகின்றான் என்பதாகச் சில ஆசாரியப் பெருமக்கள் கருதுகின்றனர். இஃது 'அநுவாத பட்சம்' என்று கூறப்பெறும். ஆனால் பிள்ளை உலக ஆசிரியர் அங்ஙனம் திருவுள்ளம் பற்றாது வேறு விதமாகக் கருதுவர். அவர் "மற்ற உபாயங்களைச் செய்வதற்கு அறிவு ஆற்றல்கள் தமக்கு இருப்பினும், 'நம:' பதத்தில் சொல்லுகிறபடி தம்

அத்தியந்த பாரதந்திரியத்திய [14] நிலையை அறிந்தே சான்றோர், அவற்றை விட்டே எம்பெருமானைப் பற்றுதல் பொருத்த முடையது" எனக் கருதுவர். இதுவே 'விதிபட்சம்' ஆகும்.

(5). விருப்பத்தினால் நிகழக்கூடியதான இந்தப் பிரபத்தி சாதனத்திற்கு "இதைப்பற்று" என்ற விதியும் தேவை. சுவையுள்ள பாலை நோய்க்கு மருந்தாகக் கொள்ளும்படி கூறினால் நோயாளி அதை விரைவாக உட்கொள்ளுவதற்கு இடம் உண்டாகும் அல்லவா? அங்ஙனமே சொருபத்திற்குச் சேராததாயும், சிரமப்பட்டுச் செய்யக் கூடியதாயும் உள்ள மற்ற உபாயங்களைப் போலல்லாமல் எளிதாகச் செய்யக்கூடியதாயும் விரும்பத்தக்கதாயுமுள்ள இவ்வுபாயத்திற்குச் 'செய்' என்னும் கட்டளையும் இட்டால் இதனை விரைவில் மேற் கொள்ளுவதற்கு இடம் தந்து நிற்கும் அல்லவா?

14. அத்தியந்தபாரதந்திரியம்– விசேடமாய்ப் பகவானுக்கு வசப்பட்டிருத்தல்.

# 11. இருவகை ஞானங்கள்

வேதத்தின் சாரமான திருமந்திரம் எல்லாப் பொருள்களையும் தன்னகத்தே அடக்கிக் கொண்டிருப்பினும் சேதநன் அறியவேண்டியவை சம்பந்தஞானம், அர்த்தபஞ்சக ஞானம் ஆகிய இரண்டும் மிகமுக்கியமானவை. அவைபற்றி ஈண்டுக் காண்போம்.

## 1. சம்பந்த ஞானம்

எம்பெருமானாகிய சர்வேசுவரனுக்கும் ஆன்ம கோடிகளாகிய நமக்கும் உள்ள உறவுமுறையை அறிவதைச் 'சம்பந்த ஞானம்' என்று கூறுவர். இந்தச் சம்பந்த ஞானம் உள்ள இடத்தில் எம்பெருமான் விரும்பி அடைவான். ஆதலால் சம்பந்தஞானம் அவன்மீது - அந்த எம்பெருமான் மீது - விருப்பம் கொள்வதற்குக் காரணமாகின்றது. இந்தக் கருத்தைத் திருமழிசையாழ்வார் மிக அற்புதமாகப் புலப்படுத்துவார்.

**நின்ற தெந்தை ஊர கத்து**
**இருந்த தெந்தை பாடகத்து**
**அன்று வெஃக ணைக் கிடந்த(து)**
**என்னிலாத முன்னெ லாம்**
**அன்று நான் பிறந்தி லேன்**
**பிறந்தபின் மறந்தி லேன்**
**நின்ற தும்இ ருந்ததும்**
**கிடந்த தும் என் நெஞ்சுளே(திருச்சந்த–64)**

இதன் கருத்தைத் தெளிவாக்குவோம். முதலில் உலகியலில் ஒரு நிகழ்ச்சியை நோக்குவோம். ஒருவன் கடன் பட்டிருக்கின்றான்; அக் கடனைத் திரும்பப் பெறுவதற்காகக் கடன் கொடுத்தவன் வீட்டிலே வந்து கேட்கின்றான். அப்படி வருகின்றவன் முதலில் சில நாட்கள் நின்ற வண்ணம் பணம் கேட்டுவிட்டுப் போகின்றான். பலன் இல்லை. அடுத்து வருகின்ற சில நாட்களில் வாங்கினவன் திண்ணைமீது உட்கார்ந்து கடனைத் திரும்பத் தருமாறு நிர்ப்பந்தித்துப் போவான். இவ்வளவிலும் அவன் மிசையாவிடில் 'கடனைத் தீர்க்காவிடில் நான் போவதில்லை' என்று படுக்கையாகத் திண்ணையில் படுத்து நிர்ப்பந்திப்பான்.

இப்படியாக எம்பெருமானும் நம்போன்ற ஆன்ம கோடிகள் செலுத்தவேண்டிய கைங்கரியக்[1] கடனைப் பெற்றுக் கொள்வதற்காக ஓரிடத்தில் (ஊரகத்தில்)[2] நின்று பார்க் கின்றான். மற்றோரிடத்தில் (பாடகத்தில்)[3] வீற்றிருந்து பார்க்கின்றான். இன்னும் ஓரிடத்தில் (திருவெஃகாவில்)[4] சாய்ந்து பார்க்கின்றான். "இப்படிச் செய்ததெல்லாம் நான் எதிர்நோக்கி இல்லாத காலத்தில் நித்தியவிபூதி லீலாவிபூதி கட்குநாதனான எம்பெருமான் சம்சாரியான எனக்கு ருசி பிறவாத காலமெல்லாம் ருசி பிறப்பிப்பதற்காக நின்றான், இருந்தான். கிடந்தான். என்னிடம் ருசி உண்டாக்குதல் அவனுக்குச் சாத்தியம் (பலன்); அதற்குச் சாதனம் (வழி

1. கிங்கரன்–வேலையாள்; கைங்கரியம்–அவன் செய்யும் தொழில் ; அஃதாவது அடிமைத் தொழில்.
2. காஞ்சி உலகளந்த பெருமாள் சந்நிதியில் உள்ளது.
3. காஞ்சி பாண்டவ தூதர் சந்நிதியில் உள்ளது.
4. காஞ்சி சொன்ன வண்ணம் செய்த பெருமாள் சந்நிதியில்

*முறைகள்) நிற்றல் இருத்தல், கிடத்தல் என்பவை. பலன் கை புகுந்த மாத்திரத்தில் - என்னிடம் ருசி பிறந்ததும் - அவன் திவ்விய தேசங்களில் நிற்றல் இருத்தல், கிடத்தல்களை எல்லாம் என் நெஞ்சுலே செய்தருளினான்" என்கின்றார். மேலும் "நான் ஞானப்பிறப்பு பெற்றேன் இல்லை; அது பெற்றபிறகு நான் எம் பெருமானை மறக்கவில்லை." அடுத்த பாசுரத்தில் (65) "எம் பெருமான் திருவேங்கடத்தில் நிற்பதும், திருநாட்டில் (பரமபதத்தில்) இருப்பதும், திருப்பாற்கடலில் கிடப்பதும், தன்னோடு உண்டான முறைமையை அறியாது நான் ஆற்றலற் றிருந்த காலத்தில்தான். நான் முறைமையறிந்து (சம்பந்த ஞானம் பெற்றுப்) பரிமாறினபின்னர் அவ்வெம்பெருமானுடைய பரிமாற்றமெல்லாம் என்நெஞ்சில் - என்இதயத்தில் - நடை பெறுகின்றன" என்கின்றார்.*

*இந்த ஆழ்வார் எம்பெருமான் தன் மனத்தில் தனியாக வந்ததைக் கூறினார். பெரியாழ்வாரோ அவன் தானும் தன் குடியிருப்புமாகத் தன் நெஞ்சில் புகுந்ததைக் கூறுவார்.*

**அரவத்து அமளியி னோடும்**
**அழகிய பாற்கட லோடும்**
**அரவிந்தப் பாவையும் தானும்**
**அகம்படி வந்து புகுந்து** *(பெரியாழ் திரு. 5.2;10)*

*என்ற பெரியாழ்வாரின் திருமொழிப்பாசுரத்தில் இதனைக் காணலாம்.*

*மயர்வற மதி நலம் அருளப்பெற்ற நம்மாழ்வாரும்,*
**அடங்கொழில் சம்பத்து**
**அடங்கக்கண்டு ஈசன்**
**அடங்கெழில் அஃதென்று**
**அடங்குக உள்ளே** *(திருவாய் 1.2;7)*

[சம்பத்து-எம்பெருமானின் விபூதி; அடங்க-எல்லாம் (முற்றிலும்); அடங்க - அஃதெல்லாம்; ஈசன் அஃது எம்பெருமானுடைய; எழில்-சம்பத்து (என்று துணிந்து) உள்ளே- விபூதிக்குள்ளே; அடங்குக-சொருகிப் போவது]

என்று கூறுவர். "நித்தியவிபூதியாகிய பரமபதமும், லீலா விபூதியாகிய இந்த உலகமும் ஆகிய எல்லாம் சம்பத்துகளும் நம்முடைய சுவாமியின் சொத்துகள் என எண்ண வேண்டும்;[5] அந்தச் சம்பத்துக்குள் நாமும் அடங்கினோம் என்று அநுசந்தித்துக் கொண்டு கைங்கரியம் செய்ய வேண்டும்" என்பது பாசுரத்தின் பொருள். எம்பெருமானது விபூதிக்குள்ளே தானும் ஒருவனாக அடங்கப் பார்க்க வேண்டும். அதற்கு வெளிப்பட்டு ஆட்டம் போட்டால் விநாசமே உண்டாகும்.[6] அதற்கு உட்பட்டுவிட்டால் கூச வேண்டிய அவசியமே இல்லை என்பது இதில் தெளியும் மாபெரும் உண்மை. அஃதாவது 'உடைமை உடையவன்' என்ற சம்பந்தஞானம் அடியாகத் தானும் அவன் விபூதியில் ஒருவனாகச் சேர்ந்து கொள்ள வேண்டும் என்பதுவே தேர்ந்த உண்மையாகும்.

(2). **நவவிதசம்பந்தம் :** எம்பெருமானுக்கும் நமக்கும் உள்ள சம்பந்தம் ஒன்பது வகைப்படும் என்று சாத்திரங்கள்

5. அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஜான் கென்னடி சுட்டுக் கொலை செய்யப்பெற்றபோதும் தி.மு.க. முதன் முதலாக ஆட்சிக்கு வந்தபோதும் நம் அருமைமிகு இராஜாஜி அவர்கள் கல்கியில் இந்தப் பாசுரத்தைக் காட்டித் தலையங்கம் எழுதியதை ஈண்டு நினைவு கூரலாம்.

6. அரசுகள் ஆளுநரால் அகற்றப்பெறுவதற்கும் கட்சிகள் தேர்தலில் தோற்பதற்கும் குடியரசு ஆட்சி அமைவதற்கும் அகந்தை மிக்க ஆட்சிகளே காரணமாகும்.

சாற்றும். இதனைத் திருமந்திரம் குறிப்பிடுவதாக நம் முன்னோர்கள் உரைத்துப் போயினர்.

'ஓம் நமோ நாராயணாய' என்பது திருமந்திரம். இதில் மூன்று பதங்களும் எட்டெழுத்துகளும் அடங்கியுள்ளன என்பதை நாம் அறிவோம்.

பரமான்மா-சீவான்மா உறவுகள் அடியிற் கண்டவாறு அமைந்துள்ளன.

அகாரத்தினால்;

(i) தந்தை-தனயன் என்ற உறவும்;

(ii) இரட்சிப்பவன்-இரட்சிக்கப்படுபவன் என்ற உறவும்;

அகாரத்தின் மீது ஏறி மறைந்து கிடக்கும் (தொக்கி நிற்கும்) 'ஆய' என்ற நான்காம் வேற்றுமை உருபினால் (லுப்தசதுர்த்தியிலல்),

(iii) சேஷ-சேஷி (அடிமை-அடிமைகொள்பவன்) என்ற உறவு சொல்லப் பெறுகின்றது.

உகாரத்தினால்;

(iv) நாயக-நாயகி சம்பந்தம் நவிலப் பெறுகின்றது.

மகாரத்தினால் ;

(v)அறிபவன் - அறியப்படும்பொருள் உறவு உரைக்கப் படுகின்றது.

நமஸ்ஸாலே;

(vi) சொத்து - சொத்துக்குரியவன் (ஸ்வ-ஸ்வாமி) சம்பந்தமும்;

நாரபதத்தாலே;

(vii) சரீர-சரீரி பாவனையும்;

அய்ன பதத்தாலே;

(viii) தாங்குகின்றவன்- தாங்கப்படும் பொருள் (ஆதார-ஆதேய) தொடர்பும்;

'ஆய' பதத்தாலே;

(ix) போகத்தை அநுபவிப்பவன்- போக்கியப் பொருள் (போக்தரு- போக்கிய) இவற்றின் சம்பந்தமும் சொல்லப் பெறுகின்றன.

ஆக, திருமந்திரம் இறைவனுக்கும் ஆன்மாவுக்குமுள்ள ஒன்பது வகை உறவுகளைச் சொல்லித் தலைக்கட்டுகின்றது. ஓர் ஆன்மாவுக்கும் பிறிதோர் ஆன்மாவுக்கும் வினைப்பயனால் நேரிடுகின்ற தந்தை-தனயன் முதலிய உறவுகள் அந்த வினைத் தொடர்பு நீங்கும் போதெல்லாம் மாறிவிடுகின்றன. அஃதாவது ஒரு பிறவியில் நேரிடும் தந்தை-தனயன், தாய்-மகன், கணவன்-மனைவி போன்ற உறவுகள் அடுத்தப் பிறவியில் (அல்லது வருகின்ற பிறவிகளிலெல்லாம்) தொடர்வதில்லை. ஆனால் இறைவனுக்கும் நமக்கும் உள்ள சம்பந்தம்,

> எற்றைக்கும் ஏழ்ஏழ்
> பிறவிக்கும் உன்தன்னோடு
> உற்றோமே ஆவோம்;
> உனக்கேநாம் ஆட்செய்வோம் (திருப்.29)

என்ற ஆண்டாள் திருவாக்கின்படி 'இங்கு ஒழிக்க ஒழியாது; அழியாதிருக்கும்'. அஃதாவது அகாரத்தினால் சொல்லப் பெறு கின்ற எம்பெருமான் மகாரத்தினால் சொல்லப்பெறுகின்ற சீவான்மா இவர்களின் உறவு அநாதியாக இருந்து வருவதாகும்.

**எக்காலத்தும் எந்தையாய்**
**என்னுள் மன்னி (2.9;8)**

என்ற நம்மாழ்வாரின் திருவாய் மொழித்தொடர் இக்கருத்தை அரண் செய்கின்றது. சீவான்மாக்களுக்கு 'அயந' சம்பந்தமான பரமான்மா சம்பந்தம் அநாதியாக இருந்து வருவதுபோல் அசித்து சம்பந்தமான பிரகிருதி சம்பந்தமும் அநாதியாக இருந்து வருவதே. ஆயினும் அசித்து சம்பந்தம் ஒருகாலத்தில் நீக்கப்படும் 'அயந' சம்பந்தமான பரமான்மா உறவு 'ஒழிக்க ஒழியாதது'. இக்கருத்து ஆசாரிய ஹிருதயத்தின்,

**'ஒன் று கூடினதாய்ப் பற்று அறுக்க மீண்டு ஒழிகையாலே**
**பழவடியேன் என்னுமது ஒன்றுமே ஒழிக்க ஒழியாது' (12)**

என்ற சூத்திரத்தில் தெளிவாக்கப்பெறுகின்றது. இந்த உடல் சம்பந்தம் இடையில் வந்தேறியாய் நல்வினை தீவினை காரணமாக வருவது; இது யாதானும் ஒரு காலத்தில் அழியக் கூடியதாக இருக்கும். 'நாராயண' சம்பந்தம் அநாதியாய் ஒருவித காரணமும் இல்லாமல் வந்ததாகையால் என்றும் உளதாய் இருக்கும். இடையில் வந்த சரீர சம்பந்தத்தை 'அநாதி' என்று சொல்லுதல் பொருந்துமோ? என்ற வினா எழுகின்றது. அதற்கு மணவாளமாமுனிகள் "வந்தேறியான காலத்திற்கு அடி தெரியாமையாலும் இவரும் (அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்) 'அநாதி' என்றார். ஒருகால வரையில் அஃது இறைவனுடைய திருவருளால் மறையக் காண்கையால் வந்தேறி என்பது ஒருதலை" என்று விளக்குவர்.

திருமந்திரத்தின் முழுப்பொருளையும் அநுசந்திக்கத் தக்கதாக அமைந்திருக்கும் திருப்பாசுரம் ஒன்று பெரிய திருமொழியில் உண்டு.

**எம்பிரான் எந்தை என்னுடைச் சுற்றம்**
**எனக்கரசு என்னுடை வாணாள் (1.1:6)**

என்பது பாசுரம். "எனக்குப் பல உபகாரம் புரிந்தவனும், எனக்குத் தந்தையும், எனக்கு எல்லா உறவு முறையுமானவனும், என்னை ஆண்டவனும், என்னுடைய உயிருக்கு உயிரானவனும், அவனே" என்கின்றார். இதில் "ஈசுவரனே இவ்வான்மாக்களுக்கு எல்லாவித உறவுமாகின்றான்" என்பது இத்தொடரின் "தேர்ந்த பொருள்" என்பது மணவாளமாமுனிகளின் உரைக்குறிப்பு. (முமுட்சு 102) இதனைப் பிள்ளைஉலக ஆசிரியர் அருளிச் செய்த 'நவவித சம்பந்தம்'[7] என்ற நூலில் தெளிவாகக் காணலாம்.

இந்த நவவிதசம்பந்தம் குலசேகரப் பெருமாள் அருளிய வித்துவக் கோட்டம்மான் திருமொழியில் (5-ஆம் திருமொழி) அடங்கிக்கிடப்பதாக நம் முன்னோர் குறித்துப் போயினர்.

இந்த நவவிதசம்பந்தம்பற்றிய கருத்துகள்தாம் பாரதி யாருக்கு 'கண்ணன்பாட்டு' படைப்பதற்கு வழி காட்டியிருக்க வேண்டும் என்று நினைக்கத் தோன்றுகின்றது. இஷ்ட தெய்வத்தைப் - வழிபடுகடவுளைப் - பல்வேறு பாவனைகளால் வழிபடலாம் என்று நம் நாட்டுப் பக்திப் பனுவல்கள் பகர் கின்றன. ஆழ்வார் பாசுரங்களிலும் எம்பெருமானைத் தாய், தந்தை, குரு, தெய்வம் என்று பேசப்பெற்றிருப்பதையும் இவர் கண்டிருக்க வேண்டும். இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டுதான் பாரதியார் பல்வேறு உறவுகளில் கண்ணனைக்

7. அஷ்டாதச இரகசியங்கள் (பதினெட்டு இரகசியங்கள்) என்ற தொகுப்பில் 11–வது நூல்.

கண்டுகளிப்பெய்துகின்றார் என்று கருதுவதில் தவறு ஒன்றும் இல்லை.

இந்த ஒன்பது உறவுகளைக் குறிப்பிடும் ஆழ்வார்கள் பாசுரம் நிறைய உள்ளன. விரிவஞ்சி ஒவ்வோர் உறவுக்கும் ஒரு பாசுரம் வீதம் காட்டுவேன்.

(i) **தந்தை—தனயன் உறவு :—** இதனை அடியிற்காணும் பாசுரத்தில் காணலாம்.

**எம்பி ரானைஎந் தைதந்தை தந்தைக்கும்**
**தம்பி ரனைதண் தாமரைக் கண்ணனை**
**கொம்ப ராவுநுண் ணேரிடை மார்வனை** *(திருவாய் 1-10:3)*

என்று கூறுவர் நம்மாழ்வார். எம்பெருமான் தன்னை, "எம்பிரானை எந்தை தந்தை தந்தைக்கும் தம்பிரானை" என்று ஆழ்வார் அழகாய்ப் பேச, அதன் இன்பத்தில் திளைத்த எம் பெருமான் " இப்படி ஏத்துகின்றவன் ஆர்?" என்று குளிரக் கடாட்சிக்கின்றான். அக்கடாட்சத்தால் மகிழ்ந்த ஆழ்வார் "தண்தாமரைக் கண்ணனை" என்று மேலும் சிறப்பிக்கின்றார். குற்றமே வடிவான தம்மீது எம்பெருமான் இவ்வளவு சிறப்பாகக் கருணை காட்டக் காரணம் இல்லையே! என்ன காரணமோ? என்று ஆராய்ந்து பார்த்த ஆழ்வார் கடாட்சிக்கச் செய்ய வல்ல பெரியபிராட்டியார் அருகில் இருப்பதை உணர்ந்து "கொம்பு அராவு நுண் நேரிடை மார்பனை" என்று மேலும் சிறப்பிக்கின்றார்

"தருதுயரம் தடாயேல்" (5:1) என்ற பெருமாள் திருமொழிப் பாசுரம் இந்த உறவினைக் குறிப்பிடுகின்றது.

---

8. அதிகம் வேண்டுவோர் நவவித சம்பந்தம் என்ற நூலில் காணலாம். (கழகத்தில் கிடைக்கும்)

(ii) இரட்சக– இரட்சிய சம்பந்தம்: உலகத்தைப் பிரளயத்திலிருந்து எம்பெருமான் உய்வித்தமையைக் கூறும் பெரியதிருமொழியிலுள்ள "மைந்நின்ற" (11.6) என்ற பதிகத்தில் திருமங்கை மன்னனின் திருவாக்குகள் (ஒன்பது பாசுரங்கள்) இந்த உறவினைத் தெளிவாக விளக்குகின்றன. இவற்றுள்,

**மண்ணாடும் விண்ணாடும் வானவரும்**
**தானவரும் மற்றும் எல்லாம்**
**உண்ணாத பெருவெள்ளம் உண்ணாமல்**
**தான்விழுங்கி உய்யக்கொண்ட**
**கண்ணாளன் (7)**

என்ற பாசுரத்தில் இறைவன் (இரட்சகன்) உலகினை (இரட்சித்த) செயலை விளக்கும் போக்கில் இந்த உறவு குறிப்பிடப் பெறுகின்றது "வாளால்அறுத்து" (5;4) என்ற பெருமாள் திருமொழிப் பாசுரம் சீவான்மாக்களுக்குத் துன்பங்களைக் கொடுப்பதும் இரட்சிக்கும் வகையைச் சார்ந்த தாகும் என்பதை விளக்குகின்றது.

(iii)சேஷி–சேஷ உறவு: 'வீற்றிருந்து' (4.5) என்ற திருவாய் மொழியில்,

**உண்டும் உமிழ்ந்தும் கடந்தும்**
**இடந்தும் கிடந்தும் நின்றும்**
**கொண்ட கோலத் தொடுவீற்**
**றிருந்தும் மணங்கூடியும்**
**கண்ட வாற்றால் தனதே**
**உலகென நின்றான்தன்னை**
**வண்டமிழ் நூற்க நோற்றேன்**
**அடியார்க்கு இன்ப மாரியே. (10)**

*என்ற பாசுரத்தில் 'தனதே உலகென நின்றான் தன்னை' என்பதால் சேஷித்துவமும், 'வண்டமிழ் நூற்க நோற்றேன்' என்பதால் சேஷத்துவமும் தெளிவாகின்றன. சேஷி-தலைவன் சேஷன்-அடிமை.*

*குலசேகரப்பெருமாள் அருளிய* **'செந்தழலே வந்து'** *(5;6) என்ற பாசுரத்தில்* **'ஆண்டான்—அடிமை'** *உறவு காணப்படும். ஆனால் பிரதிவாதி பயங்கரம் அண்ணாசாமி நாயக-நாயகி பாவனை தொனிக்கும் என்று அருளிச் செய்வர். ஒருவகையில் நோக்கினால் இதுவும் பண்டைய நிலைப்படி ஆண்டான் அடிமைதானே! (ஆண்-பெண் சமத்துவம் பேசும் இக்கால நிலையில் சில குடும்பங்களுக்குப் பொருந்தலாம்).*

(iv) **நாயக—நாயகி சம்பந்தம்:**[9] **'வெள்ளைச் சுரிசங்கொடு'** *(7,3) என்ற திருவாய்மொழியில்,*

**கண்டதுவே கொண்டெல் லாருங் கூடிக்**
**கார்க்கடல் வண்ணனோ டென்தி றத்துக்**
**கொண்டுஅலர் தூற்றிற் றதுமுத லாக**
**கொண்டதன் காதல் உரைக்கில் தோழீ!**
**மண்திணி ஞால மும்ஏழ் கடலும்**
**நீள்வி சும்பும் கழியப் பெரிதால்**
**தெண்திரை சூழ்ந்துஅவன் வீற்றி ருந்த**
**தென்திருப் பேரையில் சேர்வன் சென்றே (8)**

*[என் திறம்-என் விஷயம்; கழிய- ஒப்ப;திரை-அலை;].*

*என்பது மகள் பாசுரம்.*

9. இது தனி இயலில் விவரமாக விளக்கப் பெற்றுள்ளது. இயல் – காண்க.

'தென்திருப்பேரையை'[10] அடையவேண்டும் என்ற தன் துணிவைப் பராங்குச நாயகி சொன்னதும் தோழிமாரும் தாயரும் அதனைத் தடுத்து நிறுத்தப்பார்க்கின்றதாகச் செல்லுகின்றது இத்திருவாய்மொழி. "ஊரார் பழி சொல்வதே எருவாக நின்று என்னிடம் வளர்ந்து செல்லுகின்ற காதல் எல்லா உலகங்களையும் விழுங்கிச் செல்லா நின்றது. ஆகவே, அவன் (எம்பெருமான்) இருக்கின்ற தென்திருப் பேரையில் சென்று சேர்வேன்" என்கின்றாள் பராங்குச நாயகி.

குலசேகரப் பெருமாள் திருமொழியில் '**கண்டார் இகழ்வனவே**' *(5:2)* என்ற திருப்பாசுரத்தில் கணவன் நிலையில் எம்பெருமானையும் மனைவி நிலையில் தம்மையும் வைத்துக் கூறியுள்ளதைக் காணலாம்.

(v) **ஞாதா—ஞேயன் உறவு :** அஃதாவது இது 'அறிவன்-அறியப்படும் பொருள்' உறவாகும்.

**பெயரும் கருங்கடலே**
**நோக்கும் ஆறு;ஒண்பூ**
**உயரும் கதிரவனே**
**நோக்கும்—உயிரும்**

10. தென்திருப்பேரை—நவ திருப்பதிகளில் ஒன்று. ஆழ்வார் திருநகரிக்குக் கீழக்கே சுமார் 5கி.மீ. தொலைவில் உள்ளது. பேருந்துசாலையருகில் உள்ளது. இங்கிருந்து பொருநையாற்றைக் கடந்து (2கி.மீ. தொலைவு) சென்றால் இரட்டைத் திருப்பதியை அடையலாம். இறைவன் மகரநெடுங்குழைக்காதன்; தாயார்—குழைக்காதுவல்லி நாச்சியார்; இருந்திருக்கோலம்; கிழக்கு நோக்கிய திருமுகமண்டலம்.

**தருமனையே நோக்கும்;**
**ஒண்தாமரையாள் கேள்வன்**
**ஒருவனையே நோக்கும்**
**உணர்வு. (67)**

*என்பது பொய்கையாழ்வாரின் திருவாக்கு. ஞானம் என்பது பலவிதம். பல்கலைக்கழகங்களில் ஒவ்வொரு துறையிலும் (பொருளியில், அரசியல், மருத்துவயியல், பொறியியல் அறிவியல் போன்றவை) படித்துப் பட்டம் பெற்ற ஒவ்வொரு வனும் தன்னை ஞானி என நினைத்துக் கொள்ளுகின்றான். ஆனால், உண்மையான ஞானம் என்பது எது? எம்பெருமான் என்ற பரம்பொருளை அறிகின்ற அறிவு ஒன்றுதான் ஞானமாகும் என்று சாத்திரங்கள் கூறும் விடைதான் இப்பாசுரத்தில் "ஒண்தாமரையாள் கேள்வன், ஒருவனையே நோக்கும் உணர்வு" என்ற பகுதியில் கூறப்பெற்றுள்ளது. மற்றவை யாவும் எடுத்துக்காட்டுகளாக அருளிச் செய்யப் பெற்றவை.*

*ஆறுகள் மாக்கடல் நோக்கி ஓடுவதும், தாமரைப்பூ பகலவனை நோக்கி மலர்வதும், உயிர்கள் எமதர்மனையே நோக்கிக் கிட்டுவதும் எப்படி நியதமாக நிகழ்கின்றனவோ அப்படியே ஞானம் என்பதும் திருமாலைப் பற்றியல்லது இதரவிஷயங்களைப் பற்றி உண்டாகும் அறிவு அறிவல்ல; அவை அறிவின்மைக்குச் சமானமானவையே.*

*இந்த உறவுவினை குலசேகரப்பெருமான் திருமொழியில்* **"எத்தனையும் வான்மறந்த"** *(5;7) என்ற பாசுரத்தில் தெளிவாகக் காணலாம்.*

(vi) சுவம்—சுவாமி சம்பந்தம் : இதைச் 'சொத்து - சொத்துக்குரியவன்' (சொம்-சுத்து); உடைமை-உடையவன்) உறவு என்று கூறலாம். இந்த உறவு 'வீடுமின்முற்றவும்' (1,2) என்ற திருவாய்மொழியின்,

**நீர்நுமது என்றிவை**
**வேர்முதல் மாய்த்து (3)**

என்ற மூன்றாம் பாசுரத்தில் அமைந்துள்ளது. விடவேண்டிய பொருள்கள் பலப்பல கிடப்பதால் அவற்றையெல்லாம் தனித்தனியே எடுத்துரைத்தல் பெருபாடாகுமாதலால் விடவேண்டியவற்றைச் சுருங்க அருளிச் செய்கின்றார். நீர்நுமது - கேட்டினை விளைவிக்கின்ற 'யான்' 'எனது' என்ற சொற்கள். இப்பாசுரம் பிறர்க்கு உபதேசிக்கும் முன்னிலை இடமாதலின் 'யான்'எனது' என்ற தன்மைப்பெயர்களை 'நீர், நுமது' என்று முன்னிலையாக அருளிச் செய்கின்றார். இனி, செருக்கினைப் புலப்படுத்தும் அச்சொற்களைத் தாம் தம் திருவாயால் கூறுவதற்கு அஞ்சி 'நீர் நுமது' என்கின்றார். இங்கு நீர், நுமது என்பது சம்சார வித்து; 'வேர் முதல் மாய்த்து' என்பது மருந்து. இங்கே இன்சுவைமிக்க ஈட்டின்சூக்தி. "'நான்' 'எனது' என்று தம் வாக்காலே சொல்ல மாட்டாரே நாக்குவேம் என்று" என்பது.

'நின்னையே தான் வேண்டி' (5;9) என்றபெருமாள் திருமொழிப் பாசுரத்தில் இந்த உறவு புலப்படுவதாகக் கூறுவர் பிரதிவாதி பயங்கரம் அண்ணாசாமி.[11] இதில் செல்வத்துக்கு

11. பெருமாள் திருமொழி—திவ்வியார்த்த தீபிகை—பக். 31

உரியவனிடத்தில்எம்பெருமானையும், செல்வத்தின் இடத்தில் தம்மையும் வைத்து விளக்குவர் ஆழ்வார்.

(vii) *சரீர—சரீரி பாவனை :* இது 'உடல் - உயிர் உறவு' என்று உரைக்கப் பெறும். வைணவதத்துவத்தில் இது உயிராயது. சித்து (சேதநம்) என்ற தொகுதியிலுள்ள மூன்று வகை ஆன்மாக்களும்[12] அசித்து (அசேதநம்) என்ற தொகுதியிலுள்ள மூன்று வகைப் பொருள்களும்[13] எம்பெருமான் திருமேனியில் அடங்கியிருக்கும். அதாவது சித்தும், அசித்தும் எம்பெருமானுக்கு உடலாக இருக்கும். இதுதான் 'சரீர-சரீரி பாவனை' என்று வழங்கப் பெறுகின்றது.

**விளக்கம் :** உயிர் உடலிலிருந்து அதனை தரிக்கச் செய்கின்றது. உயிரின்றேல் உடல் வீழ்ந்து விடுதல் கண்கூடு. மேலும், உயிர்தான் உடலை இயக்குகின்றது. உயிர் உடலுக்குத் தலைவனாக உள்ளது. அங்ஙனமே இறைவன் எல்லாப் பொருள்களில் இருந்து அவற்றை தன் விருப்பம்போல் நடத்தி அவற்றிற்குத் தலைவனாகவும் உள்ளான். ஆயினும், உடலினுள் உயிர் இருப்பதற்கும் எல்லாப்பொருள்களினுள் இறைவன் இருப்பதற்கும் வேறுபாடு உண்டு. உயிர் அணு அளவினதாய் உடம்பினுள் ஓரிடத்திலிருந்து கொண்டு தன் ஞானத்தால் (தர்மபூத ஞானத்தால்) உடல் முழுவதும் பரவி இவ்வுடம்பைப் பற்றிய நிகழ்ச்சிகளை உணர்த்துகின்றது. இறைவன் அங்ஙன மின்றி ஒவ்வொரு பொருளுள்ளும் முழுவதும் தன் சொரூபத்தோடு வியாபித்துள்ளான். அன்றியும், உடலினுள்

12. பத்தர் (தலைப்பட்டவர்), முத்தர், நித்தியர் என்பவர்கள்.

13. சுத்த சத்துவம், மிச்ரதத்துவம், சத்துவசூனியம் (காலத் தத்துவம்) என்பவை.

உயிர் இருப்பதற்கும், உடல் உயிர் ஆகிய இரண்டினுள் இறைவன் இருப்பதற்கும் மற்றொரு வேறுபாடும் உண்டு. உயிர் உடலினுள் இருக்கும்போது அவ்வுடலுக்குரிய வளர்ச்சி தேய்வுகள் (விகாரங்கள்) உயிருக்கு உண்டாவதில்லை. ஆனால் உடலைப் பற்றிய இன்பதுன்ப உணர்ச்சிகள், அறிவின் சுருக்கம், பெருக்கம் ஆகியவை உயிருக்கு உண்டு. உடலின்மீது தண்ணிய காற்று வீசுங்கால் இன்புறுதலும், தீ சுடுங்கால் துன்புறுதலும் உடம்பினுள் இருக்கும் உயிருக்கு நேரிடுகின்றன. இனி, குழந்தைப் பருவத்தில் அதனினுள்ளிருக்கும் உயிரின் அறிவு சுருங்கிய நிலையிலிருந்து பின்பு வளர்ச்சியுறுதலைக் காண்கின்றோம். மற்றும், மக்கள் உடம்பினுள் உள்ள உயிர் ஐம்பொறி அறிவும் உடையதாக உள்ளது. அவ்வுயிரே மரம், எறும்பு முதலிய உடல்களில் புகுந்தால் ஐம்பொறி அறிவு மின்றிச் சில குறையவும் பெறுகின்றன. இனி உயிர் பரு உடலைப் பெறாத நிலையில் அறிவு சுருங்கி இருத்தலும், அறிவு விரிந்திருத்தலும் உண்டு. இங்ஙனமாக உடலைப்பற்றி நிற்கும் உயிர் அவ்வுடலுக்கேற்ப இன்ப துன்ப உணர்ச்சிகளும் அறிவின் சுருக்கமும் பெருக்கமும் அடைதல் தெளிவாகும். ஆனால், உடல் உயிர் இரண்டினுள்ளும் கலந்து நிற்கும் இறைவனை இவ்வேறுபாடுகள் சிறிதும் அடைவதில்லை. இவற்றிற்குக் காரணம் '**பிரவேச ஹேது விசேடம்**' என்பர் மெய்விளக்க அறிஞர்கள். ஆன்மா உடலினுள் கர்மம் அடியாகப் பிரவேசிக்கின்றது. இறைவன் - உடல், உயிர் இரண்டினுள்ளும் திருவருள்காரணமாகப் பிரவேசிக்கின்றான். சிறைக்கூடத்தில் சிறையனும் கிடந்தான்அரசகுமாரனும்

இருந்தான், சிறையன் கர்மம் அடியாகப் பிரவேசிக்கையாலே துக்கத்திற்கு ஏதுவாயிற்று; அரசகுமரன் இச்சையால் பிரவேசித்தமையால் போக ரூபமாக இருந்தது. இந்த எடுத்துக் காட்டால் இக்கூறிய கருத்தைத் தெளியலாம்.

'சரீர-சரீரி பாவனை' ஆழ்வார் பாசுரங்களில் அமைந்துள்ளன.

**திடவிசும்பு எரிவளி**
**நீர்நிலம் இவைமிசை**
**படர்பொருள் முழுவதும்**
**ஆய்அவை அவைதொறும்**
**உடல்மிசை உயிரெனக்**
**கரந்தெங்கும் பரந்துளன். (திருவாய். 1.1;7)**

[வளி-வாயு; கரந்து-மறைந்து]

என்ற நம்மாழ்வார் பாசுரத்தில் இக்கொள்கை விளக்கம் அடைகின்றது. உலகிலுள்ள ஒவ்வொரு பொருளிலும் உடலில் உயிர் உறையுமாப்போலே மறைந்திருந்து எல்லாவற்றிலும் தனித்தனியே குறைவற வியாபித்திருப்பான் - இறைவன். நம்முடைய உடலுக்கு ஆன்மாதான் தாரகமாய், நியாமகனாய், சேஷியாய் இருப்பதுபோல், உடல் ஆன்மாக்களுக்கு எம்பெருமான்தான் தாரகமாய், நியாமகனாய்,சேஷியாய் இருப்பான். 'கரந்து' என்பதனால் ஒருவருக்கும் தெரியாமல் மறைந்து அந்தர்யாமியாய் இருப்பான் என்பதும், " எங்கும் பரந்து' என்பதனால் உள்ளும்புறமும் வியாபித்து இருப்பான் என்பதும் பெறப்படுகின்றன. இப் பாசுரம் இறைவன் அசித்தில்மட்டிலும் பரவியிருப்பதைக் குறிப்பிடுகின்றது.

**திடவிசும்பு எரிநீர் திங்களும் சுடரும்**
**செழு நிலத்து உயிர்களும் மற்றும்**
**படர்பொருள் களுமாய் நின்றவன்(பெரி. திரு. 4.3;3)**

என்ற திருமங்கை மன்னன் பாசுரத்தில் 'செழு நிலத்து உயிர்களும்' என்பதால் உயிரும் (சித்தும்) ஏனையவற்றால் 'அசித்தும்' சேர்த்துக் கூறப் பெற்றிருப்பதைக் காணலாம்.

(viii) **ஆதார—ஆதேய சம்பந்தம் :** ஆதாரம்-தாங்குவது; பரமான்மா. ஆதேயம்- தாங்கப்பெறுவது; சீவன்மா. திருவாய் மொழியில் 'நெடுமாற்கு அடிமை' (8.10) என்ற திருப்பதிகத்தில் உள்ள,

**தனிமாப் புகழே எஞ்ஞான்றும்**
**நிற்கும் படியாத் தான்தோன்றி**
**முனிமாப் பிரம முதல் வித்தாய்**
**உலகம் மூன்றும் முளைப்பித்த**
**தனிமாத் தெய்வம் (7)**

என்ற பாசுரத்தில் எம்பெருமான் சூக்குமசித்து அசித்துகளுடன் கூடியவன் என்று சொல்லப் பெறுகின்றது. இத்தகைய எம்பெருமான் சமஸ்டி சிருஷ்டியையும், வியஷ்டிசிருஷ்டி யையும் செய்விக்கின்றான். சமஷ்டி - தொகுதி. இருபத்து நான்கு தத்துவங்களையும் கலந்து ஈசுவரன் தானாகவும், நான்முகன் மூலமாகவும் இந்த ஒப்பற்ற அண்டத்தைப் படைக்கின்றான். அண்டத்தைப் படைத்து, அதற்குள் நான்முகனைப் படைத்தல், சமஷ்டி சிருஷ்டி என்று வழங்கப் பெறும். நான்முகன் மூலமாக இந்த அண்டத்திற்குட்பட்ட பதினான்கு உலகங்களையும் தேவர், மனிதர், விலங்குகள், பறவைகள், தாவரங்கள்

முதலியவற்றைப் படைத்தலும் வியஷ்டி சிருஷ்டி என்று வழங்கப்பெறும். வியஷ்டி- வேறுவேறு. இந்தப் பாசுரத்தில் 'முனிமாப் பிரம்ம முதல் வித்து' என்பது சங்கல்பிக்கின்ற பரப்பிரம்மம். இதுதான் ஆதாரமாக இருப்பது. இதனால் படைக்கப் பெற்ற அண்டம் முதலானவை ஆதேயமாக இருப்பன. ஆகவே இப்பாசுரம் ஆதார-ஆதேய உறவைத் தெரிவிக்கின்றது. முதலடியிலுள்ள 'தோன்றி' என்பதனால் சமஷ்டி சிருஷ்டியும், இரண்டாவது அடியிலுள்ள 'முளைப்பித்த' என்பதனால் வியஷ்டி சிருஷ்டியும்தெரிவிக்கப் பெறுகின்றன.

(ix) **போக்தா—போக்கிய சம்பந்தம் :** போக்கியப் பொருளை எவன் ஒருவன் தன் விருப்பப்படி அநுபவிக்கின்றானோ அவன் போக்தா. ஈண்டு ஈசுவரன் போகத்தை அநுபவிப்பவன். ஆன்மா ஈசுவரனின் போகப்பொருளாய் இருக்கின்றது. ஆகவே, இது போக்தா-போக்கிய உறவாகின்றது.

**வாரிக்கொண்டு உன்னை**
**விழுங்குவன் காணில் என்று**
**ஆர்வுற்ற என்னை**
**யொழியஎன் னில்முன்னம்**
**பாரித்து, தான்என்னை**
**முற்றப் பருகினான்;**
**கார்ஒக்கு காட்கரை**
**அப்பன் கடியனே (9.6:10)**

[ஆர்வு-ஆசை; பாரித்து-எண்ணி; கடியன்-பதற்ற முடையவன்]

என்பது திருவாய்மொழிப் பாசுரம் இறைவனைக் கண்டால் அப்படியே விழுங்கி விடுவதாக ஆசைப்பட்டிருந்தார் ஆழ்வார். ஆனால் இப்படிச் செய்ய வேண்டுமென்று தனக்கு முன்பே இறைவன் எண்ணித் தன்னை அடியோடு பருகிவிட்டான் குளிர்பானம் பருகுவதைப்போல. ஆழ்வாருக்கு இறைவன் "உண்ணும் சோறு பருகுநீர்" (6.7;1) எனலாம்படி இருந்தான். அங்ஙனமே இறைவனுக்கு ஆழ்வார் "உண்ணும் சோறு பருகும் நீர்" என்று ஆகிவிட்டார். சேதநலாபமே ஈசுவரனுக்குக் குறிக்கோள் என்ற வைணவ சித்தாந்தமும் உறுதிப்படுகின்றது. திருவாய்மொழி ஆயிரத்திலும் இப்பாசுரம் உயிரானது என்பது வைணவர்களின் திருவுள்ளம். இங்கு இறைவன் போகத்தை அநுபவிப்பவனாகவும் ஆழ்வார் போகப்பொருளாகவும் ஆகி விடுவதைக் காண்கின்றோம்.

## 2. அர்த்த பஞ்சக ஞானம்

சம்சாரியான சேதநன் தத்துவஞானம் பிறந்து உய்யும் போது தோன்றுவது அர்த்தபஞ்சகஞானம். திருமந்திரத்தில் இன்றியமையாது அறிய வேண்டுவனவற்றைக் குறிப்பிடும் போது **'அஞ்சர்த்தம்'** (முமுட்சு 23) என்று கூறும் முமுட்சு படி இஃது (1) ஈசுவரன் இயல்பு, (2) ஆன்மாவின் இயல்பு, (3) ஆன்மா அடையும் பயன், (4) அப்பயனை அடைவதற்குரிய வழிகள், (5) அப்பயனை அடைவதற்குத் தடையாய் உள்ளவைகள் ஆகும். இவற்றில் ஒவ்வொரு பொருளும் ஐந்து வகைப்பட்டிருக்கும்.

**(1) ஈசுவரனின் இயல்பு :** என்பது பரத்துவம், வியூகம், விபவம் (அவதாரங்கள்) அந்தர்யாமித்துவம், அர்ச்சாவதாரம் என்று ஐந்து.

*(2) ஆன்மாவின் இயல்பு என்பது நித்தியர், முக்தர், பத்தர் (தளைப்பட்டிருப்பவர்), கேவலர், முமுட்சுகள் என்று ஐந்து.*

*(3) ஆன்மா அடையும் பயன் என்பது புருஷாாத்தம், புருஷனால் (ஆன்மாவால்) அடையப்படும் பொருள் (= அர்த்தம்) அதுதான் அறம்(தர்மம்) பொருள் (அர்த்தம்), இன்பம் (காமம்) ஆன்மாநுபயம், பகவதநுபவம் என்று ஐந்து.*

*(4) ஆன்மா அப்பயனை அடைவதற்குரிய வழிகள் என்பன : கர்மம், ஞானம், பக்தி, பிரபத்தி, ஆசாரிய அபிமானம் என்று ஐந்து.*

*(5) அப்பயனை அடைவதற்குத் தடையாய் (விரோதிகளாய்) உள்ளவைகள் என்பன. சொரூப விரோதி, பரத்துவ விரோதி, புருஷார்த்த விரோதி, உபாய விரோதி, பிராப்தி விரோதி என்ற ஐந்து.*

*பராசர பட்டர் என்ற ஆசாரியப் பெருமகனார்,*

**மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்**
**தக்க நெறியும் தடையாகித்–தொக்கியலும்**
**ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்**
**யாழின்இசை வேதத்து இயல்.**

**(திருவாய்மொழித் தனியன்)**

*என்று விளக்குவர். இந்த அர்த்த 'பஞ்சகத்தை'. இதில் (1) 'மிக்க இறை நிலை' என்பது ஈசுவரனின் இயல்பு ; (2)'மெய்யாம் உயிர் நிலை' என்பது ஆன்மாவின் இயல்பு; (3)'தக்க நெறி' என்பது ஆன்மா அடையும் வழி; (4) தடையாகி தொக்கிலும் ஊழ்வினையும் என்பது அப்பயனை அடைய விரோதிகளாய்*

இருப்பவை; (5) 'வாழ்வினையும்' என்பது வீடு பேற்றின் தன்மை என்ற ஐந்துப் பொருள்களைக் (அர்த்த பஞ்சகத்தைக்)கூறுவது. 'யாழின் இசை வேதத்து இயல்' என்பது சாமவேத சாரமான திருவாய்மொழி.

**விளக்கம் :** சீமந் நாராயணனே அறப்பெரிய முதல்வன்; ஆன்மாவின் இயல்பு அடியேன் என்பது; சரணாகதி இறைவனை அடைவதற்குரிய வழி; "பொய்ந்நின்ற ஞாலமும் பொல்லா அழுக்குடம்பும்" (திருவிருத்-1) ஆகிய இவையே விரோதிகள்; "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்வதுவே" பரமபுருஷார்த்தம் என்னும் இவ்வைந்து பொருள்களுமே திருவாய்மொழியில் நுவலப் பெறுகின்றன என்று நம்முடைய ஆசாரியப் பெருமக்கள் விளக்கியுள்ளனர்.

**(1) இறைவனின் இயல்பு :** திருவாய்மொழியிலுள்ள 'உயர்வற'(1.1), 'திண்ணன் வீடு' (2.2), 'அணைவது' (2.8) 'ஒன்றும் தேவும்' (4.10) என்ற நான்கு திருப்பதிகங்களும் நுவல்வதாக சுட்டிப் போயினர்.

**(2) ஆன்மாவின் இயல்பு :** திருவாய் மொழியிலுள்ள 'பயிலும் சுடர்ஒளி' (3.7) 'ஏறாளும் இறையோனும்' (4.8) 'கண்கள் சிவந்து' (8.8) 'கருமாணிக்கம்' (8.9) என்ற நான்கு திருப்பதிகங் களிலும் சொல்லப் பெற்றுள்ளதாகக் குறித்துப் போயினர்.

**(3) ஆன்மா அடையும் பலன்:** திருவாய்மொழியிலுள்ள 'எம்மாவீடு' (2.9) 'ஒழிவில் காலமெல்லாம்'/ (3.3) 'நெடுமாற்கு அடிமை' (8.10) 'வேய்மரு' (10.3) என்ற நான்கு திருப்பதிகங் களிலும் சொல்லப் பெற்றுள்ளதாக எடுத்துக் காட்டியுள்ளனர்.

**(4) பயனை அடைவதற்குத் தடையாக உள்ளவைகள்:** 'திருவாய் மொழியிலுள்ள 'வீடுமின் முற்றவும்' (1.2) 'சொன்னால் விரோதம்இது' (3.9) 'ஒரு நாயகமாய்' (4.1), 'கொண்ட பெண்டிர்' (9.1) என்ற நான்கு திருப்பதிகங்களிலும் நுவலப்பெற்றுள் ளனவாக மொழிந்து சென்றனர்.

**(5) பயனை அடையும் வழிகள் :** திருவாய்மொழியி லுள்ள 'நோற்ற நோன்பும்' (5.7) 'ஆராவமுதே' (5.8) 'மானேய் நோக்கு' (5.9) 'பிறந்தவாறும்' (5.10) என்ற நான்கு திருப்பதிகங் களிலும் கூறப்பெற்றுள்ளனவாகக் குறிப்பிட்டுள்ளனர்.

**திருப்பாவையிலும் அர்த்த பஞ்சகம்** இருப்பதாக நம்பூருவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

(i) **இறைவனின் இயல்பு :** திரிமூர்த்தி சொரூபமாகிய நாராயணனை நோக்கியே இந்த நோன்பு நோற்கத் தக்கது என்பது ஆண்டாளுடைய உள்ளக்கிடக்கை. ஆதலால் **'மார்கழித் திங்கள்'** (1) என்ற முதற் பாசுரத்தில்

> **'நாராயணனே**
> **நமக்கே பறைதருவான்'**

என்ற அடியில் பரத்திலுள்ள நாராயணனைப் பாடுகின்றாள். 'பறைதருவான்' என்பதால் எதிர்பார்க்கும் பொருளை நல்குவான் என்ற பொருளைத் தரும்.

**வையத்து (2)** என்ற இரண்டாம் பாசுரத்தில்

> **'பாற்கடலுள் பையத் துயின்ற பரமன் அடிபாடி'**

என்ற அடிகளில் **வியூகரூபமாகப்** பரன் பாற்கடலில் பையத் துயிலும் மூர்த்தியைக் காட்டுகின்றாள். ஆயச்சிறுமிகள் எல்லா

வகையாலும் விஞ்சின கண்ணபிரானைப் பாடாது திருப்பாற்கடல்நாதனைப் பாடுவதாகச் சொல்கின்ற கருத்து கிருட்டிணனையும் தம்மையும் நோக்கிப் பண்டே அதிக ஐயம் கொண்டிருக்கின்ற இடையர் தமக்குத் தீங்கு செய்யக்கூடும் என்ற அச்சத்தினால் என்க.

**'ஓங்கி உலகளந்த'** (3) என்ற மூன்றாம் பாசுரத்தில் வாமனனாகித் திரிவிக்கிரமனான **விசுவருபத்தைக்** குறிப்பிடும் போக்கில்,

**ஓங்கி உலகளந்த**
**உத்தமன் பேர் பாடி**

என்று குறிப்பிடுகின்றான். 'உத்தமன்பேர்' என்பதால் 'நாராயணன்' என்ற பரத்துவ நினைவும், வியூகத்தில் சொல்லும் உடையவர்களாக விபவத்தைப் பாடி, பகவானை எப்படி மனத்தில் பாவித்துக் கொண்டுள்ளோமோ அந்தப் பாவைக்குச் சாற்றி நீராடல் வேண்டும் என்று மனம்மொழி செயல்களால் இது பகவானுடைய ஆராதனமே என்பதை தெளிவு படுத்துகின்றாள்.

**'ஆழிமழைக்கண்ணா'** (4) என்ற நான்காம் பாசுரத்தில் அவன் மேற்கொண்ட செயலை இட்டு அழைக்கின்றனர். 'பகவானுக்கு அடிமைப்பட்ட பாகவதர்கட்கு மற்றைத் தேவர்கள் அடிமை செய்பவர்கள்' என்பது சாத்திர சித்தம். ஆகவே மழைக்கு அதிதெய்வமான வருணன் பரமபாக வதைகளான இவர்கள் இருக்கும் இடத்தில் இவர்கள் சொன்னபடி மழை பெய்ய வேண்டும் என்று கையோலை செய்து கொடுக்கின்றார்கள்.

'**மாயனை**'(5) என்ற ஐந்தாம் பாசுரத்தில் மாயனுடைய பல பெயர்களை வாயினால் பாடி மனத்தினால் சிந்தித்து தூமலர் தூவித் தொழுதல் போய பிழைகளும் (எம்பெருமானை அடிபணிவதற்கு முன்னர் செய்யப்பட்டவை) புகுதருவான் நின்றனவும் (அடிபணிந்த பின்னர் ப்ரகிருதி வாசனையினால் அபுத்தி பூர்வமாகச் செய்தவை) தீயிலிட்ட தூசுபோல் உருமாய்ந்து ஒழியும் என்று கூறப்பட்டது.

**(ii)ஆன்மாவின் இயல்பு :** 'புள்ளும் சிலம்பின காண்' (6)என்ற பாசுரம் முதல் 'எல்லே! இளங்கிளியே!' (15) என்ற பாசுரம்வரை உள்ள பத்துப் பாசுரங்கள் பள்ளி உணர்த்துவதையே பிரதானமாகக் கொண்டவை. இவை ஆன்மாவின் இயல்பான பகவதநுபவத்தையும், உறக்கமாகிய உபாய விரோதி சொரூபத்தையும் காட்டுவன. பரத்துவ திருக்குணமாத்திரமே விளங்கும் இடமான பரமபத நாதனை அநுபவிக்கப் பலகோடி நூறாயிரவர் திரளும்போது எல்லாத் திருக்குணங்களும் ஒருங்கே விளங்கும் இடமான கண்ணனை அநுபவிக்கக் கூட்டம் அதனிலும் விஞ்சி இருக்க வேண்டாவோ? என்பதைக் காட்டுவது. பரமபோக்கியமான ஒரு பொருளை ஒருவனாக அநுபவிக்கலாகாது என்பதும் பத்துப்பேரோடும் அநுபவிக்க வேண்டும் என்பதும் சாத்திரவிதி.

கிருஷ்ணாநுபவத்தில் அனைவர்க்கும் அவா இருக்கும் போது சிலர் எழுப்பச் சிலர் உறங்குவது அவாவிற்குக் குறை போல் தோன்றுகிறதே எனின்: கண்ணபிரானது சேஷ்டிதங்களும் திருக்குணங்களும் இராமசரம்போல் சிலரை மயங்கப் பண்ணும்; சிலரை இருந்த விடத்தில் இருக்கவொட்டாமல் துடிக்கப் பண்ணும்; ஆகையால் அவாவிற்குக் குறை இல்லை

உள்ளே இருப்பவர்கள் மயங்கினவர்களின் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள்; வெளியே எழுப்புபவர்கள் துடிப்பவர்களின் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். ஆகவே, அனைவரும் பகவதநுபவத்தில் ஈடுபட்டவார்களே என்று கூறுவதில் தட்டில்லை.

"சர்வசேஷியான எம்பெருமான் சேஷபூதர் இருக்குமிடத்திற்கு வந்து அருள் புரியக் கடமையுடையவன்; அவன் அங்ஙனம் செய்யாதொழியில் நாம் நம் சொரூபத்தைக் குலைத்துக் கொண்டாகிலும் அவன் இருப்பிடத்திற்குச் சென்று சேவித்தால் அவன் 'ஆ நம் காரியத்தை நாம் செய்யத் தவறினோமே' என்று தான் கழிவிரக்கமுற்று நம் காரியத்தைச் செய்து தலைக்கட்டுவன்; எல்லோருமாகத் திரண்டு போகலாம் வாருங்கள்" என்று அழைக்கின்றனர் (8).

இங்ஙனம் பத்துப் பாசுரங்களால் பத்துப் பெண்களை உணர்த்திய படியைக் கூறியது திருவாய்ப்பாடியிலுள்ள பத்து லட்சம் பெண்களையும் உணர்த்தியதற்கு உபலட்சணமாகும். இவற்றால் ஆன்மாவின் இயல்புகள் சொல்லப்பட்டதை நினைந்து மகிழலாம்.

**(iii) ஆன்மா அடையும் பயன்கள் :** '**மாலே மணி வண்ணா**' (26) என்ற இருபத்தாறாம் பாசுரத்தில் ஆயச் சிறுமிகள் கேட்பவையே. ஆன்மா அடையும் பயன்களாகும். அவர்கள் கேட்பவை; திருப்பள்ளி எழுச்சிக்குச் சங்குகள் வேண்டும்; புறப்பாட்டுக்குப் பறைவேண்டும்; பறை கொட்டிக் கொண்டு புறப்படும்போது எதிரே நின்று திருப்பல்லாண்டு பாட அரையர் வேண்டும்; பாடுவார் எங்கள் முகத்திலே விழிக்க நாங்கள் அவர்கள் முகத்தில விழித்துக் கொண்டு போம்படி

கோலவிளக்குகள் வேண்டும்; நெடுந்தூரத்தில் எங்கள் திரளைக் கண்டு சிலர் வாழும்படி முன்னே பிடித்துக் கொண்டு செல்வதற்குக் கொடி வேண்டும்; புறப்பட்டுப் போகும்போது பனி தலைமேல் விழாதபடி காக்க ஒரு மேற்கட்டி வேண்டும்; சிறிய வயிற்றிலே பெரிய உலகங்கள் எல்லாவற்றையும் வைத்துக் கொண்டு ஓர் ஆலந்தளிரிலே கிடந்து செயற்கரிய காரியங்களைச் செய்யவல்ல உனக்கு இவை எங்கட்குக் கிடைக்கச் செய்வது. எளிதான செயலேயாகும்.

"**கூடாரை வெல்லும்**" (27) என்ற இருபத்தேழாம் பாசுரத்தில் மார்கழி நோன்பு தலைக்கட்டின பிறகு இடைப்பெண்கள் கண்ணனிடம பெறவேண்டிய வெகுமானச் சிறப்புகளெனச் சொல்லுகின்றார்கள். "பாடகம் முதலிய ஆபரணங்களையெல்லாம் உன் கையால் எங்களுக்குப் பூட்ட நாங்கள் அணியப்பெற்றவர்களாகவேண்டும். அங்ஙனமே ஆடைகளையும் நீ உன் கையால் எங்கட்கு உடுத்தி நாங்கள் உடுக்கப் பெற்றவர்களாக வேண்டும்" என்கின்றனர்.

"**கறவைகள் பின்சென்று**" (28) என்ற இருபத்தெட்டாம் பாசுரத்தில் தெரிவிப்பவை எவை? முன்னர் '**போற்றியாம் வந்தோம்**' (21) "**செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ?**" (22) 'உன்னை அருத்தித்து வந்தோம்'(25) என்பன போன்ற பாசுரங்களில் தங்களுக்குள்ள பிராப்பிய ருசியை வெளியிட்டனர். அந்தப் பிராப்பியத்தைப் பெறுகைக்கு உடலாகத் தங்களுடைய ஆகிஞ்சன்னியத்தையும்[14]

14. ஆகிஞ்சன்னியம்– கன்மஞானபக்திகளாகின்ற மற்ற உபாயங்களில் தொடர்பற்றிருத்தல்.

உபாயத்துவத்தையும்[15] வெளியிடுகின்றனர். இப்பாசுரத்தில் 'நாயகரே! நின்னருளே புரிந்திருக்கும் எங்கள் பக்கலில் எடுத்துக் கழிக்கலாம்படியும் சில உபாயங்கள் உளவென்றிருந்தாயோ?; 'யாம் வந்த காரியம் ஆராய்ந்து அருள்' (23) என்றும் 'இன்று யாம் வந்தோம் இரங்கு' (24) என்றும் நாங்கள் வேண்டிய அருளுக்குப் பிரதிபந்தகங்களாகத் தங்கள் திறத்தில் சாதனாம் ஒன்றும் இல்லை என்ற 'சர்வஜ்யனுக்கு' அறிவிக்கின்றனர்.

**'சிற்றஞ்சிறுகாலே'** (29) என்ற இருபத்தொன்பதாம் பாசுரத்தில் தங்கள் குறிக்கோள் கைங்கரியம் என்று பிரபந்தத்தின் தற்பர்யத்தைச் சொல்லி முடிக்கின்றனர். முன்னரெல்லாம் 'பறை பறை' என்று சொல்லி வந்த ஆயச்சிறுமிகள் அப்பறையின் பொருளைத் தீர்மானித்து விண்ணப்பம் செய்த பாசுரம் இது. "நாட்டார் இசைவு பெறுவதற்காக 'நோன்பு' என்ற ஒன்றைக் காரணமாகக் கொண்டு இங்கு வந்தோமேயன்றி எங்களது குறிக்கோள் உன் திருவடிகளில் நித்திய கைங்கரியம் புரிவதுதான்; இனி ஒரு நொடிப்பொழுதும் உன்னை விட்டு நாங்கள் பிரிந்திருக்க விருப்பம் எமக்குப் பிறவாவண்ணம் நீயே அருள்புரிய வேண்டும்" என்கின்றனர்.

எம்பெருமானுடைய பிறவிதோறும் ஒக்கப்பிறக்கும் பிராட்டியைப்போல தாங்களும் ஒக்கப் பிறந்து ஆட்செய்ய நினைக்கின்றனர். ஆழ்வார்கள் எல்லோரும் "இனிப் பிறவியான் வேண்டேன்" என்றும், "ஆதலால் பிறவிவேண்டேன்" (திருமாலை-3) என்றும் கூறி பகவானிடம் வேண்டியது

15. 'உபாயத்துவம்–சித்தோபாயம்.

பிறப்பறுக்கவே வேண்டும் என்று. ஆண்டாள் அங்ஙனமே பேசாமல் "எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்" என்றமையாலே அவனுடைய அவதாரங்கள்தோறும் கூடவே வந்து பிறக்கின்ற நாச்சிமார்களிலே "இவள் ஒருத்தி" என்னும் இடம் தெரிவிக்கப்பட்டதாகின்றது.

"**வங்கக் கடல் கடைந்த**" *(30)* என்ற முப்பதாம் பாசுரத்தில் இப்பிரபந்தம் கற்றார் பிராட்டியாராலும், எம்பெருமானாலும் எல்லாக் காலங்களிலும் அங்கீகரிக்கப் பெறுவார்கள் என்கின்றாள்.

'சங்கத் தமிழ் மாலை' - பஞ்ச லட்சம் குடிப்பெண்கள் திரள் திரளாக அநுபவித்தது போல், பக்த பாகவதர்கள் திரள் திரளாக அநுபவிக்க வேண்டும் என்பது தாற்பரியம்.

திருவாய்ப்பாடியில் பெண்களுக்குக் கிருட்டிணன் சமகாலத்தவனாகையால் கிருட்டிணனை அவர்கள் நேரில் காண முடிந்தது. அந்த நேர்காட்சியை ஆண்டாள். நாச்சியார் பாவனை செய்து பெற்றார். அவளிலும் பிற்பட்ட நம்போலியர் அப்பேறு பெற வேண்டில் இப்பிரபந்தத்தை ஓதினால் போதும். "கன்றிழந்த தலைநாகு தோற் கன்றை மடுக்க அதுக்கு இரங்குமாப்போலே, ஆய்ச்சியர் சொன்ன இப் பாசுரங்கொண்டு பலிக்கும்" என்பர் பட்டர்.

அதிகாலையில் எழுந்து "முப்பது பாட்டையும் தப்பாமல் - ஒரு பாட்டும் நழுவாமல் - அநுசந்திக்க வேண்டும். அதனைச் செய்ய முடியாவிட்டால் "**சிற்றஞ்சிறுகாலே**" *(29)* என்ற பாசுரத்தை அநுசந்தித்தால் போதும். அதையும் செய்ய முடியாமற் போனால் "நாம் இருந்த இருப்பை நினைப்பது"

என்பர் பட்டர். " நாம் (பட்டர்) இப்பிரபந்தத்தை அநுசந்தித்து ஈடுபட்டிருந்த இருப்பை" என்றபடி

**(iv) பயனை அடையும் வழிகள் : 'ஏற்றக்கலங்கள்'** (21) என்னும் இருபத்தொன்றாம் பாசுரத்தில் "ஆற்றப் படைத்தான் மகனே!" என்று கண்ணனை விளிக்கின்றனர். ஆய்ச்சியர் பலகாலும் கண்ணனை விளிக்கும்போது 'நந்தகோபலன் மகனே'! என்று விளிப்பதைப் பாசுரங்களில் காணலாம். இதற்கு ஒரு கருத்து உண்டு. அது யாதெனில்: "பரமபதத்தின் இருப்பைத் தவிர்த்தும், பனிக்கடலில் பள்ளிக் கோளைப் பழகவிட்டும்' (பெரியாழ் திரு. 5.3;9) 'நீ இந்த திருவாய்ப்பாடியில் நந்தகோபர்க்கு மகனாகப் பிறந்தது இங்ஙனம் கிடந்து உறங்கவோ? எங்கள் குறையைத் தீர்க்கவன்றோ நீ அறிவொன்று மில்லாத ஆய்க்குலத்தில் பிறந்தது? (திருப்.28) ஆகவே, பிறந்த காரியத்தை நோக்க வேண்டாவோ?' என்பதாகும். 'மாற்றார் உனக்கு வலி தொலைந்து உன் வாசற்கண் ஆற்றாது வந்துன் அடி பணியுமாப்போலே, யாம் வந்தோம்'. 'ஆற்றாது வந்து இராமன் பிராட்டி விஷயத்தில் அபசாரப்பட்டக் காக்காசுரன் மீது நான்முகன் கணையைத் தொடுத்துவிட அது எத்திசையும் உழன்றோடி எங்கும் புகலற்று இளைத்து விழுந்த காகம் போல வந்து' என்றபடி.

'யாம் வந்தோம்'- சத்துருக்கள் உன்னுடைய அம்புக்குத் தோற்று அவ் அம்பு பிடரியைப் பிடித்துத் தள்ள அவர்கள் வருமாறு போல, நாங்கள் உன்னுடைய சவுந்தரிய சௌசீல்யாதி குணங்கள் பிடித்திழுக்க வந்தோம் - உன்திருவடியை நோக்கி வந்தோம். இதில் 'சரணாகதி' குறிப்பிட்டபடி.

**'அங்கண்மாஞாலத்து'** (22) என்ற இருபத்து இரண்டாம் பாசுரத்தில் "பேரரசர்கள் நின்சீரிய சிங்காதனத்தின்கீழ் திரண்டு வந்து கிடப்பதைப்போல் நாங்கள் வந்து 'தலைப்பெய்தோம் - கிட்டினோம். 'திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல்.' "நின் திருக்கண்கள் இரண்டிலும் கடாட்சிக்க வேண்டும். அநந்யார்ஹைறகளாக[16] வந்து நின்ற எங்களை" என்கின்றனர். இதிலும் பிரபத்திக் - குறிப்பைக் காணலாம்.

**'மாரிமலைமுழைஞ்சில்'**(23) என்ற இருபத்து மூன்றாம் பாசுரத்தில் கண்ணபிரான் திருப்பள்ளியிலிருந்து எழுந்து 'சீரியசிங்கம் போல் புறப்பட்டு எழுந்தருளி நடையழகு காட்டிச் சிங்காதனத்தின்மீது வீற்றிருந்து தங்களின் (ஆயச்சிறுமியரின்) வேண்டுகோளை ஆராய்ந்தருள வேண்டும் என்று வேண்டுகின்றனர்.

'அறிவுற்று' என்பதால் அடியோடு அறிவில்லாததொரு பொருளுக்குஅறிவு குடிபுகுந்தமை தோன்றும். சிங்கம் பேடையைக் கட்டிக்கொண்டு உறங்கும்போது அறிவிழந் திருக்கும். கண்ணபிரானும் 'நப்பின்னைக் கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர்மார்ப' னாதலால் (திருப் 19) அடியார் காரியத்தைச் செய்ய நினைத்து உணர்வதற்கு முன்னர் அறிவற்றதொரு பொருளாகவன்றோ தன்னால் எண்ணப் 'படுவன் போலும்! - யாம் வந்த காரியம்' ; இப்போது இவர்கள் வந்த காரியம் இயம்பவில்லை; காரணம் சொல்லிவிட்டால் சுதந்திரனாகிய இவன் மறுத்தாலும் மறுக்கக் கூடுமென்று அஞ்சி, சற்றுத் தாமதித்து விண்ணப்பம் செய்கின்றனர் **'சிற்றஞ்சிறுகாலே'** (29) என்ற பாசுரத்தில்.

16. அநந்யார்ஹைகள்—மற்றவருக்கு இல்லாமல் ஈசுவரனுக்கே உரித்தாயிருக்கும் நாங்கள்.

'அன்றிவ்வுலகம்'(24) என்ற இருபத்து நான்காம் பாசுரத்தில் கண்ணன் புறப்பட்டு வர, இவர்களும் தண்டகாரண்ய முனிவர் தாம் இராக்கதர்களால் தமக்கு நேரிடும் துன்பங்களைச் சொல்லிமுறையிட வேண்டும் என்று நினைத் திருந்ததை மறந்து, இராமபிரானைக் கண்டவுடன் மங்களா சாசனம் தொடங்கினாற்போலே, தங்கள் மனோரதங்களை மறந்து, 'இத்திருவடிகளைக் கொண்டோ இவனை நாம் நடக்கச் சொல்லுவது?' என்று வருந்தி பண்டு உலகளந்த வரலாற்றையும் நினைந்து வயிறெரிந்து இத்திருவடிகட்கு ஒரு தீங்கு நேராதொழிய வேண்டும் என்று மங்களாசாசனம் செய்கின்றனர். 'அடிபோற்றி', 'கழல்போற்றி', 'குணம் போற்றி', 'திறல் போற்றி', 'புகழ் போற்றி', 'வேல் போற்றி' என்று இவர்கள் நாக்கிற்கு அறுசுவை அடிசில் இடுவது போல் (ஷட்ரசம்) இட்டு மகிழ்கின்றனர்; "இன்று யாம் வந்தோம்; இரங்கியருள்வாய்" என்கின்றனர். பிரபத்திக்கு அடிகோலுகின்றனர்.

'ஒருத்தி மகனாய்' (25) என இருப்பத்தைந்தாம் பாசுரத்தில் "உன்னுடைய திருக்குணங்களை நாங்கள் பாடிக் கொண்டு வந்தமையால் யாதொரு வருத்தமும் படாமல் சுகமாக வந்தோம். 'பறை' என்ற வியாஜயத்தையிட்டு உன்னைக் காண்பதற் காகவே வந்தோம். இதனால் நின்னைப் பிரிந்திருக்கும் துன்பம் நீங்கி மகிழ்கின்றோம்" என்கின்றார்கள், தாம் வந்த காரியத்தை,

எற்றைக்கும் ஏழேழ்
பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே யாவோம்;
உனக்கேநாம் ஆட்செய்வோம். (29)

என்று இருபத்தொன்பதாம் பாசுரத்தில் வெளியிடுகின்றனர். இப்பாசுரத்திலும்(29) பிரபத்தியிலே நோக்கு என்பது தெளிவாகின்றது.

(v). **பயனை அடைவதற்குத் தடையாய் உள்ளவைகள் :** தடைகளை நீக்க வேண்டுமானால் எம்பெருமானையே பற்ற வேண்டும். திருப்பாவையில் 16முதல் 20 பாசுரங்கள் பகவத் சொரூபமாகிய இரட்சகத்துவத்தையே காட்டுவனவாக நம்முன்னோர் குறித்துப் போயினர்.

**'நாயகனாய் நின்ற'**(16) என்ற பதினாறாம் பாசுரம் ஆயச்சிறுமிகள் நந்தகோபர் திருமாளிகை வாசலில் சென்று சேர்வதைக் குறிப்பிடுகின்றது. கோபுரவாசல் போன்ற வெளிப்புறத்து வாசலைக் காப்பவன் - கோயில்காப்பான் என்றும், கொடிமரத்து அருகிலுள்ள வாசல் போன்ற உட்புறத்து வாசலைக் காப்பவன் - வாயில் காப்பான் என்றும் இவண் கூறப்பெறுகின்றனராகக் கொள்ளவேண்டும். பெரிய இடத்துக்குப் போகின்றவர்கள் துவாரபாலகர்களின் புருஷகாரம் முதலில் தேவைப்படுவதை அறிவதைப்போல் இவர்களும் அறிகின்றனர். ஆகவே, அவர்களின் தயவை வேண்டி நிற்கின்றனர்.

திருப்பாவையில் **'நீராட்டம்'** என்ற குறிப்பு ஐந்து பாசுரங்களில் வருகின்றது. 'நீராடப்போதுமினோ' (1) 'நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்'(3) 'நாங்களும் நீராட மகிழ்ந்து'(4) 'இப்போதே எம்மை நீராட்டு'(20) 'மார்கழி நீராடுவான்'(26) என்று வந்துள்ளமையைக் காணலாம். ஆக, இவற்றில் ஆயச்சிறுமிகளின் குறிக்கோள் **'நீராடுதல்'** என்பது

தெரிய வந்தாலும் அவர்கள் நீராடும் இடமான பொய்கைக்கோ, யமுனைஆற்றுக்கோ சென்றனராகப் பாசுரங்களில் குறிப்பு இல்லை.

ஆனால் நந்தகோபருடைய திருமாளிகைக்குச் சென்று அங்கு 'நப்பின்னைக் கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர்மார்பனை' (19) உணர்த்தி, அவர்களை நோக்கித் தோத்திரம் செய்து, 'சிற்றஞ்சிறுகாலை' எழுந்து இங்கு நாம் வந்தது எதற்காக வெனில்: 'உன்றன்னோடு உற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்' (29) என்று விண்ணப்பம் செய்வதற்காகவே என்று தலைக்கட்டியதைக் காண்கின்றோம். இங்ஙனம் திவ்விய தம்பதிகளிடம் சென்று சேவிப்பதுதான் இவர்கள் கொண்ட **'மார்கழி நீராட்டம்'** என்பது தெளிவாகின்றது. ஆகவே, பாசுரங்களில் குறிப்பிடப்பெற்ற நீராட்டம் தண்ணீரில் தோய்வது அன்று எனவும், பகவானோடு சேர்தலையும், பாகவதர்களோடு சேர்வதையுமே நீராட்டம் என்றுச் சொல்லப்பெற்றுள்ளது என்பதை அறுதியிடுவதாக அமைகின்றது. மூவாயிரப்படியில் பெரியவாச்சான் பிள்ளையும், ஆறாயிரப்படியில் அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரும் இக் கருத்தைத் தெளிவாக்கியுளளனர்.

**'அம்பரமே தண்ணீரே'** (17) என்ற பதினேழாம் பாசுரத்தில் நந்தகோபர், யசோதைப்பிராட்டி, கண்ணபிரான், நம்பி மூத்தபிரான்(பலராமன்) ஆக நான்கு பேர் எழுப்பப் பெறுகின்றனர். இங்கு "உம்பியும் நீயும் உறங்கேல்" என்பது பகவத் சேஷத்துவமும்[17] பாகவதசேஷத்துவமும் ஒன்றை

**17. சேஷத்துவம்– அடிமைத் தன்மை**

விட்டு ஒன்று பிரிந்திரா என்கின்ற தத்துவத்தை நினை வூட்டுவதாக அமைகின்றது.

**'உந்து மத களிற்றன்'** (18) என்ற பதினெட்டாம் பாசுரத்தில் கண்ணாபிரானின் திவ்விய மகிஷியான நப்பின்னைப் பிராட்டியை எழுப்புகின்றனர். கிருட்டிணா வதாரத்தில் நப்பின்னைப் பிராட்டியே பிரதான மகிஷியாகக் குலாவப்படுகின்றது. ஆழ்வார் பாசுரங்களில் உருக்குமிணிப் பிராட்டியைப்பற்றி மூன்று நான்கு இடங்களில் மட்டிலுமே உள்ளது; நப்பின்னைப்பற்றிய குறிப்பு பல நூறு இடங்களில் வருகின்றது. நப்பின்னை கும்பர் என்பாரின் மகள், 'கும்பர் திருமகளாரே' என்று அழைக்காமல் 'நந்த கோபாலன் மருமகளே' என்று அழைத்தமைக்குக் காரணம் என்ன? பெண்டிர்க்குப் பிறந்தகத்து சம்பந்தத்தைக் காட்டிலும் புக்ககத்துச் சம்பந்தமே பெருமையுடையதாயிருக்கும் என்பதால்,

**'குத்து விளக்கெரிய'** (19) என்ற பத்தொன்பதாம் பாசுரத்தில் நப்பின்னை கண்ணன் என்ற திவ்விய தம்பதிகளின் காலிலும் விழுந்து இரக்கின்றனர் ஆயச்சிறுமிகள். கதவுத் துளை வாயிலாக இருவரும் காணப்படுகின்றனர். ஆகவே வெளியிலிருந்து கொண்டே பிரபத்தி நடைபெறுகின்றது. இது பிரபத்தியைத் தெளிவாக்குகின்றது.

இங்கு 'மெத்தென்ற பஞ்சசயனம்': மென்மை, குளிர்ச்சி, நறுமணம், வெண்மை, விரிவு என்ற வகைச் சிறப்புகள் பொருந்திய படுக்கைக்குப் 'பஞ்ச சயனம்' என்று பெயர். இந்த ஐவகையில் மெத்தென்றிருத்தல் சேர்ந்திருந்தாலும் தனிப்பட 'மெத்தென்ற' என்று சிறப்பித்தற்குக் காரணம் அதன்

முக்கியத்துவத்தைக் காட்டுவதற்காக. 'மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்' என்ற பாசுரத்தால் தெரிவிக்கப் பெற்ற 'அர்த்த பஞ்சகமே' இங்கு மெத்தென்ற பஞ்சசயனமாகக் கருதப்பெற்றதாகவும் கொள்ளலாம். இந்தப் பஞ்ச சயனம் சாத்திரங்களால் தாங்க பெறுகின்றது என்பதைக் 'கோட்டுக் கால் கட்டில்' என்ற தொடர் குறிப்பிடுகின்றது.

'முப்பத்துமூவர்'(20) என்ற இருபதாம் பாசுரத்திலும் கண்ணபிரான் நப்பின்னைப்பிராட்டி என்ற இருவரையும் எழுப்புகின்றனர். இதற்கு முன்னுள்ள பாசுரத்தில் கண்ண பிரானுடைய சிருங்கார ரசவிதக்னாயிருக்கும் தன்மையைச் சொல்லி அநுபவித்தார்கள். இப்பாசுரத்தில் அவனது பெரு மிடுக்கைச் சொல்லி அநுபவிக்கிறார்கள். விசிறியையும், கண்ணாடியையும், உன் மணாளனையும் தந்து நீராட்டுவிக்க வேண்டுமென்று வேண்டுகின்றனர். 'நீராட்டு' என்பதற்குச் 'சேர்ப்பி' என்பது பொருள். பகவத் சந்நிதியில் கைங்காரியமே புருஷார்த்தம் என்பது காட்டப் பெறுகின்றது.

'செப்பன்ன மென்முலை' என்று தொடங்கி நப்பின்னைப் பிராட்டியின் உறுப்புகளின் அழகு பேசப்பெறு கின்றது. ஸ்ரீவச்னபூஷணத்தில் பிராட்டி "சேதநனை அருளாலே திருத்தும்; ஈசுவரனை அழகாலே திருத்தும்" என்று அருளிச் செய்திருப்பதை ஈண்டு நினைவு கூரலாம்.[18] ஸ்ரீவசன பூஷணத்தால் சாதித்தது பெரியபிராட்டியைப் பற்றியே அன்று என்று ஐயுற வேண்டாதபடி 'நப்பின்னை நங்காய் ! திருவே!' என்று அருளிச் செய்யப் பெற்றது. இவளையும் திருவின் அம்சபூதையாகக் கொள்ள வேண்டும் என்பது குறிப்பு.

18. ஸ்ரீவச.பூஷ–14 (புருஷோத்தம நாயுடு பதிப்பு)

# 12. வீடு பேற்றிற்குரிய வழிகள்

வீடு பேற்றிற்கு, அதாவது முக்திக்கு அநுட்டிக்கப் பெறுவதை 'இதம்' அல்லது 'வழி' என்று வழங்குவர். சமயநூல்களில் முத்தி நிலையை அவாவி நிற்பவர்கள் 'முமுட்சுகள்' என்று வழங்கப்பெறுவர். வைணவ சமயத்தில் முத்தியை அடைவதற்கு சித்தோபாயம், 'சாத்தியோபாயம்' என்ற இருநெறிகள் உண்டு.

*1. சித்தோபாயம் :* 'சித்தோபாயம்' என்பது முன்னமே இருக்கும் உபாயம், அஃதாவது இறைவனாகிய உபாயம். இதனை வேதாந்த தேசிகர்,

> **மன்னும் அனைத்துற வாய்மருள்**
> **மாற்றருள் ஆழியுமாய்த்**
> **தன்னினை வால்அனைத் துந்தரித்(து)**
> **ஓங்கும் தனிஇறையாய்**
> **இன்னமு தத்தமு தால்இரங்**
> **குந்திரு நாரணனே**
> **மன்னிய வன்சரண் மற்றோர்பற்**
> **றின்றி வரிப்பவர்க்கே**[1]

*[மருள்-அஞ்ஞானம்; அருள்- கருணை; ஆழி-கடல்; தரித்து - தாங்கி; இன்னமுதத்து அமுது - இலக்குமி; பற்று-உபாயம்; வரிப்பவர் - சரணம் அடைபவர்; வன் சரண்-சித்தோபாயம்.]*

---

1. தே.பி.–69

என்று குறிப்பிடுவர். ''ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே நமக்கு எல்லா வித உறவினன்; நம் அஞ்ஞானத்தை ஒழிக்க கூடிய கருணைக் கடல்; தனது சங்கற்பத்தாலே அனைத்தையும் தாங்கி நிகரற்று நிற்பவன்; பெரிய பிராட்டியார் நமக்குப்புருஷ காரமாய்[2] நின்று பரிந்து பேச, நம்மிடம் பின்னும் கருணை வளரப் பெற்றவன். இத்தகைய எம்பெருமான் வேறு உபாயத்தைக் கடைப்பிடிக்க ஆற்றல் இல்லாது பிரபத்தியை[3] அநுட்டிப்பவர்கட்கு மற்ற உபாயத்தின் இடத்தில் நின்று பலன் கொடுக்கும் சித்தோ பாயமாகின்றான்'' என்பது இதன் பொருள்.

இந்த நெறி ஆழ்வார் பாசுரங்களில் ஆங்காங்கு காணப்பெறுகின்றது.

> **வீடாக்கும் பெற்றி**
> **அறியாது மெய்வருத்திக்**
> **கூடாக்கி நின்றுண்டு**
> **கொண்டுழல்வீர்!— வீடாக்கும்**
> **மெய்ப்பொருள்தான் வேத**
> **முதற்பொருள்தான் விண்ணவர்க்கு**
> **நற்பொருள்தான் நாரா**
> **யணன்.** *(நான். திருவந். 13)*

[வீடு-மோட்சம்; பெற்றி - உபாயம்; கூடு-எலும்புக்கூடு; மெய்ப்பொருள்-இறைவன்; விண்ணவர்- நித்தியசூரிகள்]

என்ற பாசுரத்தில் திருமழிசைபிரான் எம்பெருமானைச் சித்தோபாயமாக காட்டுவதை அறியலாம். பரமபத நாதனையே

2. புருஷகாரமாய்—தகவுரைதருபவளாய்
3. பிரபத்தி—சரணாகதி.

*சரணமடைந்து உய்ந்துபோகலாம் என்று குறிப்பிடுவதையும் உணரலாம். இதே ஆழ்வார் பிறிதோர் இடத்தில்,*

**அடைக்கலம் புகுந்த என்னை**
**'அஞ்சல்' என்ன வேண்டுமே** *(திருச்சந்த-92)*

*என்று அருளிச்செய்துள்ளதையும் உணரலாம்.இதிலும் எம்பெருமான் சித்தோபாயமாகவே கருதப்பெறுகின்றான் என்பதையும் தெளியலாம்.*

*திருமங்கையாழ்வாரும்,*

**"நள்ளேன் உன்னை யல்லால்**
**நறையூர் நின்ற நம்பீயோ!"** *(பெரி. திரு7.2:1)*

*என்ற பாசுரஅடியில் சித்தோபாயத்தில் தன் ஊற்றத்தை வெளியிடுகின்றார், இன்னொரு பாசுரத்திலும் இவர்,*

**வேங்கடத்து அரியைப் பரிகீறியை**
**வெண்ணெய்உண்டு உரலிடை ஆப்புண்ட**
**தீங்கரும்பினை, தேனை, நன்பாலினை,**
**அன்றிஎன்மனம் சிந்தைசெய் யாதே** *(பெரி திரு. 7.3;5)*

*என்று எம்பெருமானையே சித்தோபாயமாகக் கொண்டிருப் பதைக் காணலாம்.*

*நம்மாழ்வாரும் ஒரு பாசுரத்தில் இந்த உபாயத்தை,*

பொருசிறைப் புள்ளைக் கடாவிய மாயனை
ஆயனை, பொன்சக் கரத்து
அரியினை அச்சுத னைப்பற்றி யான்இறை
யேனும் இடரிலனே *(திருவாய். 3.10;4)*

*[புள்-கருடன்; இறை- சிறிது; இடர்-துன்பம்]*

என்ற பாசுரப்பகுதியில் எம்பெருமானைச் சித்தோபாயமாகப் பற்றிப் பயன்பெற்றதைக் குறிப்பிட்டிருப்பதைக் கண்டு மகிழலாம்.

நாயக-நாயகி பாவனையில் வரும் மகள்பாசுரங்களில் இந்தச் சித்தோபாயம் சிறப்புற்று ஓங்கியிருப்பதைக் கண்டு களிக்கலாம். பெற்றோர், அல்லது உறவினர் கூட்டக் கூடுகை யின்றியே தலைவனுடன் தானாகவே இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைவனுடைய ஒப்புயர்வற்ற வனப்பு முதலியவற்றில் ஈடுபட்டு இருப்பவள் மகள். குடியின் கட்டுப்பாட்டையும் பாராமல் ‘அவனைக் கிட்டி அல்லது நான் உயிர் வாழ்ந்திருக்க மாட்டேன்’, என்ற பதற்றத்தை உடையவள் இவள்; காலக் கழிவினை இவளால் பொறுக்க முடிவதில்லை. திருமந்திரத்தில் பிரணவத்தாலும். நமஸ்ஸாலும் எல்லோருக்கு சேஷி (தலைவன்) என்றும், சரண்யன் (பாதுகாப்பவன்) என்றும் அறுதியிடப்பெற்றவன் எம்பெருமான்; எல்லோருக்கும் புகலிடமாக இருப்பவனும் அவனே. பிரணவத்தாலும், நமஸ்ஸாலும் இவை உணரப்பெற்றபின்பு ‘நாராயண’ என்ற சொல்லினால் உறுதிப்பெற்றுள்ள எம்பெருமானுடைய சொரூபம் (இயல்பு) உருவம், குணம், விபூதி முதலியவற்றின் சேர்க்கை யாலுள்ள பெருமையை நினைந்து மகிழ்ந்திருப்பவள் இவள். எம்பெருமான் சாத்தியோபாயமாக இருந்தால் தான் செய்யும் சாதனங்கள் முடிவுற்ற பிறகே சாத்தியமாகின்ற பேறு கிடைக்கக்கூடும் என்று பொறுத்திருக்கலாம். ஆனால் அவன் சித்தோபாயமாக இருப்பவன்; ஆதலால் அவனைத் தாமதித்து அநுபவிக்கக் காரணம் இல்லை; ‘அவனே உபாயம்’ என்ற கோட்பாட்டையும் மீறித் தான் நினைத்த பேற்றினை உடனே பெற வேண்டுமென்று பதற்றத்தையுடையவளாக இருக்கின்றாள்.

*ஆண்டாள் பாசுரங்களில் இந்நிலையைக் காணலாம். கண்ணன் இருக்கும் இடத்திற்கு தன்னைக் கொண்டு உய்க்குமாறு வேண்டும். (நாச். திரு. 12) பதற்றத்தை,*

**மதுரைப் புறத்து**
**என்னை உய்த்திடுமின் (1),**

**ஆய்ப் பாடிக்கே**
**என்னை உய்த்திடுமின் (2)**

**நந்த கோபாலன்**
**கடைத் தலைக்கே**
**நள் இருட் கண்**
**என்னை உய்த்திடுமின் (3)**

**யமுனைக் கரைக்கு**
**என்னை உய்த்திடுமின் (4)**

**துவரா பதிக்கு**
**என்னை உய்த்திடுமின் (9)**

*என்ற பாசுரங்களின் அடிகளில் கண்டு மகிழலாம். பராங்குச நாயகி (நம்மாழ்வார்) உருவெளிப்பாடு கண்டு பேசும்,*

என்நெஞ்சினால் நோக்கிக் காணீர்
என்னை முனியாதே;
தென்னன் சோலைத் திருக்குறுங்குடி
நம்பியைநான் கண்டபின்
மின்னும் நூலும் குண்டலமும்,
மார்வில் திருமறுவும்,
மன்னு பூணும் நான்குதோளும்
வந்துஎங்கும் நின்றிடுமே. *(திருவாய் 5.5;2)*

என்ற பாசுரத்தில் தன் பதற்ற நிலையைப் புலப்படுத்துகின்றாள்.

தலைவன் இருக்கும் இடத்தில் தன்னைக் கொண்டு சேர்க்குமாறு தலைவி தாயாரையும் தோழியையும் வேண்டு கின்றாள் பரகால நாயகி (திருமங்கையாழ்வார்).

**தவளஇ ளம்பிறை துள்ளும்முந்நீர்த்**
**தண்மலர்த் தென்றலோடு, அன்றில்ஒன்றி;**
**துவளஎன் நெஞ்சகம், சோரஈரும்;**
**சூழ்பனி நான்துயி லாதிருப்பேன்;**
**இவளும் ஓர் பெண்கொடி என்று இரங்கார்;**
**என்நலம் ஐந்துமுன் கொண்டுபோன**
**குவளை மலர்நிற வண்ணர்மன்னு**
**குறுங்குடிக் கேஎன்னை உய்த்திடுமின்**

- பெரி. திரு. 9.5;1

[தவள-வெண்ணிறமான; முந்நீர்-கடல்]

இப்பாசுரத்திலும், இதனைத் தொடர்ந்து வரும் பாசுரங்களிலும் ஆழ்வார் நாயகியின் சித்தோபாய ஊற்றத்தைக் காணலாம்.

**2. சாத்யோபாயம்**' என்பது நம்மால் மேற்கொள்ளப் பெறும் உபாயமாகும். இது பக்தி என்றும், பிரபத்தி என்றும் சாத்திரங்களில் இருவகையாகப் பேசப்பெறும்.

**(i) பக்திநெறி :** பேரன்பின் முதர்ச்சியே பக்தி என்பது. பக்தியை மேற்கொண்டார் பக்தர்- பத்தர் எனப்படுவர். பத்தரெனினும் பித்தர் எனினும் ஒன்றேயாகும். உலகில் நோயால் கொள்ளும் பித்தும், மருளால் கொள்ளும் பித்தும் துன்பம் தருவன. அருளால் கொள்ளும் பித்து அளவிலா

*இன்பம் தருவது. "பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்"*[4] என்ற *சுந்தரமூர்த்தி அடிகளின் திருவாக்காலும் பக்தர்களின் மேம்பாட்டினை உணரலாகும். குலசேகரப் பெருமாளும் "பேதைமா மணவாளன் தன் பித்தனே" (பெருதிரு. 3:5)*"எம்பிரானுக்கு எழுமையும் பித்தனே" *(3:6) "பித்தனாய் ஒழிந்தேன்" (3:7) "பேயனாய் ஒழிந்தேன் எம் பிரானுக்கே" (3:8)* என்ற அவர்தம் வாக்குகளால் தம்மைப் *'பித்தன்'* என்றும், *'பேயன்'* என்றும் கூறிக் கொள்வதனால் இதனை மேலும் தெளிவு பெறலாம். இந்தப் பக்தி நிலையை *மெய்விளக்க அறிஞர்கள் 'பக்தியோகம்' என்று வழங்கி அதனை எட்டு அங்கங்களாக முறைப்படுத்தி வகுத்துக் காட்டுவர்.* இதனை,

**எமநியம ஆசனங்கள்**
**இயல்ஆவி புலனடக்கம்**
**தமதறியும் தாரணைகள்**
**தாரையறா நினைவொழுக்கம்**
**சமமுடைய சமாதிநலம்**
**சாதிப்பார்க்கு இலக்குஆகும்**
**அமரர்தொழும் அத்திகிரி**
**அம்புயத்தாள் ஆரமுதே.**[5]

*[தாரை அறா- இடைவிடாத; சாதித்தல் - அநுட்டித்தல்; அம்புயத்தாள் - பெரிய பிராட்டியார்; ஆர் அமுது - அருளாளன்]*

என்று விளக்குவர் வேதாந்த தேசிகர்.

---

**4. தேவாரம் 7.39;10**

**5. தே.பி. 254**

இதில் நுவலப்பெற்றுள்ள எட்டு அங்கங்கள்; (1) இயமம் என்பது அகிம்சை, சத்தியம், திருடாமை, காமத்தை அடக்குதல், பொருளைச் சேர்க்க முற்படாமை ஆகிய நிலை; (2) நியமம் என்பது தூய்மை, உள்ளதைக்கொண்டு மனநிறைவு பெறுதல், வேதாந்த பரிசயம் செய்தல், எல்லாச் செயல்களையும் இறைவனிடம் சமர்ப்பித்தல்; (3) ஆசனம் என்பது, பதுமாசனம் முதலிய ஆசனங்கள்; (4) பிராணாயாமம் என்பது, மூச்சை அடக்குதல் (5) பிரத்தியாகாரம் என்பது புலன்களை உலக விஷயங்களின்றும் திருப்புதல்; (6) தாரணை என்பது, பகவானுடைய திருமேனியை மனத்திற்கொள்ளுதல்; (7) தியானம் என்பது, இடைவிடாது இறைவனை நினைத்தல்; (8) சமாதி என்பது, இறைவனை நேரிற் கண்டாற்போன்ற நிலையினை அடைதல். இந்த எட்டு அங்கங்களையுடைய பக்திநெறிவழி ஒழுகுவார்க்குப் பிராட்டியாருக்கு ஆராஅமுதமாக இருக்கும் எம்பெருமான் குறிப்பொருளாகி வீடுபேற்றை அளிப்பான்.

இந்தப் பக்திநெறி ஆழ்வார் பாசுரங்களில் ஆங்காங்கு குறிப்பிடப்பெற்றுள்ளன. நாலாயிரத்தை ஓதுவார் இதனை நன்கு அறிவர்.

**அறிந்துஐந்தும் உள்ளடக்கி,**
**ஆய்மலர் கொண்(டு),ஆர்வம்**
**செறிந்த மனத்தராய்ச்**
**செவ்வே –அறிந்து அவன்தன்**
**பேர்ஓதி ஏத்தும்**
**பெருந்தவத்தோர் காண்பரே**
**கார்ஓத வண்ணன்**
**கழல்.** *(இரண். திருவந்.6)*

*[ஐந்தும் - ஐம்புலன்கள்; ஆர்வம்- பக்தி; செவ்வே - நன்றாக; கார்ஓத வண்ணனை -கருங்கடல் நிறத்தினனை]*

*என்ற பூதத்தாழ்வாரின் பாசுரத்தில் பக்திநெறியைக் காணலாம். விஷ்ணுவை என்றும் தன் சித்தத்தில் வைத்திருக்கும் 'விஷ்ணு சித்தர்' என்ற பெரியாழ்வாரின்,*

**மார்வம் என்பதோர் கோயில் அமைத்து**
**மாதவன் என்னும் தெய்வத்தை நாட்டி**
**ஆர்வம் என்பதோர் பூஇட வல்லார்க்கு**
**அரவ தண்டத்தில் உய்யலும் ஆமே.**

*-பெரியாழ் திரு 4.5:3*

*[மார்வம் -இதயம்; ஆர்வம்- பக்தி; அரவதண்டம் - யமதூதர்களால் வரும் துன்பம்]*

*என்ற பாசுரப்பகுதியில் இந்நெறியினைக் காணலாம்.*

**பூசும் சாந்து என்நெஞ்சமே;**
**புனையும் கண்ணி எனதுடைய**
**வாச கம்செய்ய மாலையே;**
**வான்பட்டாடையும் அஃதே;**
**தேசம் ஆன அணிகலனும்**
**என்கை கூப்பும் செய்கையே'** *(திருவாய் 4.3;2).*

*[சாந்து-சந்தனம்; கண்ணி - மாலை]*

*என்ற நம்மாழ்வாரின் திருவாய்மொழியில் அவருடைய பக்தி நிலையைக் கண்டு அநுபவிக்கலாம்.*

*மெய்விளக்க அறிஞர்கள் இப்பக்திநெறி கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் என்று மூன்று நிலைகளில் பயிற்சி அடையவேண்டிய நெறி என்றும் கூறுவர்.*

**(அ). கர்மயோகம் :** சாத்திரங்களைப் பயின்ற அறிவினால் சில சடங்குகளையும் கடமைகளையும் தவறாது செய்தல் வேண்டும். இவற்றுள் நித்தியகர்மங்களும் நைமித்திகக் கடமைகளும் அடங்கும். நித்திய கர்மங்கள் என்பன சந்தியாவந்தனம், பகவதாராதனம் போன்று நாடோறும் செய்யப் பெறுபவை; நைமித்திகக் கடமைகள் என்பன கிரகணம், கார்த்திகை, சங்கராந்தி, ஆவணிஅவிட்டம், போன்ற விசேட நாட்களில் மேற்கொள்ளப்பெறும் கடமைகளாகும். இறைவனை ஏத்தல், திருத்தலப்பயணத்தை மேற்கொள்ளல், அறம்புரிதல் போன்றவை யாவும் கர்மயோகத்தில் அடங்கும். யாதொரு பலனையும் எதிர்பாராது செய்யப்பெறும் கருமத்தில் மனம் தூய்மையுறுகின்றது. இஃது ஆன்மா தியானத்தில் அழுந்த வழியாகவும் அமைகின்றது.

**பரிவது இல் ஈசனைப் பாடி**
**விரிவது மேவல் உறுவீர்!**
**பிரிவகை இன்றிநல் நீர்தூய்**
**புரிவ துவும்புகை பூவே. (1.6:1)**

என்ற திருவாய்மொழிப் பாசுரதத்தில் பலனை எதிர்பாராது இறைவனுக்குச் செய்யப்பெறும். கருமம் கூறப்பெறுகின்றது.

இறைவன் ஆராதனைக்கு எளியவன் என்பதும் இதனால் பெறப்படுகின்றது. எளியவனாயிருப்பதுடன் ஆராதிப்பார்க்கு இனியனாகவும் இருக்கின்றான் இறைவன் என்பதை,

**ஆயர் கொழுந்தாய் அவரால் புடையுண்ணும்**
**மாயப் பிரானைஎன் மாணிக்கச் சோதியை,**
**தூய அமுதைப் பருகிப் பருகிஎன்**
**மாயப் பிறவி மயர்வு அறுத்தேனே (1.7:3)**

[ஆயர் - இடையர்; மயர்வு - அஞ்ஞானம்]

என்ற திருவாய்மொழிப் பாசுரத்தால் தெரிவிக்கின்றார் ஆழ்வார். இக்கருமயோகத்தினால்தன்னை மறத்தல், மனத்தைக் கட்டுப்படுத்தல், ஆன்மாநுபவம்பெறல் போன்ற நிலைகள் ஏற்பட்டு சமுசாரத்தில் ஆழ்ந்திருக்கும் ஆன்மா துய்மை யுறுகின்றது.

**(ஆ). ஞானயோகம் :** கருமயோகத்திற்கு அடுத்த நிலை இது. இந்த நிலையை,

> **ஞானத்தால் நன்குணர்ந்து**
> **நாரணன்தன் நாமங்கள்**
> **தானத்தால் மற்றுஅவன்பேர்**
> **சாற்றினால், வானத்து**
> **அணிஅமரர் ஆக்குவிக்கும்** *(இரண்-திருவந்2)*

[தானம்-அன்பின் முடிவெல்லையானஇடம்; சாற்றினால் - அநுசந்தித்தால்; அணி அமரர்-நித்தியசூரிகள்]

என்பது பூதத்தாரின் திருவுள்ளக்குறிப்பு. கருமயோகத்தில் தூய்மை அடைந்த ஆன்மா இந்நிலையில் தியானத்தில் ஆழ்கின்றது. முன்னர்க்குறிப்பிட்ட இயமம், நியமம் போன்ற செயல்களால் ஆன்மா அமைதி நிலையை நாடுகின்றது. அலைந்து திரியும் மனத்தை அங்ஙனம் அலையவிடாமல் நிலைநிறுத்தும் நிலை ஏற்படுகின்றது. அதாவது, மெய்விளக்க அறிஞர்கள் குறிப்பிடும் கைவல்யநிலை (ஆன்மாநுபவம்) உண்டாகின்றது. இந்த யோகத்தினால் தன் ஆன்மா இன்னது என்று தனக்குப் புலனாவதுபோல எல்லாச் சீவர்களிடமும் ஆன்மா என்று ஒன்று இருப்பது தட்டுப்படுகின்றது. எல்லா ஆன்மாக்களும் சமம் என்ற உண்மையும் பளிச்சிடுகின்றது.

தியானத்தின்மூலம் ஆன்மா தன் உண்மை நிலையை உணர்ந்து தான் இறைவனைச் சார்ந்திருக்கும் நிலையை அடைகின்றது. அதன்பிறகு அஃது இறைவனை அடைய அவாக்கொள் ளுகின்றது.

**கையபொன் ஆழிவெண் சங்கொடும்**
**காண்பான் அவாவுவன்நான்**
**மையவண்ணா!மணியே! முத்தமே!**
**என்றன் மாணிக்கமே!** *(திரு விருத்.84)*

[கைய - கைகளிலுள்ள; மைய - மையுடைய நிறம்]

என்ற பாசுரத்தில் பராங்குசநாயகி எம்பெருமானாகிய நாயகனைக் காண விரைகின்றாள். தனிமையில் கண்டு கூடிக் குலவி இன்புற வாய்ப்பில்லையாயினும், ஆடவரும் மகளிரும் பலர் கூடிய கூட்டத்திலாயினும் காணப்பெற்றாலும் அது கொண்டு ஆறியிருப்பதாகச் சொல்லுகின்றாள். நாயகனையே இடைவிடாது நினைத்துக் கொண்டிருந்து அந்நினைப்பு மிகுதியால் அவன் எதிரில் நிற்பதாகப் பாவித்து 'மைய வண்ணா, மணியே, முத்தமே, மாணிக்கமே' என்று முன்னிலைப் படுத்திப் பேசுகின்றாள். இன்னொரு பாசுரத்தில் ஆழ்வார் நாயகி " என் ஆசையை அடக்கமாட்டாமல் வினையொடும் எம்மொடும் நொந்து, கனியின்மையின் கருக்காய் கடிப்பவர் போல் - திருநாமம் சொல் கற்றனம்" (64) என்கின்றாள். ஈண்டு கனி பகவதநுபத்தாலாகும் இனிய ஆனந்தத்திற்கு உவமை; கட்டிளமைத்தாய் நுகரும் செவ்வியல்லாததாய் அவ்வளவு இனியதல்லாத நமோச்சரண மாத்திரத்திற்கு உவமை. காயின் முதிர்ச்சி கனியாதல்போல், நமோச்சரணத்தின் பயன் அநுபவாநந்தமாகும் என்பது உவமையால் உய்த்துணர

வேண்டியதாகும் என்பதை அறிதல் வேண்டும். இந்த அவா படிப்படியாக வளர்ந்து பேருருவம் கொள்வதை அவர்தம் பாசுரங்களால் (திருவாசிரியம் 2; பெரிய திருவந். 8; திருவாய். 7.3:6, 8.3: 4;8;10.3.2;10.10:10) அறிகின்றோம். இந்நிலையில் ஆன்மா தியானத்தில் அழுந்துகின்றது. இந்த உயர் நிலையில் எல்லா உயிர்களிடையேயும் ஊடுருவி நிற்கும் பரமான்மாவின் சாயல் தோன்றுகின்றது. இது திடீரென்று தோன்றி மறையும் நிலையாகும்.

**(இ). பக்தியோகம் :** ஞானயோகத்துக்கு அடுத்த நிலையே பக்தியோகம் என்பது. இந்த நிலையிலும் தியான நிலை உண்டு இந்த தியான நிலையில்தான் ஆன்மா தனக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பினை அறிகின்றது. இது ஞானநிலையின் இறுதிப்படியும் பக்தி நிலையின் முதற்படியும் ஆகும்.

> **உய்த்துணர்வு என்னும்**
> **ஒளிகொள் விளக்கேற்றி**
> **வைத்து அவனை**
> **நாடி வலைப்படுத்தேன்** (மூன்- திருவந்94)

என்ற பேயாழ்வாரின் பாசுரத்தில் இந்த நிலையினை அறியலாம். ஞானமே பக்தி நிலையாக முதிர்கின்றது. இதுவே "ஞானம் கனிந்த நலம்" (இராமாநு. நூற். 66) என்று அமுதனார் குறிப்பிடுவது. இந்த நிலையில் முமுட்சுகள் தம் முனைப்பை அகற்றி இறைவனுடைய சங்கற்பத்துக்கு அடிபணிந்து இறைவனுடன் நிரந்தரத்தொடர்பு கொள்வதற்குத் தயாரா கின்றனர். இந்த நிலையில்தான் தமக்கும் இறைவனுக்கும் அறுபடாத தைலதாரைபோன்ற தொடர்பு ஏற்படுகின்றது. நாளாக நாளாக இந்நிலையில் ஒரு புதிய ஆற்றல்

தோன்றுகின்றது. வானநூல் அறிஞர் பூமியின் சிறுமையையும், அதனை ஈர்த்து நிற்கும் கதிரவனின் பெருமையையும் உணர்வதுபோல் பக்தர்களும் சமுசாரத்தில் உழலும் தம் ஆன்மாவின் சிறுமையையும் எல்லா உயிர்களையும், புரக்கும் இறைவனின் பெருமையையும் உணர்கின்றனர். இந்நிலையில் சீவான்மா பரமான்மாவுடன் கலக்கின்றது. அப்பொழுது அது கடலில் கிடக்கும் கடற்பஞ்சு போன்ற நிலையினை அடைகின்றது.

**(ஈ). பக்தி நிலையின் பிரிவுகள் :** இந்த பக்தி நிலையையும் 'பரபக்தி, பரஞானம், பரமபக்தி' என்ற பிரிவுகளாக வேறுபடுத்திக் காட்டும் மரபும் உண்டு. இந்த நிலையை ஆழ்வார் பாசுரங்களில் ஆங்காங்குக் காணலாம். பரபக்தி என்பது எம்பெருமானை நேரில் காணவேண்டும் என்கின்ற ஆவல் : அவனை நேரில் காணல். பரஞானம் : பின்பு மேன்மேலும் இடையறாது அநுபவிக்க வேண்டும் என்னும் ஆவல் பரமபக்தி என்பதை அறிதல் வேண்டும். மற்றொரு விதமாகவும் பண்டைய ஆசிரியர்கள் இவற்றை விளக்குவர், எம்பெருமானோடு கலந்த போது சகிக்கும்படியாகவும், பிரிந்தபோது துக்கிக்கும்படியாகவும் இருக்கும் நிலை 'பரபக்தி'; எம்பெருமானுடைய முழு நிறைவு நேர்காட்சி 'பரஞானம்'; அவனுடைய அநுபவம் பெறாவிடில் நீரைவிட்டுப் பிரிந்த மீன்போல் மூச்சு அடங்கும்படி இருத்தல் 'பரம பக்தி' என்று விளக்கம் தருவர் அவர்கள்.

இம் மூன்றுநிலைகட்கும் முறையே பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார். ஆகிய மூன்று பெருமக்கள் எடுத்துக்காட்டுகளாகத் திகழ்கின்றனர். ஆயினும் இம் மூன்று நிலைகளும் இம் மூவர்க்கும் தனித்தனியே குறைவின்றி

இருக்குமாயினும் ஒவ்வொரு நிலையும் ஒவ்வொருவரிடை யேயும் தலையெடுத்து மற்றவை அடங்கியிருக்கும். பொய்கை யாழ்வாருக்குப் பரஞானம் பரமபக்திகளின் சாயை மாத்திரம் தோன்றி பரபக்தியே விஞ்சியிருக்கும். பூதத்தாழ்வாருக்குப் பரபக்தி முற்றிப் பக்குவமாகி பரமபக்தித் தோன்றக் காரணமான பரஞானமே விஞ்சியிருக்கும். பேயாழ்வாருக்குப் பரமபக்தியே விஞ்சிப் பரபக்தி பரஞானம் ஆகிய இரண்டும் அதற்குள்ளயே மறைந்து கிடக்கும். இம் மூவருடைய அருளிச்செயல்களினின்றும் இந்த நிலைகளைக் கண்டறிந்து தாம் கண்டவற்றை இவ்வாறு வகுத்தருளினர். இங்ஙனம் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்றின் ஒளியும் மற்றவைகளின் ஒளியின்மையும் எம்பெருமானுடைய சங்கற்பத்தினால் உண்டானவை என்பது இவர்தம் உள்ளக்கிடக்கையாகும். ஆகவே, இதில் எவ்வகையான மறுப்புக்கும் இடம் இல்லை. இந்த மூன்று நிலைகளும் முத்தியிலே உண்டாகக் கூடியவை யேயாயினும் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கட்கு மாத்திரம் இங்கிருக்கும்போதே எம்பெருமானுடைய திருவருளால் விளைந்தனவாகும். இனி,இவற்றை எம்பெருமானிடம் வேண்டிப் பெறுதலும் உண்டு.

பொய்கையார் "வையம் தகளி" என்றும், பூதத்தார் "அன்பே தகளி" என்றும் இரண்டு திருவிளக்குகள் ஏற்றிக் காட்டினர். அந்த ஒளியில் பேயார் 'கண்டேன், கண்டேன்' என்று களிப்புடன் பேசுகின்றார்.

> "மன்னிய பேரிருள் மாண்டபின் கோவலுள் மாமலராள்,
> தன்னொடும் மாயனைக் கண்டமைகாட்டும் தமிழ்த் தலைவன்"[6]

6. இராமா.நூற்–10

ஆன்றோ இவர்? ஒவ்வொரு திருவந்தாதியிலும் முதற் பாசுரத்தின் உள்ளீடான பொருளை ஆதாரமாகக் கொண்டு பூருவர்கள் சுவையாக நிர்வகித்தமை இது ; "எம்பெருமானை உபய விபூதிக்கும் உரியவன் என்றார் பொய்கையார்; அவன் 'நாராயண' ஒலியின்பொருள் என்றார் பூதத்தார்; நாராயண ஒலியுடன் 'திரு' (ஸ்ரீ)என்ற பதத்தைக் கூட்டிக் கொள்ள வேண்டும் என்றார் பேயார்."

இங்ஙனம் ஒவ்வொரு ஆழ்வார் செய்த உதவியை வேதாந்த தேசிகர்,

பாட்டுக்கு உரிய பழைய
மூவரைப் பண்டொருகால்
மாட்டுக்கு அருள்தரும் மாயன்
மலிந்து வருத்துதலால்
நாட்டுக்கு இருள்செக நான்மறை
அந்தி நடைவிளங்க
வீட்டுக்கு இடைக்கழிக் கேவெளி
காட்டும் மெய்விளக்கே[7]

[பழையவர் - முதலாழ்வார்கள்; மாடு-செல்வம்; மலிந்து - அதிகமாக; நாடு - உலகம்; இருள்-அஞ்ஞானம்; வீடு - திருக்கோவலூரில் உள்ள வீடு; மெய்விளக்கு- மூன்று அந்தாதிகள்]

என்று சிறப்பித்துப் பேசுவர். எம்பெருமான் முதலாழ்வார் களைக்கொண்டு மூன்று திருவந்தாதிகளைப் பாடுவித்து உலகிலுள்ள அஞ்ஞான இருளைப் போக்கிப் பக்தி, பிரபத்திகளாகின்ற உபாயங்களை வெளியிட்டு உலகினை

7. தே.பி.–89

உய்வித்தான் என்பதைப் பாசுரத்தின்மூலம் விளக்குகின்றார் தூப்புல் புலவர் தேசிகர்.

(ii). **பிரபத்திநெறி:** உயர்ந்தோர் தாழ்ந்தோர், கற்றவர், கல்லாதவர் என்ற வேறுபாடின்றி எல்லோராலும் மேற் கொள்ளக்கூடிய நெறியே பிரபத்தி நெறியாகும்.[8] இந்தநெறி சரணாகதி '**பரந்யாசம்**' '**பரசமர்ப்பணம்**' "உபாயாநுஷ்டானம்" என்ற பெயர்களாலும் வழங்கப்பெறும். சர்வஇரட்சகனான எம்பெருமானின் கருணையின்மீது பெரு நம்பிக்கை கொள்வதே இந்நெறியைக் கடைப்பிடிப்போரிடம் வேண்டப் பெறுவது. பகவத்கீதையில் சரமசுலோகத்தில், பேசப்பெறு வதும் இந்நெறியேயாகும். மணிவாசகப்பெருமானும் இச் செந்நெறியைக்குறிப்பிடுகின்றார் (திருவா. அடைக்கலப் பத்து).

இப்பிரபத்திநெறியில் ஐந்து அங்கங்கள் இருப்பதைக் காட்டுவர் ஆசாரியப் பெருமக்கள், முதலாவது **ஆநுகூல்ய சங்கற்பம்** என்பது. இது எம்பெருமான் திருவுள்ளத்திற்கு உகந்தவற்றைச்செய்வதாக உறுதிகொள்ளலாகும். இரண்டாவது **பிராதிகூல்யவர்ஜனம்** என்பது. அவன் திருவுள்ளத்திற்குப் பொருந்தாதவற்றைச் செய்யாதிருக்க உறுதிகொள்ளல்; அல்லது அவற்றைச் செய்யாது விடுதலாகும் இது. மூன்றாவது **மகாவிசுவாசம்** என்பது. அவன் நம்மைக் காக்கவல்லவன் என்று தேறி, தவறாது நம்மைக் காப்பான் என்று உறுதியாக நம்புதலாகும் இது. நான்காவது **கோபத்ருவரணம்** என்பது,

8. பிரபத்தி–சரண் அடைதல்; பிர–சிறப்பது. செல்லல்,அடைதல்; பிரபத்தி – சிறப்பாக அடைதல். சிறப்பாவது – மனத்தால் அடைதல், இதுசரண் அடைதல் எனப் பொருள்படும்.
9. கீதை–18:66

பக்தியோகம் முதலிய உபாயங்களை அநுட்டிக்க ஆற்றலற்ற தம்மிடம் அருள்புரிந்து அவ்வுபாயங்களிடத்தில் நின்று பலன் தருமாறு அவனை வேண்டுதல் இதுவாகும். ஐந்தாவது **கார்ப்பண்யம்** என்பது. பக்தியோகம் முதலிய உபாயங்களில் தமக்கு அதிகாரம் இல்லாமையையும், எம்பெருமானைத் தவிர வேறு தெய்வத்தினிடமோ, வீடுபேற்றைத் தவிர வேறு பலனிலோ பற்றில்லாமையை அநுசந்தித்தல்; அவனது இவ்வநுசந்தாநத்தால் முன் தமக்கு இருந்த முனைப்பு ஒழியப் பெறுதல்; அல்லது எம்பெருமானின் கருணை தம்மீது வளர்ந்தோங்கும்படி தாழ்ந்து நின்று அஞ்சலி[10] முதலியவற்றைச் செய்தல் இது.

**(அ). எந்தவித நியமும் இல்லை:** இந்நெறியைக் கண்ணன் போர்க்களத்தில் பார்த்தனுக்கு உபதேசித்தமையால், இந்த நெறிக்கு தேச நியமம், காலநியமம் முதலியவரையறை இல்லை என்பது தெளிவு. ஸ்ரீவசன பூஷணமும்,

> **'பிரபத்திக்கு தேச நியமும் கால நியமும் பிரகார நியமும் அதிகாரிநியமமும் பல நியமும் இல்லை' (24)**

என்று குறிப்பிடுவது இக் கருத்தை அரண் செய்வதாக அமைகின்றது.

தேச நியமமாவது, தூய இடங்களில்தான் (புண்ணிய தலங்களில் தான்) செய்யவேண்டும், ஏனைய இடங்களில் செய்யலாகாது என்பது; காலநியமமாவது, வேனிற்காலம் முதலான காலங்களில்தான் செய்யவேண்டும், ஏனைய இடங்களில் செய்தலாகாது என்பது; பிரகாரநியமமாவது,

10. அஞ்சலி – கைகளைக் கூப்புதல். அம் + ஜலயதி – அஜ்ஜலி. எம்பெருமானை நீர்ப்பண்டமாக உருகச் செய்தலால் இதற்கு இப்பெயர் வந்தது. இஃது ஓர் அடையாளமாகும்.

நீராடல் கால் கழுவுதல் என்பன போன்றவற்றை முன்னதாகச் செய்ய வேண்டும், வேறு வகையால் செய்யவொண்ணாது என்பது; அதிகாரி நியமமாவது, முதல் மூன்று வருணத்தார்கள் அல்லாதவர்களாக இருக்கலாகாது என்பது; பல நியமமாவது இம்மை மறுமைப் பயன்களில் இன்னபலத்திற்கு இது சாதனம், மற்றைய பலன்களுக்கு இது சாதனம் அன்று என்பது.

**(ஆ). எடுத்துக்காட்டுகள் :** இரவணனிடத்திலிருந்து வந்த வீடணனைத் தம்முடன் சேர்த்துக் கொள்ள வேண்டா என்று சாம்பவானும், சுக்கிரீவனும் தம் கருத்தினைத் தெரிவித்தனர். இராமன் சிறிய திருவடியை வினவ, அவன் தன் கருத்தைத் தெரிவித்தது இது. "மனத்தூய்மையையுடைய வனான வீடணன் சரணம் என்று வந்த தேசத்திலும் காலத்திலு குறைபார்க்கக்கடவதன்று. அவன் வந்ததுவே தேசமும் அவன் வந்ததுவே காலமும்" என்று சிறிய திருவடி தம் கருத்தைத் தெரிவித்தான். இராமனும் அதனை ஒப்புக்கொண்டான். இதனால் பிரமத்திக்குத்தேச கால நியமங்கள் இல்லை என்பது உறுதியாகின்றது.

இவ்வுலக மக்களுள் ஒருவருக்கு பகவானை அடைய வேண்டும் என்ற "ருசி" உண்டானால், அந்த ருசி தீருவதற்கு முன்பே அது தோன்றின நேரத்திலேயே இறைவனைப் பற்றி விடவேண்டும். இது மந்திர இரத்தினத்தில் முதற்பதமான மதுப்பால் (ஸ்ரீமதே-என்பது) தோன்றுகின்றது என்பதாகக் குறிப்பிடும் ஸ்ரீவசனபூஷணம் (28).

மாதவிலக்காக இருக்கும் திரௌபதியைத் துச்சாதனன் அவைக்கு இழுந்து வருகின்றான். "சேலையும் களைவாய்" என்ற

அண்ணனின் ஆணைக்குப் பணிந்து அதனைச் செய்ய முற்படும் போது "விதியோ கணவரே!!" என்று கூவுகின்றாள் திரௌபதி, "பாண்டவரை மின்செய்கதிர் விழியால் நோக்கினாள்." "வான் சபையிலுள்ள, கேள்வி பல உடையோர் கேடிலா நல்லிசையோர், வேள்வி தவங்கள் மிகப்புரிந்த வேதியர்கள் மேலோர்" இவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. திக்கற்றவருக்குத் தெய்வந்தானே துணை? அந்தப் பேயன் துகிலுரிகையில் திரௌபதி உட்சோதியிற் கலந்தாள். உலகினை மறந்தாள். கண்ணனிடம் பிரபத்தி செய்து விடுகின்றாள். ஒருமையுறுகின்றாள். கண்ணபிரான் அருளால் துச்சாதனன் கழற்றிடக் கழற்றிடத் துணி புதிதாய், வண்ணப் பொற்சேலை களாக வளர்கின்றன. இதனால் பிரபத்தி செய்வார் தூயராய் நின்று பிரபத்தி செய்ய வேண்டும் என்ற நியதி இல்லாமை தெளிவாகின்றது (ஸ்ரீவசபூஷ,29,30).

பார்த்தனுக்குப் பிரபத்தி நெறி போர்க்களத்தில் உபதேசிக்கப்பெற்றது. இதனால் புண்ணிய பூமியில்செய்ய வேண்டும் என்ற நியதி இல்லாது போயிற்று; வேனிற் காலத்தில் செய்ய வேண்டும் என்ற காலநியதியும் இல்லாது போயிற்று, நீராடிய பின்தான் செய்யவேண்டும் என்ற பிரகார நியமும் இல்லாது போயிற்று. நீசர் நடுவே இவ்வர்த்தம் கேட்டதால் தூய்மையின்மையும் விலக்கில்லை என்பது தெளிவாயிற்று. மேலும், இதன்னால் பிரபத்தியைச் செய்யத் தொடங்குகால் தூய்மையில்லாதிருப்பவனுக்கு தூய்மை சம்பாதிக்க வேண்டா; தூய்மையாயிருப்பவனுக்கு தூய்மை இல்லாமையைச் சம்பாதிக்க வேண்டா என்று கூறுவர் பிள்ளை உலகஆசிரியர் (ஸ்ரீவச.பூஷ 31).

தருமன் முதலிய குந்தியின் மக்கள் மூவரும் மாத்ரியின் மக்கள் நகுல சகாதேவர்களும் திரௌபதியோடு சேர்ந்து கண்ணனைச் சரண்புக்கனர். இவர்கள் சத்திரியர்கள். திரௌபதி பெண், இவளும் கண்ணனைச் சரண் அடைந்தாள். காகம் (காகாசுரன்) ஒரு பறவை. அதுவும் இராமபிரானைச் சரண் அடைந்தது. காளியன் ஒரு கொடிய நாகம், அதுவும் கண்ணனிடம் அடைக்கலம் புகுந்தது. கசேந்திரன் என்ற யானை ஒரு விலங்கு; அவனும் நாராயணனைச் சரண் அடைந்தான். வீடணன் அரக்கர் குலத்தவன்; அவனும் காகுத்தனைச் சரண் புக்கான். பெருமாள் (இராமர்) சத்திரியப் பிறப்புடையவர்) அவரும் வருணனைச் சரண் புக்கர். இளையபெருமாள் சத்திரியர்; அவரும் பெருமாளுக்கு அடிமை செய்தார். இங்ஙனமே முசுகுந்தன் (மானிடன்), கத்திரபந்து(சண்டாளன்), காளியன் மனைவிமார்கள், இந்திரன் முதலிய தேவர்கள் இராக்கதர்களால் அடிபட்டவானர வீரர்கள் ஆகியோர் சரண் புரிந்த செயல்களையும் அறியலாம். இதனால் பிரபத்திக்கு "ருசி" யுடையார் அனைவரும் அதிகாரிகளாகின்றனர் என்பதை உளங்கொள்ளல் வேண்டும்.

இதற்குத்தான் பிரபத்தி செய்யவேண்டும் என்ற பல நியமும் இல்லை. தருமபுத்திரர் முதலாயினோருக்கு அரசு அடைதல் பலம்; திரௌபதிக்குப் பலம் ஆடை; காகத்திற்கும் காளியனுக்கும் பலம் உயிர்; கசேந்திரனுக்குப் பலம் கைங்கரியம்; வீடணனுக்குப் பலம் இராமனை அடைதல்; பெருமாளுக்குப் பலம் கடலைத் தாண்டுதல்; இளையபெருமாளுக்குப் பலம் பெருமாளைப் பின் தொடர்ந்து அடிமை செய்தல் (ஸ்ரீவசபூஷ.35, 36). எனவே, பிரபத்திக்குப் பல நியமும் இல்லை என்பது தெளிவாகின்றது.

*பிரபத்திற்கு விஷய நியமமே முக்கியமானது (ஸ்ரீவச பூஷ25,37,38). இன்ன விஷயத்திலே செய்ய வேண்டும் என்ற நியமமே உள்ளது. குணபூர்த்தி உள்ள இடமே விஷயமா கின்றது; இஃது இறைவனுடைய ஐந்து நிலைகளிலும் கண்ணாலே காணலாம்படி இருக்கும் அர்ச்சாவதாரமேயாகும். இங்குத்தான் எல்லா குணங்களும் நிறைந்திருக்கும். பிரபத்திக்கு வேண்டப்படும் வாத்சல்யம், சௌலப்பியம் முதலான குணங்கள் இருட்டறையில் விளக்குப்போல் பிரகாசிப்பது இங்குத்தான் என்பது அறியத்தக்கது. பரமபதத்திலுள்ளாரும் சீலம் முதலிய குணங்களை அநுபவிப்பதற்கு இங்குத்தான் வருகின்றனர். மயர்வற மதிநனம் அருளப்பெற்ற ஆழ்வார் பெருமக்கள் பல இடங்களிலும் இந்த அர்ச்சையில்தான் பிரபத்தி பண்ணினார்கள் என்பது ஈண்டு அறியப்படும்.*

***(இ). ஆழ்வார் பாசுரங்களில் :*** *ஆழ்வார் பாசுரங்களில் இந்நெறியை அறிந்து தெளியலாம். பொய்கையாழ்வார் பாசுரம் ஒன்றில் இந்நெறி குறிப்பிடப் பெறுகின்றது.*

**அடைந்த அருவினையோடு**
**அல்லல்நோய் பாவம்**
**மிடைந்தவை மீண்டொழிய**
**வேண்டில்—நுடங்கிடையை**
**முன்னிலங்கை வைத்தான்**
**முரணழிய முன்னொருநாள்**
**தன்விலங்கை வைத்தான்**
**சரண்** *(முதல், திருவந்; 59)*

*[அடைந்த- பற்றிக்கிடக்கும், தீவினை-பழவினை; அல்லல்-மனத்துன்பம்; பாவம்-இப்போது செய்வது; மிடைந்தவை - ஆன்மாவை மூடிக்கிடப்பவை; மீண்டு -நீங்க; நுடங்கிடை-மெல்லிய இடையயுடைய பிராட்டி]*

என்று, வினை, நோய், பாவம் இவை வாசனையோடு நீங்க வேண்டுமாயின் சக்கரவர்த்தித் திருமகளைச் சரணம் புகுதலேயாகும் என்ற குறிப்பினை இப்பாசுரத்தில் கண்டு தெளியலாம்.

திருமங்கையாழ்வார் நைமிசாரண்யத்து எம்பெருமான் திருவடிக் கமலங்களில் சரண்புகுவதைப் பாசுரங்கள் தோறும் ஒரு முறைக்கு ஒன்பதுமுறையாக 'திருவடி அடைந்தேன்' என்று சொல்லுவதைக் காண்கின்றோம். பிராட்டியை முன்னிட்டுச் சரணாகதி செய்வது சொரூப மாகையால் இவரும்,

**தேன் உடைக் கமலத் திருவினுக்கு அரசே!**

**– – – – – – – – – – – – – – – – – – – – – –**

**நான் உடைத் தவத்தால் திருவடி அடைந்தேன்**
**– பெரி திரு.1.6;9**

என்று பெரிய பிராட்டியார் சம்பந்தத்தை முன்னிட்டுப் பிரபத்தி செய்வதைக் காணலாம். இந்த ஆழ்வார்,

**கூறாஐவர் வந்து குமைக்கக்**
**குடிவிட் டவரை**
**தேறா துன்னஅடைந் தேன்திரு**
**விண்ணகர் மேயவனே! – பெரி. திரு.6.2;7**

[கூறா- பாகமாக; ஐவர்-ஐம்புலன்கள்; குமைக்க-இம்சிக்க; குடிவிட்டவர்- இந்திரியங்கள்; தேறாது-நம்பாமல்]

என்று திருவிண்ணநகரில் சேவை சாதிக்கும் ஒப்பிலியப்பனைச் சரண் அடைந்து முறையிடுவதைக் காணலாம். "படைப்புக் காலத்தில் என் நன்மைக்காக என்னிடத்தில் குடியேறியுள்ள ஐம்புலன்களும் என்னை மிகவும் துன்புறுத்துகின்றன.

அவற்றை நம்பாமல் உன்னைச் சரண் புகுகின்றேன். காத்தருள்க" என்று வேண்டுவதைப் பாசுரத்தில் கண்டு மகிழலாம். இதே ஆழ்வார்,

**கல்தேன் பாய்ந்தொழுகும்**
**கமலச்சுனை வேங்கடவா!**
**அற்றேன் வந்தடைந்தேன்**
**அடியேனையாட் கொண்டருளே – பெரி.திரு. 1.9;9**

[அற்றேன்-உனக்கு அற்றுத் தீர்ந்தேன்]

என்று திருவேங்கடமுடையானையும் சரண் அடைவதைக் காணலாம். இவர் திருக்கண்ணபுரத்துக் கருமணியிடமும் சரண் அடைவதை "அம்மானை, அமுதத்தை....அடியேன் அடைந்து உய்ந்து பிழைத்தேனே" (8.9;2) என்று பாசுர அடியால் அறியலாகும்.

சரணாகதி தத்துவத்தின் தந்தை போன்றவர் பிரபந்நர்களின் தலைவரான நம்மாழ்வார். அவர் தம்முடைய திருவாய் மொழியில் "நம்பெருமான் அடிமேல் சேமங்கொள் தென்குருகூர்ச் சடகோபன்" (5.9:11) என்றும், "கழல்கள் அவையே சரணாகக் கொண்ட குருகூர்ச் சடகோபன்"(5.8:11) என்று அறிமுகப்படுத்திக் கொள்ளுகின்றார். "எனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந் தாய்"(5.7:10) என்று எம் பெருமான் தனக்குச் சரணாக அமைந்தமையையும், "உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே" (6.10:10) என்று தாம் எம்பெருமான் கழலிணைகளில் சரணாகப் புகுந்தமையையும் புலப்படுத்துகின்றார். இவ்விடத்தில்,

"சேஷிபக்கல் சேஷபூதன் இழியும்
துறை, பிரஜை முலையிலே வாய்
வைக்குமாப் போலே" *(முமுட்சு-14)*

*[சேஷி - தலைவன்; சேஷபூதன் - சேதநன்; பிரஜை-குழவி]*

*என்ற முமுட்சுப்படியின் வாக்கியத்தையும் நோக்கலாம். பால் பருகும் பச்சைக்குழவி எங்ஙனம் தாயினுடைய மற்ற அவயங்கள் யாவையும் விட்டுத் தான் உயிர் வாழ்வதற்கிடனாய் உள்ள அவள் கொங்கையிலே வாய் வைக்கின்றதோ, அங்ஙனமே சேஷியாகின்ற எம்பெருமானுடைய பல உறுப்புகளையும் விட்டு, தான் உய்வதற்கு இடனாய் உள்ள அவன் திருவடி களையே சீவன் பற்றுகின்றான் என்பதை இந்த வாக்கியம் அழகாகப் புலப்படுத்துவதை அறியலாம். முந்திய செயல் எவ்வாறு குழந்தைக்கு இயல்பாய் அமைந்ததோ, அவ்வாறே பிந்திய செயலும் சேதநனின் சொரூபத்திற்கு இயல்பாய் அமைந்துள்ளது என்பதைத் தெளியலாம். மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் பரத்துவம், வியூகம், விபவம், அந்தயாமித்துவம் அர்ச்சை, என்னும் இறைவனுடைய ஐந்து நிலைகளையும் உள்ளங்கை நெல்லி போன்று கண்டவர்கள். இந்த ஐந்து நிலைகளிலும் காக்கும் இயல்பினதும், அடையத் தக்கதும், எல்லாத் திருக்குணங்களுமம நிறைந்ததுமான இடம் அர்ச்சாவதாரமே என்று தெளிந்தவர்கள். இவர்கள் "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி, வழுவிலா அடிமை செய்வ தற்குப்" (திருவாய் 3.3;1) பதறிப் பலகாலும் பிரபத்தி பண்ணு கின்ற அளவில், பல இடங்களிலும் அர்ச்சாவதாரத்தில்தான் பிரபத்தி செய்தனர் என்பதை மேலே கண்டோம்.*

**"ஆழ்வார்கள் பல இடங்களிலும் பிரபத்தி பண்ணிற்றும் அர்ச்சாவதாரங்களிலே"** *(ஸ்ரீவசபூஷ.38)*

*என்பது ஸ்ரீவசனபூஷண வாக்கியம். முமுட்சுப்படியிலும்,*

**"இதுதான் (அர்ச்சாவதாரம்) பர வியூக விபவங்கள் போலன்றிக் கண்ணாலே காணலாம்படி இருக்கும்"**

*(முமுட்சு-140)*

*என்று இவ்வவதாரத்தின் எளிமை பேசப்பெறுகின்றது.*

*பகவானை உபாயமாகப் பற்றுமிடத்தில் வேண்டப் பெறும் குணங்கள் 'வாத்சல்யம்', 'சுவாமித்துவம்', 'சௌசீல்யம்', 'சௌலப்பியம்' என்பவையாகும். இவற்றுள் 'வாத்சல்யம்' என்பது கன்றினிடத்துப் பசு இருக்கும் இருப்பு. சுவாமித்வம் என்பது உடையவனாயிருக்கும் இருப்பு.' சௌசீல்யம்' என்பது உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு புரையறக் கலக்கை. 'சௌல்ப்பியம்' என்பது. எளியனாயிருக்கும் இருப்பு. இந்தத் திருக்குணங்கள் "இருட்டறையில் விளக்குப் போலே பிரகாசிப்பது இங்கே" (ஸ்ரீவச்பூஷ-40) என்று ஸ்ரீவசனபூஷனம் குறிப்பிடுகின்றது. இதனால்தான் பிரபந்நர்களின் தலைவரான சடகோபர் அர்ச்சாவதராங்களில் இன்று மிகப்பெரும்புகழுடன் திகழும் திருவேங்கடமுடையானிடம் சரண்புகுகின்றார்.*

**'அகல கில்லேன் இறையும்' என்று**
**அலர்மேல் மங்கை உறைமார்பா!**
**நிகரில்புகழாய்! உலகம் மூன்று**
**உடையாய்! என்னை ஆள்வானே!**

நிகரில்அமரர் முனிக்க ணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே!
புகல்ஒன் று இல்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே. – திருவாய் 6.10;10.

[இறை-மிகச்சிறிய; நிகர்-ஒப்பு; புகல்-பற்றுக்கோடு]

என்ற பாசுரத்தில் இதனைக் காணலாம். மேலே குறிப்பிட்ட நான்கு திருக்குணங்களும் இறைவனைப் பற்றுகைக்குத் துணை செய்யும் விளக்கத்தைப் பாசுரத்தில் காணலாம். 'நிகரில் புகழாய் என்பதனால் 'வாத்சல்யம்' என்ற திருக்குணமும்' 'உலகம் மூன்றுடையாய்' என்பதனால் 'சுவாமித்துவம்' என்ற பெருங் குணமும், 'என்னை ஆள்வானே' என்பதனால் 'சௌசீல்யம்' என்ற மேன்மைக் குணமும், 'திருவேங்கடத்தானே' என்பதனால் சேதநன் கண்டு பற்றுகைக்கு எளியனாக இருக்கும் 'சௌலப்பியம்' என்ற உயர்ந்த குணமும் விளக்கம் பெறுவதாக ஆன்றோர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர். இங்ஙனம் பிரபத்திநெறியைத் தெளிவாக எடுத்துரைத்து வற்புறுத்துவன ஆழ்வார்களின் பாசுரங்கள்.

# 13. நலம் அந்தம் இல்லதோர் நாடு

'முத்திநிலை' அல்லது 'வீடுபேறு' பற்றிச் சமய நூல்கள் பலபடியாகப் பேசும். வைணவம் இதனைப் 'புருஷார்த்தம்'[1] என்று குறிப்பிடும். வைணவசமயக் கருத்தின்படி வீடு ஒருதனி உலகம். இதனை நம்மாழ்வார்,

**புலனைந்தும் மேயும்**
**பொறி ஐந்தும் நீங்கி**
**நலம்அந்தம் இல்லதோர்**
**நாடு புகுவீர்!** *(திருவாய் 2.8;4)*

என்று குறிப்பிட்டு அவ்வுலகத்திற்குச் செல்லுமாறு ஆற்றுப் படுத்துவர். இங்கு 'நலம் அந்தம் இல்லதோர் நாடு' என்பதில் 'அந்தம் இல்லது' என்பதை நலம் நாடு என்ற இரண்டிற்கும் சேர்த்துப் பொருள் கொள்ளுதல் வேண்டும். அந்தம் இல்லதோர் நாடு - அழிவில்லாத ஒப்பற்ற நாடு; நலம் அந்தம் இல்லதோர் நாடு - அழிவில்லாத இன்பத்தையுடைய நாடு. நாடும் அழிவில்லாதது; அதனை அடைந்தார்க்கு உண்டாகும் இன்பமும் அழிவில்லாதது என்பது அறியத் தக்கது.

நம்மாழ்வாரைப் பின்பற்றியே பரிமேலழகரும் தமது திருக்குறள் உரையில் பலவிடங்களில் வீட்டினை 'அந்தமில்

---

1. புருஷன்–ஆன்மா; அர்த்தம்–பொருள்; அஃதாவது ஆன்மா அடையவேண்டிய பொருள்.

இன்பத்து அழிவில்வீடு'[2] என்று எழுதிச் செல்வர். வைணவ சமயம் கூறும் வீடுபற்றிய கருத்து தமிழகத்தின் பழங் கொள்கையேயாகும். திருவள்ளுவரும்,

**மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்**
**நிலமிசை நீடுவாழ் வார். (3)**

என்ற குறளில் வீட்டை (மோட்சத்தை) நிலம் என்றார். இதனால் வீடு (மோட்சம்) ஓர் உலகம் என்பது. திருவள்ளுவர் கருத்து என்பது தெளிவு. இக்கருத்தினையே அவர் "வரன் என்னும் வைப்பு" (24)-எல்லா உலகத்திலும் மேம்பட்ட வீட்டுலகம், 'வானோர்க்கு உ யர்ந்த உலகம்' (346) - தேவர்களாலும் அடைய முடியாத வீட்டுலகம்;' " வானம்" (353) - வீட்டுலகம் என்று மேலும் விளக்குவர். இறுதியில் கூறப்பெற்ற 'வானம்' தத்துவ ஞானம் பெற்றவர் அடையும் இடமாகக் குறிப்பிடப்பெற்ற மையால் இங்கு 'வானம்' வீட்டுலகத்தைக் குறித்து தத்துவ ஞானம் பெற்றவர்கட்கு இவ்வுலகத்தைவிட வீட்டுலகம் அண்மையில் இருப்பதாகத் தோன்றும். இதனையே நம்மாழ்வாரும்,

**பொன்னுலகு ஆளீரோ?**
**புவனிமுழுது ஆளீரோ (6.8:1)**

என்ற திருவாய்மொழியில் இக் குறிப்பினை வெள்ளியிட் டுள்ளதைக் காணலாம். மேலும், இந்த ஆழ்வார் வீட்டினை 'வைகுந்தம்' (1.2:11:2.5:11:4.4:11:5.10:11)என்றும், 'இலங்குவான்'

2. அறத்துப்பால்–உரைப்பாயிரம்

(3.8:11)"பொன்னுலகு" *(6.7:11)* என்றெல்லாம் தம் திருவாய் மொழியில் குறிப்பிட்டுள்ளமையையும் காணலாம்.

*ஆழ்வார் பெருமக்கள் 'வீடு'[3] என்பதைப்பற்றிக் கூறியுள்ள கருத்துகளைக் காண்போம். இந்த உடலை விட்டுப் பிரியும் ஆன்மா கதிரவன் மண்டலத்தைப் பிளந்து கொண்டு அவ்வழியே சென்று பரமபதம் என்னும் நாட்டை அடைவதாகும், ஆங்கே ஆரா அமுதத்தை அநுபவிப்பதாகவும் அவ் விடத்தைவிட்டு ஒரு நாளும் திரும்பி வருவதில்லையாகவும்[4] அதுவே வைகுந்தம் என்பதாகவும் திருமங்கையாழ்வார் குறிப்பிடுவர்.*

**தேர்ஆர் நிறைகதிரோன்**
**மண்டலத்தைக் கீண்டுபுக்கு**
**ஆரா அமுதம்**
**அங்குஎய்தி – அதினின்றும்**
**வாராது ஒழிவது**
**ஒன்று உண்டே?** *(சி. திருமடல் கண் 7,8)*

*என்ற அவரது சிறிய மடல் கண்ணிகளால் இஃது அறியப்பெறும். மேலும் அவர்,*

**மன்னும் கடுங்கதிரோன்**
**மண்டலத்தின் நன்னடுவுள்**
**அன்னதோர் இல்லியின்**
**ஊடுபோய்– வீடென்னும்**
**தொன்னெறிக்கண் சென்றாரைச்**
**சொல்லுமின்கள்** *(பெ.திரு மடல் கண் 16,17)*

*(இல்லி - துவாரம்)*

3. வீடு–விடுதலை பெற்ற நிலை; அதனையுடைய இடம்.
4. இதனால்தான் 'மீளா உலகம்' என்று பெயர் பெற்றது.

என்று பெரிய திருமடலிலும் வற்புறுத்துவர். திருமழிசை யாழ்வாரும்,

**சண்ட மண்டலத்தி னூடு**
**சென்று வீடு பெற்றுமேல்**
**கண்டு வீடு இலாத காதல்**
**இன்பம் நாளும் எய்துவீர்!** *(திருச்சந்த-67)*

[*சண்ட மண்டலம் -சூரிய மண்டலம்*]

என்று கூறுவர்.

**இருள் அகற்றும் எறிகதிரோன் மண்டலத்தூடு**
**ஏற்றிவைத்து ஏணி வாங்கி**
**அருள் கொடுத்திட்டு அடியவரை ஆட்கொள்வான்**
*-பெரியாழ் திரு. 4.9:3*

என்று இவ்வீட்டைக் காட்டுவர் பெரியாழ்வார். வீட்டுல கைப்பற்றி ஆழ்வார்களின் கருத்துகள் யாவும் உபநிடதக் கருத்து களுடனும் வைணவ ஆகமக் கருத்துகளுடனும் ஒத்துள்ளமை கருதத் தக்கது. மேலே ஏறுவதற்குச் சாதனமாக இருப்பது ஏணி; இங்கு எம்பெருமான் உபாயகமாக இருப்பதைக் காட்டுகின்றது. 'பரமபதம்' ஏறுமளவும் எம்பெருமான் உபாயமாக இருப்பான்; அதன்பிறகு உபேயமாகி விடுகின்றான் என்பது அறியப்படும். ஆன்மா வீட்டுலகம் செல்லும் நெறியை வைணவ சமயம் 'அர்ச்சிராதிமார்க்கம்' என்று குறிப்பிடும். முத்தியை அடையும் ஆன்மா உடலைவிடும்போது சுழுமுனை (சுஷுமுனை) என்ற நாடி வழியாய் வெளிக்கிளம்பி மோட்சத்திற்குப் போகும் வழியாகும் இது. அர்ச்சிஸ் முதலான தேவதைகளைக் கொண்டிருக்கும் வழி என்பது இதன் சொற்பொருள். அர்ச்சிஸ் என்பது அங்கியங்கடவுள்; நெருப்புக்கு இறை.

1. **வேதாந்த தேசிகரின் விளக்கம் :** ஆழ்வார் பாசுரங்களிலும் உபநிடதங்களிலும் ஆழங்கால் பட்ட வேதாந்த தேசிகர் இதனைத் தெளிவாக விளக்குவர். மோட்சத்தை அடையும் ஆன்மா இவ்வுடலைவிட்டு வெளியேறி சூக்கும உடலுடன் செல்லுங்கால் அக்கினி தேவதை பகலின் தேவதை சுக்கில பட்சதேவதை, உத்தராயணதேவதை, வர்ஷ(மழை) தேவதை, வாயுதேவதை, கதிரவன், திங்கள், மின்னலின் தேவதைகள், வருணன், இந்திரன் பிரசாபதி என்ற தேவதைகள் வழிகாட்டி நடத்திச் செல்லுங்கால், தான் மேற்கொண்ட வினையின் பலனாகவும் கடைப்பிடித்த வழியின் மகிமையாலும் சில இன்பங்களைப் பெற்று இறுதியில் வைகுந்தத்தை அடையும். அங்கு ஆன்மாஇடைவிடாது இறையநுபவத்தைப் பெற்று அதிலேயே மண்டிக் கிடக்கும் (தே.பி. 67,68).

2. **திருநாடு செல்லும் ஆன்மா :** திருநாட்டிற்குச் செல்லும் ஆன்மாவுக்கு நடைபெறும் பணிவிடைகளையும் மரியாதைகளையும் 'சூழ் விசும்பு அணி முகில்" (திருவாய் 10,9) என்ற திருவாய்மொழியில் பரக்கப் பேசுகின்றார் ஆழ்வார். தமக்குக் கிடைக்கப்போகும் பேற்றை கற்பனையில் கண்டு பேசுகின்றார்.

நாரணன் தமரைக் கண்டு உகந்து மேகங்கள் மங்கல வாத்திய ஒலிபோல் முழங்கும்; ஆழ்கடல்கள் ஏழும் திரைகளாகிய கைகளை எடுத்துக் கூத்தாடும். ஏழு த்வீபங்களும் மாமலைகளை ஏந்தி நிற்கும் (1).

மேகங்கள் விசும்பில் பூரண கும்பங்களாக அமையும். கடல்களும் நிரந்தரமாக ஆர்த்து நிற்கும். அந்தந்த உலகிலுள்

ளார் பெரிய மலைகளைத் தோரணங்களாக ஒழுங்குபடுத்தித் தாங்களும் தொழுவர் (2).

அர்ச்சிராதிகள் எனப்படும் ஆதிவாஹிகள் கைபடைத்த பயன் பெற்றோமென்று பூமாரி பொழிந்து தொழுது நிற்பர்; தூபத்தையும் காட்டுவர். ஆங்காங்குள்ள முனிவர்களும் மௌனவிரதத்தைத் தவிர்த்து, 'இங்கே எழுந்தருள வேண்டும்,' 'இங்கே எழுந்தருள வேண்டும்' என்று நல்வரவு கூறி உபசரிப்பர்; 'வைகுந்தத்திற்கு இதுவே வழி' என்று இருபக்கமும் நின்று கொண்டு இசைப்பர் (3)

தேவர்கள் 'பூமியை அளந்தவன் தமர்' செல்லுகின்ற வழிகளிலெல்லாம் தோப்புகளைச் சமைத்துத் தங்கும் இடங்களை ஏற்படுத்துவர்; அதிர்குரல் முரசங்கள் எங்கும் ஒலிக்குமாறு செய்வர் (4)

வருணன், இந்திரன், பிரசாபதி ஆகிய தேவர்கள் 'போதுமின்; எமதிடம் புகுமின்' என்று வேண்டுவர். இந்நிலையில் கின்னரர்களும் கருடர்களும் கீதங்கள்பாடுவர். மேலுலக வைதிகர்கள் தாங்கள் புரிந்த தேவபூசைகளின் பலன்களைக் காணிக்கையாக்குவர் (5)

இந்நிலையில் விரைகமழ் நறும்புகை எம்மருங்கும் பரவும். திருச்சின்னங்களும் சங்குகளும் எம்மருங்கும் ஒலிக்கும். ஒளி மிக்க நயனங்களையுடைய தேவமாதர்கள் ஆழியான் தமரை நோக்கி 'வானகம் ஆள்மின்கள்' என்று குளிர நோக்கி அன்புடன் வாழ்த்துவர். இப்பாசுரத்தில் 'வாளொண்கண் மடந்தையர்' என்ற தொடரிலுள்ள அடைமொழியின் கருத்தை நம்பிள்ளை 'தேசாந்தரத்தில் நின்றும் போந்த பிரஜையை

(குழந்தையைத்) தாய்மார்கள் குளிரப்பார்க்குமாப்போலே, ஒளியையுடைய அழகிய கண்களாலே குளிர நோக்கினபடி' என்று விவரிப்பர். (6)

இவர்களை அடுத்து மருத்துகளின் கூட்டமும், வசுக்களின் கூட்டமும் ஆன்மாக்கள் போகும் இடம் எங்கும் தொடர்ந்து சென்று பல்லாண்டு பாடுவர்.(7)

பிரகிருதி மண்டலத்திற்கு அப்பாலும் பரமபதத்திற்குப் புறம்பாகவும் நிற்கும் நித்தியசூரிகளும் முத்தர்களும் நல்வரவு கூறி எதிர்கொண்டு அழைப்பர் (8)

வைகுந்தம் புகுந்த அளவில் திருவாசல் காக்கும் முதலிகள் 'எமது இடம் புகுதும்' என்று உகந்து வரவேற்பர்; 'மண்ணவர் வைகுந்தம் புகுதல் பெரும்பேறு' என்று சொல்லி வியப்பர் (9)

'இவர்கள் இவ்விடம் வந்து சேர்ந்தது நமது பேறு' என்று கூறித் தம்தம் இடங்களில் வந்தவர்களின் திருவடிகளை விளக்குவர். வைணவர்கட்கு நிதியான திருவடி நிலைகளையும், திருச்சூரணத்தையும், பூரண கும்பங்களையும், மங்கல விளக்குகளையும் ஏந்திக் கொண்டு வருவர் மதிமுக மடந்தையர். 'மதிமுகமடந்தையர்' என்ற தொடரின் உட்கருத்தை ஈட்டாசிரியர் 'தேசாந்திரம் போன பிரஜை வந்ததால் தாய்முகம் குளிர்ந்திருக்குமாப்போலே பூரண சந்திரன் போலே இருக்கிற முகங்களையுடையவர்கள் வந்து எதிர் கொள்வர்' என்று விளக்குவர் (10)

**3. மடைப்பள்ளி வந்த மணம் :** இந்த உலகில் மிக்க உயரத்திலமைந்த இடத்தை அடைவதற்குப் படிகளை அமைத்து அவற்றின் வழியாக ஏறிச் செல்வதை நாம்

அறிவோம். அறிவியல் வளர்ந்துள்ள இக் காலத்தில் மின்விசையால் இயங்கும் சாதனத்தின் மூலம் விரைவாக மேலேறுகின்றோம். அங்ஙனமே, பரமபதம் என்னும் வீட்டுலகினை அடைவதற்குரிய ஒன்பது நிலைகளைப் படிகளாகக் கற்பித்து விளக்குவர். வேதாந்த தேசிகர் தமது 'பரமபத சோபானம்'[5] (சோபானம்-படி) என்ற பிரபந்தத்தில். அவர் கூறும் படிகள்; (1) தத்துவங்கள் முதலியவற்றை வகுத்து அறிதல் ; (2) மனம் தளர்தல்; (3) உலக இன்பத்தில் ஆசை அறுதல்; (4)தம் தீவினைகளின் மிகுதியால் இனிவரக் கிடக்கும் நரக அநுபவம் முதலிய இடர்கட்கு அஞ்சுதல்; (5) எம்பெருமான் வீடுபேற்றினை அருள்வதற்குக் காரணமான வழியைக் கடைபிடித்தல்; ( 6) இவ்வுடலினின்றும் ஆன்மா வெளியேறுதல்; (7) ஆன்மா அர்ச்சிராதி மார்க்கத்தில் செல்லுதல்; (8) வைகுந்தம் என்னும் திவ்விய உலகினை அடைதல்; (9) அங்கு எல்லாம்வல்ல இறைவனைக் கண்ணாரக் கண்டு களித்து அநுபவித்து அந்தப் பேரின்பத்தில் மூழ்கிக் கிடத்தல்.

இந்தத் தத்துவங்கள் யாவும் இடைப்பிள்ளையாகி வந்த எம்பெருமானால் உரைக்கப் பெற்றவையேயாகும். இவற்றின் கருத்தை எம்பெருமானார் (இராமாநுசர்) தமது மாபாடியத்தில் (ஸ்ரீபாஷ்யம்)[6] தெளிவாக்கியுள்ளார். இவற்றையெல்லாம் இராமாநுசருடைய திருமடைப்பள்ளியில் அந்தரங்கத்

5. வானேறும் வழிப்படிகள்: இவை தே.பி. 133– 153 பாசுரங்களில் விளக்கப் பெறுகின்றன.
6. ஸ்ரீபாஷ்யம்–பாதராயனரால் எழுதப் பெற்ற வேதாந்த சூத்திரத்திற்கு வரையப்பெற்ற உரை.

தொண்டு செய்து எல்லா இரகசியப் பொருள்களையும் ஐயம் திரிபறப் பெற்றவர் கிடாம்பியாச்சான், அவர் வழியாக வந்தது இவண் கூறப்பெறும் சம்பிரதாய வழி. எனவே,

**மடைப்பள்ளி வந்த மணம் எங்கள்**
**வார்த்தையுள் மன்னியதே**[7]

என்று உள்குழைந்து பணிவன்புடன் உரைப்பர் தூப்புல் புலவர். திருவரங்கத்தில் எம்பெருமானாரின் திருமடைப்பள்ளியில் அடிமைத் தொழில் செய்தமையால் கிடாம்பியாச்சான் 'மடைப்பள்ளி ஆச்சான்' என்ற திருநாமத்தாலும் வழங்கப் பெறுவர்.

**4. வைகுந்தம் :** முமுட்சு நிலையை அடைந்த சீவான்மா முத்தராய்ச் சேரும் இடம் இது. இந்த இடம் ஆநந்தம் அளவிறந்து ஒப்பற்றதாக இருக்கும் பான்மையது. இங்கு திவ்விய கற்பகச் சோலைகள், நானாவித மலர்கள் நிறைந்த பூங்காக்கள் திவ்விய இளமரக்காக்கள், திவ்விய செய்குன்றங்கள், நீராடும் திவ்விய தடாகங்கள், பற்பல போக நிலைகள் முதலியவை நிறைந்திருக்கும். இங்கு மிகவும் இடமகன்ற நிரதிசய ஆநந்தமயமான திருமாமணி மண்டபம் ஒன்று உண்டு. இது உபயவிபூதியிலுள்ளவர்களும் ஒரு மூலையில் அடங்கும்படியான மிக்க விசாலமானது. இங்குள்ள பொருள்கள்யாவும் சுத்த சத்துவத்தாலானவை. இங்குக் காலம் நடையாடாது; காலை மாலை, பகல், இரவு, இன்று நேற்று என்ற நிலைகள் இங்கு இல்லை. முன் பின் என்ற நிலை இங்கு உண்டு. வீடுபேறு அடைவதற்கேற்ற உபாயங்களை அநுட்டித்து அவன்

7. தே.பி. 133

திருவருளைப் பெற்ற முமுட்சுகள்தாம் இந்தநீள் விசும்பினை அடையமுடியும். இவர்கள் இந்தப் பூவுலகிற்குத் திரும்பி வருதல் இல்லை. இதனால் இது 'மீளா உலகம்' என்ற பெயரையும் பெற்றுள்ளது. பிரளய காலத்தில் இவர்கட்கு அழிவு இல்லை. இறைவன் திருவுளப்படி இவர்கள் எந்த உருவத்தையும் மேற்கொள்வர்.

**5. பரமபதநாதன் :** இவன் வீற்றிருக்கும் இடம் மேற்குறிப்பிட்ட திருமாமணி மண்டபம். இவன் வீற்றிருக்கும் சீரிய சிங்காதனம் - அரியணை - அற்புதமான கோப்புடையது. பன்னிரண்டு இதழ்களையுடைய நானா சக்தி மயமான திவ்விய செந்தாமரைப் பூவின்மீது விசித்திரமான கட்டிலைக் கொண்டது. இந்தக் கட்டிலின்மீது பல்லாயிரம் சந்திரர்களை உருக்கி வார்த்தாற்போன்ற குளிர்ந்த தன்மையுடைத்தான திருமேனியையுடையதனாய், கல்யாண குணங்கட்கு அந்த மில்லாமையினால் அனந்தன் என்ற திருநாமம் உடையனாய், எல்லாவித அடிமைத் தொழில் புரிபவர்க்கெல்லாம் உபமான நிலமாயிருத்தலால் சேஷன் என்னும் திருநாமமுடையவனாகிய திருஅனந்தாழ்வானாகிய படுக்கையில் வெள்ளிமலையின் உச்சியில் பல்லாயிரம் பகலவன் உதித்தாற்போல் இருக்கும் ஆயிரம்பணாமுடி மண்டலமாகிய சோதி மண்டலத்தின் நடுவில்தான் பரமபத நாதன் - பரவாசுதேவன் - வீற்றிருப்பான்; அருள் தேவியான பெரிய பிராட்டியார் வலப்பக்கத்திலும், பொறைதேவியான பூமிப்பிராட்டியாரும் ஆனந்ததேவியான நீளாப்பிராட்டியாரும் இடப்பக்கத்திலும் இருப்பர். இங்கு ஆனந்தன், கருடன், விஷ்வக்சேனர் (சேனை முதலியார்) முதலான நித்திய சூரிகளும், இவ்வுலகத்தளைகளினின்றும் விடுபட்ட முத்தரும் அநுபவித்தற்குரியனாய் இருப்பன்.

*வைகுண்ட நாதனுக்கு உருவம் உண்டு. அது திவ்விய மங்கள விக்கிரகம் எனப்படும்.*

**கண்கள் சிவந்து பெரியவாய்**
**வாயும் சிவந்து கனிந்துள்ளே**
**வெண்பல் இலகுசுடர், இலகு**
**விலகு மகர குண்டலத்தன்;**
**கொண்டல் வண்ணன் சுடர்முடியன்**
**நான்கு தோளன், குனிசார்ங்கன்**
**ஒண்சங்கு கதைவாள் ஆழியான்**
**ஒருவன் .....** *(திருவாய். 8.8:1)*

*[கனிந்து -பழுத்து; உள்ளே அகவாயிலே; இலகு- விளங்குகின்ற; இலகுவிலகு - மிக விளங்கி அசைகின்ற; கொண்டல் - மேகம்; குனி - வளைந்த]*

*என்ற நம்மாழ்வார் பாசுரப் பகுதியில் இந்தத் திருமேனி காட்டப்பெறுகின்றது. வேதாந்த தேசிகரின் 'தயாசதகத்தில்' இந்த எம்பெருமானின் திருக்கோலம் நன்கு காட்டப் பெறுகின்றது. இடக்கால் தொங்கிய நிலையிலும், வலக்கால் மடிந்த நிலையிலும் இருக்கும். வலக்கை வலது முழங்காலிலும், இடக்கை அனந்தாழ்வான் உடலில் தாங்கிய படியும் இருக்கும் பின்புறத்திலுள்ள இரண்டு கைகளில் திருவாழியும் திருசங்கும் பொலிவு பெறும்.*

**6. பரமபதத்தில் சீவன்நிலை :** *முத்தி நிலையிலுள்ள சீவான்மாவுக்குப் பசி, நீர் வேட்கை முதலியன இல்லை. பாவம், முதுமை, துன்பம், இறப்பு முதலியவை அவனை நெருங்கா. முத்தி அடைந்த சீவனின் நிலையை ஆறு உவமைகளால்*

விளக்குவர் சுவாமிதேசிகன் (1) இராகு என்னும் பாம்பு பற்றிவிட்ட பிறகு கதிரவனின் ஒளி அதிகமாகும். (2) அழுக்கடைந்து நின்ற தரளம் தூய்மை செய்யப் பெற்றபிறகு தன் இயல்பான ஒளியுடன் ஒளிர்கின்றது. (3) கடலில் சென்ற கலம் திசை தப்பிச் சென்று கரைசேர்ந்தவுடன் அதிலுள்ள பயணிகள் அடையும் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. (4)காட்டுத் தீயில் சிக்கித் தவித்து நிற்கும் மதகரி தெய்விகமாய் தீ அணைந்தால் அதினின்றும் வெளியேறியவுடன் அஃது அடையும் மகிழ்ச்சி கூறுந் தரம் அன்று. (5) மடலூரும் தலைவன் தலைவியர் தம் விருப்பம் நிறைவேறப் பெற்றதும் பெருமிதம் கொள்வர். (6) ஓர் அரசன் தன் பிழையால் சிறிது காலம் ஒரு சிறையில் இருக்கப் பெற்றுப் பின்பு பிழையற்றவன் எனத் தீர்ந்து சிறை நீங்கி மீண்டும் தனது அரசுரிமையைப் பெற்றால் அவன் ஆனந்தக் கடலில் மூழ்கி நிற்பான். அங்ஙனமே இதுகாறும் ஆன்மாவானவன் உண்மையான சொரூபத்தை அறியாமல் செய்து மறைத்து வந்த பிரகிருதியின் உறவு நீங்கப்பெற்றதும் ஆன்மா வைகுந்தத்தில் எம்பெருமானுடன் கலந்து அவனுக்கு அடிமை செய்து ஆனந்தத்தை அநுபவிக்கின்றது. (தே.பி. 151)

**கண்டேன் கமல**
**மலர்ப்பாதம்; காண்டலுமே**
**விண்டே ஒழிந்த**
**வினையாயின எல்லாம்**
**தொண்டே செய்து**
**என்றுதொழுது வழியொழுகம்**
**பண்டே பரமன்**
**பணித்த பணிவகையே** (திருவாய்.10.4:9)

*[கமலம்- தாமரை; விண்டே-பிளவுபட்டு; தொண்டு- அடிமைத் தொழில்; பண்டே- முன்பே; பணித்த-அருளிச் செய்த]*

*என்று செம்மாந்து நிற்கின்றது.*

**ஒழிவில் காலமெல்லாம்**
**உடனாய் மன்னி**
**வழுவிலா அடிமை**
**செய்ய வேண்டும். (3.3:1)**

*என்று ஆராத ஆசை நிறைவேறப் பெற்றதைக் கண்டு பெருமிதம் கொள்ளுகின்றது. இந்த அநுபவம் - பகவதநுபவம் - 'பரிபூர்ண பிரம்மாநுபவம்' என்று வேதாந்த நூல்களால் பேசப்பெறும்.*

# 14. சம்பிரதாயங்களாக - சில

ஒவ்வொரு சமயத்தினரும் சம்பிரதாயமாகச்[1] சிலவற்றைக் கடைப்பிடிக்கின்றனர். இவையே நாளடைவில் சமயப் பண்பாடுகளாக அமைந்து விடுகின்றன. வாழ்க்கையோடு ஒட்டிப் பிரிக்க முடியாதபடி அமைந்து விடுவன அனைத்தும் பண்பாடுகளாம். வைணவ சமயத்தில் அமைந்த அத்தகைய சிலவற்றை ஈண்டு நோக்குவோம்; எடுத்துக் காட்டுவோம்.

**1. சம்பிரதாயப் பெயர்கள் :** வைணவ உரைகளில் அதாவது வியாக்கியானங்களில் - சில பெரியோர்களின் இயற்பெயர்கள் சம்பிரதாயமாக மாறி வழங்கப்பெற்றுள்ளன. இதனை வைணவரல்லாதாரும் - ஏன்? பெரும்பாலான வைணவர்களும் கூடத்தான் - அறிந்திருக்க வேண்டும். அநுமன் 'சிறிய திருவடி' என்றும், கருடன் 'பெரியதிருவடி' என்றும், ஆதிசேடன் 'அனந்தாழ்வான்' என்றும், இலக்குவன் 'இளைய பெருமாள்' என்றும், இராமன் 'பெருமாள்' என்றும், அரங்கநாதன் 'பெரிய பெருமாள்' என்றும், சுக்கிரீவன் 'மகாராசர்' என்றும், ஜடாயு 'பெரிய உடையார்' என்றும், திருமலை 'திருமலையாழ்வார்' என்றும், ஆழ்வார் திருநகரியின் திருக்கோயிலிலுள்ள புளியமரம் - உறங்காப்புளி - 'திருப்புளி

1. சம்பிரதாயம் : தாயம்—தானம்; கொடை. பிரதாயம்—முதன்மையான கொடை. சம்பிரதாயம்— சிறந்த முதன்மையான கொடை. சிறந்த முதன்மையான உபதேசத்தைக் குறித்தது. வழிவழியாகக் கடைபிடிக்கப்படுவது. இஃது ஒருவகை நெறியாயிற்று.

யாழ்வார்' என்றும், ஆளவந்தார் 'பெரிய முதலியார்' என்றும் சம்பிரதாயப் பெயர்களுடன் வைணவர்களின் திருவுள்ளத்தில் இடம் பெறுவர். இங்ஙனமே கூரத்தாழ்வான் 'ஆழ்வான்' என்றும் கிடாம்பி ஆச்சான் 'ஆச்சான்' என்றும், திருக்குருகைப் பிரான் பிள்ளான் 'பிள்ளான்' என்றும், குருகைக் காவலப்பன் 'அப்பன்' என்றும், பெரியவாச்சான்பிள்ளை 'ஆச்சான் பிள்ளை' என்றும், முதலியாண்டான் 'ஆண்டான்' என்றும், சுருக்கமான பெயர்களால் வழங்கப்பெறுவர். தமிழ் அறிஞர் உள்ள்த்தில் உ.வே.சாமிநாத அய்யர் 'அய்யர்வாள்' என்றும் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை 'பிள்ளை' அவர்கள் என்றும், பன்மொழி புலவர் வேங்கடராஜுலு ரெட்டியார் 'ரெட்டியார்' என்றும், தியாகராசச் செட்டியார் 'செட்டியார்' என்றும், திரு.வி. கல்யாணசுந்தர முதலியார், திரு.வி.க. என்றும் டாக்டர் மு. வரதராசன், மு.வ. என்றும் வழங்க வில்லையா? அதுபோல என்க,

**2. திருமேனிகள் :** ஈசுவரன், சடகோபன், உடையவர் (இராமாநுசர்) இவர்களின் திருமேனிகளைப் பற்றி சம்பிரதாயமாக வழங்கி வரும் மரபுகள் உள்ளன.

**(அ). ஈசுவரன் திருமேனி :** கருடனுடைய உடலாய் நிற்கும் வேதத்தின் பொருளாய் நிற்பவன்,இவனது திருமேனியில் சீவான்மா இரத்தினங்களுள் சிறந்த கௌஸ்துவ மாகவும், மூலப்பிரகிருதி ஸ்ரீவத்சம் என்னும் மறுவாகவும், 'மான்' என்னும் தத்துவம் கௌமோதகி என்னும் கதையாகவும், ஞானம் நந்தகம் என்னும் வாளாகவும், மருள் (அஞ்ஞானம்) வாளின்உறையாகவும், தாமசாகங்காரம் சார்ங்கம் என்னும் வில்லாகவும், சாத்விகாகங்காரம் பாஞ்சசன்னியம் என்னும்

சங்காகவும், மனம் சுதர்சனம் என்னும் சக்கரமாகவும், ஞானேந்திரியங்கள் ஐந்தும் கர்மேந்திரியங்கள் ஐந்தும் ஆகிய பத்தும் அம்புகளாகவும், தந்மாத்திரங்கள் ஐந்தும், பூதங்கள் ஐந்தும் ஆகிய இருவித பூதங்களின் வரிசையும் வைஜயந்தி என்னும் வனமாலையாகவும் இங்ஙனம் எல்லாத் தத்துவங் களும் எம்பெருமானுக்கு ஆயுதமாகவும், ஆபரணமாகவும் இருப்பதாகக் கருதுவது வைணவமரபு.[2] அதாவது எம் பெருமான் சேதநம், அசேதநம் என்னும் தத்துவங்கள் அனைத் தையும் ஆபரணமாகவும், ஆயுதமாகவும் கொண்டுள்ளான் என்பது கருத்து.

எம்பெருமானுடைய ஆபரணங்கள் 'திவ்வியாபரண ஆழ்வார்கள்' என்னும் திருநாமத்தால் வழங்கப்பெறும். உலகிலுள்ள மற்ற ஆபரணங்களுக்கில்லாத மென்மை,மணம், அழகு, ஒளி முதலியன இவ்வாபரணங்களுக்கு உண்டு. சங்கு சக்கரம் ஆபரணங்கள் பகவானை வெறுத்து நிற்பவர்கட்கு ஆயுதங்களாகவும், விரும்பி நிற்பவர்கட்கு ஆபரணங்களாகவும் தோன்றும். ஆபரணங்களுக்கு எங்ஙனம் தோற்றம், அழிவு முதலிய குற்றங்கள் இல்லையோ, அங்ஙனமே ஆயுதங்களுக்கும் இவை இல்லை. நித்தியசூரிகளே திவ்வியாபரண ஆழ்வார்கள், திவ்வியாயுத ஆழ்வார்கள் எனப் பெயர் பெற்றுள்ளனர். இவை பகவானுடைய ஆயுதங்கள் என்னும் நிலைக்கேற்ப ஞானம், சக்தி முதலிய திருக்குணங்களைப் பெற்றுள்ளன.

**(ஆ).சடகோபனின் திருமேனி:** ஆழ்வார்கள் பன்னிருவருள் சடகோபர் 'நம்மவர்' என்று போற்றத்தக்க பெருமைவாய்ந்து 'நம்மாழ்வார்' என்ற சிறப்புத் திருநாமத்தால் வழங்கப்

2. தே.பி. 80

பெறுகின்றார் என்பதை நாம் அறிவோம். ஏனைய ஆழ்வார்களைச் சடகோபரின் ஒவ்வோர் அவயமாகவும் நம்மாழ்வாரை அவயவியாகவும் வழங்குவது மரபு. ஆழ்வாரின் திருமுடி நம்பெருமாள். பூதத்தாழ்வாரைத் தலையாகவும், பொய்கை பேயாழ்வார்களைத் திருக்கண்களாகவும், பெரியாழ்வாரைத் திருமுகமண்டலமாகவும், திருமழிசையாழ்வாரைக் கழுத்தாகவும், குலசேகராழ்வாரையும், திருப்பாணாழ்வாரையும் திருக்கைகளாகவும், தொண்டரடிப் பொடியாழ்வாரைத் திருமார்பாகவும், திருமங்கையாழ்வாரைத் திருநாபியாகவும் மதுரகவிகளையும், எம்பெருமானாரையும் திருவடிகளாகவும் பெரியோர் அருளிச்செய்வார். (எம்பெருமானுடன் கலந்து தெய்வமாக உயர்ந்த ஆண்டாள் விடப்பெற்றிருப்பது கவனிக்கதக்கது.)

நம்மாழ்வார் திருமால் திருவடியில் எப்பொழுதும் விளங்குகின்றார் என்பது வைணவக் கொள்கை. அதனால் திருமால் திருக்கோயில்களில் அப்பெருமானைச் சேவிக்கச் செல்வோரின் முடிமீது அவர் திருவடியாக வைக்கப் பெறுவதைச் 'சடகோபன்' 'சடாரி' என்று வழங்குகின்றனர். 'சடகோபன்' 'சடாரி' என்பன நம்மாழ்வாரின் திருப்பெயர்களாகும்.

**(இ). இராமாநுசரின் திருமேனி :** நம்மாழ்வாரைத் தலையாகவும், நாதமுனிகளைத் திருமுகமண்டலமாகவும், உய்யக் கொண்டாரைக் (புண்டரீகாட்சரைக்) கண்ணாகவும் மணக்கால் நம்பியைக் (இராம மிஸ்ராவைக்) கன்னமாயும், ஆளவந்தாரை (யாமுனாச்சாரியரை) மார்பிடமாகவும், பெரிய நம்பியைக் கழுத்தாயும், திருக்கச்சிநம்பியைத் திருக்கையாகவும்,

திருக்கோட்டி நம்பியை ஸ்தனமாகவும், திருவரங்கப்பெருமாளரையரை வயிறாகவும், திருமாலையாண்டானை முதுகாகவும், கிடாம்பியாச்சானை இடுப்பாகவும், எம்பாரை இடையாகவும், பட்டரையும், நஞ்சீயரையும் புட்டகங்களாகவும், நம்பிள்ளையைத் துடையாயும், வடக்குத் திருவீதிப் பிள்ளையை முழங்கால்களாகவும், பிள்ளை உலக ஆசிரியரைத் திருவடியாயும், திருவாய்மொழிப் பிள்ளையைப் பாதஇரேகையாகவும் மணவாள மாமுனிகளைப் பாதுகையாயும், சேனாபதி ஜீயரை ஊர்த்துவ புண்டரமாகவும், (திருமண்காப்பு) கூரத்தாழ்வானைப் புரிநூலாகவும் முதலியாண்டானைத் திரி தண்டமாயும், கிடாம்பியாச்சானைக் கமண்டலமாகவும் வடுக நம்பியைக் கல்லாடையாகவும், திருக்குருகைப்பிரான் பிள்ளானைத் தோமாலிகையாகவும், பிள்ளையுறங்காவில்லி தாசரை நிழலாகவும்-இங்ஙனம் இராமாநுசரைச் சர்வாசாரிய சொரூபராகக் கொள்வது மரபு.

**3. திருவாய்மொழியின் பாசுரப் பிரிவினை :** பராசரபட்டர் என்ற சமயப் பேரறிஞர் தாம் அருளியுள்ள திருவாய்மொழித் தனியனில்,

> வான்திகழும் சோலை
> மதிலரங்கர் வண்புகழ்மேல்
> ஆன்ற தமிழ்மறைகள்
> ஆயிரமும்.

என்று சொல்லியிருப்பதனால் திருவாய்மொழி ஆயிரமும் திருவரங்கநாதன் மீதாகும் என்று ஏற்படுகின்றது. இந்த ஐதிகம்[3]

3. ஐதிகம் என்பது, சம்பிரதாயம் அடியாக வந்த ஒரு வார்த்தை; அதாவது முன் நடந்ததைத் தெரிவிப்பது.

எப்படிப் பொருந்தும்? திருவாய்மொழி ஆயிரத்தில் பலபல திவ்விய தேசங்களன்றோ அநுபவிக்கப் பெற்றுள்ளன? அவற்றுள் 'கங்குலும்பகலும்' (திருவாய் 7,2) என்ற திருவாய் மொழியொன்றே அரங்கநாதன் விஷயமாகக் காணப்படா நிற்க பட்டர் ஆயிரமும் அரங்கநாதன் மீதாவது ஆகும் என்று கூறுவது எப்படிப் பொருந்தும்? என்று முன்பே சிலர் கேட்டார்களாம். அதற்கு மறுமொழி பகர்ந்தவர்கள் 'கங்குலும் பகலும்' என்ற பதிகத்தின் முடிவில் 'முகில் வண்ணன் அடிமேல் சொன்ன சொல்மாலை ஆயிரத்து, இப்பத்தும்' என்கையாலே திருவாய்மொழி ஆயிரமும் அரங்கநாதன் திருவடிகளுக்கே சமர்ப்பிக்கப்பெற்றது; அதிலிருந்து சிலதிவ்விய தேசங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கப் பெற்றது ; ஆனதுபற்றியே 'திருவேங்கடத் துக்கு இவை பத்தும்' (6.10;11) என்றும், திருமோகூர்க்கு ஈர்த்த பத்திவை (10.1:11) என்றும், 'இவை பத்தும் திருக்குறுங்குடி அதன் மேல்' (5.5:11) என்றும் ஆழ்வாரே அருளிச் செய்துள்ளார்" என்றார்களாம். இப்படி இருக்கும்போது இந்த ஐதிகம் அப்படியே ஒப்புக் கொள்ள வேண்டியதாகின்றது.

4. **திருக்கோயில்கள் :** சைவர்கள் தில்லைச் சிற்றம் பலத்தைக் 'கோயில்' என்று வழங்குதல் போல, வைணவர்கள் திருவரங்கத்தைக் 'கோயில்' என்று வழங்குவர். இரண்டு இடங்களும் பல அற்புத நிகழ்ச்சிகளால் ஏற்றம் பெற்றன என்பதை நாம் அறிவோம். வைணவர்கட்கு வேறு ஒரு முக்கிய சான்றும் உள்ளது. நம்மாழ்வாரின் முதல் பிரபந்தமாகிய திருவிருத்தத்தில் 'தண்அம்துழாய்' (28) என்ற திருப்பாசுரத்தில் 'பொருநீர்த் திருவரங்கா! அருளாய்' என்ற தொடரில் திருவரங்கத்தைப் பற்றிய குறிப்பு வருவதால் 'கோயில்' என்ற

பெயர் திருவரங்கத்திற்கு ஏற்பட்டதாகப் பெரியோர் பணிப்பர். அங்ஙனமே காஞ்சியைப் 'பெருமாள்கோயில்' என்று வழங்குவர். இதற்குக் காரணம் திருவிருத்தத்தின் 'நானிலம் வாய்க் கொண்டு' (26) என்ற திருப்பாசுரத்தில் கால் நிலம் தோய்ந்து விண்ணோர் தொழும் கண்ணன் வெஃகாஉது' என்ற தொடரில்'வெஃகா' என்பது காஞ்சியிலுள்ள சொன்ன வண்ணம் செய்த பெருமாள் கோயிலைக் குறிப்பதால் காஞ்சிக்குப் 'பெருமாள் கோயில்' என்ற பெயர் ஏற்பட்டது.[4] திருவேங்கடத்தைத் 'திருமலை' என்ற பெயரால் வழங்குவர். இதற்குச் சான்று; திருவிருத்தத்தில் 'இசைமின்கள்தூது' (31) என்ற திருப்பாசுரத்தில் 'திசைமின் மிளிரும் திருவேங்கடத்து' என்ற தொடரில் 'திருவேங்கடம்' வருவதால் 'திருவேங்கடம்' 'திருமலை' என்ற பெயரால் குறிப்பிடும் வழக்கம் ஏற்பட்டது.

திருவரங்கத்து அழகிய மணவாளன் இராமாயணக் கூறுடையவன் (தோலாததனிவீரன் தொழுத கோயில்) என்றும், திருவேங்கடத்துத் திருவாழ்மார்பன் (சீநிவாசன்) கண்ணன் அவதாரக் கூறுடையவன் (கண்ணன் அடியிணைக் காட்டும் வெற்பு) என்றும், அத்திகிரி அருளாளன் இந்த இரண்டு அவதாரக் கூறுகளையுடையவன் என்றும் வைணவர்களின் திருவுள்ளத்தில் இடம் பெற்றுள்ளன.[5]

4. இதுவே ஆதிக்கோயில். வரதராசர் சந்நிதி அதற்குச் சற்றுப் பின்னர் ஏற்பட்டது. இராமாநுசர் காலத்தில் இது பெரும்புகழ் பெற்றது. இக்காலத்தில் இது வைணவர்கள் 'பெருமாள் கோயில்' என்று வழங்குகின்றனர். அஃது இருக்கும் பகுதியை 'விஷ்ணுகாஞ்சி' என்று வழங்குவர். ஏகாம்பரேசுவரர் திருக்கோயில் இருக்கும் பகுதியைச் சைவப்பெருமக்கள் 'சிவகாஞ்சி' என்று குறிப்பிடுகின்றனர்.
5. தே.பி. 81,82,83

**(அ). எம்பெருமான்களின் திருக்கழல்கள் :** திருவரங்கம் பெரிய பெருமாளின் திருவடியைத் **'திருப்பொலிந்த சேவடி'** என்று குறிப்பது வழக்கம். சான்று :

**திருப்பொலிந்த சேவடிஎன்**
**சென்னியின்மேல் பொறித்தாய் (5.4:7)**

என்பது பெரியாழ்வார் திருமொழியின் பாசுரப்பகுதியாகும்.

கச்சிநகர் தேவப்பெருமாளின் திருவடியைத் **'துயரறு சுடர்அடி'** என்று குறிப்பிடுவது மரபு.

**துயர்அறு சுடர்அடி**
**தொழுதுஎழு என்மனனே! (1.1:1)**

என்ற திருவாய்மொழிப் பாசுரஅடியே இதற்குச் சான்று. திருவேங்கடமுடையானின் திருவடி **'பூவார்கழல்'** என்று குறிப்பிடுவது வழக்கம். சான்று :

**பூவார் கழல்கள் அருவினையேன்**
**பொருந்துமாறு புணராயே (6.10;4)**

என்ற திருவாய் மொழிப் பாசுரஅடியில் வரும் 'பூவார்கழல்' என்ற தொடர்.

**(ஆ). கோவில் அமைப்பில் :** திருக்கோயில் அமைப்பில் சில தத்துவங்கள் விளக்கம் பெறுவனவாக உள்ளன.

(i). **திருவரங்க விமானம்:** திருக்கோயிலின் ஏழு திருச்சுற்றுகளுக்கும் நடுவில் உள்ளது; பிரணவ ஆகாரமாயுள்ளது. நான்கு திருமறைகளும் சாத்திரங்களும் தூபிகளாயுள்ளன. பரவாசுதேவர் இதிலிருந்து சேவை சாதிக்கின்றார். 'ஓம்' என்ற பிரணவம் விமானமாகவும் 'நமோ நாராயணாய'

என்பதிலுள்ள ஏழு எழுத்துகள் ஏழு திருமதில்களாகவும் அமைந்துள்ளன.[6] எட்டெழுத்து மந்திரத்தை ஆராய்பவருக்கு இறைவனின் தன்மை புலப்படுவது போல, திரு அரங்கத்துக்குச் செல்வோர்கட்கும் இறைவன் நேரே புலப்படுவான் என்பது கருத்து.

விமானத்தின் முன்பகுதியில் நிற்பது காயத்திரி மண்டபம். விஷ்ணுகாயத்திரி மந்திரத்தின் அறிகுறியாக 24 தூண்கள் அமைக்கப்பெற்றது (24 தத்துவங்களின் அறிகுறியாக இருப்பனவாகவும் கருதலாம்).

(ii). காஞ்சி வரதர்ாச்சரை (அத்திகிரி)[7], அருளாளனைச்) சேவிக்க 24 படிகள் ஏறிச் செல்ல வேண்டும். இவை 24 தத்துவங்களின் குறியீடுகள். அதாவது, தந்மாத்திரைகள் 5; ஞானேந்திரியங்கள் 5; கர்மேந்திரியங்கள் 5 ; பூதங்கள் 5 ;ஆக, 20. இவற்றுடன் பிரகிருதி 1, மகான் 1, அகங்காரம் 1, மனம் 1 ஆக நான்கும் சேர 24 தத்துவங்களாகின்றன. இவற்றுடன் புருடன்[8] (சீவன்மா)1 மகாபுருடன் (பரமான்மா) 1சேர்ந்து வைணவ தத்துவம் 26 ஆகின்றது.

(iii). திருக்கோட்டியூர் திருக்கோயிலின் விமானம் : 'அட்டாங்கவிமானம்' என்பது.96 அடி உயரம் உள்ளது. இதன் நிழல் தரையில் விழுவதில்லை, தஞ்சை கோபுரத்தின் நிழல் போல; ஒன்றன்மீது ஒன்றாக மூன்று தளங்களை உடையது. மேல்தளத்தில் திசைக்கொன்றாக எட்டு விமானங்கள் உள்ளன.

6. திருவரங்க மாலை–95
7. ஹஸ்திகிரி–அத்திகிரி. ஹஸ்தி–யானை;கிரி–மலை. ஹஸ்திகிரி தமிழில் அத்திகிரி என்றாயிற்று .
8. புருடன்–புருஷன். இது சாரீத்தில் வசிப்பவன் என்று பொருள்படும்.

எட்டு விமானங்கள் திருமந்திரத்தின் எட்டெழுத்துகள் போலவும், விமானத்தின் மூன்று தளங்கள் திருமந்திரத்தின் மூன்று பதங்கள் (ஓம்+நமோ+நாராயணாய போலவும், மூன்றெழுத்துகள் கூடி (அ+உ+ம= ஓம்) பிரணவம் போலவும் அமைந்திருப்பதாக ஐதிகம்.

**5. எம் பெருமான் சிலவற்றுடன் ஒப்பு :** வைணவ உரையாசிரியர்கள் எம் பெருமானை, நீர், மேகம், இரத்தினம், நிதி ஆகியவற்றுடன் ஒப்பிட்டு விளக்கியுள்ளனர். இவை மிகவும் அற்புதமாக உள்ளத்தைத் தொடும் விளக்கங்களாக அமைந்துள்ளன. இவற்றை வழிவழியாக வைணவப் பெருமக்கள் அநுபவித்து மகிழ்கின்றனர்.

**(அ) யானை :** 'கைம்மான மழகளிற்றை' (பெரி. திரு. 5.8;1) என்பது மங்கை மன்னனின் மணிவார்த்தை. ஒரு யானை கையையும் கால்களையும் படுத்துக் கொண்டு கிடப்பது போலத் திருவரங்கப் பெருமான் அறிதுயில் கொண்டு பள்ளியில் கிடக்கும் கோலத்தில் ஈடுபட்டுச் சொல்லுகின்றபடியாகும் இது. "தென்னானாய் வடவானாய், குடபாலானாய், குணபாலமத யானாய்" (திருநெடுந். 10) என்று மீண்டும் அருளிச் செய்வர் இவ்வாழ்வார். "என்ஆனை என்னப்பன் எம்பெருமான்' (திருவாய். 3.9;1) என்றார் சடகோபரும். யானைக்கும் எம்பெருமானுக்கும் பலவிதமாக ஒப்புமை உண்டு.

(i) யானையை எத்தனை தடவைப் பார்த்தாலும் பார்க்கும் போதெல்லாம் அரிய பொருளைப்போல் பரமானந்தத்தைத் தரும்; எம்பெருமானும் "அப்பொழுதைக்கப்பொழுது என் ஆரா அமுதமே" (திருவாய்.2.5;4) என்று இருப்பான்.

(ii). யானைமீது ஏறவேண்டியவன் யானையின் காலைப் பற்றியே ஏறவேண்டும்; எம்பெருமானைச் சேரவேண்டியவர் களும் அவன் திருவடியைப் பற்றியே சேர வேண்டும்.

(iii). யானை தன்னைக் கட்டத் தானே கயிறு கொடுக்கும்; "எட்டினோடிரண்டெனும் கயிற்றினால்" (திருசந்த.83) என்றபடி எம்பெருமானைக் கட்டுப்படுத்தும் பக்தியாகின்ற கயிற்றை அவன்தானே தந்தருள்வான்; "மதிநலம் அருளினன்" (திருவாய் 1.1;1)

(iv). யானையை நீராட்டினாலும் அடுத்த கணத்திலேயே அஃது அழுக்கோடு சேரும்; எம்பெருமானும் சுத்த பவித்திரனாய், சுத்த சத்து மயனாய் இருந்தாலும் "பொய்ந்நின்ற ஞாலமும் பொல்லா ஒழுக்கம் அழுக்குடம்பும்" (திருவிருத்-1) உடைய நம் போலியருடன் சேரத்திருவுள்ளமாயிருப்பன், வாத்சல்யத்தாலே.

(v). யானையைப் பிடிக்க வேண்டுமானால் பெண் யானையைக் கொண்டே பிடிக்கவேண்டும்.; பிராட்டியின் புருஷகாரமின்றி பெருமான் வசப்படான்.

(vi). யானை பாகனுடையஅநுமதியின்றித் தன்பக்கம் வருபவர்களைத் தள்ளிவிடும்; எம்பெருமானும் "வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்; பாதம் பணிந்து" (திருவாய் 4.6;8) என்னும்படி பாகவதர்களை முன்னிட்டுப் புகாதாரை அங்கீகரித்தருளான்.

(vii). யானையின் மொழியைப் பாகனே அறிவான்; எம் பெருமானின் மொழி திருக்கச்சி நம்பி போல்வாருக்கே தெரியும். பேரருளாளனோடே பேசுபவரன்றோ நம்பிகள்? இராமாநுசருக்கு நம்பிகள் சாதித்த 'ஆறு வார்த்தைகளை' நினைவுகூர்வது.

(viii). யானையினுடைய நிற்றல், இருத்தல், கிடத்தல், திரிதல் முதலிய தொழில்கள் பாகனிட்ட வழக்கு; எம்பெருமானும் "கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி, மணிவண்ணா நீ கிடக்க வேண்டா...... உன்றன் பைநாகப் பாய்சுருட்டிக்கொள்" என்றும், "கிடந்தவாறு எழுந்திருந்து பேசு" (திருச்சந்த. 61) என்றும் சொல்லுகின்ற திருமழிசைப் பிரான் போல்வாருக்கு எல்லாவகையிலும் அடியன்.

(ix). யானை உண்ணும்போது இறைக்கும் அரிசி பல கோடி நூறாயிரம் எறும்புகளுக்கு உணவாகும். எம்பெருமான் அமுது செய்து சேவித்த பிரசாதத்தாலே பல கோடி பக்தவர்க்கங்கள் உய்விக்கக் காண்கின்றோமன்றோ?

(x). யானைக்கும் கை நீளம்; எம்பெருமானும் "அலம்புரி நெடுந்தடக்கை ஆயன்" (பெரி.திரு. 1.6;2) அன்றோ? "நீண்டவத்தைக் கருமுகிலை" (பெரி. திரு. 2.5;2)

(xi). யானை இறந்தபின்பும் உதவும்; எம்பெருமானும் தீர்த்தம் சாதித்துத் தன்னுடைய சோதிக்கு எழுந்தருளிய பின்பும் இதிகாசபுராணங்கள் அருளிச் செயல்கள் மூலமாகத் தனது சரிதங்களை உதவுகின்றானன்றோ?

(xii). யானைக்கு ஒரு கையே உள்ளது. எம்பெருமானுக்கும் கொடுக்கும் கையொழியக் கொள்ளும் கை இல்லையன்றோ? "விரும்பப்பட்ட பொருள்களைக் கொடுப்பதில் உறுதியான எண்ணமுடையவன் (அர்த்தி தார்த்த பரிதான தீட்சிதம்)

(xiii). பாகனுக்கு வாழ்க்கைக்குரிய பொருள்களைச் சம்பாதித்துக் கொடுக்கும் யானை; எம்பெருமானும் அர்ச்சக பரிசாரர்களுக்கு உதவுவான்.

இங்ஙனம் பல உவமப் பொருத்தங்களைக் கண்டு கொள்ளலாம்.

(ஆ) நீர் : 'நீரகத்தாய்'! என்று எம்பெருமானைக் கூவி அழைக்கின்றார் கலியன் (திருநெடுந். 8). நீரின் இயல்பை உடையவனான எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் தலமாதல் பற்றி இத்தலத்திற்கு 'நீரகம்'[9] என்று திருநாமமாயிற்று. இவ்விடத்து எம்பெருமானை 'நீரகத்தாய்!' என விளிக்கின்றார்.

நீர்க்கும் எம் பெருமானுக்கும் இயல்பாக உள்ள ஒற்றுமைகள்;

(i) நீர் பள்ளத்தில் பாயும்; மேட்டில் ஏறுவது அருமை. எம் பெருமானும் சாதி முதலியவற்றால் குறைந்தவரிடத்தே எளிதாகச் செல்லுவான்; உயர்ந்தோர் என்று மார்பு நெறித்திருப்போரிடத்தே செல்ல விரும்பான். பாண்டவர்க்காக தூது சென்ற போது 'ஞானத்தால் சிறந்தோம்' என்றிருக்கும். வீடுமரையும், 'குலத்தால் சிறந்தோம்' என்றிருக்கும் துரோண ரையும் 'செல்வத்தால் சிறந்தோம்' என்றிருக்கும் துரியோதன னையும் ஒருபொருளாக மதியாமல் இவை எல்லாவற்றிலும் தாழ்ந்தவராகத் தம்மைக் கருதியிருந்த விதுரனுடைய திருமாளிகையிலே தானாகச் சென்று அமுது செய்தருளினான் கண்ணபிரான். ஆகவே, பள்ளத்தே ஓடிப் பெருங்குழியே தங்கும் இயல்பு ஒக்கும்.

(ii) நீர் இல்லாமல் ஒரு காரியமும் ஆகாது. 'நீரின்றி அமையாது உலகம்' (குறள்- 10) என்பது வள்ளுவர் வாக்கு. எம்பெருமான் இன்றி ஒரு காரியமும் ஆகாது. 'அவன் அன்றி

9. இது காஞ்சி உலகளந்த பெருமாள் சந்நிதியின் சுற்றுப் பிரகாரத்தில் உள்ள ஒரு சிறு கோயில் (108 திருப்பதிகளில் இதுவும் ஒன்று).

ஓர் அணுவும் அசையாது' என்பது முதுமொழி. ஒருவன் விரும்பினதை வேறொருவன் விரும்பாதபடி உலகமே வெவ் வேறு விருப்பத்தையுடையதாயினும் எல்லோரும் நீரை விரும்பியேயாக வேண்டும்; அது போலவே எம் பெருமானையும்.

(iii). நீருக்குக் குளிர்ச்சி இயற்கை; வெப்பம் வந்தேறி; எம் பெருமானுக்கு தண்ணளி இயற்கையாய்ச் சீற்றம் வந்தேறியா யிருக்கும். "நீரிலே நெருப்புக் கிளருமாப்போலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தால் சீற்றம் பிறந்தால்" (முமுட்சு- 127) என்ற திவ்விய சூக்தி காண்க.

(iv). நீர் நம் விருப்பப்படித் தேக்கி வைக்கவும் ஓட விடவும் உடையதாயிருக்கும். எம்பெருமான் இயல்பும் அப்படியே. ஆண்டாள் தான் சூடிக்களைந்த மாலையிலே விலங்கிட்டு வைத்துப் பூசித்தான் எம்பெருமான்; பாண்டவர்க்காக கழுத்திலே ஓலைக் கட்டித் தூது நடந்தான்.

(v). நீர் சுட்டாலும் அதனை ஆற்றுவதற்கு நீரே வேண்டும். ``தருதுயரம் தடாயேல் உன்சரண் அல்லால் சரண் இல்லை" (பெரு. திரு. 5;1) என்றார் குலசேகரப்பெருமாள்.

(vi). நீரானது மற்ற பண்டங்களைச் சமைப்பதற்குக் கருவியாயுமிருக்கும்; தனிப்படத் தானே குடிக்கத் தக்கதுமா யிருக்கும். எம்பெருமானுக்கும் உபாயத்துவம் (வழி) உபேயத் துவம் (பேறு) என்ற இரண்டு தன்மைகள் உண்டல்லவா? எம்பெருமானைக் கொண்டு வேறு பலன்களைப் பெற விரும்புவாரும் எம்பெருமான் தன்னையே புருஷார்த்தமாகக்[10] கொள்வாரும் உள்ளமை காண்க.

10. புருஷார்த்தம் – புருஷன் + அர்த்தம்; புருஷன்– ஆன்மா; அர்த்தம்– பொருள். ஆன்மா அடையும் பொருள் வீடுபேறு.

(vii). அன்னம் முதலானவை தமக்குப் பிரதிநிதிகளைச் சகிக்கும்; அதாவது காய்கனி கிழங்கு வேர் பலா முதலிய வற்றால் உடலைப் பாதுகாக்கலாம்; நீரானது அப்படிப் பிரதிநிதியொன்றையும் சகிக்கமாட்டாது;நீருக்கு நீரே வேண்டும். அப்படியே எம்பெருமானுக்கும் பிரதிநிதி கிடையாது; குணாநுசந்தானத்தாலும் போதுபோக்குதல் அரிது. "ஒருநாள் காண வாராயே!" (திருவாய் 8.5;1), "அடியேன் தொழ வந்தருளே" (மேலது 5.7;6) என்று பிரார்த்தித்துப் பெற்றே தீரவேண்டும்.

(viii). சோறு உண்ணும்போது நீர் இல்லாமல் முடியாது; அப்படி நீர் வேறொன்றை விரும்புவதன்று. எம்பெருமானும் அப்படியே; உபயாந்தரங்களுக்கு எம்பெருமான் வேண்டும்; எம்பெருமான் இவற்றை விரும்பாதவன். "உன்னல்லால் யாவராலும் ஒன்றும் குறை வேண்டேன்" (திருவாய். 5.8;3)

(ix). கொள்ளும் பாத்திரங்களின் வேறுபாடின்றி நீர்தான குறைய நில்லாது;எங்கும் நிரம்பியிருக்கும். எம்பெருமானும் "கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல்லாம் தரும் கோதில் என் வள்ளல்" (திருவாய். 3.9:5). கொள்வார் குறையே யத்தனை. ஐசுவரியமே போதும் என்பாரும், கைவல்யமே போதும் என்பாருமாக குறையக் கொள்வார் குற்றமேயாகும்.

(x). நீர் ஐவகைப்பட்டிருத்தல் போல எம்பெருமானும் ஐவகைப் பட்டிருப்பன், எங்ஙனமென்னில்: (அ) பூமிக்கடியில் பதிந்து கிடக்கும் நீர் (ஆ) ஆவரணநீர் (இ) பாற்கடல்நீர், (ஈ) பெருக்காற்று நீர் (உ) தடாகங்களில் தேங்கும் நீர் - என ஐவகைப் பட்டிருக்கும். பர, வியூக, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை என எம்பெருமானுடைய நிலைமைகளும் ஐவகைப்பட்டிருக்கும்.

(xi). நீரானது பரிசுத்தமானதாயும் தான் இருக்கும் இடத்திற்குத் தக்கதாய்க் கொள்ளத்தக்கதாயும் விடத் தக்கதாயும் இருக்கும். அப்படியே தேவதாந்தரங்களில் அந்தர்யாமியான எம்பெருமான் விடத்தக்கவனாகவும், கூராழி வெண் சங்கேந்தின எம்பெருமான் கொள்ளத் தக்கவனாகவும் இருப்பது தெளிவாகும்.

(xii). நீர் தோண்டத்தோண்டச் சுரக்கும்; "தொட்டனைத்து ஊறும்" (குறள்-396) எம்பெருமானும் "கொள்ள மாளாஇன்ப வெள்ளம் கோதில தந்திடும்" (திருவாய் 47:2)

(xiii). நீர் தனக்கொரு பயனின்றியே பிறர்க்காகவே இருக்கும்; எம்பெருமானும் அவனைச் சார்ந்தவையும்அவனை அடைந்தவர்க்காகவே இருக்கும்.

(xiv). நீர் தானாகப் பெய்ய வேண்டுமேயன்றி ஒருவரால் வலிந்து பெய்விக்க முடியாதது. எம்பெருமான் இயல்பும் அப்படியே.

(xiv). நீர் கடலிலிருந்து காளமேகம்வழியாக வந்தாலன்றி உயிர் வாழப் பயன்படுத்துவதாகாது. எம்பெருமானும் சாத்திரங்களிலிருந்து ஆசாரியர் முகமாக வந்தே அடையத் தக்கவனாகின்றான்.

(xvi). வசிட்ட சண்டாள வேறுபாடின்றியே அனைவரும் ஓர் துறையிலே படிந்து குடைந்தாடலாம்படி இருக்கும் நீர்;எம் பெருமானும் "நிகரில் அமரர்முனிக் கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே!" (திருவாய் 6.10:10) என்றும், "கானமும் வானரமும் வேடுமுடை வேங்கடம்" (நான், திருவந் 47) என்றும் சொல்லுகிறபடியே பெரியார் சிறியார் என்றும் வேற்றுமை யின்றி ஒக்க அடையலாம்படி இருப்பான்.

(xvii). நீர் சிறிது துவாரம் இருப்பினும் உள் புகுந்து விடும்; எம் பெருமானுக்குச் சிறிய வியாஜமே போதும்," திருமாலிருஞ்

சோலை மலை என்றேன்; என்னத் : திருமால் வந்து என் நெஞ்சுநிறையப் புகுந்தான்" (திருவாய் 10.8;1)

(xviii). தீர்த்தச் சிறப்புகளிலே நீருக்கு மகாத்மியம் அதிகம். எம்பெருமானுக்கும் கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான திருப்பதிகளிலே சிறப்புப் பொலியும்.

(xix). தாபம் மிக்கவர்கள் நீரை முகத்திலே தெளித்துக் கொள்வது, முதுகில் கொட்டுவது, உள்ளில் இழிச்சுவது, படிந்து குடைந்தாடுவது போல் "வாக்கினால் கருமம்தன்னால் மனத்தினால் சிரத்தை தன்னால். வேட்கை மீதூர வாங்கி" (திருக்குறுந்.4) விழுங்குவார்கள். எம்பெருமானையும்.

(xx). நீர் வேண்டியவன் நுனி நாக்கு நனைக்கக் கிடைத்தால் போதுமென்பன், "கூராழி வெண்சங்கேந்திக் கொடியேன்பால் வாராய் ஒருநாள் மண்ணும் விண்ணும் மகிழவே" (திருவாய். 69:1) என்பர்.

(xxi). நீரில் சிறிய கல்லும் அமிழும்; பெரிய தெப்பமும் மிதக்கும்; எம்பெருமான் பக்கலிலும் பிரமாவாய் இழந்து போதல், இடைச்சியாய்ப் பெற்று விடுதல். செய்யக் காண்கின்றோம். "நேரே, கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான் கண்ணனடிக் கமலந்தன்னை அயன்" (முதல் திருவந். 56), "மருவுநின் திருநெற்றியில் சுட்டி அசைதர மணியாயிடை முத்தம் தருதும், உன் தாதையைப் போலும் வடிவுகண்டு கொண்டுள்ளம் குளிர, விரலைச்செஞ்சிறுவாயிடைச் சேர்த்து வெகுளியாய் நின்றுரைக்கும் மவ்வுரையும், திருவிலேன் ஒன்றும் பெற்றிலேன் எல்லாம் தெய்வ நங்கை யசோதை பெற்றாளே" (பெருந்திரு.7;5) என்பன அடைவே பிரமாணம். பகவத்

குணங்களில் "சிறுமாமனிசர்" (திருவாய். 8.10:3); அமிழ்தலும், "ஊன் மல்கிமோடு பருப்பார்" (திருவாய். 3.5:7); வாய்க்கரையில் நிற்றலும் கொள்க.

இங்ஙனம் பல,

(இ). மேகம் : 'உலகம் ஏத்தும் காரகத்தாய்"[11] (திருநெ.10) மேகத்தின் இயல்பு போன்ற இயல்புடையவன் வாழும் இடமாதல் பற்றி இத்தலத்திற்குக் 'காரகம்' என்று திருநாமம் ஆயிற்று என்பர்.

எம்பெருமானுக்கு மேகத்தோடு ஒற்றுமை பல நிலைகளால் உய்த்துணரத் தக்கது.

(i). பெய்ய வேண்டும் இடமாகவும் சென்று பெய்யும் மேகம்; "வந்தருளியென் நெஞ்சு இடங் கொண்ட வானவர் கொழுந்து!" (திருவாய். 5.7:7) என்று ஆங்காங்குச் சென்று கருணை மழை பொழிவன் எம்பெருமான்.

(ii). மின்னலுள்ள காலம் நீர் நிரம்பியிருக்கும் மேகம், எம் பெருமானுக்கும் பிராட்டியோடு கூடியிருக்கும் காலத்தில் கருணைரசம் விஞ்சியிருக்கும். "இவள் சந்நிதியிலே காகம் தலைப்பெற்றது; அஃது இல்லாமையால் இராவணன் முடிந்தான்"(முமுட்சு-115) என்ற முமுட்சுப்படியின் திவ்விய சூக்தியும் காண்க.

(iii). மொண்ட இடத்திலும் (கடல்) பெய்யும் மேகம்; தனக்கு உபதேசிக்குமவர்களுக்கும் உபதேசிக்குமவன் எம்

11. இது காஞ்சி உலகளந்த பெருமாள் சந்நிதியின் சுற்றுப் பிராகாரத்தில் உள்ள ஒரு சிறு கோயில் (108 திருப்பதிகளில் இதுவும் ஒன்று).

பெருமான். வசிட்டாதிகளுக்கும் ஞானப் பிரதானம் பண்ணினான் இராமபிரான். சித்திரகூடத்தில் வசிட்டன் பெருமானிடம் சில தர்ம சூக்குமங்கள் கேட்கப் பெற்றா னாயிற்று.

(iv). பெய்யப்பெறாத காலத்திலே வறக்கும் மேகம்; நெஞ்சுலர்ந்து பேசினானன்றோ எம்பெருமானும், திரௌபதிக்கு ஆபத்திலே அருகேயிருந்து உதவப் பெறாத குறைக்காக,

(v). இன்னகாலத்திலே மேகம் பெய்யுமென்று அறுதி யிடவல்லார் எவரும் இலர்; பெய்ய வேண்டிய காலத்திலே பெய்யாதொழியவும், பெய்வதற்குச் சந்தர்ப்பம் இல்லாத காலத்தில் எண்ணாததாகவும் வந்து பெய்யவும் கடவது மேகம்; எம்பெருமான் படியும் அப்படியே; "வந்தாய் போல வாராதாய்!; வாராதாய்போல் வருவானே!" (திருவாய். 6.10:9). திரௌபதிக்கு ஆபத்திலே வந்து முகம் காட்டாதொழிந்தான்; விரும்புதலை எதிர்பாராமல் "தாவியன்று உலகமெல்லாம் தலைவிளாக் கொண்டான்" (திருமாலை-35).

(vi). "வனத்திடரை ஏரியாக வெட்டியாயிற்று. நீ மழை பெய்ய வேண்டும்" (இரண். திருவந். 16) என்று வளைப்பிட வொண்ணாது மேகம்; எம்பெருமான் படியும் இங்ஙனமாயிறே" பெண்ணுலாம் சடையினானும் பிரமனும் உன்னைக் காண்பான் "எண்ணிலா வூழியூழித் தவஞ்செய்தார் வெள்கி நிற்ப; விண்ணுளார் வியப்ப வந்து ஆனைக் கன்றருளை யீந்தவனன்றோ?" (திருமாலை - 44)

(vii). ஜலஸ்தான விபாகமின்றியே பெய்யும் மேகம், வேடன், வேடுவிச்சி, பட்சி, குரங்கு, சராசரம், இடைச்சி,

இடையர், தயிர்தாழி, கூனி, மாலாகாரர், பிணவிருந்து வேண்டடிசிலிட்டவர், அவன் மகன், அவன் தம்பி, ஆனை, அரவம், மறையாளன், பெற்ற மைந்தன்[12] என்னும்படியிறே பகவத் விஷயீகாரம் பெற்றவர்களிருப்பது.

(viii). மேகம் மழைக் காலத்தில் பெருமுழக்கமிட்டுப் போய்விடும். மழை பெய்யாது; பெய்யுங்காலத்தில் ஆடம்பர மறப்பெய்யும். எம்பெருமான் குசேலனுக்கு அருள் செய்தபடி இங்ஙனமன்றோ?

(ix). விராடபர்வ காலட்சேபத்துக்கு வரும் மேகம்; பகவத் விஷய காலட்சேபங்களிலே வந்து நிற்பான் எம்பெருமான். 'ஸ்ரீசைலேசதயாபாத்ர' (தனியன்) என்று வந்தார் அன்றோ அரங்கநாதன் பெரிய ஜீயர்கோஷ்டியிலே?

(x). சுக்திகளிற் பெய்து முத்தாக்கும் மேகம்; அடியார்க்கு இன்பமாரியாகிய (திருவாய் 4.5;10) கடாட்சதாரையும் ஆழ்வார்கள்ஆசாரியர்களிடத்தே பிரவகித்து மிக்க பயன் விளைக்கு மிறே.

12. ஆசா ஹிரு 228 (புருடோத்தம நாயுடு பதிப்பு) வேடன்–குகன் வேடுவிச்சி–சபரி; பட்சி–சடாயு; குரங்கு–சுக்கிரீவன்; சராசரம்–அயோத்தியில் வாழும் சராசரம்; இடைச்சி – சித்தயந்தி; இடையர் – ததிபாண்டன்; தயிர்தாழி–ததி பாண்டனுடைய தாழி; கூனி–கிருட்டிணாவதாரத்தில் கண்ணனுக்குச் சந்தனம் தந்தவள்; மாலாகாரர்– கண்ணன் காலத்து பக்தர்; பிணவிருந்து – இதையிட்ட கண்டாகர்ணன்; வேண்டடிசில் இட்டவர்–பக்தவிலோசனத்து ரிஷிபத்தினிகள்; அவன் மகன்–பிரகலாதன் அவன்தம்பி – வீடணன்; ஆனை–கஜேந்திராழ்வான்; அரவம்–சுமுகன்; மறையாளன் – கோவிந்தசாமி; பெற்ற மைந்தன் – மார்க்கண்டேயன் ஆக பதினெண்மர்.

(xi). "விண்ணீலமேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்" (நாச்.திரு. 8:1) இத்யாதிப்படியே தூதுவிடப்படும் மேகம்; எம்பெருமானும் 'இன்னார் தூதனென நின்றான்' (பெரி.திரு. 2.2:3), "கோதை வேல் ஐவர்க்காய் மண்ணகலம் கூறிடுவான்; தூதனாய், மன்னவனால் சொல்லுண்டானிறே"(மேலது 11.5;7).

(xii). மழை பெய்ய எல்லா மரங்களும் தளிர்க்கும். எருக்கிலை போல்வன வீழ்ந்தொழியும்; ஆகவே, மழை சிலர்க்குத் தீங்கு; சிலர்க்கு நன்மை. எம்பெருமான்படியும் அப்படியே."கஞ்சன் நாள். கவர் கருமுகில்; எந்தாய்" (பெரு.திரு. 7:10) "தாயர் மகிழ ஒன்னார் தளர"(பெரியாழ் திரு.1.7;11) இத்யாதி.

(xiii). ``எத்தனையும் வான் மறந்த காலத்தும் பைங்கூழ்கள்; மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும்" (பெரு..திரு. 5;7) என்கின்றபடியே பயிர்கள் வேறு புகலற்று எதிர்பார்க்கப் பெற்றிருக்கும் மேகம்; "களைவாய் துன்பம்; களையா தொழிவாய் களைகண் மற்றிலேன்" (திருவாய் 5.8;8) என்றுஅந்நயகதிகளால் எதிர்பார்க்கப்படுகை ஒக்குமல்லவா?

(xiv). "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத் துப்பாயதூஉம் மழை" (குறள்-12) என்கின்றபடியே அன்னத்தின் அபிவிருத்திக்கு ஏதுவாகையாலே போக சாதனமாயும் விடாய் தீரப் பருகுகையாலே ஸ்வயம் போக்கியமாயும் இருக்கும் மேகம்; அடைவிப்பானாயும் அடையப்படுபவனாயும் அன்றோ எம்பெருமான் இருப்பது ?

(xv). எத்தனை கண்ணநீர் விழவிட்டாலும் விருப்பமில் லாதவன் என்று வாளாகிடக்கும் மேகம்; பரதாழ்வான் பலருடனே சித்திரகூடத் தருகே போந்து கண்ணநீர் விழவிட்டு

வேண்டினவிடத்தும் தன் மனோரதம் பெறாமலே மீண்டான் அன்றோ?

(ஈ). இரத்தினம் : 'மைம்மான மணியை அணிகொள் மரகதத்தை' (பெரி.திரு. 8,9;)என்பது மங்கைமன்னனின் வாக்கு. மை - மை நிறம் மானம் மணி - பெரு விலை பெறும் நீல இரத்தினம்; மரகதம் - பச்சை மணி. "எய்ப்பினில் வைப்பினைக்; காசினை மணியை" (பெரி. திரு. 7.10;4) என்பது மங்கை மன்னனின் திருமொழி. இரத்தினத்திற்கும் எம்பெருமானுக்கும் பல நிலைகளில் ஒப்புமை உண்டு.

(i). இரத்தினத்தைச் சொந்தமாகவும் அநுபவிக்கலாம்; விற்பனை செய்து வேறு பொருள்களையும் பெறலாம். அப்படியே "எம்பெருமானை புருஷார்த்தமாகவும்[13] கொள்ள லாம். அவனை உபாயமாக்கி ஐசுவாரிய கைவல்யார்த்திகளான வேறு புருஷார்த்தங்களையும் பெறலாம்"

(ii). இரத்தினத்தை அறியாதவன் அற்ப விலைக்கு விற்பன். மதிப்பறிந்தவன் உள்ள விலைக்கு விற்பன்; உத்தம் அதிகாரி அதனை விற்பனை செய்யாமல் மார்பிலணிந்து அநுபவித்து மகிழ்வன். இங்ஙனமே எம்பெருமானைக் கொண்டு ஐசுவரியம் போன்ற கீழான பலன்களைக் கொள்வாரும், அவனை மோட்சோபாயமாக்கிக்கொண்டு மோட்ச புருஷார்த்தத்தைக் கொள்வாரும் அவனை 'எனக்குத் தேனே பாலே கன்னலே அமுதே" என்று தாமே அநுபவிப்பவர்களுமாக இருப்பார்கள்.

(iii). இரத்தினத்தை இழந்தவன் கதறியழுவான்; எம் பெருமானை இழந்தவனும் அப்படியே. இராமரத்தினத்தை

13. புருஷன்—ஆன்மா; அர்த்தம் பொருள். ஆன்மா அடையும் பொருள்—வீடுபேறு.

இழந்த பரதன் அவையில் கதறியழுதானன்றோ? "பழுதே பல பகலும் போயின என்று அஞ்சி அழுதேன்" (முதல் திருவந்.16), "இன்பத்தை இழந்தபாவியேன் எனதாவி நில்லாதே" (பெரு. திரு.7:4) ``உன்னைக் காண்பான் நான் அலப்பு ஆய் ஆகாயத்தை நோக்கியழுவன்" (திருவாய் 5.8;4) என்றிப்படியெல்லாம் கதறியழுவார்கள்.

(iv). இரத்தினமுடையவன் மார்பு நெறிப்பன். எம்பெருமானைக் கைக்கொண்டவர்களும் "எனக்கு யாரும் நிகரில்லையே" (இராமா நூற் 47), "மாறுளதோ இம்மண்ணின் மிசையே?" (திருவாய் 6.4;9), "எனக்கென்னினி வேண்டுவதே?" (திருவாய் 6.4:4), "இல்லையெனக்கெதிரே" (பெருந்தொகை 1438) என்று செருக்கிப் பேசுவார்கள்.

(v). இரத்தினம் பெற்றுள்ளவனை உலகம் எல்லாம் தொடரும். எம்பெருமானைக் கைக்கொண்டவனையும் அப்படியே.

(vi). இடையில் ஒரு புருஷனைக் கொண்டே இரத்தினம் வாங்கப்படும். புருஷகாரமின்றி எம்பெருமானைப் பெற முடியாது. "வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" (திருவாய் 4.6;8).

(vii). இரத்தினத்திற்குச் சில ஆதாரங்களில் (ஆச்ரயங்களில்) மதிப்பு அதிகப்படும். எம்பெருமானுக்கும் அப்படியே. ஆழ்வார்கள் திருவாக்கில் புகுந்து புறப்பட்ட திருப்பதிகளில் அன்றோ எம்பெருமானுக்கு மதிப்பு அதிகம்.?

(viii). இரத்தினம் ஒளியைவிட்டு இராது. எம்பெருமானும் பிராட்டியை விட்டு இரான்.

(ix). இரத்தினத்திற்கு ஒளியால் மகிமை; எம்பெருமானுக்கும் பிராட்டியாரால் ஏற்றம்.

(x). இரத்தினத்திற்கு ஒளியால் ஏற்றமென்றாலும் இரத்தினத்தின் சுதந்திரப் பெருமைக்கு ஒரு குறை இல்லை; எம்பெருமானுக்கும் அப்படியே.

(xi). இரத்தினம் கடல், மலை முதலிய இடங்களில் உள்ளது. எம்பெருமானும் திருப்பாற்கடல், திருமலை முதலான இடங்களில் உள்ளான்.

(xii). இரத்தினம் எவ்வளவு உயர்ந்ததாயினும் தலைப்பில் முடிந்து ஆளலாம்படி இருக்கும்; எம்பெருமானும் பரத்துவத்தை மறைத்து சௌலப்பியத்தைக் காட்டுகின்றவனன்றே?

(xiii). இரத்தினம் பெற்றவர்கள் இரவும் பகலும் உறங்கார்; எந்த வேளையில் யார் கொள்ளைகொள்வரோ என்று அஞ்சி இருப்பார்கள். எம்பெருமானைப் பெற்றவர்களும் அப்படியே, "கண்ணாரக் கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ? கண்கள் துஞ்சுதலே" (திருவிருத்-97) என்கின்றபடியே காண்பதற்கு முன்பு உறக்கம் இல்லை; கண்ட பின்பும் இல்லை.

இப்படிப் பல உவமப் பொருத்தங்கள்.

**(உ). நிதி :** 'வைத்தமாநிதியாம் மதுசூதனையே அலற்றி" (திருவாய். 6.7;11) என்பது நம்மாழ்வாரின் திருவாக்கு.

நிதி-தனம் வைத்தமாநிதி - எம்பெருமான். இந்த இரண்டும்பற்றிய சிந்தனையோட்டம். புதைத்து வைக்கப் பெறும் பொருள் 'நிதி' எனப்படும். சென்னை போன்ற

இடங்களில் வங்கிபோல் செயற்படும் நிறுவனங்கள் 'நிதி' என்று பெயரால் வழங்குதல் காண்க. தைத்திரிய உபநிடதத்தில் எம்பெருமான் 'நிதி' எனப்படுவான்.

**இரண்டிற்கும் வேற்றுமை :** நிலத்தினுள் புதைத்து வைத்து ஆள வேண்டியதாயிருக்கும் நாட்டிலுள்ள நிதி; எம்பெருமானாகின்ற நிதி அங்ஙனமின்றி நெஞ்சிலே புதைத்து ஆளத்தக்கதாக இருக்கும். இந்த வேற்றுமை கண்டு மகிழத்தக்கது.

**இரண்டிற்கும் ஒற்றுமை:** (i) நிதியானது தன்னையடைந் தவர்களை இரவும் பகலும் உறங்கவொட்டாது ; எந்த இடத்தில் யார் கொள்ளை கொள்வரோ என்ற அச்சத்தால் துஞ்சா திருப்பர் நிதியுடையோர். எம்பெருமானும் அப்படியே; "கண்ணாரக்கண்டு கழிவதோர் காதல் உற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே?" (திருவிருத்.97).காண்பதற்கும் முன்பும் உறக்கம் இல்லை; கண்டாலும் காதல் மிகுதியால் உறங்குவதில்லை;

(ii). நிதியானது 'சித்தாஞ்சனம்' அணிந்த சில பாக்கிய சாலிகட்கே கிடைக்கும். எம்பெருமானும் 'பக்தி சித்தாஞ்சனம்' பெற்ற ஆழ்வார்கள் போன்ற சில பாக்கியசாலிகட்கே தென்படுவன.

(iii). நிதியுடையவன் மார்பு நெறிப்பன். எம்பெருமானைக் கைக்கொண்டவர்களும் 'எனக்கு ஆரும் நிகரில்லையே' (இராமா.நூற் 47),"மாறுளதோ இம்மண்ணின் மிசையே?" (திருவாய். 6.4:9), "இல்லையெனக்கெதிரில்லையெனக்கெதி ரில்லையெனக் கெதிரே" (பெருந்தொகை-1438) என்று செருக்கிப் பேசுவார்கள்.

(iv). நிதி படைத்தவனை உலகமெல்லாம் போற்றிப் புகழும்; எம்பெருமானைக் கைக்கொண்டவர்களும் அறிஞர்களால் புகழப்பெறுவர்.

(v). நிதியை இழந்தவன் கதறியழுவன்;எம்பெருமானை இழந்தவனும் அப்படியே. சீராமனாகிய வைத்தமாநிதியை இழந்த பரதாழ்வான் சபையில் கதறிஅழுதானன்றோ? "பழுதே பல பகலும் போயின என்று அஞ்சி, அழுதேன்" (முதல். திருவந். 16) "இன்பத்தை இழந்த பாவியேன் எனதாவிநில்லாதே" (பெரு திரு 7: 4) "எழில் கொள் நின் திருக் கண்ணினை நோக்கந் தன்னையும் இழந்தேன் இழந்தேனே" (பெரு.திரு.7;7) "உன்னைக் காண்பான் நான் அலம்பு ஆய் ஆகாயத்தை நோக்கி அழுவன்" (திருவாய். 5.8:4), "என் சொல்லிப் புலம்புவனே?" (திருவிருத்.86) என்று இப்படியெல்லாம் கதறியழுவார்கள். எம்பெருமானுடைய சிந்தனையை இழந்து ஒரு கணப்பொழுது கழியப் பெற்றதும் கள்வர் எல்லாச் சொத்துகளையும் கொள்ளை கொண்டால் எப்படிக் கதறியழக் கூடுமோ அப்படிக் கதறி அழ வேண்டும் என்பர்.

# 15. சம்பிரதாயங்களாக மேலும் சில

முன்னர்ச் சுட்டியது போக மேலும் சில ஈண்டுக் காட்டப்பெறுகின்றன. முதலில் வைணவ ஆகமங்கள்பற்றிய குறிப்புகள் தரப்பெறுகின்றன.

**1. வைணவ ஆகமங்கள் : பாஞ்சராத்திரம், வைகானசம்** ஆகிய இரண்டும் வைணவஆகமங்கள் ஆகும். எம்பெருமானை உபாசிப்பது மானசம், ஓமம், விக்கிரகஆராதனம் என்று மூன்று விதமாக நடைபெறும். மூன்றாவது வகை **ஆத்மார்த்தம்** என்றும் **பரார்த்தம்** என்றும் இருபிரிவினையுடையது. ஒருவர் தம் குடும்பநலன்களைக் கருதித் தம் இல்லத்தில் எம்பெருமானின் திருமேனியை எழுந்தருளப்பண்ணித் தம் சக்திக்கு ஏற்றவாறு ஆராதிப்பது ஆத்மார்த்தம் ஆகும். வீட்டில் ஏற்றப்பெற்ற விளக்கு எங்ஙனம் வீடு முழுதும் ஒளியை உண்டாக்குகின்றதோ அம்மாதிரியே இவ்வாராதனம் அவர்தம் குலம்முழுவதும் மேம்பாடு அடைவதற்குக் காரணமாக இருக்கும். பரார்த்தம் என்பது உலக நலன்களைக் கருத்தில் கொண்டு திருக்கோயிலில் எழுந்தருளப் பண்ணியிருக்கும் திருமேனிகளை விதிப்படி வழிபடுவது. சந்திர சூரியர்களின் ஒளி உலகினருக்குப் பயன்படுவதுபோலே இந்த வழிபாட்டால் உண்டாகும் பலன் உலகம் முழுவதையும் வாழ்விக்கும்.

இவன் குறிப்பிட்டவாறு பிரதிட்டை செய்யப்பெற்ற திருமேனியின் சக்தி தாரதம்மியத்தால் அந்தந்த தலங்கள் (1) திவ்வியம் (2) ஆர்ஷம் (3) பௌராணம்(4) மாநுசம், (5) ஸ்வயம், வியக்தம் என்று ஐந்து வகையாகப் பாகுபடுத்தப்பெற்றுள்ளன. இந்தத் திருத்தலங்களின் சொரூபசக்தி விசேடங்கள் ஆகமங்களில் விரிவாக எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. இந்த ஆகமங்கள் பாஞ்சராத்திரம், வைகாநச கல்பசூத்திரம் என்பவையாகும். இவற்றுள் பாஞ்சராத்திர சம்ஹிதை ஆதி கேசவப்பெருமாள் திருவுள்ளப்படி திரேதாயுகத்தில் உண்டானது. அனந்தன், கருடன், விஷ்வக்சேனர், நான்முகன், சிவன் இவர்களனைவர்க்கும் ஏற்பட்ட ஐயங்களைப் பகவான் ஐந்துஇரவுகளில் போக்கியருளின செய்திகளைக் கொண்டது. வைகானச கல்பசூத்திரம் சீமன் நாராயணனே விகனசர் என்னும் மாமுனிவருக்கு அருளிச் செய்தது.

இந்த இரண்டு ஆகம சாத்திரங்களும் ஞானம், யோகம், கிரியை, சரிதம் இவற்றை நுவலும். இவற்றுள் கிரியையும் சரிதமும் நம் சந்ததிகளுடன் சம்பந்தப்பட்டவை. கிரியை என்பது திருக்கோயில்கள் கட்டப் பெறுவது பற்றியும், திருமேனிகள் செய்வதுபற்றியும் இத்திருமேனிகளைப் பிரதிட்டை செய்வதுபற்றியும் சொல்லும். சரியை என்பது திருக்கோயிலில் நடைபெறும் தினசரிச் சடங்குகள், உற்சவங்கள் நடைபெறும் முறை இவைபற்றிச் சொல்லும். இந்த இரண்டு சாத்திரங்களும் வைணவ சந்நிதிகளைப்பற்றியே ஏற்பட்டிருந்தாலும், சில சந்நிதிகள் பாஞ்சராத்திர ஆகம நெறிகளையும் மற்றவை. வைகானச ஆகம நெறிகளையும் மேற்கொண்டு நடைபெற்று வருகின்றன.

கோயில் (திருவரங்கம்), பெருமாள்கோயில்(காஞ்சி), திருக்குடந்தை, திருநாராயணபுரம், திருவெவ்வுளூர் (திருவள்ளூர்), திருநின்றவூர் முதலான சந்நிதிகளில் ஆராதனம் பாஞ்சராத்திரம் ஆகமநெறிகளையொட்டி நடைபெறுகின்றது. திருமலை, திருவல்லிக்கேணி, திருமாலிருஞ்சோலைமலை, திருக்கோட்டியூர், திருநீர்மலை முதலான சந்நிதிகளில் வைகானச ஆகம நெறிகளையொட்டி ஆராதனம் நடைபெற்று வருகின்றது. இந்தச் சந்நிதிகளில் ஆராதனம் செய்யும் முறையே பாஞ்சராத்திரிகளும் வைகானசர்களும்தான் அதிகாரிகளாவர். ஆனால் பதரிகாசிரமம் ஜகந்நாதம், திருவனந்தபுரம் முதலிய திருத்தலங்களில் ஆக்னேயாகி புராணங்களில் நுவலப்பட்டபடி செய்யப்பெறும் ஆராதனமாதலால் எல்லாப் பார்ப்பனர்களும் அதிகாரிகளாக அமைகின்றனர்.

பாஞ்சராத்திரிகளும் வைகானசர்களும் தனித்தனியான குரு பரம்பரையையுடையவர்கள். தத்துவங்களிலும் இருவரிடையேயும் சொல் வேற்றுமை உள்ளது. பாஞ்சராத்திரிகர்கள் வாசுதேவன்,சங்கர்ஷணன்,பிரத்யும்னன், அநிருத்தன் என்ற நான்கு மூர்த்திகளின் விதானமாகவும்; வைகானசர்கள் விஷ்ணு, புருஷன், சத்தியன், அச்சுதன், அநிருத்தன் என்ற ஐந்து மூர்த்திகளின் விதானமாகவும் எம்பெருமானை ஆராதித்து வருகின்றனர். வைகானகர் ஆராதனம் செய்யும் இடங்களில் ஏதாவது காரணங்களால் ஆராதனம் தடைப்பட்டால், எக் காரணத்தைக் கொண்டும் இதரர்கள் அதனைச் செய்தல் கூடாது. வைகானசர்களின் சந்நிதிகளில் ஆராதனம் செய்யும் இடங்களில் திருமேனியை இதரர்கள் தொடுவதையும்கூட அங்கீகரிக்காமல் பிராயச்சித்தமும் செய்வதுண்டு. பாஞ்சராத்

திரிகட்கு இந்த ஆட்சேபங்கள் இல்லை. ஆதலால்தான் இராமாநுசர்போன்ற ஆசாரியப் பெருமக்கள் பாஞ்சராத்திர ஆகமத்திற்கு ஏற்றம் கொடுத்தார்கள் என்று கருதலாம்.

வைகானசர்களின் பூசையில் மந்திரோச்சாரணம் முக்கியமாக இருக்கும் என்றும், பாஞ்சராத்திரபூசையில் தந்திரம் முக்கியமாக இருக்கும் என்றும் சொல்லுவார்கள். பாஞ்சராத்திரர்கள் அவசியம் நேர்ந்தால் பிராயச்சித்தத்திற்குப் பதிலாக தீட்சை செய்துகொண்டுதான் செய்வார்களாம். இந்த இரு வகையினரும் திருவிலச்சினை செய்து கொள்வ தில்லையாம். தங்களில் பெரியோர்களிடத்தில் தீட்சை பெற்றுக் கோயில்களில் பூசை செய்வர் என்பர். பாஞ்சராத்திரஆகமம் வைகானச ஆகமத்தைப்போலவே பூர்வீகமானதேயாகும். பிரம்மோற்சவத்தில்(பெரிய விழாக்களில்) பாஞ்சராத்திர சந்நிதிகளில் மூன்றாம் நாட்களிலும், வைகானச சந்நிதிகளில் நான்காம் நாட்களிலும் கருடசேவை நடைபெறுவதாகச் சொல்லப் பெறுகின்றது.

**2. பஞ்சம்ஸ்காரம் :** ஒரு வைணவனுக்கு அகத்தூய்மை, புறத்தூய்மை என்ற இருவகை தூய்மையும் இருத்தல்வேண்டும். இவற்றுள் அகத்தூய்மையாவது மனத்திலுள்ள காமம் குரோதம் முதலிய அழுக்குகளற்றும் எம்பெருமானிடத்தில் அன்பு பூண்டிருத்தலுமாகும். புறத்தூய்மையாவது சங்கு சக்கரம் முதலிய இலச்சினைகளைப்பெறுதலாகும். இந்தப் புறத்தூய்மை பஞ்சசம்ஸ்காரத்தில் அடங்கும். இவை தாபம், புண்ட்ரம் நாமம், மந்திரம், யாகம் என்பவையாகும். **தாபம்** என்பது ஓமத்தீயில் சுடப்பெற்ற சங்கு சக்கரங்களைப் புயங்களின் மேற்பகுதிகளில் தரித்துக்கொள்ளுதல். இங்ஙனம் சங்கு சக்கரங்களைப் பெற்றுக்கொள்வதை,

தீயிற் பொலிகின்ற செஞ்சுடர் ஆழி
திகழ்திருச் சக்க ரத்தின்
கோயிற் பொறியாலே ஒற்றுண்டு நின்று
குடிகுடி யாட்செய் கின்றோம் (7)

[செஞ்சுடர்-சிவந்த ஒளி; ஆழி- வட்ட வடிவமான பொறி, அடையாளம்;ஒற்றுண்டு -அடையாளம் செய்யப்பெற்று; குடிகுடி- வழிவழியாக; ஆட்செய்தல் -அடிமை செய்தல்]

என்று பெரியாழ்வார் திருப்பல்லாண்டில் குறிப்பிட்டுள்ளதை அறியலாம். புண்ட்ரமாவது, நெற்றி முதலிய பன்னிரண்டு இடங்களில் மேல்நோக்கி இடுக்கின்ற திருமண்காப்புகள். 'நாமம் என்பது, இராமாநுசதாசன் என்ற தாஸ்ய நாமத்தை பெறுதல். யாகம் என்பது பகவதாராதனமாகும். மந்திரம் என்பது எட்டெழுத்து மந்திர உபதேசம் பெறுதல். ஓவிய வடிவம் அல்லது திருமேனி வடிவமாகஇருக்கும் எம்பெருமானை ஆராதிப்பது சிறந்த பல யாகங்களைச் செய்வதிலும் மிக்கது. கற்புடை மகளிர்க்கு மாங்கல்யம் முதலியவற்றை அணிந்து கொள்ளல் இன்றியமையாததுபோல் ஸ்ரீவைணவரா யிருப்பவர்க்கு பஞ்சசமஸ்காரம் இன்றியமையாதது. இதனை ஓர் ஆசாரியன் மூலம் பெறுதல் வேண்டும்.

**3. திருமண்காப்பு :** இது வைணவர்களின் சமயக்குறி. எம்பெருமானின் வியூகநிலைகளை விளக்கும்போது[1] பன்னிரண்டு கிளைவியூகங்கள் குறிப்பிடப்பெற்றன. இந்தப் பன்னிருவரும் திருமாலடியார்களின் திருமேனியில்

1. வைணவ சமயத் தத்துவம்—வியூக நிலை காண்க. இந்நூல் பக். 199–200.

பன்னிரண்டு இடங்களில் அதிட்டித்திருந்து அவர்களின் திருமேனியைக் காப்பர்.

**(அ) நெற்றியில்—கேசவன் :** இவர் தங்கமயமாய் நான்கு புயங்களிலும் நான்கு சக்கரங்களைத் தரித்துக் கொண்டு **சீதேவிப்** பிராட்டியாரோடு சேவைசாதியப்பர்.

**(ஆ) வயிற்றில்—நாராயணன் :** இவர் நீலமேக சாமள வண்ணத்தராய் நான்கு புயங்களிலும் நான்கு சங்கங்களைத் தாங்கிக் கொண்டு **அம்ருதோத்பவை** பிராட்டியாருடன் சேவை பாவித்தருள்வார்.

**(இ) மார்பில்—மாதவன் :** இவர் இந்திர நீல இரத்தினத் துடன் நான்கு கைகளிலும் நான்கு கதைகளைத் தாங்கிக் கொண்டு **கமலைப்** பிராட்டியாராடு காத்தருள்வார்.

**(ஈ) கண்டத்தில்—கோவிந்தன் :** இவர் சந்திரகாந்தி யோடு நான்கு விற்களைத் தாங்கிய வண்ணம் **சாதுதேவி** (சந்திரகோபிநீ) பிராட்டியாருடன் சேவைபாலிப்பார்.

**(உ) வலப்புற வயிற்றில் விஷ்ணு :** இவர் தாமரைப் பூந்தாதின் நிறத்தோடு நான்கு கைகைளிலும் நான்கு ஹலாயுதங்களைப் (கலப்பை) பிடித்தவராய் **விஷ்ணு பத்தினி** பிராட்டியாருடன் சேவை தந்தருள்வார்.

**(ஊ) வலப்புறத்தில் — மதுசூதனன் :** இவர் தாமரைப் பூ நிறத்துடன் நான்கு திருக்கைகளிலும் நான்கு முசலங்களைத் தாங்கிக் கொண்டவராய் **வைஷ்ணவி** பிராட்டியாருடன் சேவை தந்தருள்வார்.

(எ) வலப்புறக் கழுத்தில் – திரிவிக்கிரமன் : இவர் அக்கினி காந்தியோடு கட்கங்களை நான்கு புயங்களிலும் தாங்கிக் கொண்டு வராரோகிணி பிராட்டியாருடன் சேவை பாலிப்பார்.

(ஏ) இடப்புறவயிற்றில்–வாமனன் : இவர் இளஞாயிறு வண்ணத்துடன் நான்கு கைகளிலும் வச்சிராயுதங்களைத் தாங்கியவராய் அரிப்பிரியை பிராட்டியாருடன் கருணை செய்வார்.

(ஐ) இடப்புயத்தில்–சிரீதரன் : இவர் தாமரையின் நிறத்தோடு நான்கு கைகளிலும் நான்கு வாள்களைக்கொண்டு சாரங்கணீ பிராட்டியாருடன் சேவையளிப்பார்.

(ஒ) இடப்புறக் கழுத்தில்–இருடிகேசன் : இவர் மின்னல் நிறத்துடன் நான்கு திருக்கைகளிலும் நான்கு உழலைத் தடிகளைத் தாங்கிய வண்ணம் தேவதேவி பிராட்டியாருடன் தயை செய்தருளிப் பொலிவார்.

(ஓ) முதுகடியில்–பதுமநாபன் : இவர் சூரிய ஒளியுடன் நான்கு கைகளிலும் நான்கு பஞ்சாயுதங்களைத் தாங்கிக் கொண்டு மகாலட்சுமி பிராட்டியாருடன் குளிர நோக்கி வாழ்த்துவார்.

(ஔ) பிடரியில்–தாமோதரன் : இவர் இந்திர கோபம் போன்ற ஒளியுடன் நான்கு கைகளிலும் நான்கு பாசாயுதங் களைக் கொண்டவராய் சர்வலோகசுந்தரி (சர்வாங்க சுந்தரி)ப் பிராட்டியாரோடு எழுந்தருளியிருந்து காத்தருள்வார்.

இத்திருமண்காப்பு எல்லா வகுப்பார்க்கும் பொது வானது. இதற்கு நீள அகல உயரம் இடைவெளி முதலிய அளவுகள் உண்டு. இவற்றை ஐந்து விரல்களாலும் தரிக்கலாம். ஒவ்வொரு விரலால் தரிக்கப்பெறுவதற்கும் தனித்தனிப் பலன் சொல்லப் பெற்றுள்ளது.

**4. நவிற்றவேண்டியமந்திரங்கள் :** இந்தப் பன்னிரண்டு புண்ட்ரங்களை தரிக்கும்போது நாவினால் நவிற்றவேண்டிய மந்திரங்கள் உள்ளன. நெற்றியில் வெள்ளை மண்ணால் புணர்ந்ததைத் தரிக்கும்போது "கேசவாய நம; என்றும், வயிற்றில் தரிக்கும்போது நாராயணாய நம; என்றும், மார்பில் தரிக்கும் போது கோவிந்தாயநம : என்றும், வறிற்றின் வலப்பாகத்தில் இடப்படும்போது விஷ்ணுவே நம; என்றும், வலப்புறத்தில் இடப்படும்போது மதுசூதனாயநம;, என்றும், வலக்கழுத்தில் இடப்பெறும்போது திரிவிக்கிரமாயநம; என்றும், வயிற்றின் இடப்பாகத்தில் இடப்படும்போது, வாமனாய நம; என்றும், இடப்புயத்தில் இடுங்கால் சிரீதரா நம; என்றும், இடக்கழுத்தில் தரிக்குங்கால் இருடிகேசாயநம; என்றும், முதுகின் அடிப்புறத்தில் தரிக்குங்கால் பதுமநாபாயநம; என்றும், பிடரியில் இடுங்கால் தாமோதராய நம; என்றும், பதின்மூன்றாவதாகச் சிரசில் இடுங்கால் வாசுதேவாயா நம"; என்றும் சொல்லிக் கொண்டே இடுத்தல்வேண்டும். கேசவாதி நாமங்களைச் சொல்லி இடப்பெறுவதால் திருநாமம் என்று பெயராயிற்று. பெண்கள் பிறைக் கீற்று போல் திருமண் இட்டுக் கொள்ள வேண்டும்.

**5. திருச்சூர்ணத்தைத் தரிக்கும்போது :** ஊர்த்துவப் புண்ட்ரத்திலுள்ள இடைவெளியில் திருச்சூர்ணத்தைத் தரிக்க வேண்டும். திருச்சூர்ணம் இலக்குமி சொரூபமானது. மஞ்சள் காப்பைத் தரித்துக்கொண்டு இலட்சுமியை அதில் ஆவாகணம் செய்தல் வேண்டும். மேலே குறிப்பிட்ட பன்னிரண்டு இடங்களிலும் இடப்படும் மஞ்சள் காப்புக்கு உரிய மந்திரங்கள் முறையே (அ) சிரீதேவியை நம; (ஆ) அம்ருத்தோ பவாயை நம; (இ) கமலாயை நம; (ஈ) லோக கந்தரியை நம; (உ) சிரீ விஷ்ணு பத்நியை நம; (ஊ) சிரீ வைணவ தேவியை நம; (எ) வராரோஹாயை நம; (ஏ) ஹரி வல்ல பாயை நம; (ஐ) சாரங்கிண்யை நம; (ஒ) தேவதேவிகாயை நம; (ஓ) மகாலட்சுமியை நம; (ஔ) லோக பூஜிதாயை நம; என்பனவாகும்.

**6. தவறான கருத்து :** திருமண் காப்பைச் சிலர் எம்பெருமானின் திருவடி என்று கருதுகின்றனர். இது தவறு. அடியார்கள் நெற்றியில் இட்டுக்கொள்வது அரிபாதவடிவ மான ஊர்த்துவ புண்டரம் ஓர் இரேகைதான்; திருமால்திருவடி அல்ல. எம்பெருமானுக்கு இதைப்போல் இரேகை இடுதல், திருக்கோயில்களில் எம்பெருமானுக்குத் திருமுழுக்காட்டுதல், திவ்வியாபரணங்கள் தரிப்பித்தல், திருப்பரிவட்டம் சேர்த்தல், போனகமளித்தல் முதலியவைகளால் அணிசெய்து உபசாரம் செய்வது போலாகும். அப்பொழுது திருமண்ணையும் அலங்காரத்திற்காக ஓர் அணிபோல் சாத்துகின்றனரேயன்றி வேறு அல்ல என்பது அறியப்படும்.

**7. ஆகார நியமம் :** வைணவர்கள் இந்த நியமத்தைக் கவனமாகக் கடைப்பிடிக்கின்றனர். உணவு தூய்மை இல்லா விடில் மனம் தெளிவடைவதில்லை. ஆகவே, உணவுப்பற்றிய கவனம் மிகவும் முக்கியமானதாகின்றது.

ஒருவன் பிறப்பினால் சத்துவம் இராசசம் தாமசம் குணங்களையுடையவனாக இருந்தாலும் அவன் நன்னெறி அநுட்டானத்தை மேற்கொண்டு சத்துவ குணத்தை மேலாகக் கொண்ட உணவுகளைப் புசித்து வருவானாகில் விரைவில் நல்வழியை அடைந்து எம்பெருமானின் கருணைக்குப் பாத்திரமாவான் என்பது திண்ணம். இதனை நம் முன்னோர்கள் கடைப்பிடித்ததனால் உடற்கட்டு, உடல்நலம், துணிவு, மனவுறுதி, பக்தி முதலிய பண்புகளை மிகுதியாகப் பெற்றிருந் தனர். இங்ஙனமின்றி இக்காலத்தவர் தான்றோன்றித்தனமாய்ச் சுவைக்கும் போகத்திற்கும் துணையான உணவு வகைகளை உண்டு தம் முன்னோர்கட்கிருந்த எல்லாவித நலன்களையும் இழந்து அற்ப ஆயுள் உள்ளவர்களாய் இருப்பது கண்கூடு. ஆகவே, நம்முன்னோர்கள் உண்டு வந்த முறைப்படி சத்துவகுண உணவுப் பொருள்களை மிகுதியாகவும் இராசசகுண உணவுப்பொருள்களைக் குறைத்தும், தாமசகுண உணவுப்பொருள்களை அறவே நீக்கியும் உணவுமுறைகளைக் கடைப்பிடித்தல் அவசியம். வைணவப்பெருமக்கள் உணவுப் பொருள்களை வகைப்படுத்திய முறை வருமாறு;

**(அ) சத்துவகுணப்பொருள்கள் :** எல்லாவிதப் பச்சரிசி, தினை, உளுந்து, பச்சைப்பயிறு, பொரி, அவல், சுக்கு, இஞ்சி, மிளகு, சீரகம், வெந்தயம், வெல்லம், சர்க்கரை, கற்கண்டு, தேன், திராட்சைப் பழம், பேரீச்சம்பழம், சாதிக்காய், சாதிப்பத்திரி, ஏலஅரிசி, பச்சைக் கர்ப்பூரம், குங்குமப்பூ, வாதுமை, நல்லெண்ணெய், தேங்காய், தேங்காய் எண்ணெய், பசும்பால், தயிர், வெண்ணெய், நெய், கொத்தவரைக்காய், பாகற்காய், வெள்ளரிக்காய், வாழைக்காய், பலாக்காய், விளாம்பழம், இலந்தைக்காய், பழம், களாக்காய், மாங்காய்,

மணத்தக்காளிக்காய், சுக்காங்காய், நாரத்தங்காய், பழம், சுண்டைக்காய், நெல்லிக்காய், சேப்பங்கிழங்கு, சருக்கரை வள்ளிக்கிழங்கு,சேப்பங்கீரை, வெண்கீரை, செங்கீரை, வாழைத் தண்டு, பிரண்டை, கறிவேப்பிலை, தூதுவளை, பசுமுள்ளை, கொத்தமல்லிமுளை, பொன்னாங்கண்ணி மனத்தக்காளி, அகத்திக்கீரைகள், எல்லாவகை வாழைப்பழங்கள், பலாப்பழம் மாம்பழம், நாவற்பழம், கிச்சிலிப்பழம், கொய்யாப்பழம் இளநீர், பன்னீர் ஆகியவை.

(ஆ)இராசசகுணப்பொருள்கள் : சவ்வரிசி, துவரை, கடலை, முந்திரிப்பருப்பு, வேர்க்கடலை, மஞ்சள், பெருங் காயம், சீரகம், புளி, மிளகாய், உப்பு, கடுகு, கொத்தமல்லி (தனியா) இலவங்கம்,இலவங்கப்பட்டை, கசகசா, பாக்கு, ஆட்டுப்பால், புடலங்காய், வெண்டைக்காய், பூசணிக்காய், அத்திக்காய், புளியங்காய், மரிமாங்காய், எலுமிச்சங்காய், பூமி சருக்கரைக்கிழங்கு, கருணைக்கிழங்கு வெற்றிலை, வள்ளிக் கிழங்கு, கொட்டிக்கிழங்கு, புளியன் மறியன் கொழுந்துகள், வெற்றிலை, புதினா, வாழைப்பூ, ஆவிரம்பூ, சீமை அத்திப்பழம், மாதுளம்பழம், அன்னாசிப்பழம் ஆகியவை.

(இ) தாமசகுணப் பொருள்கள் : புழுங்கலரிசி, கேழ்வரகு, வரகு, கம்பு, சோளம், பட்டாணி, மொச்சை, பனிப்பயிறு, கொள்ளு, பனை, ஈச்சை, தென்னை வெல்லங்கள், பனங்கற்கண்டு, எருமைப்பால் முதலானவை. கத்திரிக்காய், அவரைக்காய், கீரை, பூண்டு, முதல் இரண்டு வகைகளில் சொல்லாத கிழங்குகள் (எ.டு. உருளை, மரவள்ளிக்கிழங்கு) வெங்காயம், வெள்ளைப்பூண்டு, மற்றைக் கீரை வகைகள், சீதாப்பழம், பனம்பழம், நுங்கு, ஆமணக்கெண்ணெய்.

*8. வைணவ அதிகாரிகள் : சிறப்பான சாத்திரங்களில் நுவலப்பெற்று அறுதியிடப்பெற்றுள்ள வைணவ அதிகாரிகள் பத்து விதமாக வகுப்புண்டிருப்பர்.*

*(அ) அத்வேஷிகள்: உலகத் தலைவனான திருமாலையும் தங்களுடைய பார்வையாலும், இரக்கத்தோடு கூடிய நினைவாலும், அப்படிப்பட்ட ஸ்பரிசத்தாலும் மச்ச கூர்ம பிராணிகள் தங்களுடைய முட்டைகளை விருத்திசெய்து தங்களைப் போலாக்குதல் போலவே, உலகோரின் எல்லாப் பாவங்களையும் கடைக்கண்நோக்கு கருணையோடு தொடுதல் ஆகியவற்றால் போக்க நின்ற வைணவர்களையும் வெறுக்காமல் இருப்பவர்கள்இவர்கள்.*

*(ஆ) அநுகூலர்கள் : வாசுதேவனுடைய உற்சவச் சிறப்பிலும், மகா பாகவதர்களுடைய உற்சவத் தொண்டுகளிலும் ஈடுபட்டு இடைவிடாமல் அவர்கட்குத் துணையாக இருப்பவர்கள் இவர்கள்.*

*(இ) திருநாமதாரிகள் : நினைத்த மாத்திரத்திலும், நாவினால் உச்சரித்தமாத்திரத்திலும் எல்லாப் பாவங்களையும் நசிப்பிக்க வல்ல ஸ்ரீமந்நாராயணனுடைய திருநாமத்தைச் சொல்லி திருமண்காப்பைத் தரித்துக் கொண்டிருப்பவர்கள்.*

*(ஈ) சக்ராங்கணபரர்கள் : சங்கம், சக்கரம், ஊர்த்துவ புண்டரம், துளசிமணி, நளினாட்சமாலிகைகளைத் தரித்தவர் களாய், சங்கு சக்கரம் தரியாதவர்களுடைய சரீரங்களையும் பார்க்கக் கூடாதென்று பிரமாணங்களை அறிந்தவர்களாய் இருப்பவர்கள் இவர்கள்.*

(உ) **மந்திரபாடிகள்** : நினைத்த மாத்திரத்தில் எம்பெருமானின் இணைத்தாமரை அடிகளாகிய பரமபதத்தை நல்கக்கூடிய எட்டெழுத்து மந்திரத்தை இடைவிடாது செபித்துக் கொண்டிருப்பவர்கள்.

(ஊ) **வைணவர்கள்** : சிற்றின்பத்தைத் துச்சமெனக் கருதி எம்பெருமானிடம் ஒன்றையும் விரும்பாமல் அவன் திருவடிகளை அடைவதையே பலனாகக் கருதிப் பக்தியை உபாயமாகக் கொண்டு இருப்பவர்கள்.

(எ) **ஸ்ரீவைணவர்கள்** : கர்மம், ஞானம், பக்தி முதலான இதர சாதனங்கள், போகங்கள் யாவற்றையும் துறந்து அதனால் தூய மனத்துடன் எம்பெருமானிடம் சாதன அறிவின்றிப் பக்தியுடையவர்களாக இருப்பவர்கள்.

(ஏ) **பிரபந்நர்கள்** : எல்லாவற்றிலும் வைத்திருக்கின்ற ஆசையாகிய பற்றையறுத்து "உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலையும் கண்ணனே" (திருவாய் 6.7;1) என்று கொண்டு எல்லாப் பாசங்களையும் அவன் திருவடிகளில் வைத்திருப்பவர்கள் இவர்கள்.

(ஐ) **ஏகாந்திகள்** : எம்பெருமானை தவிர, இதர தேவதை களையும் இதர விஷயங்களையும், பக்தியை உபாயமாகக் கருதுவதையும் துறந்து அவன் திருவடிகளையே சாதனமாகக் கருதி "ஆறு எனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய் உனக்கோர்கைம் மாறுநானொன் றிலேன்; என தாவியும் உனதே' (திருவாய் 5.7;10) என்றவாறு எல்லாப் பாரத்தையும் அவன்மீது போட்டிருப்பவர்கள்.

(ஔ) பரமைகாந்திகள் : முன்சொன்னவர்களைப் போலவே யாவற்றையும் விட்டுக் கண்ணனையே உபாயமாகக் கொண்டு அவனே சுவாமி என்றும், தம்மை அவனுடைய சொத்தென்றும் நினைத்து அதனாலே சொத்துக்குடையவனான சுவாமி அவன் விருப்பப்படி செய்து கொள்ளக்கடவனென்று தமக்கொரு சம்பந்தமும் இல்லாமல் இருப்பவர்கள்.

9. **ஸ்ரீவைணவ இலட்சுணங்கள்** : பட்டர் தம் திருவடிச் சம்பந்தம் பெற்ற ஒரு சிரீவைணவனுக்கு அனந்தாழ்வான்மூலம் அருளிச் செய்தவை இவை :

(i) ஸ்ரீவைணவன் கொக்கைப்போல் இருப்பான். கொக்கு நீர் நிறைந்ததிருக்கும் இடங்களில் வாழும். வெண்மையாய் இருக்கும். சிறிய மீன்களைப்பொருட்படுத்தாது, பெரிய மீன் அகப்பட்டால் விடாது கௌவிக் கொள்ளும். மழைக் காலத்தில் மின்னலுக்கும் இடிக்கும் பயந்து மலை இடுக்குகளில் புகுந்து கொள்ளும். தன் விருப்பமான பொருளைப் பெறுவதிலேயே சிந்தையாயிருக்கும். சிரீவைணவனும் புண்ணிய தீர்த்தமுள்ள இடங்களில்தான் வசிப்பான். அவன் மனம் வெண்மையாய், அதாவது கபடமற்றதாய், மிகத் தூய்மையாயிருக்கும். தாழ்ந்த தேவதைகளை அசட்டை செய்வான். அர்த்த பஞ்சகம் தத்துவஞானம் இவற்றை முற்றிலும் நன்கு அறிந்தவர்களைச் சந்திக்க நேருங்கால், அவர்களை நன்கு உபசரித்து அவர்கள் அருளிச்செய்யும் இரகசியங்களை அப்படியே கௌவிக் கொள்வான். பிரதிகூலர்களால் தனக்கு ஆன்மநாசம் நேருவதானால் திவ்விய தேசங்களில் சென்று வாழ்வான். பகவத் பாகவத ஆசாரிய தியானத்தில் ஒருமனப்பட்டிருப்பான்.

(ii) கோழியைப் போலிருப்பான். கோழி எப்போதும் குப்பைகளைச் சீய்த்துச் செத்தைகளை விலக்கி தனக்குப் போக்கியமானவற்றையே உண்டு சீவித்திருக்கும். இங்ஙனமே சிரீவைணவனும் வேதங்களைக் களைந்து அவற்றிலுள்ள தேவதாந்தர மந்தராந்தர முதலிய வாக்கியக் குப்பைகளாகிய சாரமற்றவைகளை நீக்கி சத்தியம் ஞானம் ஆனந்தம் இவற்றையெல்லாம் நம்மாழ்வார் நான்கு பிரபந்தம் என்னும் அமுதமாக விளைவித்தவைகளையே சதா அநுசந்தித்துக் கொண்டு வாழ்ந்திருப்பான்.

(iii) உப்பைப்போல் இருப்பான். உணவில் உப்பு அதிகப்பட்டால் அது நிந்திக்கப்படும். தன்னை நிந்தை கூறுமிடத்து மறுமாற்றம் சொல்லாது தன்னையழிய மாறியேனும் தன் சொரூபத்தைத் தழைத்திருப்பவனாய் அவர்களுடைய மகிழ்ச்சியே தனது நோக்கம் என்று கருதியிருப்பான்.

(iv) உம்மைப்போல் இருப்பான் (இது பட்டர் அனந்தாழ்வானை நோக்கிச் சொன்னது). எம்பெருமானுக்குத் ததீயாராதனம் நடைபெறும்போது அவரவர் யோக்கியதைக் கேற்ப முதல் திரை முதல் ஏழு திரைகளிலும் இருக்கச் செய்வது சம்பிரதாயம். பட்டர் அனந்தாழ்வானை இந்தச் சோதனைக் குட்படுத்தி அவமானம் செய்தபோது, அனந்தாழ்வானின் முகம் சேஷத்துவ மிகுதியால் அலர்ந்து மகிழ்ந்து விளங்கக் கண்டார். அதனால் அவர் உண்மையான வைணவர் எனப் பெருமைப் பட்டார். அனந்தாழ்வான்மூலம் வைணவ இலட்சணத்தை அருளிச் செய்தபோது (வைணவ இலட்சணம் அனந்தாழ்வான் பண்புபோல் இருக்க வேண்டுமென்று பாராட்டிக் கூறும்

முறையில்) 'உம்மைப்போல்' இருப்பான் என்று சொல்லி வைத்தார். பட்டரின் அளவுகோலில் அனந்தாழ்வான் உண்மையான இலட்சணத்தைப் பெற்றிருந்தார் என்பது நினைவு கூரத்தக்கது.

**(10) அம்மங்கி அம்மாளுக்கு உடையவர் அருளிச் செய்தவை :** அம்மங்கிஅம்மாள் என்பவர் திருக்கண்ணபுரம் செல்ல விடைகொள்ளும்போது அருளிச் செய்தவை இந்த ஐந்து வார்த்தைகள்.

(i) அக்கினிச் சுவாலையை அணுகாதே; இங்குத் திருமாலை வெறுப்பவர்களான சிவனடிமார்களையும் மாயாவாதிகளையும் (அத்வைதிகள்) நெருப்பாகக் கருதி அவர்களை அணுகக் கூடாது என்பது.

(ii) அசுசியை மதியாதே : தேகாபிமானிகளாகிய சம்சாரக் கிலேசிகள். இவர்களைக் கண்டால் கட்டையையும் ஓட்டையும் மதிப்பது போல் ஒரு துரும்பாக மதிக்க வேண்டும் என்பது

(iii) அரு நஞ்சைத்தின்னாதே : அன்னியப் பிரயோஜனர்கள் நஞ்சுக்கு ஒப்பானவர்கள் இவர்களிடம் பழகினால் சேதநன்கெடுவானாதலால் இவர்களை நஞ்செனக்கருதி அஞ்சவேண்டும் என்பது.

(iv)அபலைகளை அணுகாதே: ஆழ்வார்களின் அருளிச்செயல்களில் பயிற்சியின்றி வீண் காலம் போக்கித் திரிபவர்கள் அபலைகளாவர். இவர்களைக் கண்டால் காமச்சுவை அறியாத கன்னியர்போல் எண்ணி வாளா இருக்கவேண்டும் என்பது.

(v) ஆர்த்தரோடு கூடி அநுவர்த்தித்துவாராய்; ஆர்த்தர் என்பவர் பூர்ணாதிகாரிகள். இவர்களைக் கண்டால் நிலா, தென்றல், சந்தனம், நீர், மலர்கள், தாம்பூலம்போல் உகந்து அவர்களின் திருவடிகளில் சம்பந்தம் பெற வேண்டும் என்பது. "நாம் சொத்து, நாராயணனே சொத்துக்கு உடையவன் அதை அவன் எப்படி வேண்டுமானாலும் செய்துகொள்ளட்டும்" என்று மன அமைதியோடு இருப்பவர்கள் இவர்கள் . இவர்கள் எப்போதும் திருமாலடியார்களிடம் அடிமைத் தொழில் செய்து அப் பரமசாத்வீகர்களின் அபிமானத்தில் ஒதுங்கி இருந்து வாழக் கடவதான மிக்க உயர்ந்த உறவைப் பெற்றிருப்பவர்கள். இவர்கள் வீடுபேறு அடைவது திண்ணம் என்பது சம்பிரதாயமாக நிலவிவரும் ஓர் உயர்ந்த உண்மையாகும்.

# 16. வைணவ திவ்விய தேசங்கள்

வைணவ திவ்வியதேசங்கள் என்பன திருமால் கோயில் கொண்டிருக்கும் திருத்தலங்கள். இவை யாவும் பருப்பொருள் நிலையில் வைணவத்துவத்தை விளக்கிக்கொண்டிருப்பன போல காட்சியளிக்கின்றன. வைணவ தத்துவம் சித்து, அசித்து, ஈசுவரன் என்பதை நாம் அறிவோம். ஒரு திவ்விய தேசத்தில் வாழும் மக்கள் யாவரும் 'சித்து' என்ற தத்துவத்தைக் குறிக்கின்றனர். 'அசித்து' என்பது திருக்கோயில் இருப்பிடம் அதன் சுற்றுப்புறச் சூழ்நிலையாக தோட்டம், தோப்பு முதலியவைகளைக் குறிப்பிடுவதாக கொள்ளலாம். ஈசுவரன் என்பது அங்குக் கோயில் கொண்டிருக்கும் எம்பெருமானைக் குறிக்கின்றது. இதனால் திருத்தலப்பயனம் செய்வோர் ஒருவித பக்தி நிலையை அநுபவிப்பதோடு வைணவ தத்துவத்திலும் ஆழங்கால்படுவது என்ற ஐதிகமாகவும் அமைகின்றது.

**கடலலைகள் தோற்கும் கடும்பிறவி வெள்ளத்**
**துடல்நரகத் துள்நின் றுழலா—தடைநெஞ்சே!**
**ஆழ்வார்கள் பாட்டால் அலங்கரித்த லால்பதிகள்**
**மூவாறு முப்பத்து மூன்று.**

**அறனளிக்கும் ஆன்ற பொருளளிக்கும் வீட்டின்**
**திறனளிக்கும் வேறென்ன செய்ய? – பிற உரைக்கு**
**நூலா யிரம்கற்பின் நோக்குங்கால் யாதுபயன்**
**நாலா யிரத்தின் நலம்.**

என்ற வெண்பாக்கள் திருத்தலங்களையும் அவற்றிற்குப் பயணம் செய்வோர் அடையும் பலனையும் தெரிவிக்கின்றன.

வைணவ திவ்விய தேசங்கள் 108. இவை யாவும் ஆழ்வார் பாசுரங்களால் மங்களாசாசனம் பெற்றவை. சைவர்கள் ஒரு பதிகம் முழுவதும் ஒரு திருத்தலத்தைப்பற்றி இருந்தால்தான் அதனைப் பாடல் பெற்ற தலம் எனக்குறிப்பிடுவர். ஏதாவது ஒரு பாடலில் தலங்களில் பெயர்கள் அமைந்தால் அவற்றை 'வைப்புத் தலங்கள்' என்று தனியாகப் பிரித்துக் காட்டுவர். ஆனால் வைணவர்கள் பாசுரங்களில் திருத்தலங்களின் பெயர்கள் அமைந்த நிலையிலேயே அவற்றை மங்களாசாசனம் பெற்ற தலங்களாகக் கொள்வர்.

**திருப்பதிகளின் வகை :** இதனைத் திவ்வியகவி பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்,

ஈரிருப தாஞ்சோழம் ஈரொன்பதாம் பாண்டி
ஓர்பதின்மூன்றாம் மலை நாடு ஓரிரண்டாம்– சீர்நடுநாடு
ஆறோடு எட்டுத்தொண்டை அவ்வட நாடு ஆறிரண்டு
கூறுதிரு நாடொன்றாக் கொள்.

என்று வகைப்படுத்திக் காட்டுவர்.

## சோணாட்டுத் திருப்பதிகள்—40

கடல் கிழக்குத் தெற்குக் கரையொரு வெள்ளாறு
குடதிசையில் கோட்டைக் கரையாம் – வடதிசையில்
ஏணாட்டுப் பெண்ணை இருபத்து நான்காம்
சோணாட்டுக்கு எல்லைஎனச் செப்பு.[1]

என்பது சோழ நாட்டு எல்லைகளைக் குறிப்பிடும் வெண்பா.

1. ஒரு பழம் பாடல்.

1. திருவரங்கம்
2. திருஉறையூர்
3. திருத்தஞ்சை
4. திருஅன்பில்
5. திருக்கரம்பனூர்
6. திருவெள்ளறை
7. திருப்புள்ளம் பூதங்குடி.
8. திருப்பேர்நகர்.
9. திரு ஆதனூர்
). திருவழுந்தூர்
I. திருச்சிறுபுலியூர்
2. திருச்சேறை.
13. திருத் தலைச்சங்க நாண் மதியம்
14. திருக்குடந்தை
15. திருக்கண்டியூர்
16. திருவிண்ணகர்
17. திருக்கண்ணபுரம்
18. திருவாலி
19. திருநாகை
20. திருநறையூர்
21. திருநந்திபுர விண்ணகரம்
22. திருவிந்தளூர்
23. திருச்சித்ரகூடம்
24. திருக்காழிச்சீராம விண்ணகரம்
25. திருக்கூடலூர்
26. திருக்கண்ணங்குடி
27. திருக்கண்ணமங்கை
28. திருக்கவித்தலம்
29. திருவெள்ளியங்குடி
30. திருமணிமாடக்கோயில்
31. திருவைகுந்த விண்ணகரம்
32. திருஅரிமேய விண்ணகரம்
33. திருத்தேவனார்தொகை
34. திருவண்புருடோத்தமம்
35. திருச்செம்பொன்செய்கோயில்
36. திருத்தெற்றியம்பலம்
37. திருமணிக்கூடம்
38. திருக்காவளம்பாடி
39. திருவெள்ளக்குளம்
40. திருபார்த்தன் பள்ளி

*குறிப்பு: 30-40 (11 திருப்பதிகள்) "திருநாங்கூர்த் திருப்பதிகள்" என வழங்கப்பெறும்.*

## பாண்டிநாட்டுத் திருப்பதிகள்—18

வெள்ளா றதுவடக்கா மேற்குப் பெருவழியாம்
தெள்ளார் புனற்கன்னி தெற்காடும்—உள்ளாரா
ஆண்ட கடல்கிழக்காம் ஐம்பத் தறுகாதம்
பாண்டிநாட் டெல்லைப் பதி.[2]

*என்பது பாண்டி நாட்டு எல்லைகளைக் குறிப்பிடும் பாடல்,*

1. திருமாலிருஞ்சோலைமலை
2. திருக்கோட்டியூர்
3. திருமெய்யம்
4. திருப்புல்லாணி
5. திருத்தண்கால்
6. திருமோகூர்
7. திருக்கூடல்
8. ஸ்ரீவில்லிபுத்தூர்
9. திருக்குருகூர்
10. திருத்தொலைவில்லி மங்கலம்
11. சிரீவரமங்கை
12. திருப்புளிங்குடி
13. தென்திருப்பேரை
14. ஸ்ரீவைகுண்டம்
15. திருவரகுணமங்கை
16. திருக்குளந்தை
17. திருக்குறுங்குடி
18. திருக்கோளூர்.

*குறிப்பு: நவதிருப்பதிகள் திருக்குருகூர் (9), திருக்கோளூர் (18), தென்திருப்பேரை (12) ஆகிய மூன்றும் பொருநையாற்றின் தென்கரையில் இருப்பவை. ஸ்ரீவைகுண்டம் (13) வரகுணமங்கை (15) திருக்குளந்தை (16) திருப்புளியங்குடி (14) தொலைவில்லி மங்கலம் (10) இது - இரட்டைத் திருப்பதி ; ஆகிய ஐந்தும் பொருநையாற்றின் வடகரையில் உள்ளவை. தொலைவில்லி மங்கலம் 18-கணக்கில் ஒன்றாகவும் நவதிருப்பதிகணக்கில் இரண்டாகவும் கருதப்பெறும்.*

---

2. ஒரு பழம் பாடல்

## மலை நாட்டுத் திருப்பதிகள்—13

வடக்குத் திருப்பழநி வான்கீழ் தென்காசி
குடக்குத் திசைகோழிக் கூடாம்—கடற்கரையின்
ஓரமோ தெற்காடும் உள்ளெண் பதிகாதம்
சேரநாட்டிற்கு எல்லையெனச் செப்பு.[3]

1. திருவநந்தபுரம்
2. திருவண்பரிசாரம்
3. திருக்காட்கரை
4. திருமூழிக்களம்
5. திருப்புலியூர்குட்டநாடு
6. திருச்செங்குன்றூர்
7. திருநாவாய்
8. திருவல்லவாழ்
9. திருவண்வண்டூர்
10. திருவாட்டாறு
11. திருவித்துவக் கோடு
12. திருக்கடித்தானம்
13. திருவாறன்விளை

## நடுநாட்டுத் திருப்பதிகள்—2

1. திருவயிந்திரபுரம்.
2. திருக்கோவலூர்

## தொண்டை நாட்டுத் திருப்பதிகள்—22

மேற்குப் பவளமலை வேங்கட நேர்வடக்காம்
ஆர்க்கும் உவரி அணிகிழக்குப் பார்க்குளுயர்
தெற்குப் பினாகி திகழிரு பதின்காதம்
நற்றொண்டை நாடெனவே நாட்டு [4]

---

3. ஒரு பழம் பாடல்.
4. ஒரு பழம் பாடல்.

1. திருக்கச்சி– அத்திகிரி
2. திரு அட்டபுயகரம்
3. திருத்தண்கா
4. திருவேளுக்கை
5. திருபாடகம்
6. திரு நீரகம்
7. திரு நிலாத்திங்கள்துண்டம்
8. திருவூரகம்
9. திருவெஃகா
10. திருக்காரகம்
11. திருக்கார்வானம்
12. திருக்கள்வனூர்
13. திருப்பவளவண்ணம்
14. திருப்பரமேச்சுரவிண்ணகரம்
15. திருப்புட்குழி
16. திருநின்றவூர்
17. திருவெவ்வுள்
18. திருநீர்மலை
19. திருஇட எந்தை
20. திருக்கடல் மல்லை
21. திருஅல்லிக்கேணி
22. திருக்கடிகை

## வடநாட்டுத் திருப்பதிகள்–12

1.திருவேங்கடம்
2.திருச்சிங்கவேழ்குன்றம்
3.திரு அயோத்தி
4.திருநைமிசாரண்யம்
5.திருச்சாளகிராமம்
6.திருவதரியாச்சிரமம்
7.திருக்கண்டங்கடிநகர்
8.திருப்பிரிதி
9.திருத்துவாரகை
10.திருவடமதுரை
11.திருவாய்ப்பாடி
12.திருப்பாற்கடல்

## திருநாட்டுத்திருப்பதி–1

1. திருநாடு (வைகுந்தம்–பரமபதம்)

குறிப்பு : பிருந்தாவனம், கோவர்த்தனம் என்ற திவ்விய தேசங்களுக்கு ஆழ்வார் பாசுரங்கள் உள்ளன. இவற்றைச் சேர்த்தால் வடநாட்டுத் திருப்பதிகள் பதினான்காகி மொத்தத் திருப்பதிகள் 110 என்றாகும். ஆனால் பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் இவற்றைத் தவிர்த்து விட்டார். 108 என்ற எண்ணை நிலைநிறுத்துவதற்காக இவை இரண்டும் வடமதுரைக்கு அருகிலிருப்பதால் அவற்றுடன் அடங்கும் என்று விட்டார் போலும்.

ஆயர்பாடி வடமதுரைக்கு அருகில் இருந்தாலும் அது கண்ணன் வளர்ந்த இடமாதலால் அதனைச் சேர்த்துக் கொண்டார் என்று கருதலாம். கண்ணன் கோபியருடன் லீலைகள் புரிந்த இடம் பிருந்தாவனம். அண்மையில் இருந்தும் அதனையும், ஆயர்களையும் ஆநிரைகளையும் கல்மாரியி னின்று காக்கக் கோவர்த்தனத்தைத் தூக்கிக் குடையாகப் பிடித்து தீரச்செயல் நடைபெற்ற இடம் அண்மையில் இருந்தும் அதனையும் ஏன் தவிர்த்தார் என்பதற்குக் காரணம் அந்த கண்ணனுக்குத்தான் வெளிச்சம்.

# பின்னிணைப்பு

## பயன்பட்ட நூல்கள்

### (அ) தமிழ்நூல்கள்

*அண்ணங்கராசாரிய சுவாமிகள் : நாலாயிரத்திவ்யப் பிரபந்தம்-திவ்வியாரத்த தீபிகை (சின்ன காஞ்சிபுரம்)*

**ஆச்சாரியார் பி. ஸ்ரீ. :** *இராமாநுசர் (சுதேசிமித்திரன்)*

*அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்: ஆசாரிய ஹிருதயம்-மணவாளமாமுனிகள் வியாக்கியானம் தமிழாக்கம்-புருடோத்தம நாயுடு. செ.ப.க. செ. 5*

**ஆழ்வார்கள் :** *நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் (மர்ரே, ராஜம் பதிப்பு)*

**ஆழ்வார்கள் :** *நாலாயிரத்திவ்விய பிரபந்தம் (கி.வேங்கடசாமி ரெட்டியார் பதிப்பு) (திருவேங்கடத்தான் திருமன்றம் 32, பெருமாள் முதலித் தெரு, சென்னை-14)*

**எட்டுத்தொகை நூல்கள் :** *பரிபாடல் (உ.வே.சா. பதிப்பு) கலித் தொகை - இளவழகனர் பதிப்பு (கழகம்) அகநானூறு (நாட்டார் உரை கழகம்) நற்றிணை (பின்னத்தூர் நாராயணசாமி அய்யர், பதிப்பு பதிற்றுப்பத்து (உ.வே.சா.)*

கிருஷ்ணவேணி அம்மையார், எஸ். : செம்பொருள் *(திருமலை - திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி -517501)*

**சித்பவாநந்த அடிகள் :** பகவத்கீதை (பதிப்பு) [இராமகிருஷ்ண தபோவனம் திருப்பராய்த்துறை திருச்சி மாவட்டம்.

**சியாமளா, மு.ப. :** திருமழிசையாழ்வாரின் பாசுரங்கள் ஓர் ஆய்வு.

**சுந்தரராமாநுச சுவாமிகள் :** தத்துவத்திரயம்- விளக்க உரை.

**சுப்பிரமணிய பாரதியார் :** பாரதியார் கவிதைகள் (எஸ். ஆர். சுப்பிரமணியபிள்ளை வெளியீடு.

**சுப்பு ரெட்டியார், ந. :** வைணவச் செல்வம்-பகுதி 1,2. (தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்- 613 005)

**சுப்பு ரெட்டியார், ந. :** வேங்கடம் வெளியீடு; முத்தி நெறி, சில நோக்கில் நாலாயிரம், விட்டுச் சித்தன் விரித்த தமிழ், சடகோபன் செந்தமிழ், பரகாலன் பைந்தமிழ், ஆழ்வார்கள் ஆராஅமுது, அர்த்த பஞ்சகம், நவ்வித சம்பந்தம் வடவேங்கடமும் திருவேங்கடமும், திருவேங்கடமுடையான் அலங்காரம், மலைநாட்டுத் திருப்பதிகள், பாண்டி நாட்டுத் திருப்பதிகள் (1,2), சோழநாட்டுத் திருப்பதிகள், தொண்டை நாட்டுத் திருப்பதிகள் (கிடைக்குமிடம் கழகம்).

**பிள்ளை உலக ஆசிரியர் :** அஷ்டாதச இரகசியங்கள் (சுதர்ஷனம் புத்தூர், திருச்சி)

**பிள்ளை உலக ஆசிரியர்:** ஸ்ரீவசனபூஷணம்-மணவாள மாமுனிகள் வியாக்கியானம். தமிழாக்கம் (பு.ரா. புருடோத்தம நாயுடு, வெளியீடு; தி.கி. நாராயணசாமி நாயுடு, கடலூர்)

**புருடோத்தம நாயுடு பு: ரா:** திருவாய்மொழி-ஈட்டின் தமிழாக்கம் (சென்னைப் பல்கலைக்கழகம்) -10 தொகுதிகள்.

## (ஆ) English works

**Bhandarkar, R.G.** : Vaishnavism Saivism and other Minor Religious systems (Bhandarkar Orient Research Institute (Pune- 411 004).

**Gopalan, L.V.** : Sri Vaishnava Divya Desams

**Krishnaswami Ayyengar:** A History of Early South Indian Vaishnavism (Madras University)

**Srinivasachari, P.N.** : Philosophy of Visishtadvaita. Adyar Library, Madras.

**Subbu Reddiar, N.:** Religion and Philosophy of Nalayiram with Special Reference to Nammalvar (S.V. University. Tirupati

**Subbu Reddiar, N.** : Collected Papers ( Kazhakam)




**First Paper:** *என்ன ஆச்சரியம்?* **"Enna Aacharyam !" [1949]**

# ஓர் அறிமுகம்

**பேராசிரியர்**

# ந சுப்பு ரெட்டியார்



Books Published : **135 + 1**
Papers Published : **200** [Tamil 173 + English 27]
Endowments established: **10**
Endowment Lectures : **12**
Awards received: **8**
Prizes won : **14**
Titles conferred : **8**

## Masterpieces:

1) **Tamil Payitrum Murai [1957]**
2) **Religion & Philosophy of Naalayira Divyap-pirabhandham with special reference to Nammalwar [English][His PhD thesis ] [1977]**
3) **Kalvi Ulaviyal Kotpaadukal [1989]**
4) **Vainava Selvam [1995]**

## Financial Aid for publishing the Books:

a ) Tirumala Tirupathi Devasthanams - 21

b) Directorate of Tamil Development
Government of Tamil Nadu - 6

***Research on Professor's Books***

a) University of Madras - 1993 (leading to PhD)
b) Madurai Kamaraj University - 2017 (leading to PhD)



பேராசிரியரின் 135 நூல்களில், தெரிவு செய்யப்பெற்ற 100 நூல்கள் (முழுமையாக)
**http://tinyurl.com/nsr100collections**
எனும் இணையதளத்தில் உள்ளன. [freely downloadable]

# India Book of Records

# CERTIFICATE

## CENTENARY CELEBRATIONS OF PROF DR. N SUBBU REDDIAR

Prof Dr S Ramalingam (born on 13 Oct 1949) Organizing Secretary, Na Subbu Reddiar 100 Educational Trust, Chennai, Tamil Nadu, has conceived, designed and meticulously executed 108 Centenary Events throughout Tamil Nadu during the Centenary Year (2015-2016) of Prof. Dr. N Subbu Reddiar who served the cause of education for 65 years andwritten 135 books in various fields (100 books after retirement).

**Biswaroop Roy Chowdhury**
Chief Editor
**India Book of Records**

Date: March 19, 2018

*India Book of Records is registered with the Government of India with RNI no. HARENG/2010/32259.*

*India Book of Records is affiliated to Asia Book of Records and follows Asian Protocol of Records (APRs) as per the consensus arrived at the meeting of the Chief Editors of National Record Books, Ho Chi Minh City, Vietnam.*

ISBN 978-81-939685-3-6

